

ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ர ஸரஸ்வதி
அவதூத ஸ்வாமிகள்

உ

சிவமயம்

# ஸ்வயம்ப்ரகாச விஜயம்

வரகவி - திரு. அ. சுப்ரமண்ய பாரதி

எழுதியது

இது

ஸ்வாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

அரிய உபந்யாஸங்கள், ப்ரச்னோத்தர மாலிகா

முதலியவற்றுடன்

ஸ்வாமிகளின் சிஷ்யராகிய

ஸ்ரீ துரியானந்த ஸ்வாமிகளால்

வெளியிடப் பெற்றது

1935



[விலை ரூ. 2-8-0

இப் புஸ்தகம் கிடைக்கும் இடங்கள்:—

விசாக விஜயம
26, சுபத்திரான் தெரு,
திருவல்லிக்கேணி- சென்னை.

ஸ்ரீ பால சுப்ரமண்யம் கம்பெனி.
பேரம்பூர், சென்னை.

பி. டி. பாணி அண்டு கம்பெனி
திருவல்லிக்கேணி, சென்னை

The B. N. Press, Educational Printers, Madras.

# பொருளடக்கம்

ஸ்ரீ ஸத்குரு சரணாரவிந்தாப்யாம் நம:

# முன்னுரை

அகண்ட பரிபூர்ண சச்சிதானந்த ஸ்வரூப பரப்பிரம்மத்தினின்றும் அபேதமாக விளங்கி லோகத்திலுள்ள ஜீவர்களுக்கு உய்வழி காட்டும் பொருட்டு எழுந்தருளியிருக்கும் பரம கருணாநிதியாகிய ஸ்ரீஸத்குருமூர்த்தியின் பரமகிருபா விசேஷத்தால் இந்தப் புஸ்தகம் பூர்த்தியாகி வெளிவருகின்றது. ஸ்ரீமத் ஸ்வாமிகளுடைய சரித்திரம் இந்த ரூபத்தில் வெளிவருவதைக் காணும் மெய்யன்பர்களுடைய உள்ளம் குளிருமென்பதில் ஐயமில்லை.

ஸ்வாமிகளுடைய சரித்திரத்தை வெளியிட வேண்டுமென்னும் முயற்சி பல வருஷங்களாகப் பல அன்பர்களாற் செய்யப்பட்டது. ஸ்வாமிகளுடைய சரித்திர சம்பந்தமான விஷயங்களை ஒருவர் மூலமாய் ஓரிடத்தில் அறிய முடியாது. அவர்கள் பல முறை தேசாடனம் செய்தவர்கள். அவர்களுடைய அனுக்கிரகத்திற்குப் பாத்திரரான பாக்கியவான்கள் அளவில்லாதவர்கள். அவர்களுடைய ஞான வைராக்கிய சீலத்தைப் புலப்படுத்தும் நிகழ்ச்சிகளும் விசித்திர விநோத விளையாடல்களும் பல பல. எல்லாவற்றையும் அறிந்து வெளியிடுவதென்பது சிரம சாத்யமான காரியம். ஆகவே, இப்பொழுது அறிந்த அளவில் செய்திகளெல்லாம் தொகுக்கப்பெற்று இச்சரித்திரம் அமைந்துள்ளது. இதனைப் பல லௌகிகங்களுக்

கிடையில் இச்சரித்திர நாயகமூர்த்தியினிடம்கொண்ட பக்தி விசேஷத்தால் எளிய நடையில் எழுதியுதவிய சிரஞ்சீவி, வரகவி - திரு. அ. சுப்ரமண்ய பாரதியாருடைய உழைப்பு யாவராலும் சிலாகிக்கத்தக்கது.

ஸ்வாமிகளுடைய சரித்திரத்தை வெளியிடுவதோடு ஸ்வாமிகளுடைய உபதேச மொழிகளையும் வெளியிட வேண்டுமென்பது பல அன்பர்களுடைய பேரார்வமாக இருந்தது. பல வருஷங்களுக்கு முன்பு ஸ்வாமிகள் ஒவ்வொரு பௌர்ணமி தினத்திலும் ஒவ்வோர் உபந்யாஸமாக எழுதிப் படிக்கச் செய்தருளினார்கள். அவற்றில் இப்போது கிடைத்தவை கூடிய வரையில் ஒழுங்குபடுத்தி இப்புஸ்தகத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றன. இவ்வுபந்யாஸங்கள் பல சாஸ்திரங்களிலுள்ள ஸாரத்தை ஸுலபமாக வெளிப்படுத்துகின்றன; யாவரும் அறிந்து நடக்கக் கூடிய பலவகையான தர்மங்களும் உபாஸனைமார்க்கங்களும் இவற்றில் மிக அழகாகக் கூறப்பட்டுள்ளன.

ஸ்வாமிகளிடம் அவ்வப்போது கேட்ட 120 கேள்விகளுக்குரிய விடைகள் '**ப்ரச்னோத்தர மாலிகா**' என்னும் தலைப்பின் கீழ் இப்புத்தகத்தில் விளங்குகின்றன. பல வேதாந்த நூல்களைப் படித்துணர்ந்தும் தெளிய முடியாத பல சிக்கல்களை ஸ்வாமிகள் விடுத்தருளி யிருக்கிறார்கள். பலவகையான பக்குவிகளுக்கும் உண்டாகும் பலசிறப்பட்ட ஸந்தேகங்களுக்கும் ஸூக்ஷ்மமான விடைகள் இப்பகுதியிலே காணப்படும். ஸ்வாமிகள் உபந்யாஸத்தினால் தத்துவ விளக்கம் பெற்றவர்கள் ப்ரச்னோத்தர மாலையினால்

சந்தேகந் தெளிதலைப் பெற்று இவ்விரண்டு பகுதிகளையும் சிறந்த கைவல்ய நவநீதமெனவே எண்ணும்படி நேரும். கர்மம், பக்தி, ஞானம் என்னும் மார்க்கங்களைப்பற்றிய ஐயங்கள் ப்ரச்னோத்தரமாலிகையில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

ஸ்ரீமத் ஸ்வாமிகளுடைய குருமூர்த்தியின் சரித்திரம் அறிந்தவரையில் இதில் வெளியிடப்பட்டிருக்கிறது. அவதூத பரம்பரையின் மூல புருஷராகிய ஸ்ரீ தத்தாத்ரேய சரித்திரமும் ஞானகுரு மூர்த்தியாகிய கிருஷ்ணபகவான் திருவாய் மலர்ந்தருளிய கீதையின் தத்துவத்தை ஆராயும் கீதாஸாரமென்னும் பகுதியும் பின்பு சேர்க்கப்பட்டுள்ளன.

இப் புஸ்தகம் ஸ்வாமிகள்பால அந்தரங்க பக்தி பூண்ட பலமெய்யன்பர்களுடைய உழைப்பின்பயன். அவ்வன்பர்களுக்குக் குருமூர்த்தியின் திருவருள் பூர்ணமாகக் கிடைக்குமென்பதில் தடையில்லை.

இந்தப் புஸ்தகத்தைப் பார்த்து மகிழ்ந்து தம் கருத்தை எழுதியுதவிய பிரம்மஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் அன்பர்களுடைய பாராட்டுக்குப் பாத்திரராவர். ஸ்ரீமான் கே. சுந்தரஞ் செட்டியாரவர்கள் ஆங்கிலத்தில் எழுதியுதவிய முன்னுரை அவருடைய பக்தியை வெளிப்படுத்தும்.

ஸ்ரீ தத்தகிரியில் மலைமேல் விளக்காகவும் ஸ்வயம்ப்ரகாசமாகவும் விளங்கும் ஸ்வாமிகளுடைய தண்ணளி இப்புஸ்தகத்தைப் படிப்பவர்கள் யாவர்பாலும் பரவி நல்லின்பத்தை ஊட்டுவதாகுக.

இங்ஙனம்,

**துரியானந்தர்.**

செந்திலாண்டவன் திருவடி துணை

# முகவுரை

உலகத்தில் பரதகண்டம் பெரியோர்களின் அவதார ஸ்தலமாக விளங்குவதாகையினால் இங்கே பெரியார் பலர் இருந்திருக்கின்றனர்; பெரியார் பலர் இப்போதும் இருந்து வருகின்றனர். அவர்களிலே சிலபேர்களுடைய சரித்திரமே வெளிவந்துள்ளன. அச் சரித்திரங்கள் இப்போது நம் போன்றவர்களுக்குப் ப மஞான போதங்களாக விளங்குகின்றன; உதாரணமாக. ஸ்ரீமத் சங்கராசாரியர், ஸ்ரீமத் ராமாநுஜர், ஸ்ரீமத் மத்வர், பகவான் ரமணமகரிஷிகள், பட்டினத்தடிகள், தாயுமானவர், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர் இன்னும் இன்னோரன்ன பெரியார்களின் சரிதங்களைக் கவனிப்போமானால் பெரியாருடைய சரித்திரங்களை வெளியிடவேண்டியது இன்றியமையாத செய்கையாகும் என்பது நன்கு விளங்காமலிராது.

நான் தமிழில் இதுவரையில் கலாசாலை மாணவர்கட்குரிய புத்தகங்கள் பலவும் மதவிஷயமான புத்தகங்கள் சிலவும் நாடகங்கள் சிலவும் எழுதியுள்ளேனாயினும், இத்தகைய பெரியாரின் சரித்திரம் எழுதியது இல்லை. இதனை எழுத நேர்ந்ததை நான் கிடைத்தற்கரிய பேறுபெற்றதாகவே கருதுகின்றேன்.

அவதூத ஸ்வாமிகளைப்ப றி முன்பு நான் ஒரு விஷயமும் அறியேன். ஆனால் அவர்களுடைய சரித்திரத்தை முதன் முதலில் சுருங்கியவளவில் எழுதுவதற்குத் துணையாயிருந்

தவர்கள் திருச்சி - ப்ரம்மஸ்ரீ ரகுநாத சாஸ்திரிகள் என்பவர்கள்.

பின்னர், சேந்தமங்கலத்தில் ஸ்ரீ தத்தகிரியில் ஸ்ரீ தத்தாத்திரேயர் ஸந்நிதியில் ஸ்வாமிகளைக் காணவும் அப்பால் அங்கே அவர்களுடன் சில நாட்கள் தங்கவும், அடிக்கடி சம்பாஷணை செய்யவும் செந்திலாண்டவன் திருவருள் விலாஸம் பரிபூர்ணமாய் ஏற்பட்டமையினால், ஸ்வாமிகளின் சகோதரர், ஸ்வாமிகளின் சிஷ்யர்கள் பலர் இவர்கள் மூலம் ஸ்வாமிகளைப்பற்றி விசாரிக்கத் தொடங்கியதில் எனக்குக் கிடைத்த ஸ்வாமிகளின் சரித்திர வரலாற்றினை ஸ்வாமிகளிடம் தெரிவித்து, அவைகளில் ஸ்வாமிகள் உண்மையென ஒப்புக்கொண்டவைகளை மாத்திரம் குறித்துக்கொண்டு அக்குறிப்பின் ஆதாரத்தினால் இந்த விரிவான சரித்திரத்தை எழுதலானேன்.

இந்தச் சரித்திரம் எழுதத்தொடங்கி ஒரு வருஷகாலத்துக்கு மேலாகியும் இடையில் நேரிட்ட இடையூறுகள் பலவற்றினால் விரைவில் முடிக்க இயலாமற் போயிற்று. இஃது இயல்பேயாமென்பதை நூலாசிரியர் பலர் ஒப்புக்கொள்வர்.

நிற்க, இச் சரித்திரம் எழுதுகையில், எனக்கு என் அருகிலிருந்து சுருதி யுக்தி அநுபவம், இவைகளின் மூலம் ஆதாரங்காட்டியவர் ஸ்ரீ ஸ்வாமிகளின் சிஷ்யரில் ஒருவராகிய ஸ்ரீமத் துரியாநந்தர் அவர்களே யாவர். அவர்களுடைய இந்த அரிய நன்றியை நான் மறக்க முடியாதாகையினால், அவர்களுக்கு இச்சமயம் பல கோடி நமஸ்காரங்கள் செய்கிறேன்.

இதனையன்றி இப்புத்தகத்தை விரைவில் அச்சிட்டுமுடிப்பதற்குத் தக்க பரிசோதகர்களாயிருந்து தங்கள் உழைப்பை இதில் ஈடுபடுத்திப் பெரியார் சரித்திரம் இனிது அமைவதில் உதவிபுரிந்து அரிய பயனை அடையப் பாத்திரர்களான தமிழ்

வித்துவான்களுடைய நன்றியையும் நான் வந்தனபூர்வமாக அங்கீகரிக்கிறேன்.

இவையன்றி இம்முயற்சியில் தங்கள் திரவிய சகாயமும் சரீரப்பிரயாசமும் ஏற்படும்படி முன்வந்த புண்யசீலர்களுக்கும் வந்தனம் பல மனமுவந்து செய்கின்றனன்.

ஸ்வாமிகள் பரமமூடனாகிய எனக்குத் தமது அரிய சரித்திரத்தை எழுத அநுமதியளித்ததை,நான் என்னுடைய ஆண்டவனாகிய முருகப்பெருமானுடைய கட்டளையாகக் கொண்டேனாகையினால், அந்த ஓர் உறுதியே இதனை எழுதி முடிக்கத் துணையாயிருந்ததென்பது திண்ணம். அந்த உறுதி மேன்மேலும் பெருகுமாறு எனக்கு ஸ்வாமிகளுடைய பரிபூர்ணமான ஆசீர்வாதமும் அன்பர்களுடைய ஆசீர்வாதமும் ஏற்படுமாறு அநுக்ரஹம்புரிய ஸ்வாமிகள் அவர்களின் ஸந்நிதி யிருக்கும் திக்குநோக்கிப் பலகோடி வந்தனம்புரிந்து வேண்டிக்கொள்கிறேன்.

இதில் 'பிரஶ்னோத்தர மாலிகா' என்ற பகுதி, ரத்ன கசிதமான ஹாரத்தின் நடுநாயகம்போல் மிளிர்கிறது. அதனை என்வேண்டுகோளுக்கு இணங்கி எழுதியுதவியதனால் ஸ்வாமி துரியானந்தரவர்கள் உலகத்தின் அஞ்ஞானமாகிய இருட்டை நீக்க ஒரு ஞானபானுவை அளித்தவராகின்றார் என்பது திண்ணம்.

இதில் பிழைகள் பல காண்பது கூடும். பெரியார்கள் அவைகளைப் பொருட்படுத்தாமல், நலமானவைகளைக் கொண்டு தங்கள் ஆதரவை அளிக்க வேண்டுகிறேன்.

பெரம்பூர்,
18-11-'35

திரு. அ. சுப்ரமண்ய பாரதி

சிவமயம்

ப்ரும்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி
திராவிட வித்யா பூஷணம் டாக்டர்

## உ. வே. சாமிநாதையரவர்கள்

அளித்த

# சிறப்புரை

பெரியோர்களுடைய வரலாறுகளும் நல்லுபதேசங்களும் ஒருவரை நல்வழிப் படுத்துமென்பது யாவரும் அறிந்ததே. அவர்கள் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்கள். சிறந்த அனுபவத்தின் பயனாகி அவர்கள் வாக்கிலிருந்து வெளிவரும் ஒவ்வொரு விஷயமும் யாவரும் பின்பற்றிப் பயனடைதற்கு ஏற்றதாகும்.

சேலம் ஜில்லா, நாமக்கல் தாலூகா, சேந்த மங்கலத்தில் ஸ்ரீதத்தகிரி குகாலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாசப் பிரம்மேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளவர்களைப்பற்றி என்னுடைய நண்பர்கள் மூலமாகக் கேள்வியுற்றிருக்கிறேன். இக் கலியுகத்தில் இவர்களைப்போன்ற மகான்களைக் காணுதல் மிக அருமை. இவர்களுடைய சரித்திரமும் இவர்களுடைய நல்லுபதேசங்களும் அடங்கிய 'ஸ்வயம்ப்ரகாச விஜயம்' என்னும் தமிழ் வசன நூலைப் படித்துப் பார்த்ததில் எனக்கு உண்டான ஸந்தோஷத்திற்கு எல்லையில்லை. மனித வாழ்க்கையின் பயனைப் பெறுவதற்கு இன்றியமையாத பல அரிய விஷயங்கள் இப்புத்தகத்தில் நிரம்பி யிருக்கின்றன. ஆஸ்திகர்களுக்கும் சமயப் பற்றுடையவர்களுக்கும் இப்புத்தகம் ஒரு நல்விருந்தாக இருக்குமாதலால், இதனை யாவரும் வாங்கிப் படித்துப் பார்த்து இஷ்டஸித்திகளைப் பெறுவார்களென்று நம்புகிறேன்.

இங்ஙனம்,
**வே. சாமிநாதையர்.**

# FOREWORD

## By

## Diwan Bahadur K. Sundaram Chettiar, B.A., B.L.

*Retd. Judge—High Court, Madras.*

Inasmuch as I have been asked to write a brief introductory note to a book dealing with the life and teachings of a holy sage, I consider that a rare privilege has been accorded to me. In the sacred land of India, which has the reputation of having been the mother country of great Rishis of hoary antiquity, we find even in this so called iron age, saints and sages shining here and there as beacon lights, to dispel ignorance and kindle the fire of spiritual knowledge. They are demonstrating to the world, the true purpose of human life, and by their exemplary conduct in life, testify to their younger brethren, the possibility of the attainment of the goal, provided they adopt the proper means and stand the prescribed test. Nothing great can be achieved, without sacrifice. For the attainment of greatness in the realm of spirituality, one should make sacrifices in most of the things, which form the cynosure of mundane eyes. All of us wish freedom from bondage and misery and seek peace and happiness, but few are prepared to pay an adequate price therefor, and when facing the discomfiture of failure, they console themselves with the illusion that they were only in quest of sour grapes.

The great sage who is the hero of this book, is a living example of spiritual eminence. Early in life, eschewing the pleasures and comforts of the world, and with a burning desire for self-realization, he braved the razor-path "Nivrthi marga" and pursued the course under the blessings of his *sad-guru*, with unabated vigour,

practising the severe austerities of 'Avadhuta Ashramam,' and steadily conquering the vagaries of the mind, and surmounting the difficulties, with remarkable fortitude, courage and dispassion. Many were his physical sufferings, on account of his nudity (one of the shastraic injunctions of his Ashramam), and phenomenal was his patience at the gibes and sneers of world-bound, ignorant youths. The village of Sendamangalam must have something sacred, to have induced this sage to choose a small hillock therein for his abode and performance of penance. For more than three decades, that hillock has been his resting place, except the periods during which he made a tour all over India, including a pilgrimage to Badrinath. To a very large number of disciples, he was a spiritual guide, and men, women and children, who resorted to his abode, have been the recipients of his benediction. Is it not in the fitness of things, that a book of this kind should be written to perpetuate his memory, not only for the benefit of his contemporaries, but also for the good of posterity?

In this brief preface, I should not omit to mention, the consecration of the idol of 'Sri Dattatraiya,' which has sanctified the hillock, where this Avadhuta Swamigal settled in the early part of his life and, in due course attained spiritual illumination. With the noble object of infusing devotion and piety into the hearts of the people, he has brought this temple into existence, and it is my fervent hope, that his object will attain fruition, and this temple will flourish as a lasting monument reminding the people of the glory and greatness of this holy super-man. I should congratulate the author of this book, for the lucid narrative of the sage's life, and also his co-adjutor Sri Thuriyanandaswamy, who has taken great interest and pains in bringing out this publication.

**K. Sundaram Chetty**

श्रीः

# ब्रह्मैव सत्यम्

## विनायकस्तुतिः

श्रीकान्तो मातुलो यस्य जननी सर्वमङ्गळा ।
जनकः शङ्करो देवस्तं वन्दे कुञ्जराननम् ॥

## दक्षिणामूर्तिस्तोत्रम्

अङ्कुरितबोधमुद्रकमपसव्योरूपरिस्थसव्यपदम् ।
वस्त्वेकमनुसरामो वटभूरुहमूलवास्तव्यम् ॥

## दत्तात्रेयस्तोत्रम्

दिगम्बरं भस्मविलेपिताङ्गं बोधात्मकं मुक्तिकरं प्रसन्नम् ।
निर्मानसं श्यामतनुं भजेऽहं दत्तात्रेयं ब्रह्मसमाधियुक्तम् ॥

## शङ्करभगवत्पादस्तोत्रम्

तत्त्वार्थबोधनविहीनहृदम्बुजस्य ।
रागादिदोषपरिपूरितचेतसो मे ॥

तत्त्वं विबोध्य विनिवार्य च रागरोगं ।
श्रीशङ्करार्य मम देहि पदावलम्बम् ॥

सुप्तं सदा मोहवशं गतं मां प्रबोधयन्तं करुणार्द्रचित्तम् ।
गुरुं सदा जाग्रतमप्रमेयं श्रीशङ्कराचार्यमहं प्रपद्ये ॥

तेतियूर् शास्त्ररत्नाकर सुब्रह्मण्य शास्त्रिभिः

विरचितम् ।

स्वयंप्रकाशब्रह्मेन्द्रवाणीचरणपङ्कजम् ।
अज्ञानध्वान्तविध्वंसभास्करं नौमि सादरम् ॥

अज्ञानाख्यमहान्धकारनिबिडे संसारदावानल-
व्याप्तेऽस्मिन्विषयादिघोरविपिने भ्रष्टान् स्वमार्गान्नरान् ।
आदित्याम्बुसमाः स्वयं तदुपरि प्राकाश्यमूर्ध्वं ततः
ब्रह्मेन्द्रद्रुहिणप्रियेत्यभिधया ये संश्रुतास्तान् नुमः ॥

कल्पद्वीमवतारतः पुनरहो वासंतकृष्णापुरं
वासेनापि समस्तभूवलयमप्यारात्स्वसञ्चारतः ।
कृत्वा पूततमं सुरासुरमहीदेवैः स्तुतो योगिराट्
ब्रह्मात्मैकसुमङ्गले सुखतमे स्थाने गुहायां स्थितः ॥

योऽसौ शंकरसद्गुरुर्भुवि पुराऽद्वैतामृतं दुर्लभं
सर्वेषामकरोत् सदैव सुलभं सोऽयं यतीन्द्रः शिवः ।
अद्यास्ते खलु तत्त्वमर्थसुभगे देशे गुहां संश्रितः
शुद्धाद्वैतसुधारसं सुपिबतो लोके स्थितिं दर्शयन् ॥

स्वयंप्रकाशाजसुरेशवाण्यो यन्नामसंकीर्तनतः प्रसन्नाः ।
भवन्ति नृणां सुखदाश्च नित्यं तेभ्यो नमस्ते सुखदा भवन्तु ॥
गीतामृतोद्धारकवासुदेवः स्वजन्मदेशे न च वृद्धिमाप्तः ।
स्वयंप्रकाशाजसुरेशवाणी तथैव योगी स तु दिव्यभोगी ॥

शेङ्कालिपुराऽभिजनेन अनन्तरामदीक्षितकविना विरचितम्

## ॥ श्रीस्वयंप्रकाश ब्रह्मेन्द्रसरस्वतीपञ्चरत्नम् ॥

(நந்தவனத்திலோராண்டி என்ற மெட்டு)

दत्ताद्रिवासं भजेऽहं

नित्यशुद्धं विरक्तं विवस्त्रं यतीन्द्रं

दत्ताद्रिवासं भजेऽहम् ॥

कल्पट्टुग्रामे जनित्वा

बालभावं निनायान्यदेशे महात्मा

वासन्तकृष्णापुराख्ये

बालकृष्णो यथासौ तथा कृष्णब्रह्मा ॥ दत्ता० ॥ १ ॥

सन्यासिभावं गतोऽथ

"ब्रह्मचर्याद्यतित्वं व्रजे" द्वेदभागं

सत्यं चकार त्रयीवित्

शंकराचार्यवर्यो यथाऽद्वैतराजः ॥ दत्ता ॥ २ ॥

नित्यं गुहायां वसन्तं

पूर्णिमायां स्वभक्ताननुग्राहयन्तं

श्रीभूतिदानेन भान्तं

सञ्छिन्नतृष्णालतावज्जटाभिः ॥ दत्ताद्रि० ॥ ३ ॥

श्रीसुन्दरश्रेष्ठिभक्त

तद्दत्तदत्ताद्रिसंपूज्यदत्तम्

आनन्दपूरेण मत्त

सच्छिष्यसंघैः सुदान्तैः परीतम् ॥ दत्ताद्रि० ॥ ४ ॥

दत्तोत्सवासक्तचित्त

स्वीयभक्तौघहृत्तापवद्भूतवस्त्रं

श्रीचित्सभेशात्तविद्यं

मन्दहासेन सन्दर्शितस्वान्त सत्वम् ॥ दत्ताद्रि० ॥ ५ ॥

(வேறு மெட்டு)

स्वयंप्रकाशब्रह्मेन्द्रसरस्वत्याख्यसद्गुरुम् ।
नमामि शंकरानन्दतुरीयानन्दशिष्यकम् ॥ ६ ॥

अनन्तरामदीक्षिताख्यकविवरेण भाषितां
शमधनैकदत्तभक्तयोगिवर्यसंनुतिम् ।

अनुदिनं तु ये पठन्ति तीव्रभक्तिसंयुता
इहपरत्र वाञ्छितानि ते समाप्नुयुर्ध्रुवम् ॥ ७ ॥

உ

செந்திலாண்டவன் திருவடி துணை

# ஸ்வயம்ப்ரகாச விஜயம்

## அத்யாயம் 1

### பாதம் 1

### ஸ்வாமிகளின் அவதாரம்

"நலமலி யறத்துள் துறவறம் போலும்
நதியினிற் கங்கையே போலும்
புலமலி மலருட் பங்கயம் போலும்
புருடருள் மாயனே போலும்
குலமலி தருவுட் கற்பகம் போலும்
குவட்டினுள் மேருவே போலும்
பலமலி வயல்சூழ் பற்பல நாட்டுள்
பார்புகழ் பாரத நாடு"

என்று உலகத்தவ ரெவரும் வியந்து போற்றத்தக்க உயரிய பல வளங்களும் அமைந்திலகுவது பாரத நாடு. இதற்குப் பாரத வருஷம் - பரதகண்டம் - புண்ணிய பூமி என்னும் பெயர்களுமுண்டு.

"பூவிற் சிறந்தது பொறிவாழ் பூவே" என்பதுபோல் "பாரிற் சிறந்தது பாரத நாடு" என்று இதனைக் கூறுவர்.

புண்ய பூமியெனப் போற்றப்படுவதாகையினாலே இந்த நாட்டில் பூலோக முழுவதிலுமுள்ள சகலவித சிரேஷ்ண

பேதங்களும், சிருஷ்டி பேதங்களும் அமைந்து அமரர்களும் விரும்பத்தக்க அதி அபூர்வ தெய்வீக விநோதங்களும் விளங்குகின்றன. இங்கே அதிகக் குளிரும், அதிகக் காற்றும், அதிக வெப்பமும், அதிக மழையும் காண்பதில்லை. சீதோஷ்ண வாத வர்ஷங்கள் அவ்வப்போது பொறுக்கக் கூடியவளவில் அதிக வித்யாஸமில்லாத ஸம நிலையிலிருக்கின்றன.

ஹிமயம், விந்தம், கந்தமாதனம், பொதியம், நீலகிரி, சதுரகிரி முதலிய மகா பர்வதங்களும், கங்கை, யமுனை, ஸரஸ்வதி, நருமதை, ஸிந்து, கோதாவரி, கிருஷ்ணை, துங்கபத்திரை, காவேரி முதலிய புண்ய நதிகளும் இந்நாட்டில் நிலைபெற்று விளங்குகின்றன. வடதிசையில் இமயமலை அரணாக இலங்குகிறது. கிழக்கு, தெற்கு, மேற்கு என்கிற மூன்று பக்கங்களிலும் கடலே அரணாக இலங்குகின்றது. ஆதலால் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய நாடுபடு திரவியம், காடுபடு திரவியம், மலைபடு திரவியம், கடல்படு திரவியம் என்று சொல்லப்படும் நான்கு வகையான திரவியங்களும் பருவகால வேறுபாடுகள் காணமுடியாதபடி எக்காலத்திலும் குறைவுறு நிலையிற் பெருகியவண்ணமிருக்கின்றன.

இவ்வாறு சகல வளங்களும் ஆசார அனுஷ்டானங்களுக்குவேண்டிய செளகரியங்களுக்கு அநுகூலமாய் அமைந்திருக்கிறபடியால், நம்மவர் இந்த நாட்டையே தாம் வதிந்து தர்மாநுஷ்டானம் புரிவதற்குகந்த நாடாகக்கொண்டனர். இதனுலேதான் வர்ணாச்ரம தர்மமுறைகளும் இங்கே நிலை பெற்றிருக்கின்றன.

மேன்மை பொருந்திய இந்தத் தேசத்திலேதான் சிவ பெருமான் சுப்ரமண்யக் கடவுளாக வந்து சூரஸம்ஹாரம்

புரிந்து சகல உலகங்களுக்கும் க்ஷேமமளித்தார். மகா விஷ்ணு பத்து அவதாரங்களெடுத்துத் துஷ்ட ஸம்ஹாரம் புரிந்து சிஷ்டபரிபாலனம் செய்தார். அகஸ்தியர், வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, அத்திரி, விசுவாமித்திரர் முதலிய முனிபுங்கவர்கள் உதித்தருளினர். அநசூயை, நளாயினி, தமயந்தி, சந்திரமதி, ஸாவித்ரி, ஸீதை, மண்டோதரி முதலிய பதிவிரதா சிரோமணிகள் தோன்றி உலகத்தைப் பரிசுத்தப்படுத்தினர். கற்புடைய மங்கையரின் பெருமையும் சக்தியும் அபாரம் என்பதையும், அவை மூவராந் தேவரையும் கட்டுப்படுத்த வல்லதென்பதையும் உலகுக்குணர்த்தப் பிரமா, விஷ்ணு, சிவன் மூவரும் அத்திரி மகரிஷியின் பத்நியும் மகா பதிவிரதா சிரோமணியுமாகிய அநசூயை என்னும் ஸ்திரீ ரத்நத்துக்கு மதலைகளாக வந்து உலகம் உய்ய மூன்று சிரசும், ஒருடலும், ஆறு கரங்களும், அவதூத நிலையுமுடையவராய் ஸ்ரீ தத்தாத்ரேயர் என்னும் பெயருடன் விளங்குவாராயினர். மார்க்கண்டேயர், பரசுராமர், ஹநுமான், விபீஷணன், அசுவத்தாமா முதலிய சிரஞ்சீவிகளும் இங்கேதான் தோன்றினர். ஆதலின் இதன் பெருமை அளவிலடங்காததாகும்.

இத்தகைய பரதகண்டம் வடநாடு தென்னாடு என்று இரண்டு பிரிவாகப் பகுக்கப்பட்டு இருக்கிறது. தென்னாட்டினுள், சேர சோழ பாண்டிய நாடு என மூன்று முக்கியமான பிரிவுகளுண்டு. இவைகளையன்றி நடு நாடு, தொண்டை நாடு சேதி நாடு எனப் பல சிறு நாடுகளுமுண்டு. இவற்றுள் நடு நாட்டின்கண் திருவண்ணாமலைக்கருகே திருக்கோவலூர் என்னும் பெயர் கொண்ட ஓர் சீரூருண்டு. இவ்வூரில் சிவாலயமும் விஷ்ணுவாலயமும் சிறப்புற்று விளங்குகின்றன.

தெய்வப்புலமை வாய்ந்தவரும், அரியபெரிய கருத்துக்களடங்கிய பாடல்கள் பாடி மகிழ்விப்பதையே தாம் உலகுக்குச் செய்யும் நற்றொண்டாகக்கொண்டு தமிழ் நாடெங்கும் சஞ்சரித்தவருமாகிய ஔவைப் பிராட்டியார், தாம் சில நாள் தங்குவதற்கும் தமது தமிழ்ப் புலமையை உலகுக்குணர்த்துவதற்கும் ஏற்ற திருவூராக இந்தத் திருக்கோவலூரையே வியந்து கொண்டனர்.

ஒருசமயம் இவ்வூருக்கு ஔவையார் வந்தபோது தமக்கு அன்போடு அன்னம் படைத்த அங்கவை, சங்கவை யென்னும் இடைப் பெண்களிருவருக்கும் விவாகம் செய்விக்கத் திருவுளங்கொண்டு அந்த மணத்துக்கு வேண்டியவையனைத்தையும் சேகரிக்க,

"கருணையா லிந்தக் கடலுலகங் காக்கும்
வருணனே மாமலையன் கோவல்—திருமணத்தில்
முன்மாரி பெய்யு முதுமாரி யைமாற்றிப்
பொன்மாரி யாகப் பொழி"

என்று வருண பகவானுக்குக் கட்டளை யிட்டனர். அவ்வாறே வருண பகவான் அவ்வூரில் பொன்மாரி பொழிந்தான். பின்னும் ஔவையார்,

"முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து
தத்திய நெய்பால் தலைப்பெய்து—குத்திச்
செருமலை தெய்வீகன் திருக்கோவ லூர்க்கு
வருமளவும் கொண்டோடி வா"

என்று அவ்வூரிலோடும் பெண்ணையாற்றுக்குக் கட்டளை யிட்டனர். அந்நதி ஔவையாரின் கட்டளைப்படி பாலையும் நெய்யையும் பெருக்கியது.

இவ்வாறு ஔவையாரின் பரிபூர்ண அநுக்ரஹத்துக்குப் பாத்திரமான அவ்வூருக்குக் கிழக்கே எட்டுக்கல் தூரத்தில் கல்பட்டு என்னும் பெயர் கொண்ட கிராமம் ஒன்றுண்டு. அந்தக் கிராமத்துக்கு வடபாரிசத்தில் கால்மைல் தூரத்தில் தக்ஷிண பிநாகினியாம் புண்யநதி ஓடுகிறது. தென் பாகத்தில் மூன்றுகல் தூரத்தில் திருவெண்ணெய் நல்லூர் என்கிற திவ்யக்ஷேத்ர மிருக்கிறது. இது தேவாரப் பதிகம் பெற்ற திவ்யக்ஷேத்ரம். நிருதி திசையில் மூன்றுகல் தூரத்தில் ஜீவன்முக்திக்ஷேத்ர மிருக்கிறது. ஆக்நேய திசையில் மூன்றுகல் தூரத்தில் ஒரு ஸ்வயம்பு க்ஷேத்ரமிருக்கிறது.

ஒரு புண்ய க்ஷேத்திரத்திற்கு ஐந்துகல் தூரத்திலிருக்கும் எந்தக் கிராமத்தையும் புண்ய க்ஷேத்ரமாகவே கொள்வது பெரியார் முறையாகையினால், நான்கு எல்லைகளிலும் புண்ய க்ஷேத்திரங்களை அரணாகக் கொண்டு விளங்கும் கல்பட்டு என்னும் கிராமத்தையும் சிறந்த புண்யக்ஷேத்திரமாகவே கொண்டு பிரம்ம, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரரேயன்றி அநுலோமர், பிரதிலோமர் முதலோரும் அந்தக் கிராமத்தைத் தங்கள் வாசஸ்தானமாகக் கொண்டனர். ஒரு புண்ய க்ஷேத்திரத்திலே அற்பப் புழுவாகப் பிறப்பினும் முத்தியின்பமுண்டாகும் என்று சாஸ்திரங்கள் கூறுகிறபடியால் இந்த நுட்பமுணர்ந்த அறிஞர், "ஏ ஜகதீசா! இனிப்பிறவிவேண்டாம். பிறவியுண்டானால் எந்தப் புண்ய க்ஷேத்திரத்திலேனும் புழுவாகப் பிறக்கும்படிசெய்து என்னை யாட்கொள்ள வேண்டும்" என்று வேண்டிக்கொள்வது வழக்கம். புண்ய க்ஷேத்திரவாசம் அத்துணைச் சிறப்புடையது.

கல்பட்டில் இவ்வாறு யாவரும் வந்து குடிகொள்ளவே அவ்வூர்,

"சேறுமணக்குஞ் செய்யுளெல்லாம்
 தெய்வமணக்குஞ் செய்யுளெல்லாம்
நீறுமணக்கு மங்கமெலாம்
 நிறைபூமணக்கு மங்கமெலாம்
சாறுமணக்கும் நியமமெலாம்
 சாந்தமணக்கும் நியமமெலாம்
சோறு மணக்கு மகங்களெலாம்
 சொரி நெய்மணக்கு மகங்களெலாம்"

என்றும்,

"ஓங்குமாதவர் நிறைதரு மடங்களும் பல்ல
தாங்கு மன்னமா தானஞ்செய் மடங்களும் பல்ல
தேங்கு தீஞ்சுவை திகழுநீர்ப் பந்தரும் பல்ல
பாங்கு சேர்கலை பயில்தரு சாலையுஞ் பல்ல"

என்றும்,

"ஈசன்மெய் யெழுத்தைத் தெண்ணி யிணையில்கண் மணிகள் [பூண்டு
வாசவெண் ணீறு மேனி முழுமையும் வயங்கப் பூசி
மாசிலா நான்குஞ் செய்து நான்கையும் மருவ வைகும்
ஆசைமே லாசை யில்லா அடியவர் கூட்ட மெங்கும்"

என்றும் புகழ்ந்து போற்றும்படி பெருஞ்சிறப்புடன் பிரகாசித்தது. ஆதலால் இப்போது மிகத் தாழ்ந்த நிலையிலிருக்கும் அவ்வூர் அக்ரஹாரம் சிலவருஷங்களுக்கு முன் மிக்க உந்நத நிலையில் விளங்கியது.

"எழுதுபுகழ் மறையொலியு மெழுதாத மறையொலியும்
எழுசுவையா கமவொலியு மினியபுரா ணத்தொலியும்
எழுதரும நூலொலியு மியம்புபிற பாவொலியும்
எழுகலியி னெழுகலியி னிறுமாப்பை யடக்குவன"

என்று கூறுகிறபடி அங்கே பல மேன்மைகள் ஓங்கியிருந்தபடியால் அவ்வூர் அந்தணரனைவரும் தங்கள் வரு

ணத்துக்குரிய கடமைகளில் முதற்கடமையாகிய வேதமோது தலே மேற்கொண்டு சகல சாஸ்திர பண்டிதர்களாக விளங் கினர். அதனாலே அவர்களிற் பெரும்பான்மையோர் உலக ஆசைகளில் ஈடுபடாமல் முத்தியின்பம் நாடியவர்களா யிருந்து உலகம் தங்களை மரியாதையில் வைத்துப் போற்றத் தக்க தகுதியையே அரணாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

என்றும்,

"ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினு மோம்பப் படும்"

என்றும் கூறப்படும் போதனைகளைச் செவ்வனே உணர்ந்த வர்களாதலால் அவர்களனைவரும் ஒழுக்கம் என்கிற உயர்ந்த ஓங்கலில் ஏறிநின்று,

"ஒழுக்கத்தின் மிக்க உயர்வில்லை; இல்லை
இழுக்கத்தின் மிக்க இழிவு"

"ஒழுக்கத்தி னின்ற னுடம்பழுக்கைப் போக்கு
விழுப்பந் தரு முருக வேள்"

என்னும் நீதிகளைப் பிறர் தங்கள்பால் கண்டுணர விளங் கினர்.

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூணடொழுக லான்"

என்ற பிறந்துள்ள உயரிய நீதி விளக்கம அவர்களுடைய உள்ளமெனும் கூடத்திலே பிரகாசித்தபடியால், அவர்கள் எந்த ஒரு சிறிய பிராணியினிடத்தும் அன்பு பாராட்டி வந்

ததுமல்லாமல் ஏனையவருணத்தவரிடத்திலும் தாங்கள் எந்த முறையிலே நடந்துகொள்ளவேண்டுமோ அந்த முறையிலே நடந்து அவர்களின் அன்பிற்கும் மதிப்பிற்கும் பாத்திரரா யினர்.

இப்படிப்பட்ட மேலான நிலையிலிருந்த அவ்வூர் அந்த ணருள், ஸ்ரீவத்ஸ கோத்திரத்திலே பிறந்து ஆபஸ்தம்ப சூத்திரத்தை அநுஷ்டித்துவந்த வடதேச வடமப் பிராஹ் மணோத்தமர் ஒருவர் ராமஸ்வாமி சாஸ்திரிகள் என்னும் திவ்ய திருநாமம் பூண்டு விளங்கினர். இவர் தமது மர பினுக்கேற்றபடி வேதாத்யயனம் செய்து சகலசாஸ்திரங்களை யும் ஓதியுணர்ந்து,

"கற்க கசடறக் கற்பவை கற்றபின
நிற்க வதற்குத் தக"

என்றபோதனையை மேற்கொண்டு எல்லோருக்குமினியராயும், சான்றோரெனப் போற்றத்தக்கவராயுமிருந்தார். இவருக்கு ஜானகியம்மை என்கிற திருப்பெயர் வாய்ந்த மாதொருவர் வாழ்க்கைத்துணையாய் வாய்த்திருந்தனர்.

இவர்கள் பேரளவில் மாத்திரம் ராமஸ்வாமி சாஸ் திரிகளும் ஜானகியம்மையுமாக இல்லாமல், குணங்களிலும் ஸ்ரீராமபிரானையும் அவர்தம் வாழ்க்கைத் துணையாயமைந்த ஜானகியம்மையாரையும் ஒத்திருந்தனர். இவ்வாறு இவர் களுக்குள் தாம்பத்ய நேசம் வாய்ந்திருந்தபடியால்,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை"

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை"

"அலைபுனல் படிதல் சந்திவந் தனைநல்
அருமறை செவித்தல்தீக் கரும
மலர்தரு சாகை மறையினை நவிறல்
மலர்கள்தூய் இறைவனை வணங்கல்
இலகொளி யழலில் வைச்சுவ தேவம்
அதிதிபூ சனையிறந் தோருக்
குலவுநீர் வழங்கல் இல்லுறை வோரில்
ஒன்பதுந் தினஞ்செய லுரித்தாம்"

என்று கூறப்படும் இல்லறத்தாருக்குரிய கடமைகளை இவர்கள் எளிதில் நடாத்தி இன்புற்றனர். இவையன்றிப் புண்ய க்ஷேத்ர யாத்திரை, தீர்த்த ஸ்நானம், பகவத் தரிசனம், பெரியார் பணிவிடை முதலிய கைங்கர்யங்களிலும் ஈடுபட்டு, இல்லறம் நடத்துவது இவ்விதம் என உலகுக்குணர்த்த உதித்தவர்களென்று வியக்கத்தக்கபடி சிறப்புற்றிருந்தனர்.

ஆகவே,

"இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதென்
இல்லவள் மாணாக் கடை"

என்னும் பொய்யாமொழி பொய்யாகாமல் ராமஸ்வாமி சாஸ்திரிகளின் குடும்பம் ஜானகியம்மையாரின் மகா உத்தம குண ஸம்பத்தினால் குறைவற்றதோர் சிறப்பினைப் பெற்றது. கானகஞ்சென்ற ஸ்ரீராமபிரான், மானாக வந்த மாரீசனைப் பிடிக்கச் செல்லுகிற சமயத்தில் லட்சுமணனை நோக்கி, "லட்சுமணா! ஸீதையைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள். இவளிடந்தான் சகல சக்திகளுமிருக்கின்றன" என்று கூறியதைப்பற்றி ஆலோசித்தால் பதிவிரதாசிரோமணிகளே எல்லா நன்மைகளுக்கும் ஆதாரமானவர்களென்பது தெளிவாய் விளங்குகிறபடியால், இங்கே உத்தம குணங்களைப் பூஷணமாகப் பூண்ட ஜானகியம்மையாரால்

ராமஸ்வாமி சாஸ்திரிகள் சகல மேன்மைகளும் அடைந்தா ரென்பது வீண் வர்ணனையாகாது.

இவ்வாறு சகல நன்மைகளுக்கும் காரணமானவர் ஜானகியம்மையார் என்றுணர்ந்த மதியூகிகள் அவ்வம் மையாரைப் புகழ்ந்தனர்; இப்படி ஸ்திரீபுருஷர்களுள் அந்யோந்ய தாம்பத்யம் அமைவது அரிதெனவும் பேசிக் கொள்வாராயினர்.

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு"

என்று தமிழ்வேதம் சாற்றுகிறபடியால் அந்த நன்மக்கட் பேறு அடைய இவர்களுக்கு ஆண்டவன் கிருபை புரிவானாக வென்று பெரியோர் ஆசீர்வாதமுஞ் செய்தனர்.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசிற்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்"

என்று மக்கட்பேற்றின் பெருமை விளங்குகிறபடியாலும் உலகப்பற்றை முற்றுமொழித்தருளிய மிருகண்டு முனி வரும் புத்திரப்பேறு கருதிப் அரிய தவமியற்றியதாகக் கூறப்படுவதாலும், தசரதன் புத்திரப்பேறு கருதிப் புத்ரகா மேஷ்டியென்னும் வேள்வி நடத்தியபடியாலும் அந்யோன்ய தாம்பத்யசீலர்களாகிய இவர்களும் அந்த நற்பேற்றை எதிர் பார்த்த வண்ணமிருந்தனர்.

இப்படிப்பட்ட தாயநிலையிலிருந்த இவர்களுடைய மனோரதம் நிறைவேறப் பகவான் கிருபை செய்தார். பெரி

யோருடைய ஆசீர்வாத பலமும் சிறந்து நின்றது. அப்பால் இவர்களுக்கு நான்கு புத்திரசிகாமணிகளும் இரண்டு புத்திரிகளும் பிறந்தார்கள்.

"திடஞானி தரிசனமே தீர்த்தமாடல்
திடஞானி தரிசனமே தேவபூஜை
திடஞானி தரிசனமே ஜபதபங்கள்
திடஞானி தரிசனமே செயுமறங்கள்
திடஞானி தரிசனமே சிவத்தைக்காணல்
திடஞானி தரிசனமே சிவத்தின்சேவை
திடஞானி தரிசனமே மேவுதற்குத்
திரிவிதமா முலகத்து மரிதாமி யார்க்கும்"

என்று ரிபுகீதை கூறுகிறபடி, தமது தரிசனத்தால் உலகத்தவர் புண்யதீர்த்தமாடிய பயனையும், தெய்வ ஆராதனை செய்த பயனையும், ஜபதபங்கள் செய்த பயனையும், தான தர்மங்கள செய்த பயனையும், சிவதரிசனம் செய்த பயனையும், சிவசேவை செய்த பயனையும் ஒருங்கே அடைவதன்றி,

"புணர்ந்த பாவமெ லாம்பரி பூரணம்
உணர்ந்த ஞானி விழிபட வோடுமே"

என்று சசிவன்னபோதம் கூறுகிறபடி தம் விழிபடுவதால் பாபங்கள் நீங்கி உய்யவும், பரமஹம்ஸ ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர அவதூத ஸ்வாமிகள் என்னும் திருப்பெயர் வாய்க்கப்பெற்று, சேந்தமங்கலம், ஸ்ரீதத்தகிரியில் குஹாலயத்தின்கண் வசிக்கும் நம் ஸ்வாமிகள் புண்யஸ்வரூபிகளாகிய ராமஸ்வாமி சாஸ்திரிகளுக்கும் ஜானகியம்மையாருக்கும் பிறந்த புத்திரர்களில் நான்காமவராவார்கள். நான்காவது துரீயவஸ்துவாகையினால், நான்கா

மவராகிய நமது ஸ்வாமிகளும் புத்திரரில் துரியமாகவே விளங்குவாராயினர். அறம் பொருள் இன்பம் வீடு என்கிற நான்கனுள் வீடு என்பது சிறந்த புருஷார்த்தமானமயினுல் நம் ஸ்வாமிகளும் நான்காவதென்கிற வரிசையில் அந்த வீட்டின்பத்தைத் தம்மை யீன்றவர்க்கும், தமது வம்சத்தவர்க்கும், தம்மைத் தரிசிப்பவர்க்கும் சொந்தமாக்கித்தர வல்லவராயினர். ஸ்ரீராம லட்சுமண பரத சத்ருக்னர் என்கிற புத்திரர் நால்வரில், நான்காமவனுகிய சத்ருக்னன் சத்ருஜித்தாக விளங்கியதுபோல் நான்காமவராகிய நமது ஸ்வாமிகளும் ஆத்ம சத்ருக்களாகிய அரிஷட் வர்க்கங்களை (காமம், க்ரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம்) ஜயிப்பவராக விளங்கினர். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்கிற நான்கு மார்க்கங்களில் ஞான மார்க்கம் சிறந்திருத்தல் போல் நான்காமவராகிய ஸ்வாமிகளும் அந்த ஞானுநுபவ சீலராயினர். பிர்மசரியம் கிருஹஸ்தம் வானப்பிரஸ்தம் ஸந்யாஸம் என்கிற நான்காச்ரமங்களில் நான்காவதாகிய ஸந்யாஸம் மேன்மை பெற்றிருப்பதுபோல் நம் ஸ்வாமிகளும் அந்த ஸந்யாஸ ஆச்ரமத்தில் ஸர்வோத்க்ருஷ்டமான அவதூத ஆச்ரமத்தை மேற்கொண்டு சிறப்புற்றனர்.

இப்படிப்பட்ட மேன்மைகளுக்கெல்லாம் உறைவிடமாகிய நம் ஸ்வாமிகள், பிரஜோத்பத்தி வருஷம் கார்த்திகை மாதம் 14-ஆந்தேதி செவ்வாய்க்கிழமை உதயாதி நாழிகை 27½-க்கு ரிஷபலக்னமும் மிருகசீர்ஷ நக்ஷத்திரமும் கூடிய சுப தினத்தில் திருக்கோவலூருக்கு எட்டு மைல் தூரத்திலுள்ள கல்பட்டில் அவதரித்தனர். அச்சமயம் நல்ல கிரஹங்களெல்லாம் ஸ்வாமிகளை வரவேற்க வந்தனபோல் தத்தம்

புண்ய நிலையிலே பிரகாசித்தன. பிரஹஸ்பதி, "இவர் நிச்சய புத்தியுடையவராவார்" என்பதை உலகுக்குணர்த்துவது போல் உச்சம் பெற்றிருந்தார். திங்கள் பரிபூர்ணமாய் ஈசன் நுதலின்கண் பொலிவுற்றது. சுக்ரன் கன்னியிலமர்ந்தது. தநுசில் சனி நின்றது. ஞான காரக கேது சப்தமத்தில் பாநுவுடன் பொலிந்து தேளின்மீதுற்றது. புதன் அஷ்டமத்திலுற்றது. மோக்ஷவீடு களங்கமற்றதாயிற்று.

## ஸ்ரீமத் ஸ்வாமிகளின் ஜாதகம்

விஜயாப்யுதய ப்ரஜோத்பத்தி வருஷம் கார்த்திகைமீ 14உ கிருஷ்ணபக்ஷம் பிரதமை செவ்வாய்க்கிழமை மிருகசீர்ஷ நக்ஷத்திரம் உதயாதி நாழிகை 27½-க்குப் புண்யாவதாரம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல ரா சந் | |
| | ராசி விசேஷம் | | குரு |
| செ | | | |
| பு சனி | ரவி கேது | | சுக் |

இவ்வாறு ஸ்வாமிகள் பூவுலகில் அவதரித்தவளவில் தேவர்களும் மஹரிஷிகளும் சந்தோஷமடைந்து, "இந்தஞான பாநுவையடைய இந்தப் பூமி செய்த தவந்தான் யாதோ!" என்று வியப்புற்றுத் தங்கள் பரிபூர்ண ஆசீர்வாத முதவி

னர். பூமிதேவியும் பூரித்தாள். கலைமகள், வேத சாஸ்திராப்யாஸ ப்ராண்டித்யத்தினால் அடையத்தக்க பயன் இத்துணைச் சிறப்புடையதென்று உலகம் இந்த ஸத்புத்திரனாலுணரும் என்பதுணர்ந்து மகிழ்ந்தாள். திருமகளும், "பொருளை நல்ல வழியிலே செலவிடுவதாலாகும் பயனையும், பொருளை நல்ல வழியிலே தேடுவதாலுண்டாகும் பயனையும் உலகுக்குணர்த்த வந்தவன் இவன்" என்று கருதி மகிழ்ந்தாள். மலைமகள், "நாம் வகுத்த முப்பத்திரண்டு அறங்களையும் உலகுணர்ந்துய்யும் வழியைக் காட்டவந்த மகான் இவன்" என்றெண்ணி மகிழ்ந்தாள். கல்பட்டு என்கிற அந்த ஊரும் தனக்கு இனி எவ்விதமான ஊறும் இல்லையென்றெண்ணிப் பாசத்தளையினின்று நீங்கிய பரம ஞானியைப்போல் குதூகலமடைந்தது. நம்முடைய ஸ்வாமிகளின் மாதாவும் பிதாவும் முன்பு தாங்கள் மூன்று புதல்வர்களை அடைந்தபோது பெற்ற மகிழ்ச்சியைவிடப் பன்மடங்கதிகமான மகிழ்ச்சியை அடைந்து, "பூர்வத்தில் பகீரதனால் சூரிய வம்சமடைந்த உயர்கதி நமது வம்சமுமடையுமென்பது திண்ணம்" என்றுணர்ந்து உவகைக் கடலில் மூழ்கினர்.

## பாதம் 2

## இளமைப் பருவம்

ராமஸ்வாமி சாஸ்திரிகள் வர்ணாச்ரம நெறிதவறாத பிராமணோத்தமராகையினால் தமது மரபிற்குரிய முறைப்படி புண்யாஹவாசனம், விதைதானம் முதலியன நடத்தி ஸ்வாமிகளுக்குக் கிருஷ்ணமூர்த்தி யெனத் திவ்ய நாமகரணம் செய்வித்தனர். ராமஸ்வாமிக்குக் கிருஷ்ணமூர்த்தி பிள்ளை

யா? என்று அதிசயமுற்றவர், 'ஆத்மாவை புத்ரநாமாஸி' (தந்தையே மகன்) என்கிற வசனத்தை யெண்ணி, "இப்பெயர்தகும்" என்றனர்; "இக்குழந்தை தாமரஸதளம் போன்ற நயனமும் விசாலமான நெற்றியும் பழுதகன்ற கரசரணங்களும், விசாலமான மார்புமுடையராய் விளங்குகிறபடியால் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி யென்கிற பெயர் பொருத்தமுடையதேயாம்; கிருஷ்ணமூர்த்தி அஞ்ஞான அந்தகாரத்தை ஆகர்ஷணஞ் செய்து ஞானமூட்டவல்லவர். அந்த அரிய தன்மையை இவரும் பெறுவார்; வஸிஷ்டர் ஸ்ரீராம லட்சுமண பரத சத்ருக்நர்களுக்கு அவரவரிடம் விளங்கிய லட்சணங்களுக்கிசைந்த பெயர்களைச் சூட்டியதுபோல் இப்பெயரும் இக்குழந்தைக்குச் சூட்டப்பெற்றிருக்கிறது" என வியந்து பாராட்டினர்.

இவ்வாறு நல்லோர் திருப்பெயரடைந்த ஸ்வாமிகள், கல்பட்டிலிருந்து சிறிது தூரத்திலுள்ள வஸந்த கிருஷ்ணபுரத்தில் கொஞ்சகாலம் வளர்ந்து வந்தார். கிருஷ்ண பரமாத்மா ஒரூரில் பிறந்து வேறோர் ஊரில் வளர்ந்தது போல் ஸ்வாமிகளுக்கும் நேர்ந்தது கவனிக்கத்தக்கதாம். சாஸ்திரிகள், ஸ்வாமிகளுக்கு அன்னப்பிராசனம், சௌளம், அக்ஷராப்யாஸம் முதலியவற்றை அவ்வப்போது சாஸ்திரோக்தமாகச் செய்வித்தனர். ஸ்வாமிகள்,

"உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினி லுத்தமனைக் காண்" என்று ஔவைப் பிராட்டியார் போதித்துள்ளபடி,

"பிறப்பதும் இறப்பதும் பெயருஞ் செய்கையும்
மறப்பதும் நினைப்பதும் வடிவம் யாவையும்
துறப்பதும் இன்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடையரன்....................." என்னும்,

உத்தம புருஷனை சிவபெருமானைக் கண்டு பேரானந்தம் அநுபவிக்கவும், தம்மைத் தரிசித்தவர் சிவஞானச் செல்வம் பெற்றுய்யவும் முடிவில் பிறவியென்னும் பேராழி கடந்து பேரின்ப வீடடையவும் உடம்பு பெற்றவராதலால் அவருடன்,

"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு"

என்று தமிழ்வேதம் சாற்றுமொரு பெருமைக்குட்படுத்த வல்ல அன்பு என்னும் அரிய குணமும், அந்த அன்பை வளர்க்கும் பொறுமையும், எல்லோரையும் சமமாய் நடத்துவதற்குரிய திருவுளத்தைத் தரவல்ல தயையும், என்றும் மாறுபாடில்லாத மகத்வத்தைப் பெருக்கத்தக்க உதாரத்வமும், தனக்குத்தானே பெருமிதங்கொள்ளாம லிருப்பதற்கு வேண்டிய அடக்கமும், ஒழுங்கீனமாக நடவாமலிருப்பதற்கு வேண்டிய உபசரணை செய்யும் உள்ளமும், தன்னலத்தை மாத்திரம் விரும்பாமலிருப்பதற்கு வேண்டிய அபேத எண்ணமும், அநீதி வழியிலே மகிழாமல் நீதி வழியிலே மகிழ்வதற்கு வேண்டிய ஸத்யகுண ஸம்பத்தும், இவையனைத்தையும் நிலைநிறுத்த வல்ல தெய்வ பக்தியும் ஆகிய இவ்வரிய குணங்களெல்லாம் உதித்து, ஸ்வாமிகள் வளர வளர, இவைகளும் வளர்ந்து வந்தன.

இத்தகைய உயரிய குணங்கள் குடிகொள்ளத்தக்க ஓர் ஆலயமாக விளங்கிய ஸ்வாமிகளைக் , கண்டாரனைவரும் "இவன் தமிழ்நாட்டை ஈடேற்ற வந்த குருநாதன்! தரிசித்தவர்களுடைய பவமாசகற்றும் பரமஞானி. கடாட்ச மாத்திரத்தில் தன்னிடம் அன்பு பூண்டவர்களின் விருப்பம் நிறைவேற அநுக்ரஹஞ் செய்யும் ஆற்றலுடைய அவதார

புருஷன். இவனைப்பெற இவன் தாய் தந்தையர் செய்த தவந் தான் யாதோ? எந்தத் தெய்வத்தின் அநுக்ரஹமோ?

'தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்'

என்று தமிழ்வேதம் சாற்றுவது கண்டோம்" என்று பேசிக் கொள்வாராயினர்.

" 'ஐவரொடுங் கூடாமல் அந்தரங்க சேவைதந்த
தெய்வ அறிவே சிவம்'

என்பதையும்,

'கொலைகளவு கட்காமங் கோபம்விட் டாலன்றே
மலையிலக்காய் ஈசனருள் வந்து நிற்கும்'

என்பதையும் போதிக்க வந்தவன் இவன்" என்றும்,

"அருளே உருவுகொண் டவனியில் வந்த
பொருளே இவனெனப் பொலிகின்றான்"

என்றும்,

"எல்லா மிறையருள் என்னு முயர்மதியில்
வல்லாண்மை கொள்வோன் இவனுவன்"

என்றும்,

"எந்த மூர்த்திகளையும் எழிற்குரு வடிவெனச்
சிந்தையில் தியக்கறத் தேர்ந்தவன் இவனே"

என்றும், கூறக்கூடிய இந்த நிலையில் ஸ்வாமிகள் விளங்குகிற காலத்தில், அந்நாட்டில் ஒரு கொடிய பஞ்சமுண்டாயிற்று. அது உண்டானது தாது வருஷத்திலாகையினாலே அதனைத் தற்காலத்திலும் பலர் தாது வருஷத்தியபஞ்சம் என்று கூறுவதுண்டு.

"விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி"

என்பதற்கேற்ப எல்லோரும் பசித்துன்பத்துக்காளாய் வருந்தினர். அது ஸ்வாமிகளின் தந்தை ராமஸ்வாமிசாஸ்திரிகளேயும் பாதித்தது. தீயோரிடையில் அகப்பட்ட நல்லோரும் தீமையடைவர் என்பது பொய்யாகுமா?

ராமஸ்வாமி சாஸ்திரிகள் பெரிய தனவந்தரல்லர். அவர் தமது வித்தையையே தனமாகக் கொண்டு குடும்பத்தை நடத்தி வந்தனர். குடும்பம் பெரியதாகையினல் சாஸ்திரிகள் இக்காலத்தில் மிகவும் கஷ்டப்பட்டார். ஆயினும் எல்லாம் இறைவன் செயல் என்று மிக்கதைர்யங் கொள்ளும் இயல்புடையவராகையினல், தலைமுறை தலைமுறையாய் வசித்து வந்த கல்பட்டு என்னும் கிராமத்தை விட்டுப் புறப்பட்டுச் சோழமண்டலத்தின் திலகமெனவிளங்கும் தஞ்சாவூரைச் சார்ந்த ஆடுதுறையென்னும் பெயர்கொண்ட நடராஜபுரத்தை நாடியடைந்து அவ்வூர் அக்ரஹாரத்திலே குடியேறினர். அந்தவூர் காவேரி நதியின் கரைமீதமைந்துள்ளதாதலால், "இது நமது தவத்துக்கு ஏற்ற இடம்" என்று மகிழ்ந்து, சாஸ்திரிகள் ஸ்நான ஸந்தியாவந்தன நேமநிஷ்டைகள் தவருதவராயிருந்து, "வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை" என்பதை உணர்ந்து, ஒழுக்கத்தில் இவர் குசேலர் என்று புகழத்தக்க நிலையில் குடும்பத்தை நடத்தி வந்தனர். மகா விவேகியாகையினல், சாஸ்திரிகளிடம்

"வடிவுந் தனமும் மனமும் குணமும்
குடியுங் குலமும் குடிபோ கியவா
அடியந் தமிலா அயில்வே லரசே
மிடியென் றொருபா விவெளிப் படினே"

என்று மேலோர் கூறியபடி வறுமையினால் ஏற்படக்கூடிய மாறுதலெதுவும் ஏற்படவில்லை. வாழ்வு வருங்காலத்தில் மகிழ்வதும் தீவினையினாலே தாழ்வு வருங்காலத்தில் சலிப்பதும் பேதையர் செயலாகையினாலே சாஸ்திரிகள் அப்படிப்பட்ட ஒரு தன்மையினையும் அடையவில்லை; "சாட்டையிற் பம்பரசாலம் போலெல்லாம் ஆட்டுவான் இறை" என்றுணர்ந்து அவன் அடித்துணையையே துணையாகக்கொண்டார்.

"கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்"

என்று ஔவை கூறியபடி இல்லாமை ஏற்பட்ட இக்காலத்தில் இவரை இகழவேண்டிய மனைவியார் இகழ்ந்தாரில்லை; மிகப் பெருமைப்படுத்தி மனமகிழ்ச்சியோடிருந்து கணவனாரையும் ஊக்கமிழவாதவண்ணங் காத்து வந்தனர்.

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்று தமிழ் வேதம் சாற்றுகிறதன்றோ? மனைமாண்பு இவ்வாறு அமைந்தபடியால் சாஸ்திரிகள்,

"இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்
இன்மையே இன்னா தது"

என்று சொல்லப்படுகிற வறுமைத் துயரங் கடந்தவராய் வையக வாழ்வின் தன்மையுணர்ந்து ஞானநிலையில் நிற்குமொரு பெரியாரெனப் பேசத்தக்க பெற்றியில் அற்றமில்லாதவராயிருந்தார். மகாவித்வானாகையால் சாஸ்திரிகளுக்கு

அந்த ஊரிலும் வறுமையடைந்த அந்த நிலையிலும் பெருமையே மிகுந்திருந்தது. அவர் வாக்குக்கு மதிப்பு அதிகமாகவே இருந்தது.

"மூர்க்கன் தன் வீட்டிலும், பிரபு தன் கிராமத்திலும், அரசன் தன் தேசத்திலும், வித்வான் எல்லாத் தேசத்திலும் பூஜிக்கப்படுவான்" என்றும், "கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு" என்றும் பெரியார் கூறியுள்ளவை வீணாகுமா?" இச்சமயங்களிலெல்லாம் சாஸ்திரிகளுடைய மனத்திலே,

"செல்வம் சகடக்கால் போலவரும்",

"வாழ்வும் தாழ்வும் உலகவாழ்விற்கு இயல்பு",

"எழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாகினு மாகும்",

"குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே யழியினு மழிவர்",

"குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினு நண்ணுவர்"

என்பவை அடிக்கடி ஞாபகத்திற்கு வந்தமையினால் சாஸ்திரிகள் சிறிதுந் தளர்வின்றித் தமது கடமைகளைச் சரிவர நடத்திக்கொண்டு ஈசுவர த்யானபரராயிருந்தார்.

"தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள்
தந்தம் வினையான் வரும்"

என்று தமிழ் வேதஞ் சாற்றுகிறபடியால் அந்தத் திருவாக்கின் நுட்பமுணர்ந்த சாஸ்திரிகள் கடைசியாகப் பிறந்த நம் ஸ்வாமிகளைக் கடையனென்றெண்ணாமல் எல்லாமுடையன் என மதித்துத் தம்முயிர்போற்கருதி யாதரித்து வந்தனர். ஸ்வாமிகளுடைய அப்பருவத்தின் திருவிளையாடல்களி

லும், பேச்சிலும், நடத்தையிலும், ஊக்கத்திலும், சுறுசுறுப்பிலும் அதிசயிக்கத்தக்க விசேஷங்கள் அடிக்கடி காணப்படுவதுண்டு. அப்பொழுது சாஸ்திரிகள் இக்குழந்தை ஞானவான் என்பதுணர்வார். உணர்ந்தவளவில் அவர் மனத்தில்

" எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின் "

என்று வெளிவந்துள்ள வேதத் திருவாக்குப் பிரகாசிக்கும்; பிரகாசிக்கும்போது அவர் தமது தவம் பெரிதென்று கருதுவர். தில்லையில் திருக்கோயில்கொண் டெழுந்தருளியுள்ள நடராஜப் , பெருமானிடம் அன்பு பூண்டவராகையினுல், அவர் ஸ்வாமிகளின் திருவிளையாடல்களைக் காணும்போதும் அமிழ்தினுமினிய அவர்களின் மொழியின்மூலம் வெளிப்படும் உயரிய கருத்துக்களை உணரும்போதும், "என் அப்பனே நடன சபாபதியே! இம்மதலையை உன் அடைக்கலப் பொருளாக்கொண்டு, எந்தவிதமான இடையூறும் இவனை அணுகாதபடி காப்பது உன் கடமையாகும். இவனை இந்த அடியேனுக்குக் குழந்தையென அளித்தவனும், இவனுள்ளிருப்பவனும் இவனை இவ்விதத் திருவிளையாட்டுக்கள் புரியும்படி செய்பவனும் நீயே யல்லவா? என் ஐயனே! யசோதை தான் மகவாகவடைந்த கிருஷ்ணமூர்த்தியினுடைய பால்ய லீலைகளைக் கண்ட சமயம் மகிழ்வுற்று, 'ஏ ஜகதீசா! நீயே இவனைக் காப்பாற்றவேண்டும்' என்று கூறித் திருஷ்டி சுற்றிப் புகல் புக்கதுபோல், அடியேனும் நின்னைப் புகலடைகின்றேன். இனி இவன் கவலை உனக்கேயாம், எனக்கில்லை" என்பர்.

குடும்பம் இப்படி நடந்துவரும் சமயத்தில் ஸ்வாமிகளுடைய தமையன்மார் மூவரும் ஸம்ஸ்கிருத பாஷை

பயின்று வேதபாடசாலை உபாத்யாயராகவும் பள்ளிக்கூட உபாத்யாயராகவுமிருந்து சரீர யாத்திரை நடத்தத் தலைப் பட்டனர்.

ஆங்கிலம் பயின்றோர் பெரிய பெரிய உத்யோகங்களை யடைந்து உலகவாழ்வில் உயரிய நிலையிலிருந்து பெருமை பெறுவதைச் சாஸ்திரிகள் கண்கூடாகக் கண்டதனால், அவர் களுள்ளத்திலும் தங்கள் கடைசிப் புதல்வனாகிய நம் ஸ்வாமி களை அந்தப் பாஷையில் தேர்ச்சிபெறும்படி செய்விக்க வேண்டுமென்கிற எண்ணமுண்டாயது.

"தந்தை மகற்காற்று முதவி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்னும் வேதமொழியை உணர்ந்தவ ரல்லவா? அதனால் சாஸ்திரிகள் நம் ஸ்வாமிகளை ஆடுதுறைக் கருகேயுள்ள திரு விடைமருதூரில் விளங்கிய ஓர் ஆங்கிலப் பள்ளிக்கூடத்திற் கனுப்பிக் கல்வி பயிலும்படி செய்ததுமல்லாமல் ஸ்வாமிக ளுக்கு அச்சமயம் உபநயனம் செய்விக்கத்தக்க வயது வந்த மையால் தம் மரபிற்குரிய வழக்கப்படி சாஸ்திரவிதி தவ றாமல் உபநயன ஸம்ஸ்காரமும் செய்வித்தனர்

## பாதம் 3

## வித்யாப்யாசம்

ஸ்வாமிகள் மிகச் சுறுசுறுப்பாகப் படித்துத் திருவிடைமரு தூரிலுள்ள படிப்பை முடித்தனர். திருவிடை மருதூர், மத்தியார்ச்சுனம் என்னும் ஸம்ஸ்கிருதப் பெயரையுடைய திவ்ய சிவக்ஷேத்ரம். இந்த க்ஷேத்திரத்திற்குச் சென்று உப

வாசமிருந்து, மகாலிங்க மூர்த்தியைத் தரிசித்து வருகிறவர்கட்குப் பிரஹ்மஹத்தியாதி பாபங்களும் நீங்குமென்பது பிரசித்தம். சோழமகாராஜனுக்கு நேர்ந்த பிரஹ்மஹத்திதோஷம் இந்தத் தலத்திலே நீங்கியதென்று புராணம்கூறும். இன்னும் இதன் பெருமை அதிகமுண்டு. இங்கேதான் மகாலிங்கமூர்த்தி, திருவெண்காடர் என்னும் பட்டினத்தடிகளுக்குப் புதல்வனாகும் பொருட்டுச் சிறுமதலையாய் எழுந்தருளிச் சிவசர்மா என்கிற பிராமணரிடம் சேர்ந்தது. இங்கேதான் பட்டினத்தடிகளைக் குருவாகக்கொண்ட பத்திரகிரியாரும் நாயடியாரும் சிவானந்த ஜோதியிலே கலந்தது. இங்கேதான் பட்டினத்தடிகள் தியான சமாதியிலிருந்து சிவபோகமநுபவித்தது.

பின்பு ஸ்வாமிகள் அருகே கும்பகோணத்தில் பிரஹ்மஸ்ரீ அப்பு சாஸ்திரிகளின் மேற்பார்வைக்குட்பட்டிருந்த நேடிவ் ஹைஸ்கூலிலே சேர்ந்து படிக்கத் தலைப்பட்டார்.

ஸ்வாமிகள் புவியில் ஜனிக்கும்போதே ஸுஞ்ஞானம் என்கிற திருக்கண்ணுடன் பிறந்தவராகையினால் அவர்களுக்கு அச்சிறுவயதிலேயே, உலகவாழ்க்கை நீர்க்குமிழி போல் நிலையற்றதென்பதும், பாரினில் வருவதும் போவதும் மாயம் என்பதும், இவ்வூனுடல் நோய்க்குப் பெரிய நிலையம் என்பதும், இவற்றின்மேல் ஏற்படும் பற்று பிறவியென்கிற இடராழி மூழ்கும்படி செய்யும் என்பதும் உணர்ச்சியில் புலப்பட்டமையால்,

"எல்லாப் படியாலும் எண்ணினா லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை—நல்லார்
அறிந்திருப்பா ராதலினா லாங்கமல நீர்போல்
பிரிந்திருப்பார் பேசார் பிறர்க்கு"

என்று படிக்கும்போதும்,

"பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம்"

என்று படிக்கும்போதும்,

"ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்"

என்று படிக்கும்போதும்,

"மாசற்ற கொள்கை மனத்தி லடைந்தக்கால்
ஈசனைக் காட்டு முடம்பு"

என்று படிக்கும்போதும் ஸ்வாமிகள் தமது மனத்தைத் திருத்திக்கொள்வர். மனந் திருத்தமடையத் திருத்தமடைய ஸ்வாமிகள் நடத்தையிலும் திருத்தமடைந்தனர். தெய்வ பக்தியிலும், பெரியார் பக்தியிலும், சாஸ்திர நம்பிக்கையிலும் சிறந்து,

"நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோ
டின்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோ
டொப்புர வாற்ற லறிதல் அறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து"

என்றும்,

"வைகறை யாமம் துயிலெழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை"

என்றும் பெரியார் கூறியுள்ள ஆசாரமுறையை மேற்கொண்டனர். இதனால் ஸ்வாமிகள் "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்று கூறப்படும் பழமொழிக்கேற்ப

நாளடைவில் சிவஞானமே மானிட உருக்கொண்டதென் றெண்ணும்படி விளங்கினர்.

ஸ்வாமிகள் ஆங்கிலக் கல்லூரியிலே படித்துவந்தவரா யினும் ஸம்ஸ்கிருதம் படிக்கவில்லையானல் அது படிப்பா காது என்பதையும் ப்ராஹ்மணன் ஸம்ஸ்கிருதம் படிக்க வேண்டிய கடமையுடையவன் என்பதையும் ஸம்ஸ்கிருதம் பயில்வது தங்கள் முன்னோர் வழக்கமென்பதையுமுணர்ந்து ஸம்ஸ்கிருத பாஷையை உபபாடமாக எடுத்துக்கொண்டு அதனையும் பயின்று வந்தனர்.

கும்பகோணத்தில் ஏதோ அசௌகரியம் ஏற்பட்டமை யினல் ஸ்வாமிகள் திருவநந்தபுரம் போய் அங்கு வசதி கண்டபடியால் அங்கேயிருந்து படித்துத் தமது 19-வது வயதில் மெட்றிகுலேஷன் பரீக்ஷையில் தேறினர். பள்ளிக் கூடத்திலே படித்த அளவில் ஸம்ஸ்கிருதம் போதுமென்று நிறுத்த ஸ்வாமிகளுக்கு மனமில்லை. சாஸ்திரங்களை ஆராய வும் வேதங்களையோதி யுணரவும் ஸ்வாமிகளுக்கு அவா மிகுதியுமிருந்த படியாலும் பள்ளிக்கூடத்திலே கற்பிக்கப்படு வதைக் கொண்டு சாஸ்திர ஆராய்ச்சி செய்ய இயலாதாகை யினலும் ஸம்ஸ்கிருதத்தில் நல்ல தேர்ச்சி பெற உறுதி கொண்டு அதனைக் கற்பிக்கக்கூடிய ஆசிரியரை ஸ்வாமி கள் தேடலாயினர்.

ஒருவனுடைய எண்ணம் நல்லதாயின் அந்த எண்ணத் துக்குத் தக்க சாதனங்களை இறைவன் கூட்டிவைப்பா னென்று கூறுவதுண்டு. அதற்கேற்ப, ஸ்வாமிகளுக்கு அவர் கள் ஆராதித்துவந்த நடராஜப் பெருமானுடைய திருவரு ளால் பால ஸரஸ்வதி—பட்ட ஸ்ரீநாராயண சாஸதிரிகள என்னும் வித்வச்சிரோமணி வித்யாகுருவாகக கிடைததனா

நாராயண சாஸ்திரிகள் ஸம்ஸ்கிருதத்தில் நிகரற்ற நிபுணர். ஸம்ஸ்கிருதமேயன்றி வேறு சில பாஷைகளிலும் அவருக்குப் பாண்டித்யமுண்டு. அமுதமழையெனச் சிலாகிக்கத்தக்கபடி பிரஸங்கம் செய்யும் வல்லமை இவர்கட்குண்டு. இவர்கள் ஸம்ஸ்கிருத பாஷையிலும் வேத சாஸ்திரங்களிலும் அத்வைதமத சித்தாந்தங்களிலும் சிறந்த தேர்ச்சி பெற்றவராயும் பிரஹ்மவித்யா என்கிற ஓர் உயரிய பத்திரிகைக்கு ஆசிரியராகவுமிருந்து உலகுக்கு ஆஸ்திகமத உண்மைகளை யெடுத்து விளக்குகிறவராயும் சங்கராசார்ய ஸ்வாமிகளுடைய பரிபூர்ண மதிப்புக்குரியவராயும் விளங்கிய நடுக்காவேரி-ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளுடைய இளைய சகோதரராகையினால், இவர்கட்கு ஸ்ரீமத் ராமாயணத்தில் அகஸ்தியருடைய தம்பிக்கு—அகஸ்தியப்ராதா என்கிற வளவில் மதிப்பிருந்ததுபோல் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் ப்ராதா என்ற அளவில் பெரிய மதிப்பிருந்தது. இவர்களிருவரையும் அஞ்ஞானமாகிய அந்தகாரத்தினின்றும் உலகத்தை ஈடேற்றவந்த ஸரஸ்வதியின் அவதாரமென்று உலகம் புகழும். இவர்களிருவரும் ஸம்ஸ்கிருதத்தில் வெகு அழகாகவும் சாதுர்யமாகவும் பேசியும் எழுதியும் விவகரிப்பார்கள்.

இப்படிப்பட்ட வித்யாகுருவை யடைந்த நம்ஸ்வாமிகள்,

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை"

என்று பெரியோர் கூறியுள்ளபடி தாங்கள் கல்வியினலடையத்தக்க சகல நல்ல பலன்களையும் அடைந்து விட்டதாகவே ஸந்தோஷமடைந்து தங்கள் குருநாதரிடம் தெய்வவிசுவாசம் வைத்து,

"கோடல் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன் குறிப்பிற் சார்ந்து
இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவி வாயாக நெஞ்சு களனாகக்
கேட்டவை கேட்டவை விடா துளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர்"

என்றபடி மிகுந்த ஆதரவாய்ப் பாடங்களைக் கேட்டு ஆசிரியரின் குறிப்பின்வழி நின்று வழிபாட்டிலே ஒரு சிறிதுந் தவறாதவராயிருந்து ஆசிரியருடைய பரிபூரண ஆசீர்வாதத்திற்குரியவரானார்.

"கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து"

என்றும்

"இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேம் கல்விபோல
மம்ம ரறுக்கும் மருந்து"

என்றும் கூறப்பட்டுள்ள நற்போதனைகளைச் செவ்வனே யுணர்ந்தவராதலால் ஸ்வாமிகள், கல்வியென்கிற வேள்விக்குத் தம் உயிரை ஆகுதியாகக் கொடுக்கவும் ஆயத்தமானார்; இடைவிடாமல் படித்தார்; சந்தேகமுண்டான விடத்துச் சிறிதுந் தயங்காமல் ஆசிரியரை யடுத்துக் கேட்டுத் தெரிந்து

கொள்வார்; அப்படிக் கேட்பது தமது மதிப்பிற்குக் குறை வென்றெண்ணவே மாட்டார்.

"ஆசா னுரைத்த தமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னாகும்"

என்று நன்னூல் கூறுகிற உண்மையை நினைத்துத் தாம் தம் ஆசிரியரிடம் கேட்டவைகளை அடிக்கடி ஏகாந்தமான இடத்திலிருந்து சிந்திப்பார்; அன்றியும் அப்படிப்பட்ட நூல்களை ஓதிவரும் ஏனையமாணவரோடு கூடவிருந்து உசாவியும் உசாவும்படி நின்றும் உண்மைப் பொருளுணர்ந்து கேட்டவைகளை மறவாமல் உள்ளத்தி லமைத்துக் கொள்வார்.

"ஏட்டுச் சுரைக்காய் கூட்டுக் குதவாது"

என்பர்; ஆதலின் ஸ்வாமிகள் தாம் படித்தவைகளில் முக்கியமானவைகளை மனப்பாடமாக வரப்படுத்துவதில் ஊக்கமேற்கொண்டார்.

"காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே"

என்ற திருவாக்கைப் படித்தவளவில் திடீரென்று துறவறத்தைமேற்கொண்டு உலகமுய்யத் திருவாய் மலர்ந்தருளியுள்ள பட்டினத்தடிகள் பாடல்களையும், குருநாதனுடைய ஆக்ஞைப்படி இல்லறத்தைக் கைவிட்டுத் துறவறம்பூண்டு எல்லோரும் மிகவெளிதில் வேதாந்த சாஸ்திரங்களின் உயர்ந்த போதங்களைக் கண்டுணர்ந்துய்யுமாறு திருவாய் மலர்ந்தருளிய தாயுமானவரின் திருப்பாடல்களையும் படித்து அவற்றின் கருத்துக்களைக் கருத்திற்கொண்டார்; இராமலிங்க ஸ்வாமிகளுடைய திருவருட்பாவையும் ஆராய்ச்சி செய்து அதன் நுட்பமுணர்ந்தார்; அருணகிரிநாதரருளிய திருப்புகழ் முதலியவைகளையும் திருக்குறளை

யும் கவனித்து உயரிய நீதிபோதங்களை உணர்ந்தார். அப்பால் ஸ்வாமிகளுடைய உள்ளம்,

"படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றம்
தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்"

"யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையா லாய பயன்கொள்க—யாக்கை
மலையாடு மஞ்சுபோற் றோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும்"

என்ற நீதிநூற் போதனைகளையும்,

"அறம்பாவ மாயு மறிவுதனைக் கண்டால்
பிறந்துழல வேண்டாம் பிறப்பு"

என்று பிறந்துள்ள ஔவையின் போதனையையும்,

"பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
பரப்பைவல மாக வந்தும்
ப்ரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றி யெழுநா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வற்பசி தனக்க டைத்தும்
மௌனத் திருந்துமுயர் மலைநுழைவு புக்கியும்
மற்றுதச நாடிமுற்றும்
சுத்திசெய் தும்மூல பிராணனோ டங்கியைச
சோமவட் டத்த டைத்தும்
சொல்லரிய வமுதுண்டும் அற்பவுடல் கற்பங்கள்
தோறுநிலை நிற்க வீறு

*சித்திசெய் துஞ்ஞான மலநுகதி கூடுமோ*
*சித்தாந்த முத்தி முதலே*
*சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே*
*சின்மயா நந்த குருவே"*

என்னும் தாயுமானவர் போதனையையும்,

"பிறவா திருக்க வரம்பெற வேண்டும் பிறந்துவிட்டால்
இறவா திருக்க வகையுண்டு காணது வெப்படியோ
அறமார் புகழ்தில்லை யம்பல வாண ரடிக்கமலம்
மறவா திருமன மேயது காண்நன் மருந்துனக்கே"

என்னும் பட்டினத்தடிகள் போதனையையும் எண்ணி,

"எல்லாப் பொருளு முடிக்கலர் மீசன்றன்
தொல்லை யருள்பெற்றக் கால்"

என்றபடி ஈசுவரனுடைய திருவருளால் யாவும் பெறலா மென்பதை ஊகித்து, ஈசுவரனிடம் திட நம்பிக்கை கொண்டு சதாகாலமும் ஈசுவரனைத் தியானிப்பதில் சித்தம் செலுத்தத் தலைப்பட்டனர். ஈசுவர பக்தியினால் இணை யீடற்ற இன்பவீடடைந்த நந்தனார், கண்ணப்பர், மார்க் கண்டேயர், துருவன், பிரஹ்லாதன் முதலான பெரியா ருடைய சரித்திரங்களையும் போதனைகளையும் அவர்கள் ஈசுவரனை நோக்கித் துதித்த துதிகளையும் அடிக்கடி சிந்திப் பவராயும் பாடி மகிழ்பவராயுமிருந்து அந்த நிலையில் உறுதி கொண்டு, பக்தியாலுள்ளே பரிந்து அரனை நோக்கவும், நின் றுங் கிடந்தும் நடந்தும் அரனை நினைந்து தேடவும், பாடி யும் ஆடியும் பணிந்தும் தொழுதும் அடியவரைக் கூடியும் அரனருளை யடையவும் முயன்றனர். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று கூறப்பட்டுள்ள நான்கு மார்க்கங் களில் எந்த மார்க்கத்தைத் தழுவுவதென்று சிந்தித்து, அவ்வ

களைத் தழுவி யுயர்கதியடைந்த அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய சமயாசிரியர் நால்வரும் மேற்கொண்ட வழியைப் பின்பற்றவும் அவர்கள் உபதேசமாக அருளிய தேவார திருவாசகங்களை ஆராயவும்—இவைகட்கேற்ப ஸம்ஸ்கிருத வேதமும் வேதாங்கமும் சாற்றுவது யாதெனக் கவனிக்கவும் தலைப்பட்டு முடிவில்—எல்லாம் ஒருவித மாறுபாடுமில்லாத வழிகளையே போதிப்பனவாயிருப்பது கண்டுணர்ந்து, இறைவனைத் தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் துதித்து வணங்கித் தியானிப்பவரானார்.

## பாதம் 4

## உத்யோகமுந் துறவில் விருப்பமும்

இப்படியிருக்கையில் ஸ்வாமிகள் உத்யோகம் பெறுதற்குரியவரானார். அதுபற்றிப் பெற்றோர் கவலைகொண்டனர். எல்லாம் வல்லவனும் அடியார்க்கெளியவனும் அம்பலவாணனுமாகிய பரமசிவனுடைய கருணையினால் ஸ்வாமிகளுக்குச் சேலத்தில் ஸெடில்மெண்ட் டிபார்ட்மெண்டில் (Settlement Department) மாதம் ரூ. 50 சம்பளத்தில் ஓர் உத்யோகம் கிடைத்தது. அந்த உத்யோகத்தை ஏற்றுக்கொண்ட பின்பும் ஸ்வாமிகளின் சித்தம் அந்த உத்யோகத்தை ஒரு பெரிதாக எண்ணவில்லை; "அதமம் ஸேவகாவிர்த்தி" என்பதையும் "தொழுதூண் சுவையின் உழுதூணினிது" என்று பெரியார் கூறியுள்ளதையும் எண்ணியதுமன்றி, விரைவில் பந்தநிவர்த்தி தேடியடைவதிலேயே நோக்கமுடையதா யிருந்தபடியால் தான் - நான்-சிவம்—இம்மூன்றையும் உணர்ந்து தானென்பதிலே தனாராகிலையில் விளங்குமொரு தூய்மைபெறத் தீவிரமுடையதா யிருந்தது.

விசேஷமாக உத்யோகங்களில் குமஸ்தாக்களுக்கு எப்போதும் வேலை யதிகமாகவே இருக்கும். அதனால் அவர்கள் சிரமப்படுவதுண்டு. ஸ்வாமிகள் குமஸ்தா வேலை பார்த்து வந்ததனால் அப்படிப்பட்ட சிரமம் ஸ்வாமிகளையும் பாதித்தது. ஸ்வாமிகள், "தேகமே சிரமப்படு; வினையொழியட்டும்" என்றெண்ணி எதையும் பொருட்படுத்தாமல் ஒவ்வொரு நாளும் நெடுநேரம் உத்யோக அலுவலைக் கவனித்ததுமல்லாமல், வழக்கமாக த்யான சமாதியிலிருந்து வரவும் தலைப்பட்டார்.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணா யினார்"

என்றபடி ஸ்வாமிகள் அந்த முயற்சியில் தளரா நிலையினைக் கொண்டிருந்தார். பஞ்சாட்சர மென்கிற கோடரி கொண்டு ஐம்புலனாகிய வஞ்சப் புலக்காட்டினை வேரற வெட்டி வளப்படுத்தித் திருத்திச் சதாசிவமென்கிற வித்தை விதைத்துப் புன்செய்க் களையினைப் பறித்தெறிந்து, சிவபோகத்தை வளர்ப்பதிலேயே நாட்டங்கொண்டார்;

"ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்"

என்ற போதனையை உணர்ந்தவராகையினால் தவத்திலேயே தம் உடம்பை ஈடுபடுத்தத் திடங்கொண்டார்.

"சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு"

என்று தமிழ்வேதம் பேசுவதுபோல் ஸ்வாமிகளின் உடம்பு சிவஞானம் என்கிற குழந்தையைக் கர்ப்பத்திலே தாங்கிக்

கொண்டிருப்பதாகையினுலே இந்த மேனி இப்படிப் பிரகாசிக்கிறது" என்று பரம ஞானிகள் ஊகிக்கும்படி பிரகாசமடைந்தது. இச்சமயம் ஸ்வாமிகளை அவர்களுடனிருந்து உழைத்த உத்யோகஸ்தர்கள், உயரிய ஞான நிலையினையுடையவர்களென்று தெரிந்துகொண்டமையால் அவர்கள் ஸ்வாமிகளுக்கு அவ்வப்போது தங்களால் செய்யத்தக்க அநுகூலங்களைச் செய்து வந்தனர்.

இப்படியிருக்கையில் ஸ்வாமிகள் ஒரு நாள் தாம் கவனிக்கவேண்டிய அலுவல்களை யெல்லாம் கவனித்தானபின் வழக்கம்போல் தியானத்தி லமர்ந்தார்கள். அச்சமயம், ஸ்வாமிகளின் எஜமானன் திடீரென்று அவ்வூரை விட்டுப் புறப்படும்படியாயிற்று. 'அப்பொழுது சேவகன் தியானத்திலிருந்த ஸ்வாமிகளை யெழுப்பினுன். அதுகண்டு ஸ்வாமிகளினுடைய உத்யோகத் தோழர் ஒருவர், "அவரை எழுப்ப வேண்டாம். அவர் நிஷ்டை கலைந்தபின் விஷயத்தைக் கூறி அழைத்து வா" என்று கூறிச் சேவகனை அங்கேயே வைத்துவிட்டு அவர் தம் ஆபீஸரோடு புறப்பட்டுச் சென்றனர். பிறகு ஸ்வாமிகள் நிஷ்டை கலைந்தெழுந்ததும் சேவகன் விஷயமுரைக்க உணர்ந்து, இறைவனுடைய திருவருளையெண்ணி மகிழ்ந்து சேவகனுடன் புறப்பட்டுச் சென்ருர். இப்படி ஸ்வாமிகளுக்கு அடிக்கடி உதவிகள் ஏற்பட்டு வந்தபடியால் ஸ்வாமிகள், தாம் கொண்ட உறுதியில் தவருதிருந்து,

"தாஞ்செய் வினையெல்லாம் தம்மை யறவுணரில்
காஞ்சனமே யாகுங் கருத்து"

என்னுமோர் உயரிய நிலையினில் நிலவுந்தகுதியில் விளங்குவாராயினர். அதுமுதல் ஸ்வாமிகளுக்கு உத்யோகத்தில்

வெறுப்புண்டாயது. பின்பு அந்தப் பந்தத்தினின்றும் விடு படக் காக்கைக் கூட்டுக் குயிலெனச் சமயம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

இச்சமயம், இவரை ஆசைவலையில் புகுத்திப் பரீக்ஷிப் போம் என்று ஊழ்வினை முயன்றதென்றெண்ணும்படி உத்யோகத்திற் சம்பளம் உயர்ந்தது. ஸ்வாமிகள் சென்னை யிலுள்ள காரியாலயத்துக்கு மாற்றப்பட்டார். மாதம் ஒன்றுக்கு ரூ. 60 சம்பளமாயிற்று. பொருள் இவ்வாறு தலைநீட்டவே இதற்கு நெருங்கிய உறவுபூண்டதாகிய பெண் என்கிற பந்தம் தன் சக்தியைக் காட்ட ஆரம்பித்தது. அத னால் அநேகர் ஸ்வாமிகளுக்குப் பெண் கொடுக்க வெண்ணி ஸ்வாமிகளின் தாய் தந்தையரை யண்டினர். அவர்களும் ஸ்வாமிகளுக்கு விவாகம் செய்விப்பதில் பேராவலுடன் சிரத்தைகொண்டனர். தமையன்மார்களும் ஊக்கங்காட்டி னர்.

இவ்வாறு பொன்னாசையுடன் பெண்ணாசையும் ஸ்வாமிகளின் முன் தாண்டவமிட்டபோதிலும் ஸ்வாமிகள், உழவாரப்பணிபூண்டு உயர்தவநெறியிலிருந்த அப்பர் ஸ்வா மிகள் தம்முன் வந்த அப்ஸரஸ்திரீகளையும் தம்முன் விழுந்த பொற்காசுகளையும் ஒதுக்கியதை யெண்ணி அவ் வுறுதியைத் தாமும் மேற்கொண்டார்.

“தோன்றாசை மூன்றுந் தொடர்ந்துவந்து சுற்றாமல்
ஊன்றாசை வேரையடி ஊடறுப்ப தெக்காலம்”

என்று பத்திரகிரியாரும,

“பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய என்னுயிர் நாதனே

உன்னை நாடின் உனக்கருள் தானெனில்
தன்னை நாடுவன் தன்னந் தனியனே"

என்று தாயுமானவரும் திருவாய் மலர்ந்தருளியிருப்பதையும் எண்ணினர். பின்,

"ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்"

என்று திருமூலர் செய்யும் போதனையும் ஸ்வாமிகளின் நினைவுக்கு வந்தபடியால், அவர் விவாகத்தை விரும்பவில்லை.

ஸ்வாமிகளின் இப்படிப்பட்ட உறுதிநிலையினை யுணர்ந்தும் ஸ்வாமிகளின் தாய் தந்தையரும் தமையன்மாரும் ஸ்வாமிகளிடம் வந்து விவாகத்தைப்பற்றி அடிக்கடி வற்புறுத்தினர். ஸ்வாமிகள்,

"மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவினைக்—கைவாய்
கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும்"

"மாண்ட குணத்தோடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமையால்—பூண்ட
மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார்"

"நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியம் தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்கப் பொய்யுரைத்துப் புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவும் மாட்டீர்
கவர்பிளந்த மரமதனிற் கானுழைத்துக் கொண்டே
ஆப்பதனைப் பிடுங்கிவிட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர் அகப்பட்டீர் அகப்பட் டீரே"

என்னும் முதுமொழிகளை அவர்களுக்கு எடுத்துச்சொல்லி, "இந்தப் பந்தம் எனக்கு வேண்டாம். அதுபற்றி என்னை வற்புறுத்தாதிருக்க வேண்டுகிறேன்" என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டார். அதனால் சினங்கொண்ட தமையன்மார், "உன்னைப் படிக்கவைத்ததில் ரூபா மூவாயிரம் செலவாயிருக்கிறது. அதனை நீ உன் சம்பாத்தியத்திலே சேர்த்துக் கொடுத்துவிட்டு எந்த வழியை உன் மனம் நாடுகிறதோ அந்த வழியில் நட" என்று கூறினர்.

ஸ்வாமிகள், "அப்படியே செய்கிறேன். என்னை விவாகத்தினிமித்தம் நிர்ப்பந்தம் செய்யாமலிருக்க வேண்டுகிறேன். இந்த நிபந்தனைக்குட்படுவதானாற் சொல்லுங்கள்" என அவர்கள், "அப்படியே செய்", எனக் கோபத்துடன் கூறிப் பிரிந்தனர்.

இச்சமயம் ஸ்வாமிகள் சென்ன பட்டணத்திலல்லவா இருக்கிறார்கள்? சென்ன பட்டணம், விட்டிற்பூச்சிகளைத் தன்னிடத்தே இழுத்துக்கொண்டு அழிக்கும் விளக்கைப்போன்று மனிதர்களை உலக ஆசைகளிலே வீழ்த்தி அழிக்கக்கூடிய பல விநோதங்களைத் தன்னிடத்தே கொண்டுமிளிரும் ஓர் ஆச்சரியகரமான நகரம் ஆயினும் ஸ்வாமிகளின் மனம்,

"ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன
தலையுங் காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து
முத்திக் கான
நேசமுநல் வாசமும்பொய்ப் புலனாயிற் கொடுமைபற்றி
நிற்ப ரந்தோ
தேசபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேல்
தெய்வ முண்டோ?"

என்று தாயுமான ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய உப தேசத்தை அடிக்கடி நினைக்குமாதலால், விரக்தி நிலையினை யடைந்து அஞ்ஞானத்தை நீக்கி ஸுஞ்ஞானத்தை யளிக்க வல்ல சற்குருவை நாடியடைவதில் தலைசிறந்திருந்தது. அத ஞல் சென்னை வாழ்க்கை அவரைப் பாதிக்கவில்லை.

இந்த நிலையிலிருக்கையில் ஸ்வாமிகள் தாம் தமது ச்கோதரருக்கு வாக்களித்தபடி 3000 ரூபா எப்படியேனும் சம்பாதித்தளித்த பின்பு துறவறமேற்பதெனத் தீர்மானங் கொண்டிழைத்தார்.

"அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லம்
துறந்தான் அவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்
மறந்தான்அறக்கற் றறிவோ*டிருந்திரு வாதனையற்
றிறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே"

என்று பட்டினத்தடிகளும்,

"பிறப்பினுற் பெற்ற பயனுவ தெல்லாம்
துறப்பதாம் தூநெறிக்கட் சென்று"

என்று ஔவைப் பிராட்டியாரும்,

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று"

என்று தமிழ் வேதமும் கூறுவனவற்றை நன்குணர்ந்தவ ரன்றோ? ஆதலின் ஸ்வாமிகளுக்கு உத்யோகத்தில் வெறுப்பு அதிகரித்தே வந்தது. "ஆ ஜகதீசா! இந்தப் பந்தம் என் றைக்கு என்னை விடும்" என்று அவர் அடிக்கடி நினைப்பார்; நினைத்துச் சில சமயம் பித்தம் பிடித்தவரைப்போலவுமிருப் பார். எவரேனும் இல்லறத்தைப்பற்றிப் பேசுவார்களானல் ஸ்வாமிகள் தம் மனத்தில்,

"அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மிவிழி
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே"

"மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாசன்மட்டே
இனமான சுற்ற மயானமட் டேவழிக் கேதுதுணை
தினையா மளவெள் ளளவாகி னுமுன்பு செய்ததவம்
தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே"

என்று வெளிவந்துள்ள பட்டினத்தடிகளின் பரம உப தேசங்களை நினைத்துக்கொள்வார்; "மனமே! ஜாக்ரதை! ஜாக்ரதை! அகப்பட்டுக்கொள்ளாதே!" என்று எச்சரிக்கையும் செய்வார். ஆதி சங்கராசாரியரைப்போல் ஸ்வாமிகள் துறவறத்திலேயே கண்ணாயிருந்தார்;

"ஸத்யம் மாதா பிதா ஞானம்
தர்மோ ப்ராதா தயா ஸஹா
சாந்தி: பத்நி க்ஷமா புத்ர
ஷடைதே மம பாந்தவா"

என்று தர்மபுத்ரர் கூறியதை யெண்ணி ஸத்யத்தையே மாதாவாகவும் ஞானத்தையே தந்தையாகவும் தர்மத்தையே சகோதரராகவும் தயையினையே ஸ்நேகிதனாகவும் சாந்தத்தையே பத்னியாகவும் பொறுமையையே புத்ரனாகவும் கொள்ளத் தலைப்பட்டார்.

இவ்வாறான நிலையினை யடையவே, ஸ்வாமிகள் ஸத்யத்தை மாதாவாகவும் ஞானத்தைத் தந்தையாகவுங்கொண்டமையால் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றபடி அவ்விரண்டையும் தெய்வமாகக் கருதி வழிபடுவாராயி

னர்; தர்மத்தைச் சகோதரராகக் கொண்டமையால் ஸ்ரீ ராமன் லட்சுமணனை உடன்கொண்டதுபோல் அதனைத் தம்முடன் கொண்டு பிரியாமலிருந்தார்; தயையை ஸ்நேகிதனாகக் கொண்டமையால் உண்மை நேசனிடங்கொள்ளு மன்பு அதனிடங்கொண்டார்; சாந்தத்தைப் பத்நியாகக் கொண்டமையால், பத்நி வாழ்க்கைத் துணையாதலின் அதனைத் தம் வாழ்க்கைக்குரிய பெருந்துணையாகக் கொண்டார். பொறுமையைப் புத்ரனாகக் கொண்டமையால் புத்ர ஸம்பத்து, பெறுதற்கரிய பேறுமாதலின் அதனிடம் கொள்ளும் வாத்ஸல்யம் இதனிடமும் கொண்டார்.

இப்படிப்பட்ட தன்மையினை யடைந்தாலும் அவர் மனத்தில் நிபந்தனையின் ஞாபகம் அடிக்கடி போராடியது. அதனால் ஸ்வாமிகள் உத்யோகத்திற் கொண்ட வெறுப்பைச் சற்று மறந்திருந்தார்; ஆயினும் அடிக்கடி,

"பொன்வச மோபெண் களின்வச மோகடற் பூவசமோ
பின்வச மோவெனும் மெய்வச மோவென் விதிவசமோ
தன்வச மோமலந் தன்வச மோவென் கவலை நெஞ்சம்
என்வச மோவில்லை நின்வசம் நானெனை யேன்றுகொள்ளே"

"பொறுத்தாலும் நான்செய்யும் குற்றங்கள் யாவும் பொறுநெனைநீ
யொறுத்தாலு மின்றினிக் கைவிட்டி டேலென் னுடையவனீ
வெறுத்தாலும் வேறிலை வேறோ ரிடத்தை விரும்பியென்னை
யறுத்தாலும் சென்றிட மாட்டே னெனக்குன் னருளிடமே"

என்று முழங்குகின்ற இராமலிங்க ஸ்வாமிகளின் உறுதி மொழிகளை எண்ணித் தம்மை நடராஜப் பெருமானிடத்தி லொப்புவிப்பர்.

ஸ்வாமிகள் சென்னையில் கிருஷ்ணப்ப நாய்க்கன் தெரு, 15-வது இலக்கமுள்ள கிருகத்தில் வசித்துவந்தார். இங்கே

ஸ்வாமிகள் வழக்கம்போல் தியான சமாதியில் ஆநந்த மநு பவித்து வந்த தல்லாமல் ஏகாதசி, பௌர்ணமி இவ்விரண்டு தினங்களிலும் பக்த கோடிகளுடன் கூடியிருந்து பகவத் பஜனை புரிவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார்.

இவ்வாறு நாட்களை நல்ல வழியிலே கழிப்பவராயிருந் தும் ஸ்வாமிகள் தம் தமையனாரிடம் நிபந்தனை செய்து கொண்டபடி ரூபா 3000 சேர்ப்பதில் கவலைகொண்டு மாதந் கொஞ்சமாகப் பாங்கில் பணம் சேர்த்து வந்தார். பணத்தை ஆட்கொல்லி யென்று உலகம் கூறுவதை ஸ்வாமிகள் உண் மையாக உணர்ந்தார்; பணம் பெரிதென நினைப்பவர்க்குப் பாவ புண்யத்தின் தாரதம்மியம் தெரியா தென்பதையும் கண்டார்; "பணத்தால் வரும் பழி", "ஈட்டி யெட்டிய வரை யிலே பாயும், பணம் பாதாளம் வரையிற் பாயும்" "பண மிருந்தால் அவரை யெல்லோரும் அஞ்சலி பண்ணுவரே" என்று பலவாறாக உலகம் பேசிக்கொள்வதை யெல்லாம் சிலசமயம் நினைப்பார்; ஆயினும் அது பெரும் பகையென்றே தீர்மானிப்பார்.

ஸ்வாமிகள் சென்னையில் உத்யோகம் செய்வதையும் உயரிய குணங்களுக்கு இருப்பிடமாய், பிராஹ்மணாசாரந் தவறாதவராய், தெய்வபக்த சிரோமணியாய் விளங்குவ தையுங் கேட்டறிந்த அவர்கள் உறவினரில் ஒருவராகிய பரனூர் முத்துசாமி சாஸ்திரிகள் என்பவர் தம்முடைய பெண்ணை ஸ்வாமிகளுக்கு விவாகம் செய்துகொடுக்க விரும்பி ஸ்வாமிகளின் தந்தையை அடுத்தார். ஸ்வாமிகளின் தந்தை ஸ்வாமிகளின் தமையனாரில் ஒருவராகிய குருஸ்வாமி கனபாடிகள் என்பவரை அழைத்து விஷயத்தைச் சொல்ல, அவர் ஸ்வாமிகளைக் கண்டுபேசி விவாகம் நிச்சயிக்கக் கருதிச்

சென்னைக்கு வந்து ஸ்வாமிகளைக் கண்டு விஷயத்தைச் சொல்லி நான்கு நாள் காத்திருந்தார். விவாகசம்பந்தமாக நிர்ப்பந்தித்தல் கூடாதென்கிற நிபந்தனையிருந்தபோதிலும் குருஸ்வாமி கனபாடிகள் அதனையொரு பெரிதாகக் கருதவேயில்லை; அது பேச்சுப் போக்கில் ஏற்பட்டதாதலின் உறுதியுடையதாகா தென்றும் தீர்மானங் கொண்டிருந்தார்.

நான்கு நாட்களாய்த் தமையனார் வந்து காத்திருந்தும் ஸ்வாமிகள் அது விஷயமாய் எதுவும் பேசாமலே யிருந்தார். அதனால் சினங்கொண்ட குருஸ்வாமி கனபாடிகள் ஸ்வாமிகளின் தலையிலே ஒரு செம்பு ஜலத்தைக் கொட்டப்போனார். அப்பொழுது ஸ்வாமிகள், "கனபாடிகளே! புருஷசூக்தம் சொல்லி ஜலங்கொட்டுங்கள்" என்று கூறி, "இன்றுதான் நடராஜப் பெருமான் என்னிடம் கருணைகாட்டினார். தன்னை நம்பியவரை நடராஜப்பெருமான் கைவிடுவதில்லை. இதோ பாங்க் புத்தகம்; பாங்கில் 500 ரூபா சேர்ந்திருக்கிறது. கையெழுத்திட்டுத் தருகிறேன். பெற்றுக்கொள்ளும். முன் நமக்குள் ஏற்பட்ட நிபந்தனையின் படி பாக்கி ரூ. 2500 நான் கொடுக்கவேண்டிய அவசிய மில்லாமற் போய்விட்டது. அந்த நிபந்தனையின் படி நீர் நடக்கவில்லை. விவாகத்தின் பொருட்டு என்னை வற்புறுத்துகிறீர். நிபந்தனையின்படி வற்புறுத்துவது கூடாதன்றோ? வற்புறுத்தியபடியால் நிபந்தனை நீங்கியது. ஆதலின் கிடைத்த ரூபாவோடு வீடு திரும்பும். இனி எதிலும் என்னைக் கட்டுப்படுத்துவது கூடாது. நான் எந்த ஒரு பந்தத்திற்கும் உள்ளாக விரும்பவில்லை" என்று கூறி அவரை ரூபாவோடு அனுப்பிவிட்டு உத்யோகத்தை ராஜிநாமா கொடுத்துவிட்டுப் பெரிய விலங்கிலிருந்து மீண்டதாகக் கருதி மகிழ்ந்தார்; இந்த ஒரு சம்பவத்தையே இறை

வன் தமக்குத் துறவுபூண்பதற்கு உத்தரவு அளித்ததாகவும் நல்ல சகுனமாகவும் கொண்டார்.

இத்துணைத் தூய பக்குவமடைந்த பின்பும் ஸ்வாமிகள் ஞான நூல்களோத வேண்டுமென்கிற எண்ணமுடையவராய் அதனை எங்கே எந்தகுருவிடம் பெறலாம் எனச்சிந்திக்கலாயினர். அப்பொழுது அவர்கள் மனத்தில்—ஆதிசங்கராச்சாரியர் தென்னாட்டிலிருந்து வடநாடேகுகையில் வழியில் குருவையடைந்ததும் பின்பு அவர் காசியம்பதியை அடைந்ததும் நினைவுக்கு வந்தபடியால், உடனே காசிக்குப் புறப்பட்டுப்போக நிச்சயித்துக் கன்று பசுவை நாடிச் செல்வது போல் கால் நடையாகவே காசியம்பதிக் கேகினர்.



# அத்யாயம் 2

## பாதம் 1

## குருவின் உபதேசம்

ஸ்வாமிகள் காசியம்பதியை யடைந்ததும் அங்கே தமக்கு நல்ல ஞான மார்க்கங்களைப் போதிக்கத்தக்க ஆசிரியரை நாடியவராய் விசுவநாத ஸ்வாமியின் திவ்ய தரிசனஞ்செய்து கொண்டு சில நாள் தாமதித்தார். அடியார்க் கிரங்கும் அம் பலவாணனாகிய விசுவநாத ஸ்வாமி, ஸ்வாமிகளின் தவத் திற்கு இரங்கி அங்கே கங்கையில் ஹநுமார் கட்டத்தில்— மன்னார்குடி - ராஜு சாஸ்திரிகள் என்ற பெரியாரிடம் கல்வி பயின்று, பிர்ஹ்ம ஞானம் கைவரப் பெற்றுத் தனிநிலையினை யடைந்த மேதாவியாய் விளங்கிய திருவண்ணாமலை - தக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகள் என்னும் பெரியாருடைய தரிசனமடை யும்படியான சந்தர்ப்பத்தைக் கூட்டிவைத்தார்.

ஸ்வாமிகள் அந்தப் பெரியாரைக் கண்டதும், "ஆகா! என்ன அதிசயம்! முன்னம் திருநீலகண்டப் பெருமான் முனிவர் நால்வர்க்கு அருள்செய்யக் கல்லாலின்கீழ் தக்ஷிணா மூர்த்தியென விளங்கினார்; மணிவாசகருக்குத் திருப்பெருந் துறையில் குருந்த மரத்தடியில் சற்குரு சொரூபங் கொண் டெழுந்தருளினார். இவைபோல் அடியேனையும் தக்ஷிணா மூர்த்தி யென்னுந் திருப்பெயர் தாங்கிய சொரூபத்துடன் இன்று இந்தத் தூய கங்காநதியின் துறையில் சிவபெருமான் ஆள்கின்றனர். கபீருக்கு ராமாநந்தரின் உபதேசம் கங்கைக் கரையில்தானே ஏற்பட்டது? ஆகா! நான் பெற்றபேறு யார் பெறுவார் இவ்வையகத்தில்? உண்மை நிலையில் தம்மை வழி

படும் அன்பர்கள் விரும்புவதைத் தவறாமல் எல்லாம்வல்ல இறைவன் தந்தருளுகின்றான். அந்தோ! இதனை மூடவுலகம் உணர்வதில்லையே

'கண்டோ மென்பார் சிலர்தேடிக்
காணு மென்பார் சிலர்தெய்வம்
உண்டோ வென்பா ருளதென்பா
ருருவா மென்பா ரருவென்பார்
எண்டோண் முக்கண் ஈசனிலை
எவரே தெரிவார் தவமிலரே'

என்று கூறியிருப்பதற்கேற்பக் 'கடவுள் இல்லை' யென்றும் 'இருந்தால் காட்டு' என்றும் 'கடவுளிருந்தால் என் முறைப் பாட்டுக்கு ஏன் செவி கொடுக்காமலிருக்கிறார்' என்றும் வாயில் வந்தபடி பேசிக்கொண்டலைகின்றதே! என்ன செய்ய லாம்! யாரே உணர்த்த வல்லார் இறைவனுடைய இப்படிப் பட்ட மகிமையை! தவப்பெருஞ்சோதியைத் தவத்தினால் அறியக்கூடுமல்லது வேறு எதனால் அறிதற்சாகும்?'' என் றெண்ணி இறைவனைச் சிந்தித்துத் தம்மை மறந்தவண்ணம் மலையில் பெய்த மழையின் ஜலம் அருவியாகப்பெருகிச்செல் வதுபோலவும், சித்ரகூட பர்வதாச்ரமத்தில் ஸ்ரீராமனைக் கண்ட பரதன், "அண்ணா" என்று கூவிக்கொண்டு ஓடியது போலவும் ஓடி அந்தப்பிரம்மஞானத்தமரை யடைந்து,

ஐயனே போற்றி யிந்த அன்பனை யாள வந்த
மெய்யனே போற்றி வேத விதிவிலக் குணர்ந்து நிற்கும்
துய்யனே போற்றித் தீய தொடக்கெனும் வினையொ ழிந்து
பொய்யெனும் புலனை வென்ற பூசுர ரேறே போற்றி!

என்று துதித்தவாறே அவர் திருவடியிலே சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி அபிவாதனங்கூறி யெழுந்து அஞ்சலி

செய்து நின்று, "அடியேனுக்கு ஞானநூற்போதமளித்து ஆதரிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

பெருங்கருணைத் தடங்கடலாகிய அவர் ஸ்வாமிகளைப் பெருவியப்புடன் உற்று நோக்கினர். அப்பொழுது கோவிந்த பகவத்பாதரைச் சங்கராசாரியர் அடுத்தபோது அவர்கள் ஆசாரியரின் தேஜஸைக்கண்டு வியப்புற்றதும் பிறகு பேருவகையுடன் சிஷ்யராகக் கொண்டதும் அவர் நினைவுக்கு வரவே ஸ்வாமிகளை அவ்வந்தணர், "இவனே நாம் போதிக்கத்தக்க மாணவன்! இவன் வாலறிவனென்பதையும் தூய உடம்பினனுவா னென்பதையும் இவனுடைய முகமும் இவனுடைய திருவாக்கு முணர்த்துகின்றன" என்று நிச்சயித்து, "ஐய, நின் மனோபீஷ்டம் நிறைவேற விச்வேச்வரருடைய கிருபையுண்டாகும். கவலையுறாதே" எனக்கூறி அபயமளித்து ஸ்வாமிகளைத் தமக்குச் சிஷ்யனாகக் கொண்டார்.

ஸ்வாமிகளின் குரு, ஸ்வாமிகளிடம், துரோணர் அர்ஜுனனிடம் கொண்ட பேராதரத்துடன் - அதாவது பசு தன் கன்றுக்குத் தன் மடியிலுள்ள பாலை யெல்லாம் அருந்த முழுமனங் கொண்டிருவதுபோல், தம்மிடமுள்ள கல்வி நலம் முழுதுங் கொள்ளும்படி முழு மனங்கொண்டு போதிக்கத் தலைப்பட்டார்.

தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளிடம் ஒரு பரம ஆசாரியருக்கு அமையவேண்டிய குணங்களாகிய,

"குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்

உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவன் நூலுரை யாசிரி யன்னே"

என்று கூறியுள்ளபடி சகல நல்ல குணங்களும் அமைந்திருந்தன. ஸ்வாமிகளும்,

"அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே"

என்பதற் கிணங்க நடந்து தாம் கேட்டுணர வேண்டிய விஷயங்களை யெல்லாம் ஐயம் திரிபு அறியாமை நீங்கக் கேட்டுணர்ந்து சிவஞானச் செல்வமே திருமேனி கொண்டதென ஆசிரியர் மகிழத்தக்க ஓர் உயரிய நிலையினை யடைந்தார். பின்னர் அங்கே ஒரு மௌனஸ்வாமிகளை யடுத்து அவரிடம் ஆறுமாத காலம் சிஷ்யராயிருந்தார். தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளிடம் நம் ஸ்வாமிகள் மூன்று வருஷ காலம் பயின்றார்.

இவ்வாறு ஸ்வாமிகள் இவர்களிடம் தாமதிக்கையில் தேக அசௌக்ய மடைந்தார். இதையறிந்த ஸ்வாமிகளுடைய தந்தை, அன்னை, தமையன்மார் யாவரும் காசிக்குச் சென்று ஸ்வாமிகளைக் கண்டு ஆடுதுறைக்கு வரும்படி அழைத்தனர். ஸ்வாமிகள், "நீங்கள் போங்கள்; நான் தவறாமல் இன்றைக்குத் தொண்ணூற்றாறாவது நாள் அங்கே வந்து சேருகிறேன்" என்று கூறியனுப்பிவிட்டு உலக வாழ்க்கையில் வெறுப்புற்ற மனத்தினராயிருந்து குருசிச்ருஷை புரிந்து வந்தார்.

இப்படி இருக்கையில் ஸ்வாமிகள் தம் மனத்தில் நீத்தார் பெருமையைப் பற்றி அடிக்கடி நினைக்கலாயினர்.

பின்னர் ஒரு நாள் ஸ்வாமிகள் ஆழ்ந்த சிந்தனையிலிருக்கையில், நைஷ்டிக பிர்ஹ்மசாரி நேரே துறவறம் ஏற்கலாம் என்கிற நியாயமும் எப்போது மனமானது உலகப்பற்றை விட அவாவுகிறதோ அப்போது துறவறத்தை ஏற்கலாமென்கிற நியாயமும் ஸ்வாமிகளின் மனத்தில் தோன்றின. அச்சமயம் ஸ்வாமிகள் நெடுநாள் கரைகாணுங்குறியே காணமல் தவித்த கப்பல் யாத்திரி ஒருவன் கரைகாணுங் குறி கண்டால் எப்படி மகிழ்வானே, அப்படிப்பட்ட மகிழ்ச்சியடைந்து, "நான் உய்ந்தேன்! உய்ந்தேன்!" என்று தம்மை யறியாமலே உரத்துக்கூறி ஆநந்தக் கூத்தாடினர்; அப்பால் மறுகணத்தில், "ஆகா! துறவறத்தைக் காப்பது எளிதல்லவே! துற ! வமூவ்ன வனுக்கு உயய வழிங்லையாம்த! உலகப்பற்றை முற்றிலும் ஒழித்த நிலையினையடைந்த தன்மையினரும் 'மனம் குரங்கு போல்வது; மனத்தை அடக்குவது அரிது; மனத்தை நம்புவது கூடாது; மனம் நம்முடன் பிறந்ததாயினும், சமயத்தில் கைவிட்டுப் புலன்கள் தூண்டும் வழியே செல்லுந் தன்மையது. மனத்திற்கு வசமாகாதுண்டோ?' என்று கூறியிருக்கிறார்கள். மனம்போன போக்கெல்லாம் நடந்து மதிகெட்டு வாழ்விழந்தார் எத்தனை பேர்! அந்தோ! இதனுலன்றோ தாயுமானவர்,

'ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
ஆலமமு தாக விலையோ
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ
அந்தரத் தகில கோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளைய விலையோ
சப்தமே கங்களும் வஜ்ரதா ரணையால்
சஞ்சரித் திடவில்லையோ

வாழாது வாழவே ராமனடி யாற்சிலையும்
மடமங்கை யாக விலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்க விலையோ
பாழான வென்மனம் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே'

என்று பாடினுர். ஆகா! இவ்வாறு பெரிய பெரிய மகனீயர்களையெல்லாம் மயங்கவைத்த மனம் நம்மைச் சும்மாவிடுமா? விடாது! விடாது! என்ன செய்யலாம்? துறவறத்தினின்று தவறின் பின்பு உய்ய வழி கிடையாதாம். இல்லறத்திலானுல் பிராயச்சித்தமுண்டாம் தப்பலாமாம். இப்படி யெல்லாம் கூறுகின்றுர்கள் பெரியார்" என்று ஒருதரம் சிந்திப்பதும் பிறகு தேறுவதுமாயிருந்தார். அப்பால் "சை! துறவறத்தினும் இல்லறம் மேலானதாகுமா?

"பெண்ணுகி வந்தவொரு மாயப் பிசாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணுல் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணுங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க
எண்ணு துனைமறந் தேனிறை வாகச்சி யேகம்பனே"

என்று இல்லாளுடன்கூடி அநுபவிக்கு மின்பத்தை வெறுத்துப்பேசியிருப்பதை நோக்கின் 'இல்லற மல்லது நல்லற மன்று' என்று கூறியது உபசார வார்த்தை யென்றே தெரிகின்றது. இல்லற நெறி தவறுதிருப்பவன் அடையக்கூடியது ஸ்வர்க்காதி பதவிகளேயாம். ஸ்வர்க்க முதலியன ஒரு வாழ்விலே சேர்ந்தவையாகுமா? ஆகா! சுவர்க்கத்திலேயும், 'நோயுண் டனங்க ளுருண்டு நோய்கட்கெல்லாந் தாயான காயமுண்டு கைதொழவேண்டு நருமுண்டு கற்பத்தே, மாயுந்

தன்மை யுண்டென்றால் வானோர்க்கென்ன வளனுண்டே?' என்று சொல்லப்படுகிறபடியால் அவ்வாழ்வு பெரிதல்ல; துறவுறமே பெரிது. அதுவே கொள்ளத்தக்கது" என்று தேறித் தம் குருவை யடுத்து வணங்கி, "ஒரு வேண்டுகோள்" என, குரு, யாதென, ஸ்வாமிகள் தமது கருத்தைக் கூறி, "இப்போதே ஸந்யாஸம் தரவேண்டும்" என்று பிரார்த்தித்தனர்.

நம்முடைய ஸ்வாமிகளின் பரிபக்குவ நிலையினை யுணர்ந்த குரு, "இவன் துறவறத்திலிருந்து உயிர்க்குறுதி தேடத்தக்க ஆற்றலுடையவன். இவன் துறவறங்கொள்ளக் கூடும்" என்றெண்ணி மகிழ்ந்து ஸ்வாமிகளை நோக்கி, "மாணவ, ஒன்றிலும் பற்றில்லாதவனும், நல்ல ஞானத்தை யுடையவனும், வைராக்யமுள்ளவனும் ஸந்யாஸத்தை விரும்பினால் அவன் பிரஹ்மசாரியாயிருந்தே ஸந்யாஸத்தைப் பெறலாமென்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. இந்திரிய வியவகாரம் அற்றிருப்பதே ஸந்யாஸத்துக்கு மூலம். அந்த அரியநிலை முன்னரே அமையப்பெற்றவன் ஸந்யாஸத்துக்கு உரியவனாவதில் யாது தடை? கிருஹஸ்தாச்ரமத்திற் பிரியமில்லாதவன் தன் ஆயுள்நாட்களையெல்லாம் பிரஹ்மசரியத்திலேயே கழிக்கலாம் என்று விஷ்ணு ஸ்மிருதி கூறுகின்றது. அக்நியை ஆத்ம ஸமாரோபணம் செய்துகொண்டு ஸந்யாஸம் பெறலாம் என்றும் உபநிஷத்துக்கூறுகின்றது. பிரஹ்மசரியத்திலிருந்தே ஸந்யாஸம் பெறலாமென்று ஜாபாலி உபநிஷத்துக் கூறுகின்றது. நாக்கு, உபஸ்தம், வயிறு, கை இவைகளை அடக்கிக் கொண்டிருப்பவன், பிரஹ்மசரியத்திலிருந்தே ஸந்யாஸம் பெறலாம் என்று வியாஸ ஸ்மிருதி கூறுகின்றது. எப்போதும் ஸந்தோஷத்துடனிருத்தல், அபகாரம்செய்தவனுக்கும் பிரதி

அபகாரம் செய்யாமல் பொறுமையுடனிருத்தல், மனத்தைக் கவரத்தக்க பொருள்கள் எதிரிலிருந்தாலும் அவைகளில் விருப்பமில்லா திருத்தல், பிறர்பொருளை அபகரியாமை, சரீர சுத்தியுடனிருத்தல், பெண்களிடத்தில் ஆசை வையாமலிருத்தல், சாஸ்திர உணர்ச்சி கைவரப் பெற்றிருத்தல், ஆத்ம ஞானபரனா யிருத்தல், பிறர் சினங்கொள்ளும்படியான தீய செய்கைகளைச் செய்யாதிருத்தல், அப்படிச் செய்பவர்களிடம் கோபங்கொள்ளா திருத்தல், உண்மை பேசுதல் முதலிய உத்தம குணங்கள் எவனிடம் விளங்குகின்றனவோ அவனே ஸந்யாஸத்துக் குரியவன். விஷய சுகங்களிலே ஆசை கொண்டவன் ஸந்யாஸம் பெறின் நாசமடைவான். பாபிகள், விராத்தியர், பர்தகர், விலக்கப்பட்டவர், யக்ஞம் முதலிய காரியங்களை விட்டவர் ஆகிய இவர்கள் ஸந்யாஸங் கொள்ளத் தகாதவர்கள். தான் கொண்ட ஆச்ரமத்திற்குரிய குருவினால் உபதேசிக்கப்பட்டுத் தனக்குரிய நெறி தவறாமல் எப்போதும் பிரஹ்மத்யானபரனாயிருத்தல், தனித்திருத்தல், நகர கிராமங்களிலே தங்காதிருத்தல், உலகத்தாருடைய உணவுப் பொருள்களை விரும்பாமை, வேடிக்கை விநோதங்களில் மனத்தைச் செலுத்தாதிருத்தல், பிரஹ்ம ஞான நூல்களை யோதல் முதலியன நித்யாநந்த வாழ்வினைப் பெறுவதற்குரிய தர்மங்களாகும்" என்று கூறி, "மாணவ, நின்பால் துறவுக்குரிய லட்சணங்கள் யாவும் காணப்படுகின்றன. துறவு பூணலாம். உண்மைத் துறவே பந்த நிவர்த்தி தருவது. இது உனக்கு போதிக்கப்பட்டிருக்கிறது. உன் கருத்தோடு என் கருத்தும் உடன்படுகிறது. ஆயினும் உன் தாய்தந்தையரின் ஆக்ஞையின்றி நீ துறவு பூண்பதற்கில்லை. அவர்கள் அநுமதி பெற்றுச் செய்வோம்" என்றார்.

## குருவின் உபதேசம்

ஸ்வாமிகள் இதைக் கேட்டதும் பெருமூச்செறிந்து "தந்தைக்குஎழுதினால் அவர் உத்தரவுகொடுப்பாரா? கொடுக்க மாட்டாரே! தாயாரும் அநுமதி தரமாட்டாள். தமையன் மார்களும இணங்கார்கள்; அடியேனுடைய பக்குவ நிலையினை யும் தீர்மானத்தையும் அறியார்கள். தந்தையைப் புத்ர வாத் ஸல்யம் தடுக்குமாதலால், அவருக்குப் புத்ரனுடைய துறவற நிலையின் பயனால் வம்சமே நல்ல கதி யடையும் என்கிற போதம் புலப்படாது. உலகமாயை எப்படிப்பட்ட பரம ஞானியையும் மயக்கும். என்ன சொல்வேன்! புத்ரவாத் ஸல்யம் வஸிஷ்டரென்கிற பிரஹ்மநிஷ்டரைக் குருவாகக் கொண்டு நித்யாநித்ய வஸ்து விவேகத்தை யடைந்து துறவு பூண நிச்சயித்திருந்த தசரதனையே உயிரோடு விழுங்கிவிட்ட தல்லவா? அப்படிப்பட்ட அந்தகாரத்திலிருக்கும் என் தந்தை எப்படித் தெளிவுறுவார்? யார்தான் அவரைத் தெளிவிப்பவராவார்? பரமேசுவரன்தான் தெளிவிக்க வேண் டும். அத்தெளிவு ஏற்படுமென்று நான் எப்படி எதிர்பார்ப் பது? நான்யார்? சிவபெருமான் என்பால் இரக்கங்கொள்ளத் தக்க பாத்திரவானா நான்? குருநாதரே! நான் அநுமதி பெறு வதற்கியலாது. என்ன செய்வேன்! (கண்களில் நீர் ததும்ப நின்று),

'இல்லமிளமை யெழில்வனப்பு மீக்கூற்றஞ்
செல்வம் வலியென் றிவையெல்லாம்—மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு'

என்றும்,

'கொன்னே கழிந்தன் றிளமையு மின்னே
பிணியொடு மூப்பும் வருமா றுணிவொன்றி
என்னோடு சூழா தெழுநெஞ்சே போதியோ
நன்னெறி சேர நமக்கு'

என்றும் படித்திருக்கின்றேன். இந்தப் படிப்பெல்லாம் பாழாகவோ நான் உடம்பெடுத்தேன்? சற்குருநாத! இந்த உடம்பை நான் வெறுக்கிறேன் இச்சமயம். ஏன்? இது சிறிதும் அவயவப்பழுதில்லாததாய் இது நன்மை, இது தீமை, இது செய்யத்தக்கது, இது செய்யத்தகாதது என்று உணரவல்ல பகுத்தறிவு என்னும் பிரகாசத்தினால் தன்னை அந்தகாரத்தினின்று வெளிப்படுத்திக்கொண்டிருக்கிறது. ஸத்குருநாதனாகிய பிரஹ்மத்தின் ஸந்நிதியில் விளங்குகிறது. இப்படியிருந்தும், உய்யவொட்டாமல் தடுக்கும் ஊழ்வினையின் வசத்ததாயிருக்கிறதல்லவா? சை! இது வெறுக்கத்தக்க பிறவியேயாம். இச்சமயம் இந்த உடலை இந்தநிலையிலேயே எரிக்கத்தக்கதவம் என்பாலில்லாமற் போயிற்றே! யான் யாது செய்வேன்!" என்று கலங்கி நின்றார்.

குருநாதர், "கலங்காதே;

'அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தா னீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா'

என்றும் படித்திருக்கிறாய். ஆதலால், பொறு. பொறுமை கடலினும் பெரிது. 'பொறுத்தார் பூமியாள்வார், பொங்கினார் காடாள்வார்' என்று பழமொழியுண்டன்றோ? அல்லாமலும்,

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை'

என்று தமிழ்வேதமும் சாற்றுகிறதல்லவா? பொறு. தந்தைக்குக் கடிதம் எழுதுவோம். பிறகு செய்யவேண்டியதைச் செய்வோம். ஈசுவரனை நம்பு. முயற்சியில் உறுதிகொள். முயற்சி திருவினையாக்குமன்றோ? ஈசுவரன் தன்னை நம்பியவர்களைக் கைவிடமாட்டான் என்பது வீண்பேச்சல்ல. ஸத்யமான பேச்சு. இல்லாவிட்டால் 'கடவுளை நம்பினோர் கை விடப்படார்' என்கிற பழமொழி பிறக்குமா? பழமொழியென்று பிறந்துள்ள வாக்கியங்களெல்லாம் பெரியார் அநுபவத்திலே கண்டவைகளை விளக்குவனவாம். உன்னைப் படைத்து உன்னுள்ளத்திலே விளங்குகிற உண்மையறிவாநந்த உருவினனாகிய ஜகதீசனுக்குண்டு உன் கவலை. உனக்கு ஏன் உன்னைப் பற்றிய கவலை? கவலையை விடு. கவலை அவலமதி படைத்தவர் மனத்திலே தைத்துள்ள முள்ளுக்கு நிகராகும். கவலை யொழிந்த மனமே காணும் உயர்வு. இதனாலேதான் பெரியார்,

'கற்றநற் கல்வியுங் கடவுட் பூசையும்
நற்றவ மியற்றலும் நவையில் தானமும்
மற்றுள வறங்களும் மனத்தின் பாலழுக்
கற்றவர்க் கேபய னளிக்கு மென்பரால்' என்றனர்.

"சகலவளர்ச்சியும் அகத்திலிருந்தே பிறக்கின்றன. சகல திருத்தங்களும் அகத்திலேயே உண்டாகவேண்டும். எவன் தன் மனத்தைத் திருத்துவதிலும் பலப்படுத்துவதிலும் வளர்ப்பதிலும் தன் வல்லமையை உபயோகிக்கின்றானோ அவனே தன் சக்திகளை யெல்லாம் ஒருமுகப் படுத்தித்

தன்னைப் பாதுகாத்துக்கொள்கிறான். தன் சொந்த மனத்தின்மீது தனது நியாயமான அதிகாரத்தைச் செலுத்துவதும், உயர்தர ஒழுக்கங்களாகிய நேர்மார்க்கங்களில் தன்னை நடத்துவதும்,

'கெடுக்க வல்லதும் கெட்டவர் தங்களை
யெடுக்க வல்லது மிம்மனம்'

தெரிந்ததா?

'நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்'

என்று பெரியார் கூறுவதுங்காண்க" என்றுகூறித் தெளிவித்தார்.

ஸ்வாமிகள், "இவையெல்லாம் வேண்டியவேண்டியாங்கு பயக்கும் இறையருளென்றெண்ணி இறுமாப்புறலே வல்லாண்மை" எனமதித்து எல்லாம் வல்ல இறைவனாகிய நடராஜப் பெருமானை நினைத்துத் தந்தைக்கு ஒரு நிருபம் எழுதியனுப்பினர்.

அந்தத் திருமுகங்கண்ட தந்தை, "மைந்த! இத்திருமுகங்கண்டவளவில் திரும்புக இவண்! நேரில் பேசிக்கொள்ளலாம்" என எழுதியனுப்பியது மன்றித் தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளுக்கும் மைந்தனை அனுப்பித்தர வேண்டுமென்றும் துறவுபூண அநுமதிதர வேண்டாமென்றும் கடிதம் எழுதியனுப்பினர்.

ஸ்வாமிகள் இக்கடிதங்களைக் கண்டதும் இடிமுழக்கங் கேட்ட அரவம்போல் உடல் நடுக்க மடைந்து குருநாதருடைய திருமுக மண்டலத்தைக் கண்கலக்கத்துடன் நோக்கினார். குருநாதர் ஸ்வாமிகளுடைய தீவிரமான வைராக்கியத்தையும் உறுதியான மன நிலையினையும் நோக்கி, "மாணவ! கலங்காதே! பிதாவின் அநுமதியின்றி ஸந்யாஸங்கொள்வது கூடாது. ஆதலின் நான் கொடுப்பதற்கில்லை. நீ உன்பிதாவின் ஆக்ஞைப்படி அவரிடம் செல். தக்ஷிண தேசத்தில் பெரிய பெரிய மகான்களிருக்கின்றனர். அவர்களில் ஒருவர் உனக்கு நிச்சயமாக ஆச்ரமம் தருவார். தவறாமல் உனக்கு ஆச்ரமம் கிடைக்கும். கவலையுறாதே. உறுதிகொள். உள்ளத்தில் இறைவனை நிலைநிறுத்து. நின் சிந்தனையும் செயலும் சிவமாகும். நீயும் சிவமாவாய்" என்று தேறுதல் கூறி விபூதிப் பிரஸாதம் அளித்துப் பரிபூர்ண ஆசீர்வாதம் செய்து, "மாணவ! பிதாவின் ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு ஒழுகுவதே சத்புத்திரர் கடமை. மாதா, பிதா, குரு இவர்களில் பிதாவே முதலில் கௌரவிக்கத்தக்கவர். அவர் உண்டாக்கியவர். மாதா இரண்டாவதாகக் கௌரவிக்கத் தக்கவள். அவள் காப்பாற்றியவள். மூன்றாவதாகக் குரு கௌரவிக்கத் தக்கவர். குரு கற்பித்தவர். ஆதலின் முதலிற் பிதாவைக் கண்யப்படுத்து. இச்சமயம் ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தைச் சிந்தித்துக்கொள். பெரியாருடைய ஆசீர்வாதத்துக்குப் பாத்திரமாயிரு. அந்த ஆசீர்வாதம் உனக்குச் சகல சித்திகளையும் கொடுக்கும்" என்று கூறி விடையளித்தார்.

ஸ்வாமிகள் தமது இரண்டு கரங்களையும் சிரசின்மேற் குவித்து நின்று,

என்மன மயக்கம் நீங்க இன்னருள் புரிந்த தெய்வப்
பொன்மன முடைய தூய, போதக, உனது பாத்
நன்மணப் போதெப் போதும் நான்முடி கொள்ளும் போதாம்
இன்மையென் றுரைசகு மாயை இடரற வருளு வாயே.

என்று பாடிப் பணிந்து, "விடை தரவேண்டும். பிரிவதற்கு மனம்பதறுகின்றது. ஆக்ஞையைமீறத் துணிவுண்டாகவில்லை. என்னையீன்ற தாயும், தந்தையும், சுற்றமும், யாவரும் தேவரீரே எனக்கொண்டு அடியேனுலியன்ற வரையில், உணர்வுக் கெட்டியவரையில் வழிபாடு செய்துவந்தனன். பிழை குறியாது ஆளும் பெருந்தகையாகையினுல் அடியேன் இத்தகைய ஆசிர்வாதத்துக்கு ஆளானேன். இதனை அடியேன் எத்தனை கோடி பிறவியெடுப்பினும் மறவேன். இந்த ஒரு நன்றிக்கு நான் எந்தவிதமான கைம்மாறு செய்யவல்லேன்! பிரபுவே! ஒரு தந்தை தன் மைந்தனுக்குச் செய்தது போலக்கொண்டு அடியேன் மனம் நாடியுள்ள நிலையினை அடியேன் அடையவும் அந்த நிலையின் லீலையை இவ்வுலகமாகிய சபையில் நடித்துக்காட்டி, 'தந்தை மகற் காற்றும் நன்றி அவையத்து, முந்தி யிருப்பச் செயல்' என்னும் வேத வாக்கை மெய்ப்பிக்கவும் அநுக்கிரஹம் செய்தனுப்பவேண்டுகிறேன். இதோ இன்றே புறப்படுகிறேன்" என்று கூறி விடைகொண்டு புறப்பட்டுத் தந்தை அப்போது வசித்து வந்த நடராஜபுரம் போய்ச்சேர்ந்தார்.



ஸ்ரீ சதாசிவப்ரம்மேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்

(ஸ்வாமிகளின் குரு)

7521

## பாதம் 2

### துறவு பூணல்

முன், ஸ்வாமிகளின் தந்தை தமையன் முதலியவர்கள் காசிக்கு வந்து ஸ்வாமிகளை ஊருக்கு வரும்படி அழைத்ததாகவும் ஸ்வாமிகள் அப்பொழுது, "இன்றைக்குத்தொண்ணூற்றாறுவது நாள் நான் ஊர்வந்து சேர்கிறேன்" என்று விடைபகர்ந்ததாகவும் படித்தோமல்லவா? ஸ்வாமிகள் நடராஜபுரம் போய்ச்சேர்ந்தது முன் அவர் வாக்களித்தபடியே 96-வது நாளாகவே இருந்தது. ஆகா என்ன ஆச்சரியம் பாருங்கள்! இந்த ஓர் ஆச்சரியம் மாத்திரமா? அன்றையதினம் விளம்பிவருஷம் மாசிமாதம்கிருஷ்ணபக்ஷம் ப்ரதமை திதி; அன்றுவிடியற்காலம் நாலுமணிக்கு ஸ்வாமிகளின் தந்தை காலமாய்விட்டார். ஸ்வாமிகள் அவ்வூர் போய்ச் சேர்ந்ததும் அச்செய்தி கேள்விப்பட்டார். அச்செய்தியைக் கேட்டதும் ஸ்வாமிகள் தம் வீட்டிற்குள் நுழையாமலே ஒருவரையும் அறியாமல் ஸ்மசானத்துக்குப் போய் அங்கே ஒருபக்கம் மறைந்திருந்தார். வழக்கம்போல் சவம் ஸ்மசானத்துக்குக் கொண்டுவரப்பட்டது. எல்லோரும் துக்கமுற்றனர். ஸ்வாமிகள் சிரித்த முகத்துடன் இருந்தார்கள். ஏன்? உலக வாழ்வின் தன்மை யுணர்ந்தவர்களல்லவா?

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

என்றும்,

"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"

என்றும் பெரியார் வாக்குகள் பிறந்திருக்கின்றனவன்றோ?

ஸ்வாமிகள் இவ்வாறு வந்திருப்பதை அறிந்த சிலர் தந்தை தகனக்கிரியையில் ஈடுபடும்படி ஸ்வாமிகளை வற்புறுத்தினர். ஸ்வாமிகள் மறுத்து, "என்மனம் இவ்வுலகத்தையே மறந்துவிட்டது. ஆதலின் இவ்விஷயமாய் என்னை வற்புறுத்தவேண்டாம்" என்று கூறினர். அது கேட்ட பலர் இவரை வெறுத்தனர். ஆனால் அப்போது அங்குவந்திருந்த ராமசுப்பா சாஸ்திரிகள் என்ற ப்ரஹ்மநிஷ்டர், "இந்தப் பிள்ளையினால் இவனை யீன்ற தந்தை பிரஹ்மலோகம்போனார்; ஏன் விசாரம் உங்களுக்கு?" என்றாராம். அதனைக் கேட்ட பெரியாரிற் பலர், "ஸ்வாமிகளின் பிரபாவம் பெரிதுபோலும்!" எனக் கருதினராம்.

பின்னர் வழக்கம்போல் பதின்மூன்றுவது நாள் கிருஹயக்ஞம் என்கிற சடங்கு நிறைவேறியது. அன்று ஸ்வாமிகள் தம் தமையன்மார்களையும் தாயாரையும் பார்த்து ஸந்யாஸம் பெற உத்தரவு தரவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். தமையன்மார்களும் தாயாரும் உத்தரவு கொடுக்க மனமில்லாமல் பல வழிகளிலே சமாதானங் கூறினர். அப்பால் சில நாட்களில் நரஸிம்ம கனபாடிகள், குருஸ்வாமி கனபாடிகளாகிய இருவரும் தங்கள் தாயாருடன் புதுக்கோட்டை ஸமஸ்தானத்தைச் சார்ந்த கானம்பேட்டை யென்கிற பிரஹ்மவித்யா சமுத்ரம் போய் அங்கே வேத பாடசாலை உபாத்யாயர் வேலையிலமர்ந்தனர். ஸ்வாமிகள் அவர்கள் சென்ற இரண்டு நாள் பொறுத்து நடராஜ புரத்திலிருந்து 52 கல் தூரமுள்ள அவ்வூருக்குக் கால் நடையாகவே சென்று அங்கே தாமதித்தார்.

ஸ்வாமிகள் தாம் பட்டணத்தில் வேலையை ராஜினாமாச் செய்துவிட்டுப் புறப்பட்டது முதல், மூன்று அல்லது ஆறு

வீடுகளில் வஸ்திரத்தில் பிக்ஷையேற்று அந்த அன்னத்தில் ஆறு முஷ்டி உணவு உண்பதென்கிற விரத நியமம் மேற் கொண்டிருந்தபடியால், கானப்பேட்டையிலும் தாயார் தமை யன்மார் இவர்களறியப் பிக்ஷையேற்றுண்டு எஞ்சியதைக் காக பலியாகக் கொடுத்துவரலானர். அது கண்டு யாவரும் ஆச்ச ரியமடைந்தனர். எல்லோரும் பட்டினத்தடிகளின் பான்மை யைக் கருதினர். ஞானச்செல்வங் கைவரப்பெற்றவர்கள் ஸ்வாமிகளின் அந்த நிலையைக் கொண்டாடினர். சாதா ரண ஜனங்கள் ஸ்வாமிகளிடம் கரைகடந்த மரியாதை பாராட்டினர். குழந்தைகளுங் கூட ஸ்வாமிகளை மரியாதை பாராட்டி அழைத்து வணங்கத் தலைப்பட்டன.

இவ்வாறு யாவருங் கொண்டாடவே ஸ்வாமிகளின் மனம் ஸந்யாஸத்தில் பின்னும் மிகுதியான ஊக்கம் மேற் கொண்டது. ஸ்வாமிகள் அவ்வாறு பிக்ஷையேற்றுண்டு அவ் வூரில் ஒரு வருஷகாலம் தாமதித்தனர்; அப்போது அடிக் கடி தமையன்மார்களையும் தாயாரையும் ஸந்யாஸம் பெற உத்தரவு தரும்படி வேண்டிக்கொண்டே யிருந்தனர்.

அப்படியிருக்கையில் ஒருநாள், நரஸிம்ம கனபாடி. கள் என்பவர், "நல்லது; நீபோய் உனக்கு ஸந்யாஸங் கொடுக்கத்தக்க குருவைத் தேடிக்கொண்டு வா. கவனிப் போம்" என்றனர். ஸ்வாமிகள் அதுகேட்டுப் பரம ஸந்தோஷ மடைந்து அப்படிப்பட்ட சற்குருவை நாடியடைவதில் நாட்ட முடையவரானர். அப்பொழுது ஒருநாள் ஸ்வாமிக ளின் செவியிற் படும்படி, "வெள்ளியம்பலமென்று போற்றப் படுவதாகிய மதுரையம்பதியில் ஸப்ஜட்ஜி ஸ்வாமிகள் என் றும் சதாசிவ பிரஹ்மேந்திரரென்றும் பெயர்பெற்ற ஒரு மஹான் விளங்குகிறார். அவர் தரிசனம் பாவ விமோசனந்

தருவது" என்று ஓரிடத்திற் கூடியிருந்த சிலர் பேசிக்கொண் டனர். இதைக்கேட்டதும் ஸ்வாமிகள், "இறைவன் குரு வைக் காட்டினான்; குறைகள் நீக்கினான்" என்று எண்ணிக் குதூகல மடைந்து,

தடங்கருணைப் பெருங்கடலே தமியே னுய்யத்
தண்ணியநல் அருள்புரிந்த தவத்தின் பேறே
விடங்கலந்து கறுத்தவெழில் மிடறு கொண்ட
வித்தகனே வேதாந்தப் பொருளே சித்தத்
திடங்குலையச் செய்யும்வினைத் தீமை போக்கிச்
சிவபோக மருந்தளித்த சிவனே தெய்வ
நடம்பயிலும் நடராஜ மணியே யுன்னை
நம்பினேன் என்றுமெனைக் கைவி டாதே.

என்றும், பின்னும் பலபடியாகவும் பாடித் துதித்துக் கொண்டே மதுரையம்பதிக்குக் கால்நடையாகச் சென்று ஸ்வாமிகளைத் தேடிக் கண்டு அவர் திருவடியிலே வெட்டுண்ட மரம்போல் விழுந்து பணிந்தெழுந்து நின்று, "ஸ்வாமி" என விளித்துப் பின் கண்ணீரும் கம்பலையுமாக நின்றார். பெரியா ராகிய அவர், "என்ன வேண்டும்? ஏன் துக்கம்?" என வினவுகையில், "ஸ்வாமிகள், அடியேனைச் சீடனாகக்கொண்டு ஸந்யாஸந் தரவேண்டும்" என்று பிரார்த்தித்தனர்.

ஸ்வாமிகளுடைய பரிபக்குவ நிலையினை அவர்களுடைய முககமலமே விகசிதமாகத் தெரிவித்தமையால், ப்ரஹ்மேந் திரர் ஆச்சரியத்துடன் ஸ்வாமிகளை நோக்கி, "நல்லது, உனது முகமண்டலம் உன் உள்ளத் தன்மையை எனக்குக் கண் ணாடிபோல் காட்டுகிறது. ஆனால் உன் தாய் தந்தையரின் அநுமதியின்றி நான் ஒன்றும் செய்வதற்கில்லை" என்று கூறினார்.

ஸ்வாமிகள் இதைக் கேட்டதும் தந்தை காலமானதை யும் தாயாரும் தமையன்மாரிருவரும் ஜீவித்திருப்பதை யுங் கூறி, "அவர்களிடம் உத்தரவு பெறலாம். ஆனால் இன் றைய தினம் ஒரு மணிக்கு முன்பாகவே இந்த முகூர்த்தத் திலேயே தங்கள் ஸந்நிதானத்திலேயே நான் அவதூதம், மௌனம் இரண்டையும் அடைய விரும்புகிறபடியால் கிருபை புரியவேண்டும்" என்று தெரிவித்துக் கொண்டனர்.

பிரஹ்மேந்திரர் உடனே ஸ்வாமிகளுக்கு உபதேசஞ் செய்து, "நீ இடையில் ஏக வஸ்திரத்துடன் தாயாருடைய ஸந்நிதியை அடைந்து அவ்வம்மையாரை மூன்று முறை வலம் வந்து அங்கே மூன்றே முக்கால் நாழிகை அவர்கள் ஸந்நிதியிலேயே யிருந்து, அப்பால் அங்கேயே அவதூதமும் மௌனமும் கொள்ளலாம்" என்று ஆக்ஞையிட, ஸ்வாமிகள் உடனே தம் குருநாதரைப் பணிந்து விடைகொண்டு பகல் 1½ மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு ஆவேசமடைந்தவர் போல் 72 கல் தூரம் நடந்து கானப்பேட்டையை அடைந்து அன்னையின் ஸந்நிதிக்குப்போய் அவ்வம்மையாரை யழைத்து மூன்று முறை வலம்வந்து பணிந்து எழுந்து, ஒரு முகூர்த்த காலம் தமையன்மாரிடமும், தாயாரிடமும் சம்பாஷணை செய்துகொண்டிருந்து, அப்பால் அந்த இடத்திலேயே அவதூதமும், மௌன விரதமும் மேற்கொண்டு தாம் தரித் திருந்த வஸ்திரம் நழுவி விழ எடுத்து எறிந்துவிட்டுப் புறப் பட்டார். ஸ்வாமிகள் தம் தாயாரிடம் ஸந்யாஸம் வாங்கிக் கொள்ள உத்தரவு பெறும்போது, தமக்கு இனிமேல் பிக்ஷை யிடுகின்றவர்களே தாய்மார்களென்றும், ஞானோபதேசம் செய்யும் குருவே பிதாவென்றும், சாந்திதான் பத்நியென் றும், சிஷ்யர்களே குழந்தைகளென்றும் இவ்விதமாக ஒரு

பெரிய குடும்பம் தமக்கு உண்டாகப்போகிறதென்றும் கருத்தடங்கிய பின்வரும் ச்லோகத்தைக் கூறிவிட்டுச் சென்றார்கள்:

" भिक्षाप्रदाजनन्यः पितरोगुरवः
कुमारकाः शिष्याः एकान्तरमणहेतुः
शान्तिर्दयिता विरक्तस्य "

ஸ்வாமிகள் இவ்வாறு அவதூதம் பெற்றது விகாரி வருஷம் ஆனி மாதம் பௌர்ணமியாம்.

இச்சமயம் இந்த ஓர் காட்சியைக் கண்ணுலே கண்ட ஸ்வாமிகளுடைய தாயாரின் மனமும் தமையன்மாரின் மனமும் எப்படிப்பட்ட நிலையை யடைந்திருக்குமென்பதை ஊகித்துணர்வோமாக!

## பாதம் 3

## புகழுரை

ஸ்வாமிகளுடைய இந்த ஸந்யாஸக்கோலம் அவ்வூர் வாசிகளில் ஆஸ்திகரனைவருக்கும், சிவபெருமான் தாருகா வனத்திலே கொண்டருளிய பிக்ஷாடனக்கோலத்தை நினைப்பூட்டியது. அன்னார் சிவபெருமான் கொண்ட அந்தக் கோலத்தினும் ஸ்வாமிகள் கொண்ட இந்தக்கோலத்தைச் சிறப்பித்துப் பேசிக்கொள்வாராயினர். சிவபெருமானுடைய அந்தத் திருக்கோலம் தாருகாவனத்து ரிஷி பத்தினிகளின் மனத்தைப் பேதித்தது. சிவபெருமானும் அம்மாதரின் மனத்தைப் மாற்றுவதையே இலட்சியமாகக்கொண்டு அக்கோலங்கொண்டனர். ஆனல் ஸ்வாமிகள் மோக்ஷமங்கையை மணந்து கொள்ளக் கோலங்கொண்டமையினல் உலகத்தி

ளுள்ள மங்கையரனைவரையும் அன்னையென மதிக்கும் திருவுளங்கொண்டு உலகியலறியாத பாலகனைப்போல் விளங்கினர். சுகர் நிர்வாணமாய்ச் செல்லுகையில் கோபிகாஸ்திரீகள் யாதொரு மனோவிகாரமுமடையாதிருந்ததுபோல், ஸ்வாமிகளைக்கண்ட அவ்வமயம் மாதரெவரும் யாதொரு மனோவிகாரமு மடையாதவராய், ஸ்வாமிதரிசனத்தை, நிர்விகார நிரஞ்சன நிர்மலஸ்வரூபதரிசனமாகவே கண்டு களித்தனர்.

"மனத்தகத் தழுக்கறுத்த மௌன ஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறார்
மனத்தகத் தழுக்கறுத்த மௌன ஞான யோகிகள்
முலைத்தடத் திருப்பினும் பிறப்பறுத் திருப்பரே"

என்று பெரியார் திருவாய்மலர்ந்தருளியிருப்பதற்கு ஏற்ப ஸ்வாமிகளும் சித்தவிகார மடையாதிருந்தனர்.

உண்மையில்ஜீவன்முக்தநிலையில் விளங்கும் மகான்கள் மனோவிகாரமற்ற பரிசுத்தத்தன்மையையே அணிகலனாகப் பூண்டிருப்பார்களாகையினால் அவர்களை, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரமென்கிற முத்தொழில்களிலே சித்தம் செலுத்தும் மூவராந்தேவரினும் மேலானவர்களென உலகம் போற்றும்.

वादिव्रात गजेन्द्र दुर्मदघटा दुर्गर्वसङ्कर्षणः
श्रीमच्छङ्कर देशिकेन्द्रमृगराडायाति सर्वार्थवित् ।
दूरंगच्छतवादिदुःशदगजाः सन्यासदंष्ट्रायुधः
वेदान्तोरुवनाश्रयः तदपरं द्वैतवनं भक्षति ॥

[ஸ்ரீமத் சங்கரதேசிகேந்திரர் என்னும் சிங்கம் வேதாந்தார்த்தங்களெல்லாம் நன்றாகத் தெரிந்துகொண்டு திக்விஜயம்

செய்யுங்காலத்தில் த்வைதவாதிகளான யானைகள் ஓடி விட்டன. இந்தச் சிங்கம் அந்த யானைக் கூட்டங்களின் துர்அகங்காரங்களையெல்லாம் ஸந்யாஸமென்னும் தந்தத்தினல் (தம்ஷ்டிரத்தினல்) தொலைத்துவிட்டது. இந்தச் சிங்கம் வேதாந்தமென்னும் பெரியவனத்தை ஆச்ரயமாகக் கொண்டு சஞ்சாரம் செய்தவண்ணம் த்வைதமென்னும் சிறியவனத்தைச் சாப்பிட்டுவிட்டது.]

என்பதுபோல ஸ்வாமிகள் அத்தகைய உயரிய நிலையினை மேற்கொள்ளவே த்வைத வாதிகள் சிங்கத்தைக் கண்ட யானைக்கூட்டம்போல் திடுக்கிட்டு மயங்கினர்.

இவ்வாறு ஸ்வாமிகள் உலகப்பற்றை விட்டபொழுது ஸ்வாமிகளுக்கு வயது இருபத்தெட்டாதலின்,

"மூப்பதா மாண்டளவில் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறுணயின்—செப்புங்
கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கள்
முலையளவே யாகுமா மூப்பு"

என்று ஔவைப்பிராட்டியார் திருவாய்மலர்ந்தருளிய உபதேசமொழியைக் கடைப்பிடித்தவர் இவர்தாம் என்று ஸ்வாமிகளுடைய இந்த அரிய நிலையினையும் வயதினையும் நினைப்பவர் எவரும் வியந்து பேசுவாராயினர். சிவஞானச் செல்வர் சிலர், "அரிய இந்த ஆச்ரமம் மேற்கொள்வது எளிதல்ல. இஃது, இவ்வுலக வாழ்க்கை,

"உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்தனையுஞ் சஞ்சலமே தான்"

என்றபடி இடர்தருவதென் றுணர்ந்து,

'நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந் திரிய
மெல்லாமீர்த்
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பாழ் உலப்பி லதனை
யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து
பசையற்றால்
அன்றே யப்போ தேவீடு மதுவே
வீடு வீடாமே'

என்ற போதனையில் ஈடுபட்டுப் பல நாட்கள்,

'யாதனின் யாதனின் நீங்கியா னோதல்
அதனின் அதனி னிலன்'

'தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்'

என்று வெளிவந்துள்ள வேத மொழிகளை எண்ணியெண்ணிப் பக்குவப்பட்டிருக்க வேண்டும். பட்டினத்தாருக்குச் சிவஞான போதமருளிய 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்ற மருதவாணனுடைய திருவாக்கு உள்ளத்தில் அணையாத தீபமென இலகவேண்டும். இந்தப் ப்க்குவம்,

'விடு விட வேண்டியவைகளை யெல்லாம் ஒருங்கே
அடு ஓசை முதலிய ஐம்புலன்களையும்'

என்று முடுக்கியிருக்க வேண்டும். இன்றேல் இந்த ஓர் உயரிய நிலையினையடைவதரிது'' என்று பேசிச் சிவத்யானம் செய்யலாயினர்.

ஸ்வாமிகள் இந்த ஆச்ரமம் ஏற்றபின் அந்த ஊரிலே மூன்று நாள் தாமதித்தார்கள். அப்பால் நேரே திருச்சி

ஜில்லாவைச் சேர்ந்த கரூர் தாலுகாவிலுள்ள நெரூர் என்னும் நல்லூர் சென்றார்.

இற்றைக்குச் சற்றேறக்குறைய இருநூறு வருஷங்களுக்கு முன்னே சோழமண்டலமெங்கும் உலாவித் தமது தரிசனத்தினால் ஆன்ம கோடிகளின் பிறவிப்பிணியை நீக்கியருளிய சதாசிவப் பிரஹ்மேந்திரரென்னும் பெரியார் இந்த நெரூரின்கண் சமாதிகொண்டருளினர். சதாசிவப் பிரஹ்மேந்திரருடைய சரித்திரம் அதியற்புதமானது. அவர் பரமதிட ஞானியாக விளங்கியவர். ஆதலால் ஸ்வாமிகளுக்கு அவருடைய சமாதி தரிசனம் செய்ய எண்ணமுண்டாயது. எண்ணமுண்டானதும் சித்ரகூடப்பர்வதச் சாரலிலே தங்கியிருந்த ஸ்ரீராமபிரானைக் கண்ட பரதன் விரைந்து சென்றது போலவும், மலையிலிருந்து அருவி பெருகி ஓடிச்செல்வது போலவும் துரிதமாய்ச் சென்று நெரூரை யடைந்து சமாதி தரிசனம் செய்துகொண்டு பின் கால்நடையாகவே தஞ்சாவூர், கும்பகோணம், விருத்தாசலம், சிதம்பரம் முதலிய திவ்ய க்ஷேத்திர தரிசனமும் ஆங்காங்குள்ள மூர்த்தி தரிசனமும் செய்தனர். அப்பால்,

"தில்லையைக் காணக் காசியி லிறக்கச் சிறக்குமா ரூர்தனிற் பிறக்க
எல்லையில் பெருமை யருணையை நினைக்க வெய்தலா முத்தி"

என்றும்,

"பொருவிலாச் சுவர்க்கத் தமிர்தமுண் டிருப்போர்
போகபூ மியைத்தனி புரப்போர்
அருணைமா நகரிற் கிருமியாய்ப் பிறப்ப
ததிகமென் றுதரங் கொள்வார்
மருவுமப் பதியிற் பிறப்பது நூறு
மகம்புரிந் தவர்க்கலாற் கிடையா

தேன்கரடு என்று ஒருகரடு இருக்கிறது. அதுவெகு விஸ்தார மான கரடு. அந்தக் கரட்டிற்கு மேற்கே இரண்டுகல் தூரத் தில் அதாவது சேந்தமங்கலம் ஏரிக்கரட்டிற்குத் தென்மேற்கு மூலையில் நயனுமலைக்கரடு என்று ஒருகாடிருக்கிறது. அதில் விஷ்ணுவாலயம் இருக்கிறது. அந்தக்ஷேத்திரம் பிரசித்தி பெற்ற மகிமையுடையது. அந்த ஆலயத்துக்குப் பிரார்த்தனைக் காரர்கள் பலர் நாடோறும் பல ஊர்களிலிருந்து வந்தபடி யிருப்பார்கள். அம்மலையின் அடிவாரத்தில் புதன்கிழமை தோறும் பெரிய சந்தை கூடுகிறது. அந்தச் சந்தையில் நேர்த் தியான காளைமாடுகள் விற்பனைக்கு வரும். பலதானியங் களும் பல சாமான்களும் விற்பனைக்கு வரும். ஊரும் மலையும் பார்வைக்கு வெகு அழகாயிருக்கும்.

இவையன்றி ஸங்யாவலிக் கரட்டுக்கு ஏழுகல் தூரம் தென்கிழக்கு மூலையில் நாமக்கல் என்ற திவ்யக்ஷேத்திரம் இருக்கிறது. இங்கே நரஸிம்ம ஸ்வாமி நாமகிரியம்மன் ஸமேதராய்த் திருக்கோயில் கொண்டிருக்கிறார். இது மகா மகிமையுள்ள திவ்யக்ஷேத்திரம். இங்கே முப்பதடி உயர முள்ள ஹநுமாருடைய விக்ரஹம் இருக்கிறது. இது மஹா அற்புதமான காட்சியதும். இந்த ஹநுமார் வரப்ரசாத முடையவரென்று ப தர் பலர் இங்கே வந்து அடிக்கடி கூடி ஆராதனை நடத்துவர்.

இஃது இப்படியிருக்க, ஸங்யாவலிக் கரட்டிற்குக் கிழக்கே சுமார் எட்டுக்கல் தூரத்தில் தலைமலை என்ற பெரிய மலை யிருக்கிறது. அது கோதண்டராமசாமி க்ஷேத்ரம்; மிகப் பிரபலமானது. அம்மலையினுச்சி, பிரம்மாண்டமான ஒரு விருஷபம் படுத்திருப்பதுபோலக் காணப்படும். ஸங்யாவலிக்

கரட்டிற்கு வடக்கே இரண்டு கல்தூரத்தில் கொல்லிமலை யென்கிற சதுரகிரியின் தொடர்ச்சி விளங்குகிறது. இம் மலையில் சிவபெருமான் அறப்பளீசுவரர் என்கிற பெயருடன் திருக்கோயில் கொண்டிருக்கிறார். இது தேவார வைப்பு ஸ்தலங்களுள் ஒன்று. ஒரு பெரியார் அறப்பளீசுவரசதகம் என்று தமிழில் பல நீதிகளமைத்துச் சதகமொன்று செய்துள்ளார். அது மிகப் பிரசித்தியானது. தமிழில் கல்வி யபிவிர்த்தியடைய விரும்பியவர்களனைவரும் அதனைப் படித்துக் கற்றுக்கொள்ளாமலிரார். அஃது ஒன்றைப் படித்தால் பல நீதிகளைத் தெரிந்துகொள்ளலாம்.

ஸ்வாமிகள் கொல்லிமலைக்குச் சென்றாரென்று கூறினோமல்லவா? ஸ்வாமிகள் அங்ஙெங்கும் தனிக்காட்டுச் சிங்கமேபோல் நிர்ப்பயமாய் உலாவி வந்தனர்.

"துயிற்சுவையும் தூநல்லார் தோட்சுவையும் எல்லாம்
அயிற்சுவையி னுகுவவென் றெண்ணி—அயிற்சுவையும்
பித்துணைக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
மொத்துணு மொய்ம்பி னவர்"

என்றும்,

"பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுரைப்ப நோக்குறார்—பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னர்"

என்றும்,

"அன்போ டருளுடைய ரேனு முயிர்சிலையிற்
றென்பியக்கங் கண்டும் புறந்தாரார்—புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றாம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்"

என்றும்,

"சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றூர்
மற்றின்பம் யாவையும் கைவிடப—முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில்"

என்றும் வெளிவந்துள்ள பெரியார் திருவாக்குகளெல்லாம் ஸ்வாமிகளின் முன்னே ஞான ஜோதியை வீசும் வீடா விளக்காக வழி காட்டிக்கொண்டே சென்றபடியால் ஸ்வாமிகளுக்குத் தாம் காண்பவைகளெல்லாம் ஸமதரிசன பாவத்திலேயே இலகின. ஆனபடியால் ஸ்வாமிகள்,

"ஐயந் திரிபின் றளந்துத்தி யிற்றெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார்—தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள்"

என்றபடி ஆநந்தபோதம் என்கிற சாகரத்திலே,

(பல்லவி)

தாண்டவ தரிசனமே—நீதேகவே
ஆண்டிடு மேதினமே

(அநுபல்லவி)

வேண்டி முனிவர் கொண் டாடி மகிழ
விஸ் தார சச்சி தா நந்த மாக்கு மந்தத் (தா)

என்று பாடிக்கொண்டே அந்த ஜகத் பிரபுவின் திருவடி யிணையையே தெப்பமாகக் கொண்டு உலாவினார்.

அவருடைய நிலையினைத் தேவர்களும் சித்தவித்யாதரார் களும் கண்டு ஓடம் ஒன்று பாடி மகிழ்ந்தனர்.

இவ்வாறு இருக்கையில் சேந்தமங்கல வாசிகளில் மெய்யன்பர்கள் சிலர் ஸ்வாமிகளை அடிக்கடி தரிசனம்

செய்து சம்பாஷிப்பதுண்டு. அப்படிப்பட்டவர்களில் தற்காலம் சேலத்திலே வசிப்பவரும் சென்னை ஹைகோர்ட்டில் நீதிபதியாயிருந்து உபகாரச் சம்பளம் பெறுபவரும் வைசிய குல திலகருமாகிய ஸ்ரீமான் சுந்தரஞ் செட்டியாரும் அவர் வகுப்பாரைச் சார்ந்தாரும் சிலராவர். அவர்களெல்லாரும் ஸ்வாமிகளைச் சேந்தமங்கலத்திற்கே வந்து ஸந்யாஸிக் காட்டிலே தங்கும்படி பிரார்த்தித்துக் கொண்டனர். ஸ்வாமிகள் வர இணங்காமல் தம் இச்சைப்படி கொல்லிமலையிலே உலாவினர்.

அவ்வாறிருக்கையில் கொல்லிமலை வாசிகளில் ஒரு பெண்பிள்ளை எங்கேயோ காணமற்போயினள். அவளைத் தேட முயன்ற மலையாளிகள், ஸ்வாமிகளிடம் சந்தேகம் கொண்டு ஸ்வாமிகளைப் பிடித்து இரத்தக் காயமுண்டாகும் படி அடித்துத் துன்பப்படுத்திவிட்டனர். மலையாளிகளெல்லாம் கல்வியறிவே இல்லாதவர்களாகையினால்,

"மெய்யுணர்ந்தார் பொய்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணுப் புலங்காப்பார்—மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாண நீள்கதவாச்
சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து"

என்று கூறியுள்ளபடி பெரியார்தன்மை விளங்குமென்பதை உணராமல் மனம் போனபடி நடந்தார்கள். அவ்வாறு ஸ்வாமிகளைத் துன்புறுத்துவதை அம்மலையிலே அப்போது ஸர்க்கார் அலுவலாக வந்திருந்த ரெவினியூ இன்ஸ்பெக்டர் அறிந்து ஓடிவந்து மலையாளிகளை விலக்கி ஸ்வாமிகளைத் தம் வீடுதிக்கு அழைத்துச் சென்று அடிபட்டதால் ஏற்பட்ட காயம் ஆறச் சிகிச்சைசெய்து உபசரித்தனுப்பினர்.

அப்பால் சிலநாட்களுக்கெல்லாம் ஸ்வாமிகள் அம்மலை யிலே தாம் கண்ட ஒரு குகையின்கண் அமர்ந்து நிர்விகற்ப சமாதியிலிருந்து தமது உயிரைத் தியாகஞ்செய்து விடுவ தெனத் தீர்மானித்தனர். இதனையறிந்த செட்டிமார் முதலி யவர்கள் தடுத்து ஸ்வாமிகளை வெகு கஷ்டப்பட்டு ஸங்யாவஸிக் கரட்டுக்கு அழைத்துவந்து அங்கே அழகாய் அமைந்திருந்த ஒரு குகையில் வசிக்கச்செய்ததுமன்றி அவர்களுக்கு அன்று முதல் யாதொரு ஹிம்சையும் ஏற்படாமலிருக்கப் பாதுகாப் பும் ஏற்படுத்தினர்; ஆகாரவசதிகளும் செய்துவைத்தனர்.

ஸ்வாமிகள் அங்கே தங்கியிருக்கையில் இப்போது அக் குகை காணப்படும் விதத்தில் முன்பக்கம் கட்டிடம் கட்டி விஸ்தாரப்படுத்திப் பந்தீரமைத்து வெளிப்பக்கத்தில் கம்பிக் கதவும் அமைத்துத் தாளிட்டுப் பூட்டவும் திறக்கவும் வசதி செய்தனர்.

பின்னர் ஸ்வாமிகள் அங்கே குகையில் நிஷ்டையிலிருப் பதாகக் கூறி நிஷ்டையில் அமர்ந்தார்கள்.

## பாதம் 2

## ப்ரஹ்மாநந்த நிஷ்டை

வாசகர்காள்! நாம் இப்போது எங்கிருக்கிறோம்? சகல லோக சரண்யனும் ஸர்வாந்தர்யாமியும் திரிபுரதகன னும் தீனரக்ஷகனும் தேவியோர் பாகனுமாகிய அறப்பளீ சுவரர் ஸந்நிதானம் அமைந்த கொல்லிமலையை வடக்கிலும், இராவண ஸம்ஹாரம் புரிந்து உலகத்துக்குப் பரதாரகமன னுடைய கதி அதோகதியாக முடியுமென்பதை உணர்த்தி யருளிய கோதண்டராம ஸ்வாமியின் ஸந்நிதியையுடைய தலை மலையைக் கிழக்கிலும், நாமகிரிதேவி ஸமேதராகிய நரஸிம்ம

ஸ்வாமி ஸந்நிதானம் அமைந்த நாமக்கல் என்னும் திவ்ய க்ஷேத்திரத்தைத்தென்கிழக்கிலும்,தேன்கரடென்னும்பெயர் கொண்ட விஸ்தாரமான ஒரு கரட்டைத் தெற்கிலும், வரத ராஜப்பெருமாள் ஸந்நிதானம் அமைந்த நயனமலை யென்னு மோர் அழகிய மலையைத் தென்மேற்கிலும் உடைய ஸங்யா ஸிக்குன்றில் ஸநகாதி நால்வருக்கு உபதேசிப்பதன்பொரு ட்டுச் சிந்திக்க முடியாததும் ஆநந்தம் நிறைந்ததுமான தம தாத்மாவைத் தரிசனம் செய்யும்பொருட்டு யோகத்தில் அமர்ந்த சிவபெருமானைப்போலக் குகையில் நிஷ்டையில் அமர்ந்துள்ள அவதூத ஸ்வாமிகளின் ஸந்நிதியில் இருக் கிறோம்.

ஆகா என்னவென்று வர்ணிப்பது இப்போது நாம் அநுபவிக்கும் ஆநந்தத்தை! உலகத்தில் பாலை, முல்லை, மரு தம், குறிஞ்சி, நெய்தல் என்னும் ஐவகை நிலப்பிரிவினுள் சூரஸம்ஹாரம் செய்து சகல உலகங்களுக்கும் க்ஷேமத்தை அளித்த பரம கருணா நிதியாகிய நம்முடைய சிவசுப்ரமண்யக் கடவுள் அடியார்களுக்கு அநுக்ரஹிக்கும்பொருட்டுத் திருக் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் மலைப்பிரதேசமே தலைமையான சிறப்பினை உடையதாகும். கடவுளுடைய சிருஷ்டி விநோதங்களை ஒருங்கே கண்டு அநுபவிக்க வேண்டு மெனில் இந்த மலைகளிலேதான் கண்டு அநுபவித்தல் கூடும். கடவுளின் சிருஷ்டி விநோதக் காட்சியின்மூலம் உயரிய கருத் துக்களை உணர்ந்து செம்மைப்பட வேண்டுமெனின் அஃ தும் இந்த இடத்திலேதான் பெறுதல் கூடும். சுத்த ஆகாயம், சுத்த ஜலம், சுத்த ஆகாரம் ஆகியவைகளை அடைந்து தேக சுகம்பெற விரும்புவோமாயின் அஃதும் இங்கேதான் அடைதல் கூடும். ஆகையினாலேதான் வானப் பிரஸ்தாச்ரமி

களும் ஸந்யாஸாச்ரமிகளும் மலைகளும் மரங்களும் அடர்ந்த வனப்ரதேசத்தை நாடியடைகின்றனர். இந்த உண்மையைப் பண்டைக்காலப் பெரியாருடைய சரித்திர மூலமாகவும் தற்காலத்தில் ஸ்ரீராமதீர்த்தர், விவேகாநந்தர் இவர்களைப் போன்ற மகாத்மாக்களின் சரித்திர மூலமாகவும் உணரலாகும். பிதிர்வாக்கிய பரிபாலன நிமித்தம் தம்முடைய மனைவியுடனும் சகோதரருடனும் வனத்தை யடைந்த ஸ்ரீராமச்சந்திர பிரபு, வனவிநோதங் கண்டு, "ஆகா! இந்தப் பிரதேச வாழ்க்கையே நகரவாழ்க்கையிலும் சிறந்தது" என்று வியந்து மகிழ்ந்ததை நாம் இராமாயணத்திற் படித்திருக்கிறோம். பன்னிரண்டுவருஷ வனவாசத்தை மேற்கொண்ட பாண்டவர்களும் இந்நிலத்தையே மேலானதாகக் கொண்டு இன்பம் அநுபவித்ததாகப் பாரதத்தில் படிக்கிறோம். ஆதலால் குறிஞ்சிநிலமே ஏனைய நான்கு நிலத்தினும் மேலானதாகு மென்பதை உணரலானோம். இதுபற்றியே நம் ஸ்வாமிகளும் இந்த நிலத்தைத் தமக்குத் தங்குமிடமாகத் தேடிக்கொண்டனர் என்று மனம் நிச்சயம் செய்கின்றது.

ஆகா என்ன அதிசயம் இது! இந்தக் காட்டில் வந்திருக்கும் நமக்கு உடம்பு சிலிர்க்கிறதே! உள்ளத்தில் பிரம்மாநந்த வெள்ளம் பெருகுகிறதே! இதோ இளந்தென்றல் சிவ ஞானத்திருமணங் கமழ வீசுகின்றது. என்னே விநோதமிது! கவனிப்போம்: இதோ இங்குள்ள மரங்களிலும் செடி கொடிகளிலும் தத்தம் பேடுகளுடன் கூடி உல்லாசமாகப் பறவையினம் பலவும் பலவிதமாய்க் கலகலவெனக் குரல் காட்டிக் கூவி விளையாடுகின்றன! ஆகா இப்பறவைகளின் குரல்கள் தெய்வ பக்தி யென்னும் சுருதியுடன் கலந்ததே போல் செவிக்கு இன்பமூட்டுகின்றன! தவிர இவைகள்

மரத்துக்கு மரம் கிளைக்குக் கிளை தாவி விளையாடும் இக்காட்சி ப்ரஹ்மாநந்தாநுபவம் கைவரப்பெற்ற மகான்கள் தம்மை மறந்து நர்த்தனம் செய்து மகிழ்வர் என்று கூறும் பெரியாருடைய அநுபவமொழிகளை நினைப்பூட்டுகின்றது. அடடா! ஈதென்ன புதுமை! மன்மதனுடைய தோழனாகிய வசந்தன் அந்த மன்மதனுடைய கட்டளைப்படி இங்கே தவம் புரியும் ரிஷிகளை நிஷ்டையிலிருந்து கலைக்கும் பொருட்டுத் தன் சக்தியைப் பரப்பியிருக்கின்றான்போலும்! அதனாலே தான் குயிற் கூட்டங்கள் கலகலவெனக் கூவுகின்றன! மலய மாருதம் மெல்ல மெல்ல வீசுகின்றது! ஆண்மயில்கள் தங்களுக்குப் பெண்கள் அன்போடு கொடுத்த மாம்பூவின் ரஸத்தைக் குடித்து ஆனந்தம் பொங்கக் காதுக்கினிமையான பஞ்சம சுரங்களைப் பாடி மன்மதனுடைய ஆவேசத்தைத் தட்டியெழுப்புகின்றன! இவ்வாறு காமுகர் நினைத்து அதிசயிக்கத்தக்கதாக இருக்கிறதே இக்காட்சி!

அட அடா! விநோதம்! விநோதம்! இதோ இந்தப் பக்கம் அடர்ந்து படர்ந்து நிழலைத்தரும் கொன்றை மலர்கள் இவைகளின்கீழே குத்துக்குத்தாய் அமைந்துள்ள சிறு சிறு பாறைகளின்மேல் பொன்னிறத்தோடு கூடிய புஷ்பங்களை உதிர்த்திருக்கும் காட்சி, 'உணர்ச்சிபெற்ற இம்மரங்களும் குத்துக் கற்களைச் சிவலிங்க பாவனையால் அர்ச்சித்திருக்கின்றனவே! இம்மரங்களுக்கு இவ்வுணர்ச்சியை ஊட்டத்தக்க சக்தி இக்குன்றிற்கு அமைய இதில் ஏதோ தெய்விகம் அமைந்திருக்கவேண்டும். இன்றேல் இது மகாத்மாக்களின் ஆச்ரமங்களுக்குரிய தூயஸ்தலமா யிருக்கவேண்டும்' என்று நிச்சயித்து உச்சிமேற் கரங்களைக் கூப்பி நச்சினார்க்கினியராகிய சச்சிதாநந்த மூர்த்தியைத் தியானித்து,

"பிரானரு ளுண்டெனி லுண்டுநற் செல்வம்
பிரானரு ளுண்டெனி லுண்டுநன் ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையு முண்டு
பிரானரு ளாற்பெருந் தெய்வமு மாமே"

"சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகில் லாவே
சிவனருள் கூடினச் சிவலோக மாமே"

என்று வெளிவந்துள்ள சிவயோகாநுபவமுதிர்ந்த திருமூலர் திருவாக்குகளைப் பாடிப் பேராநந்த மடையச் செய்கின்றது. இதோ இங்கே காக்கை இரண்டு ஒன்றையொன்று கீழுமேலும் புரட்டிப் புரட்டிச் சண்டையிட்டுக்கொண்டே ஆலமரத்தினின்று கீழே விழுந்து உருண்டு புரளுகின்றன. ஆகா! இக்காட்சி,

"குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே"

என்று அந்நாயனார் கூறிய உயர்ந்த கருத்தைப் போதிக்கின்றதல்லவா?

இதோ இபபக்கம் அகன்று நீண்ட சுனையுடன கூடியதாயிருக்கும் பாறையின் சரிவைக் கவனித்தால், கிழவர் வேடம் பூண்டு வள்ளிநாயகியைச் சோதிக்கவந்த முருகப்பெருமானுடைய பொய்த்தாகத்தைத் தணிக்க வள்ளிநாயகி அவரைச் சுனைக்கு அழைத்துவர அவர் தாகத்துக்கு நீரருந்துவதாகச் சுனையில் இறங்கிப் பின் அதில்விழுந்துவிட்டதாகப் பாசாங்கு செய்து வள்ளிநாயகியைத் தம்முடைய கரங்

தொட்டு மேலே தூக்கிவிடும்படியாகச் செய்து இன்ப மடைந்த கதையை நினைப்பூட்டுகின்றது. இதோ இப்பக்கம் இக்கம்பங்காட்டில் பரணமீதமர்ந்து குடியானவர் பெண்கள் சோ! எனக் கூவிக் கவண் வீசிக் குருவியோட்டும் காட்சி, வள்ளியம்மை நம்பிராஜனுடைய கட்டளைப்படி பரண்மீதி ருந்து கவண் வீசிக் குருவியோட்டியதை நினைப்பூட்டுவது மல்லாமல், 'என்ன விநோதமிது! இவர்கள் சோ எனக் கூவும் குரல் கேட்டின் கிளி முதலிய பறவைகள் தம்மினம் கூவுவதாக நினைத்து இங்கு வந்து கூடுமென்பதை இவர்கள் உணராதது பெண்கள் பேதைமையுடையார் என்பதைக் காட்டுகின்றதே!' என்று கருதவும் இடந்தருகிறது.

இதோ இப்பக்கம் குரங்குகள் கூட்டங் கூட்டமாக வருவதையும் அவைகளிலே சில, மரங்களில் தலைகீழாக ஊஞ்சலாடுவதையும் சில, அங்கங்கே கண்களை மூடிக்கொண்டு பாறைகளின்மீது அமர்ந்திருப்பதையும் சில, குட்டிகளை மார்பிலே கட்டிக்கொண்டு நிர்ப்பயமாய்க் கிளைக்குக் கிளை தாவுவதையும் சில, ஒன்றுக்கொன்று பேனெடுத்தல் முதலிய செயல்களிலே முயற்சியுடையவைகளாயிருப்பதையும் கவனியுங்கள்!

குரங்குகள் ஊஞ்சலாடுங் காட்சி, உலக வாழ்க்கையில் சுக துக்கங்கள் இவ்வாறுதான் போவனவும் வருவனவுமாயிருக்குமென்கிற கருத்தை உணர்த்துகின்றது. குரங்குகள் கண்களை மூடியபடி பாறைகளின் மேல் அமர்ந்திருக்கும் காட்சி, உலகப் பற்றை முற்றுமொழித்து,

"அவமுஞ் சிவமு மறியா ரறியார்
அவமுஞ் சிவமு மறிவார் அறிவார்



வைராக்ய விலாஸம்

ஸ்வாமிகள் ஆறு மாஸம் உபவாஸத்தோடு
நிஷ்டையிலிருந்த கோலம்

*அவமுஞ் சிவமு மருளா லறிந்தால்*
*அவமுஞ் சிவமு மவனரு ளாமே"*

என்றபடி தத்துவம் உணர்ந்து சிவபோதங் கைவரப்பெற்ற மகரிஷிகள் தவம்புரியும் காட்சியைக் காட்டுகின்றது. குரங்குகள் தம் அடிவயிற்றிலே குட்டிகள் கட்டிக்கொண்டிருக்கத் தாவும் காட்சி, மர்க்கட கிசோர நியாயம் என்பதை ஞாபக மூட்டுகிறது. குரங்குகள் ஒன்றையொன்று பேனெடுத்துக் கொள்ளும் காட்சி, அன்பு என்கிற ஒரு சங்கிலித் தொடரி னால் உலகம் கட்டுப்பட்டிருக்கிறது, இம்மேல் நிறைவுறு மென்கிற நீதியை உணர்த்துகின்றது.

இவ்வாறு இங்கிருக்க இதோ இப்பக்கத்திலே இடையர் கள் ஆடுகளை மேய்ப்பதையும் மாடுகளை மேய்ப்பதையும் கவனியுங்கள்! இவ்விடையர்கள் வெயிலுக்கும் காற்றுக் கும் அஞ்சாது கோவண உடையுந் தலைப்பாகையுங் கொண்டு கையிலே கோலுடன் அலட்சியமாய்த் தம்மை மறந்து உலா வுங்காட்சி, சமதரிசன நிலையினையடைந்த பெரியாரின் செயலை ஞாபகப்படுத்துகின்றது.

இதோ இப்பக்கம் ஏரியைக் கவனியுங்கள்! இதில் ஒரு பக்கம் செம்படவர்கள் தூண்டில் வீசி மீன்பிடிக்க அதே நினை வாய் அமர்ந்திருக்கும் காட்சி, 'ஓகோ இஃதென்ன யோக நிலை!' என்று வியந்து பேசத்தக்க காட்சியாயிருக்கிறது பாருங்கள்! அல்லாமலும், 'இக்கொடியவர்களுக்கு எமன் விதிக்கும் நரகவேதனை யாதோ?' என்றெண்ணவும், 'இப் படியும் வயிறுவளர்க்க வேண்டுமா? இதனை எனப் பிழைப் பென்றெண்ணுத இவர்களையேன் உலகம் காரியுமிழ்ந்து காற் கடை கொண்டு ஒதுக்கவில்லை?' என்று கருதவும் இடந்தரு

கின்றது. இதோ மற்ருெருபக்கம் ஏரியில் மாதர்கள் ஜலந் திரட்டிக்கொண்டு பலபடியாகப் பேசிக்கொண்டு செல்வது,

"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே - வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலும்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்"

என்னும் திருவாக்கை எண்ணி மகிழ இடந்தருகிறது பாருங்கள்!

இதோ இப்பக்கம் பாருங்கள்: இளஞ்சூரியனின் இள வெயிற்படும் இச்சமயம் தங்கமுலாம் பூசியதேபோல் மிளிர்கிறது இக்குன்றின் சாரல். இதோ இப்பக்கம் பாருங்கள்: இளம்வெயில் படாத இந்தச் சாரல் மனோகரமான குளிர்ச்சியுடையதாய், நீர்நிலையின் பரப்பையும் பலவகை மரங்களடர்ந்த சோலையின் அதிவினோத வனப்பையும் எடுத்துக் காட்டி இது மன்மதன் ரதிதேவியுடன் உல்லாசமாய் விளையாடும் சமயம்போலும் என்று பேசத்தக்கபடி இலகுகின்றது.

இந்தப் பக்கம் பாருங்கள்: வியவசாயஞ் செய்யும் குடியானவர்கள் கவலையேற்றத்திலும் ஆள் ஏற்றத்திலும் நீர் இறைத்துத்தத்தம் கழனிகளுக்கு நீர் பாய்ச்சுவதையும் ஆகா! இவர்கள் பாடும் பாடல்களையும் கவனியுங்கள்:இவை யோக மார்க்கத்தையும் ஞானமார்க்கத்தையும் போதிக்கின்றன. அல்லாமலும் இவர்களுடைய இம்முயற்சி சுறுசுறுப்புடையவர்க்கே ஊதியம் பெற இயலும் என்பதைப் போதிக்கின்றதல்லவா ?

இவ்வாறு வியந்து பேசத்தக்க தெய்வீக எழில்நலம் அமைந்த இந்தக் குன்றின் குகையில் வந்து சேர்ந்த ஸ்வாமிகள் நிஷ்டையில் அமர்ந்திருக்கிருரல்லவா? "இதுதகும்,தகும்.

மகாத்மாக்களுக்குத் தகுந்த இடம்! இது" என்று கண்ட அன்பர்கள் பலர் மகிழ்ந்து அந்தக் குகைக்கு முன்னே சிறு கட்டடம்அமைத்துச்சிறுபந்தரும் போட்டுவைத்தனர்.பிறகு அதற்கு ஒருவாயிலும் அதற்குக் கதவும்ஏற்பட்டன. ஸ்வாமி கள் நிஷ்டைக்குப் போகுமுன் தம்மை அடுத்த நயனமலைக் கோனார் என்பவர்க்கு, அந்த வாயிற் கதவைப் பூட்டிவிடும் படி உத்தரவிட அவர் அப்படியே பூட்டிவிட்டு அங்கேயே சதாகாலமும் ஸ்வாமிகளின் ஆக்ஞை எந்த வேளையில் எந்த விதமாய் ஏற்படுமோ என்கிற சிந்தனையுடன் இருந்து வந்தனர்.

குகை இப்படிப் பூட்டப்பட்டிருப்பதைச சேலம் டிப்டி கலெக்டர் கேட்டு, "மனிதனை இவ்வாறுகுகையிலே வைத்துப் பூட்டுவது தவறு" என்று கூறி அதைத் திறந்துவிடும்படி கோனருக்குக் கூறினர். கோனர், "ஸ்வாமிகள் உத்தரவுப்படி வாயிற்கதவு பூட்டப்பட்டிருக்கிறது. திறப்பது கூடாது. அது பெரிய அபசாரமாகும்" என்று மறுக்க, உத்யோ கஸ்தர் தம் சேவகனை ஏவிப் பூட்டை உடைத்துக் கதவைத் திறக்கும்படி செய்து குகையைக் கவனித்தாராம். ஸ்வாமி கள் அப்பொழுது குகையில் கிழக்கே தலைவைத்து மேற்கே கால் நீட்டியவண்ணம் கிடந்தாராம். உத்யோகஸ்தர் ஸ்வாமி களை இவ்விதநிலையிலே கண்டதும் இறந்துவிட்டதாகஎண்ணி வெளியே இழுத்தெறியும்படி சேவகனை யேவ சேவகன் அவ்வாறே செய்தான். ஸ்வாமிகள் வெளியே போடப்பட்ட சற்று நேரத்திற்கெல்லாம் தூங்கியவன் விழித்துக்கொண்டு எழுந்திருப்பது போல் எழுந்திருந்தாராம். எல்லோரும் கண்டு ஆச்சரியமடையவே, உத்யோகஸ்தர் நடுக்கமுற்று ஸ்வாமிகளைச் சரணடைந்து மன்னிப்பு வேண்டினராம்.

ஸ்வாமிகள் வெளியே வந்தசமயம் உடற் சதையெல்லாம் போய் எலும்புக் கூடாயிருந்தாராம். ஸ்வாமிகள் குகை பூட்டப்பட்டிருக்கும்போது எப்படியோ-வெளியே காடுகளில் காணப்படுவராம். பிறகு குகைக்குள் எப்படியோ யாரையும் அறியாமல் பிரவேசித்து நிஷ்டையிலிருப்பாராம்.

[ஸ்வாமிகளுடைய இப்படிப்பட்ட விநோதத் திருவிளையாடல்களை அறிந்தவிதம் வருமாறு:—

1933-ம் வருஷம் டிசம்பர் மாதம் 20-ந் தேதி நடைபெற்ற ஸ்ரீ தத்த ஜயந்திக்காக நாம் ஸ்ரீ தத்தகிரிக்குச் சென்றபோது சேலத்திலிருந்து ஸ்ரீ தத்தகிரிக்குச் சென்ற பஸ்ஸில் நயனமலைக்கோனர் என்பவரைச் சந்தித்தோம். அவரும் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய தரிசனத்துக்காகச் செல்பவராதலால் இருவரும் ஸ்வாமிகளைப்பற்றிச் சம்பாஷிக்கத் தொடங்கினோம். அப்பொழுது அந்தக்கோனர் இவ்வளவு விஷயங்களையும் எடுத்துச்சொல்லியதன்றி, ஸ்வாமிகள் கைப்படத் தமக்கு எழுதிக்கொடுத்த திருமுகமொன்றையும் காட்டினர்.

ஸ்வாமிகள் கோனருக்கு வரைந்தளித்த கடிதம்:—

கடவுள் துணை—சுபமஸ்து

"நடராஜா நடராஜா நர்த்தன சுந்தர நடராஜா-சிவராஜா சிவராஜா சிவகாமிப்ரிய சிவராஜா" இதனை நீ ஜபித்து வரக்கடவாய்! உனக்கு ஸத்விஷயத்தில் மனஞ் செல்லப் பக்திபரமாக மார்க்கம் காண்பிக்கப்பட்டது. புத்திசாலியாயும் நல்லொழுக்கமுள்ளவனுயும் இருந்துகொண்டு சுகமாய் வாழக்கடவாய்! உனக்கு நடேசன் என நாமம்கொடுக்கப் பட்டது. ஸன்மார்க்கத்தில் விருப்பமுடைய உனக்கு யாதொரு குறைவும் வாராது.]

இவ்வாறு ஸ்வாமிகள் சேந்தமங்கலத்தில் குகையில் நிஷ்டையில் அமர்ந்திருக்கையில் ஒரு பெரிய கிருஷ்ண ஸர்ப்பம் ஸ்வாமிகளைச் சூழ்ந்து மண்டலமிட்டபடி படுத்து முன்னே தலை தூக்கிப் படமெடுத்துக் கொண்டிருந்தது. இதைக்கண்ட அன்பர்கள் பயந்து என்ன செய்வதெனத் தெரியாது பிரமித்தனர். ஸ்வாமிகள் அதைக்கண்டு சிறிதுமஞ்சாமல் புன்முறுவலுடன் அதை நோக்கி, "ஸர்ப்பமே, உன் வழியே செல்" என்று இரண்டுமுறை கூற, ஸர்ப்பம் எல்லோரும் வியப்படையும்படி அவரை விட்டு விலகி நகர்ந்தபடி வெளிப்பட்டு ஒரு புதருக்குள் மறைந்தது

இந்த்ரிய நிக்ரஹமுள்ள சூரனும் பல பிறவிகளிலே செய்த புண்ய விசேஷமுடையவனும் மகான்களுடைய ஆசீர்வாத பலமுடையவனும் எவனோ அவனே இந்த ஆச்ரமத்தை வகிக்கத்தக்க தீரனாவான். நம் ஸ்வாமிகள் அப்படிப்பட்ட தீரராகையினால், லோகத்திலுண்டாகும் புகழ்ச்சிக்காவது இகழ்ச்சிக்காவது சரீர சம்பந்தமாக நேரும் உபாதிகளுக்காவது பயப்படுகிறவரல்லர். ஆதலால், உண்மையான மௌன விரதம் பூண்டு த்யானபர நிஷ்டராய், சித்த சுத்தராய், இராப் பகலற்ற இடத்தே லயித்து நிற்பவராய், பூவுலகை இல்லமாகவும் எண்டிசைகளையும் தமது ஆடையாகவும் ஞானநது சந்தானத்தையே ஸ்நானமாகவும் தாமுகந்த கோலத்தையே ஆசாரமாகவும் மானமற வாங்கிப் புசிப்பதையே பூஜையாகவும் கொண்டு உடை கோவணமற்று உலகில் நின்ற இடம் போன இடம் மறந்து சஞ்சரிக்கும் விரதம் மேற்கொண்டவராதலால், நான்கு அல்லது மூன்று மாதத்துக் கொருமுறை குகையை விட்டுப்புறப்பட்டு வெளியே போய் ஒருமாதம் சஞ்சரிப்பதும் பிறகு மீள்வதுமா யிருந்துவரத் தலைப்பட்டார்.

# பாதம் 3

## விநோதத் திருவிளையாடல்கள்

இவ்வாறு இரண்டு வருஷகால மிருந்துவந்து அப்பால் சார்வரி வருஷம் உத்தராயணத்தில் பூப்ரதக்ஷிணஞ் செய்யக்கருதிப் புறப்பட்டுக் கால் நடையாகவே நடந்தனர். ஊர் ஊராகவும் நகர நகரமாகவும் காடு காடாகவும் கடந்து சென்று கண்ட இடங்களிலே படுத்துறங்கிக் கண்ட இடத்தில் கிடைத்த உணவைப் புசித்துக் கொண்டு சஞ்சரித்தார். மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளை முறையே தரிசித்துக் கொண்டு தென்னாடு கடந்து வட நாட்டை யடைந்து அங்குள்ள பல க்ஷேத்திரங்களையும் தரிசித்துக்கொண்டே அயோத்தி, காசி, பிரயாகை, ஹரித்வாரம், பிரஹ்ம கபாலம், பதரிகாச்ரமம் முதலிய இடங்களுக்குச் சென்றார். இமய மலையில் பதரி நாராயணத்துக்கு அருகில் தாத்தாத்ரேய குகையின் ஸந்நிதியில் தியான சமாதியிலிருந்து ஆநந்த மநுபவித்தார். அப்பால் அங்கிருந்து புறப்பட்டு நேபாளத்தை அடைந்து அங்கே சிவராத்ரியைக் கழித்துப் பின் அங்குள்ள பல க்ஷேத்திரங்களையுந் தரிசித்துக்கொண்டு தக்ஷிணாபிமுகமாய்த் திரும்பி நடந்து நம்நாடடைந்தார்.

ஸ்வாமிகள் அவதூதாச்ரமியாதலால் பிரயாணத்தில் ஸ்வாமிகளுக்கு மூடஜனங்களால் விளைவிக்கப்பட்ட இடையூறுகள் இவ்வளவவ்வளவென்று எழுதுவதற்காகா. ஜனங்கள் அறியாமையால் தமக்கு இழைத்த குற்றங்களை ஸ்வாமிகள் க்ஷமித்தருளினர். மூடமதி மேற்கொண்ட அந்தணரில் சிலரும் ஸ்வாமிகளை உபத்திரவிக்கலாயினர். உதாரணமாக ஒன்று கவனிப்போம்:

(1) திருக்கோடிகாவில் ஸ்வாமிகளுடைய ஆச்ரமமகிமை உணராத சில அந்தணர், இந்த ஆச்ரமம் வேதவிதிக்கு விலக்கானது என்று கருதி ஸ்வாமிகளை நல்வழிப்படுத்துவதாகக் கூறி, ஸ்வாமிகளுடைய தாடி ஜடை இவைகளை ஓர் அம்பட்டனைக் கொண்டு நிவர்த்தித்தனர். ஸ்வாமிகள் அப்படிச் செய்த அவர்களைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் உன்மத்தரா யிருந்து அவர்கள் வெட்க மடையும்படி செய்தனர்.

(2) இராமேசுவரத்துக்குச் சமீபமாயுள்ள நவபாஷாணம் என்ற ஊரில் சில துஷ்டர்கள் ஒன்று கூடி ஸ்வாமிகளுடைய தாடியையும் ஜடையையும் நெருப்புவைத்துக் கொளுத்தினர். ஸ்வாமிகள் அந்தச் சமயத்திலும் மௌனமாயிருந்தார். இதைக்கண்ட ஆஸ்திகரொருவர் ஸ்வாமிகளருகில் வந்து அந்த நெருப்பை அணைத்து ஸ்வாமிகளுக்குப் பன்னீர் முதலியவைகளினால் திவ்ய அபிஷேகம் செய்வித்து ஸ்வாமிகளின் பரிபூர்ண ஆசீர்வாதத்துக்குப் பாத்திரராயினர்.

நம் ஸ்வாமிகள் சில காலம் தம்மை அல்லி தலிய மலர்களாலும் இலை கொடிகளாலும் அலங்கரித்துக் கொண்டு பிறர் நகைக்கச் சித்து விளையாடியது முண்டு. சேற்றைச் சந்தனம்போல் உடம்பில் பூசிக்கொண்டு திரிந்தது முண்டு.

(3) திரிசிர புரம் ஜில்லாவைச் சார்ந்த ஐயம்பாளையம் என்னும் கிராமத்தில் தாண்டவராயப் பிள்ளை என்ற ஒரு பெரிய பிரபு இருந்தார். ஸ்வாமிகள் அவ்வூர்ப்பக்கம் சென்ற போது அந்தப் பிரபு ஸ்வாமிகளின் மனோதிடத்தைப் பரிசோதிக்கக் கருதி அவரைத் தமது மாளிகைக்கு அழைத்துச் சென்று பலவாறான உபாயங்களில் அவருடைய இந்திரியங்களுக்குச் சுவையை உண்டாக்க முயன்றனர்; ஒருபாயமும்

பலியாமற்போகவே சில விலைமாதர்களை வரவழைத்து அவர்களுக்கு நடுவே ஸ்வாமிகளை அனுப்பிவைத்துத் தாசிகள் தங்கள் தந்திரங்களையும் வித்தையையும் ஸ்வாமிகளிடம் பிரயோகிக்கவேண்டிய சௌகரியங்களையும் சாதனங்களையும் செய்து வைத்தனர். விலைமாதர்கள் தங்களுக்குத் தெரிந்த உபாயங்களையெல்லாம் செய்து ஸ்வாமிகளை மயக்க முயன்றனர். ஒருத்தி ஸ்வாமிகளின் ஜடைக்குத் தைலமிட்டுச் சீப்பிட்டுச் சீவி முடித்தனள். அப்பொழுது ஸ்வாமிகள் சிரித்த வண்ணம் சின்மயமாக விளங்கினர். ஒருத்தி சரீரத்தை ஸ்பரிசித்துச் சந்தனம் பூசினள். ஒருத்தி ஸ்வாமிகளின் முன்பு சிங்கார ப்ரதானமான பாடல் பலவற்றை அபிநயத்துடன் பாடினள். ஒருத்தி பலவாறான சேஷ்டைகளைச் செய்து பார்த்தனள். எந்த உபாயமும் பலியாமற்போகவே அவர்கள் வெட்கமுற்று ஸ்வாமிகளைப் பணிந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்கள். இதுகண்ட தாண்டவராயப் பிள்ளை ஆச்சரியமடைந்து ஸ்வாமிகளின் மகிமை பெரிதெனை வியப்புற்ற வண்ணம் அவரைச் சரணடைந்து வேண்டிய உபசரணைகளைச் செய்து மன்னிப்பும் கேட்டுக்கொண்டார்.

(4) ஸ்வாமிகள் ஒருசமயம் திரிசிரபுரம் ஜில்லாவைச் சார்ந்த குழித்தண்டலை (குளித்தலை) தாலூகாவிலுள்ள லாலாபேட்டைஎன்னும் கிராமத்துக்கேகினர். அவ்வூர்காவிரிக்கரை மீதுள்ளது. அந்தக் கிராமத்திலிருந்து காவிரியைத் தாண்டி அக்கரை செல்ல விரும்பிய ஸ்வாமிகள் காவிரியில் பரிசில் விடுந் துறைக்குச் சென்றார். ஸ்வாமிகளின் அவதூத நிலையைக் கண்ட பரிசிற்காரன் ஸ்வாமிகளைப் பரிசிலில் ஏறக்கூடாதென்று தடுத்துவிட்டான். ஸ்வாமிகள் பின்னர்த் தம் கையிலிருந்த பனையோலை விசிறியைக் காவிரியிலே போட்டு



தவச்சக்கரவர்த்தி

(சேலத்தில் சிஷ்யர்களுடைய விருப்பத்தின்படி
அலங்காரத்துடன் அமர்ந்த திருக்கோலம்)

ஈசன் செயல்!" என்று கூறியபடி அபபாற் செல்ல, போக்கிலிகள் பையனை எழுப்பவே அப்பையன் எழுந்திருக்கவில்லை. பையன் உண்மையில் இறந்தே போய்விட்டான்! சிலர் ஸ்வாமிகளைப் பின்றொடர்ந்து, "நாங்கள் செய்த அபசாரத்தை மன்னிக்கவேண்டும். பெரியாரிடம் பொய் சொன்னது தவறு என்பது கண்டோம். பையனைப் பிழைப்பிக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர்.

ஸ்வாமிகள், "நாம் ஒன்றும் செய்வதற்கில்லை. ஈசுவர நியமனம் இது!" என்று கூறி ஏகினர். (இந்த வரலாற்றினை இப்பொழுது திருச்சியில் டவுன் முன்ஸீப்பாயிருக்கும் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி பிள்ளை என்பவர் கூறினர்.)

வாசகர்களுக்கு ஒன்று நினைவூட்டுவாம்: கண்ணபிரான் பூபாரம் தீர்க்க உதித்தருளிய பண்டைக் காலத்தில் யாதவர்கள் சிலர் சேர்ந்து அவர்களில் ஒருவனை சாம்பன் என்பவனுக்குக் கர்ப்பிணி வேஷம்போட்டு அழைத்துக்கொண்டு முனிவர் ஒருவரிடம் சென்று, "இவளுக்கென்ன குழந்தை பிறக்கும்?" என்று வினவ, அவர் அந்தயாதவரின் குறும்புத்தனத்தை உணர்ந்து, "உங்கள் குலத்தை அழிக்கும் இரும்புலக்கை ஒன்று பிறக்கும்" என்று கூற, அவ்வாறே அவனுக்கு முசலம் பிறந்ததென்றும், அதனால் யாதவகுலம் அழிவடைந்ததென்றும் பாகவதபுராணங் கூறும். இந்த வரலாறு, பெரியாரிடம் அபசாரம் செய்பவர் பேரிடரடைவர் என்று போதிப்பது காண்க. அஃதேபோல் நம் ஸ்வாமிகளிடம் அபசாரஞ்செய்த குறும்பரும் இடருற்றனராதலால், "சிறியோர் பெரும்பிழை செய்தனராயின், பெரியோர் அப்பிழை பொறுத்தலு மரிதே" என்ற போதனையின் உண்மை உணரலானோம்.

6. ஸ்வாமிகள் திருவாலங்காட்டுக்குச் சமீபத்திலுள்ள ஆடுதுறை என்கிற ஸ்தலத்தில், கோயில் த்வஜஸ்தம்பத்தின் உச்சியில் காலைப் பின்னியவண்ணம் பற்றிக்கொண்டு தலைகீழாயிருந்து மூன்று நாட்கள் தவம்புரிந்தாராம். இச் செய்தியை, 22-12-33-ந் தேதியன்று ஸ்ரீ தத்தகிரியில் ஸ்வாமிகள் ஸந்நிதியில் பிரஸங்கஞ்செய்த திருச்சி S. P. G. காலேஜ் ஸம்ஸ்கிருத பண்டிதர், கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்பவர் விளக்கியருளியதல்லாமல் ஸ்வாமிகளின் பக்த கோடிகளில் தாமும் ஒருவர் என்பதைப் பணிவாய்த் தெரிவித்துக்கொண்டார்.

7. ஸ்வாமிகள் ஒரு சமயம் பொள்ளாச்சி மார்க்கமாய்க் கோமங்கலம் செல்கையில் ஸ்வாமிகளுக்கு யாது காரணத்தினாலோ நடுக்கல் ஜுரம் கண்டது. அதைக்கண்ட போக்கிலி வைத்தியனொருவன், ஸ்வாமிகளிடம் வந்து தான் வைத்தியனென்று கூறிச் சுத்தி செய்யாத வீரத்தை மருந்தாகக் கொடுத்தான். அம்மருந்து இரவில் கொடுக்கப்பட்டபடியால் ஸ்வாமிகள் அதை வாங்கிப் புசித்துவிட்டார். அப்பால் மறுநாள் முதல் ஸ்வாமிகளுக்கு உடல் வீங்கியதுமன்றி இரத்தமும் சுண்டிப் பலவீனம் ஏற்பட்டது. அப்பொழுதுதான் ஸ்வாமிகளுக்கு அவ்வைத்தியன் கொடுத்த மருந்து சரியான மருந்தல்லவென்பது புலப்பட்டது. ஸ்வாமிகள் உடனே நடராஜப் பெருமானைத் தியானம் செய்தார். அடியார்க்கு இரங்கி யருளும் அம்பலவாணன் ஸ்வாமிகளுக்குச் சிற்சபையோடு தரிசனமளித்து, "அன்பா! அஞ்சேல்" என அபயம் தந்தார். அடுத்த க்ஷணமே ஸ்வாமிகளிடம் சில வழிப்போக்கர் வந்து அகத்திக்கீரையும் பாகற்

காயும் புசிக்கும்படி தர, ஸ்வாமிகள் அவைகளை உண்டு சௌக்கியமடைந்தார்.

"அகம்படி யின்றநம் மையனை யோரும்
அகம்படி கண்டவர் அல்லலிற் சேரார்
அகம்படி யுட்புக் கறிகின்ற நெஞ்சம்
அகம்படி கண்டா ரழிகக லுமெட்டே"

"இயங்கு முலகினில் ஈச னடியார்
மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்
புயங்களு மெண்டிசை போதுபா தாளம்
மயங்காப் பகிரண்ட மாமுடி தானே"

என்று திருமூலர் அடியார் மகிமையை விளக்கி யிருப்பது காண்க.

8. பின்னொரு சமயம் ஸ்வாமிகள் தஞ்சாவூருக்குச் சென்றிருந்தபோது அங்கே சில துஷ்டர்கள் ஸ்வாமிகளுக்கு எருக்கம்பாலும் கள்ளிப்பாலும் கலந்து, "ஸ்வாமி! பால் அருந்துங்கள்" எனக்கொடுக்க, ஸ்வாமிகள் அதைக்குடித்து, "நஞ்சை அமுதாகவுண்ட நடராஜப்பெருமானுடைய கிருபை பெற்றவரை எருக்கம்பாலும் கள்ளிப்பாலும் என்ன செய்யும்? ஒன்றும் செய்யா" என்பதை உணர்த்தினர்; நஞ்சு கலந்த சோற்றையுண்டு சைவசமயப்பெருமையை உணர்த்தியருளிய திருநாவுக்கரசர் சரிதத்தையும் நினைப்பூட்டினர்.

9. 1899-ஆம் வருஷத்தில் அக்டோபர் மாதத்தில் ஸ்வாமிகள் சங்ககிரிக்குச் சென்றிருந்தார். அங்கே அப்பொழுது போலீஸ் இலாகாவில் ஹெட்டாகவிருந்த வேங்கடசாமி நாயுடு என்பவர் ஸ்வாமிகளைத் தம் வீட்டுக்குப் பிக்ஷைக்கு அழைத்துப் பிக்ஷையில் மாமிசம் படைத்தனர். ஸ்வாமிகள், "மாமிசம் புசிப்பதில்லை. புசிக்கும் வழக்கம்

இதற்குமுன் இருந்ததுமில்லை. பிராமண ஜன்மமல்லவா?" என்று கூறி மறுக்க, நாயுடு, "அவதூதராய் வெளிப்பட்ட பின் எதையும் புசிப்பதுதான் இந்த ஆசிரமத்திற்குத் தகுதி" என்று வற்புறுத்த, ஸ்வாமிகள் அந்த மாமிசத்தைப் புசித்து உடனே வாயிலெடுத்தார். அதனால் நாயுடுக்குப் பிளவை யென்கிற சிலந்தி யுண்டாகி மரணமுற்றனர். பின் அவர் குடும்பமும் நாசமடைந்துபோயிற்று. அப்பொழுது அங்கே ஸ்டேஷன் ரைட்டராயிருந்தவரும் இப்போது திருச்சி டவுன் முன்ஸீப்பா யிருப்பவருமாகிய ஸ்ரீமான் கிருஷ்ணசாமிப் பிள்ளையவர்கள் இதனைத் தெரிவித்தார்.

அகஸ்தியருக்கு ஆட்டுமாமிசம் படைத்த வாதாபி யென்னும் வஞ்சக அசுரனுடைய கதி யாதாயிற்றென்பது இச்சமயம் நினைவிற் கொள்ளத்தக்கது.

10. ஸ்வாமிகள் ஸ்ரீரங்கத்திற்குச் சென்றிருந்த சமயம் அங்கே சில போக்கிலிக் குதிரைவண்டிக்காரர்கள் ஸ்வாமிகளைக் கற்களாலும் தடியாலும் மண்ணாங்கட்டியினாலும் அடித்துப் பலவாறாக இடுக்கண் விளைவித்து மகிழ்ந்தனர். அத்துஷ்டர்கள் அந்தத் தீய செய்கையின் பயனாக, அப்பால் சில நாட்களில் தங்களுக்குள் ஏற்பட்ட பெருங்கலகத்தில் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு முடிவில் போலீஸார் வசமாய்ச் சிறைவாசமும் புகநேர்ந்தது.

11. ஸ்வாமிகள் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ ரங்கநாதருடைய ஆலயத்திற்குள் பிரவேசிக்கையில் வைஷ்ணவர்களில் மதபேதமும் தெய்வத்வேஷமும் பாராட்டும் முரடர் சிலர் ஸ்வாமிகளைக் கோயிலுக்குள்ளே பிரவேசிக்கவொட்டாமல் தடுத்து ஸ்வாமிகளுக்கு மனஸ்தாபமுண்டாக்கினர். சிலர் ஸ்வாமிகளைத் திருமஞ்சனக் காவிரியிலே தள்ளிவிட்டு மகிழ்ந்தனர்.

ஸ்வாமிகள், அவர்களோடு எதுவும் பேசாமல் திரும்பித் தம் இச்சைவழியே சென்றனர்.

அப்பால் அடுத்த நாள் திருடர்களால் ஸ்ரீரங்கநாதருடைய ஆபரணங்களிலே சில களவாடப்பட்டு, அந்த விசாரணையின் பொருட்டுக் கலெக்டராகிய ஐரோப்பிய ரொருவர் ஆலயத்திலே பிரவேசிக்கும்படியாயிற்று. இப்படி நேர்ந்ததைப் பற்றிப் பல விவேகிகள், "பெரியவர்களுக்குச் செய்த அபசாரத்தின் பயனிது" என்று பேசிக்கொண்டனர். இதனைக் கேட்ட அந்தத் துஷ்ட வைஷ்ணவர்கள் தங்கள் பிழையை உணர்ந்து ஸ்வாமிகளைப் பணிந்து மன்னிப்பு வேண்டிக் கொண்டனர்.

12. ஸ்வாமிகள் ஸ்ரீரங்கத்தில் சில மாதகாலம் தாமதித்தார்கள். அப்போது ஸ்வாமிகள் உடம்பெல்லாம் களிமண்ணைப் பூசிக்கொண்டு வைக்கோலால் அலங்காரம் செய்து கொண்டு கழுத்தில் எருக்கம்பூமாலையை அணிந்து தலையில் சாணிச் சட்டி, கையில் கட்டை விளக்குமாறு இவைகளுடன் உலாவி வரலாயினர்.

அச்சமயம் போலீஸார் ஸ்வாமிகளை இரண்டு தடவை பிடித்துச் சிறையில் அடைத்தனர். ஸ்வாமிகள் இரண்டு தடவையும் சிறையிலிருந்து எல்லோரும் வியப்படையும்படி வெளிப்பட்டுத் தாம் பரப்ரஹ்மபராதீனர் என்பதை வெளிப்படுத்தினர். இங்கே காவிரியில் அம்மா மண்டபத் துறையில் பலாமரத் தடியிலே மணலில் ஸ்வாமிகள் தலை கீழாக நின்று தவம் புரிந்தனர்; இந்த அற்புதங்கண்டு அநேகர் வியப்படைந்தனர்; ஸ்வாமிகளை வணங்கி ஆசிபெற்றனர்.

13. ஸ்வாமிகள் தஞ்சாவூர் கரூர் முதலிய இடங்களுக்குச் சென்று அங்கே பக்தர்களநேகருக்குக் காம்யார்த்த

மாக அநுக்ரஹம் புரிந்துள்ளார். இருந்தும், அங்கே ஸ்வாமிகளைப் போலீஸார் சிறை செய்தனர். ஸ்வாமிகள் சிறையிலிருந்து வெளிப்பட்டுக் கும்பகோணத்தில் உலாவினர். கும்பகோணத்தில் அதிகாரிகள் ஸ்வாமிகளைச் சிறையிலடைத்தனர். ஸ்வாமிகள் அங்கே சிறைச்சாலையில் கமலாசனத்திலமர்ந்து யோகநிஷ்டையில் விளங்கினர். இதைக் கண்ட அதிகாரிகள் அதிசயமடைந்து ஸ்வாமிகளை மகான் என உணர்ந்து விடுவித்தனுப்பினர்.

14. திருச்சி ஜில்லாவில் எலமனூர் ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் நங்கபுரம் என்ற ஒரு கிராமமிருக்கிறது. இங்கே பரம்பரையாகத் தனவந்தராயிருந்துவரும் பிராம்மண வம்சமொன்றுண்டு. அவர்களில் ராஜப்பையர் என்ற பெயர் படைத்த பிரபு இருந்த காலத்தில் இவ்வூருக்கு ஸ்வாமிகள் சென்றார். இங்கிருக்கையில் ஒருநாள் ஸ்வாமிகள் ஒரு பெரிய கால்வாயை, பறப்பதேபோல் உயரக் கிளம்பியபடி தாண்டினர். இதனை யோகாப்யாச மகிமையெனக் கண்டனர் விவேகிகள். இன்றும் அவ்வூர்ப் பக்கங்களிலே பலர் இதைப்பற்றிப் பேசிக்கொள்கிறார்கள்.

15. இவ்வூரிலிருந்து ஸ்வாமிகள் முசிரிக்கு வடக்கே பதினெட்டுக் கல் தூரத்திலுள்ள துறையூர் என்னும் ஜமீன் கிராமத்திற்குச் சென்று அவ்வூரில் மாதக் கணக்காய்த் தங்கியிருந்தனர். அப்பொழுது ஸ்வாமிகள் அவ்வூரிலுள்ள பெரிய ஏரியில் நீர் நிறைந்துள்ள சமயத்தில் இறங்கி எல்லோரும் ஆச்சரியமடையும்படி பலவிதமான ஜலஸ்தம்பன விளையாடல்களைக் காட்டியது மல்லாமல், சேர்ந்தாற்போல் வளர்ந்திருந்த இரண்டு அரசமரங்களில் ஒன்றில் தலையுட

ஒன்றில் காலுமாக விட்ட மிட்டதேபோற் படுத்து அட யோகமும் சாதித்தனர்.

இவ்வூர் ஏரியின் நடுவில் ஒரு பெரிய மண்டபமொன்று பெரிய கோபுரத்துடன் விளங்குகிறது. ஸ்வாமிகள் ஒரு சமயம் அக்கோபுரத்தின்மேலேறிக் குட்டிக்கரணம் போட்ட படி கீழே இறங்கி ஓடத் தொடங்கி அப்பொழுது அங்குக் கூடியிருந்தவர்களால் தம்மைத் தொடர முடியாதபடி வேக மாய் நடந்தார். அப்பால், ஜலத்தில் மூழ்கி, ஸ்வாமிகள் எங்கேயோ காணமற் போய்விட்டார் என்று யாவரும் பேசி வியப்படையும்படி வெகுநேரம் ஜலத்தில் மூழ்கியிருந்து பிறகு வெகு தூரத்திற்கப்பால் ஒருபக்கம் கரையேறுவார்.

இவ்வாறு ஸ்வாமிகள் இங்கே திருவிளையாடல் பல புரிந்தவண்ணம் இருக்கையில் ஸ்வாமிகள் விபூதிப் பிரஸாதம் கொடுப்பதுண்டு என்பதையறிந்த அவ்வூர் ஜமீன்தார் ஸ்வா மிகளைக் கண்டு பணிந்து விபூதிப் பிரஸாதம் பெற்று அத னைத் தம் புதல்விக்குத் தர, அப்பால் அந்தப் பெண் புத்ர ஸந்தானமடைந்தாள்.

16. சுமார் இற்றைக்கு இருபது வருஷங்களுக்கு முன் ஸ்வாமிகள் திருவானைக்காவலில் சங்கரேசவரர் கோயிலில நிஷ்டையிலிருந்தார். அந்தத் தேவஸ்தானத்திலே கணக்கப்பிள்ளையாயிருந்துவரும் நடேசப்பிள்ளை யென் பவர் அப்பொழுது ஸ்வாமிகளுக்கு வேண்டிய பணிவிடை களைச் செய்து வந்தனர். நடேசப்பிள்ளைக்கு அக்காலத்தில் வயது பதினெட்டு. ஸ்வாமிகள் யோகத்திலிருக்கும்போது அவர் கவனிப்பாராம். ஸ்வாமிகளுடைய வயிற்றில் கீழே யிருந்து குடுகுடு என்று ஒரு சப்தம் உண்டாகுமாம்; இதனை யல்லாமல் ஸ்வாமிகள் காவேரிக்குப் போனால் அந்நதியில்

சுமார் நான்கு மணி நேரம் தலையை வெளிக்குக் காட்டாமலே மூழ்கியவண்ண மிருப்பாராம். (இதனை ஸ்ரீமான் நடேசப்பிள்ளை யவர்கள் வாய்மூலம் தத்தகிரியில் நாம் சந்தித்தபோது கேட்டோம்.)

17 ஒருசமயம் ஸ்வாமிகள் கொண்டப்ப நாயக்கன் பட்டி யென்கிற ஒரு கிராமத்தில் ஐந்துநாள் வரையில் தங்கி யிருந்தார். அப்பொழுது அவ்வூர் வாசிகள் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷையிட்டு உபசரணை செய்தனர். அதன் காரணமாக அவ்வூர் வாசிகள் யாவரும் சகல சௌகரியங்களையும் அடைந்து சுகவாழ்க்கையை நடத்தி வரலாயினர். சேந்தமங்கலத்திலுள்ள அந்தணர் ஸ்வாமிகளைச் சரியானபடி உபசரிக்கவில்லை. அதன் காரணமாக அவ்வூர் அக்ரஹாரம் க்ஷீணதசையை அடைந்து இன்னும் விருத்திக்கு வராமலே இருக்கிறது.

18. ஸ்வாமிகள் திருப்பதி மலைக்குச்சென்று ஸ்வாமி தரிசனம் செய்ய முற்படுகையில் வைஷ்ணவர்கள் போகவொட்டாமல் பலவாறாக உபத்திரவப்படுத்தித் தள்ளினார்கள். ஸ்வாமிகள் வேரூன்றிய மரம்போல் நின்று விட்டமையால், அவர்கள் பயமும் ஆச்சரியமுமடைந்து யாரோ மகான் என உணர்ந்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர்.

19. ஸ்வாமிகள் வேளுக்குறிச்சி என்ற ஊருக்குச் சென்றிருந்தபோது அங்கே கொங்குவேளாளப் பெண் ஒருத்தி புத்ரஸந்தானத்தை விரும்பி ஸ்வாமிகளைச் சரணமடைந்தனள். ஸ்வாமிகள் திருவருள் புரிந்து விபூதி யளித்து, "புத்ர ஸந்தானம் உண்டாகும்" என்று கூறினர். அப்பெண், "ஸ்வாமி, தமது அநுக்ரஹத்தின்படி புத்ரசந்தான மேற்படும் பக்ஷத்தில், நான் அநேகம் பக்தர்களுக்குப் பௌர்ணமை

தோறும் அன்னம் அளித்துவருவேன்" என்று சொல்லி விடைகொண்டு சென்றனள்.

அப்பால் ஒருவருஷத்துக்கெல்லாம அப்பெண் கர்ப்ப மடைந்து ஒரு புத்திரனைப் பெற்றெடுத்தாள். ஆனால் அவள் தான் சொல்லியபடி பௌணர்மையில் அடியார்களுக்கு அன்னம் படைக்கவில்லை. அப்பால் அவளுக்குக் கொடிய குஷ்டரோய் உண்டாயிற்று. அதனால் அவள் சரீரவிகார மடைந்து தவித்தாள் பிறகு ஒரு சமயம் ஸ்வாமிகள் அப் பக்கம் சென்றனர். அப்பெண்ணும் அப்பெண்ணைச்சேர்ந்த பந்துக்களில் சிலரும் ஸ்வாமிகளைச் சரணடைந்து, குஷ்ட நோய் தீர அநுக்ராஹம் செய்யும்படி பிரார்த்தித்துக்கொண்ட னர். ஸ்வாமிகள் நகைத்து, "குஷ்டநோய் இப் பெண்ணைப் பற்றியதற்குக் காரணமிருக்கிறது. நினைத்துப் பாருங்கள்; புலப்படும்" என்று கூறினர். அவர்கள், ஒன்றையும் அறி யாதவர்போல் நடித்தனர். ஸ்வாமிகள அவர்களுடைய வஞ்ச கத்தை யுணர்ந்து "இந்நோய் தீராது!" என்று கூறித் தம் வழியே சென்றனர். அப்பால் அப்பெண் தன் ஆயுட்கால மெல்லாம் அந்த நோயினாலே வருந்தலாயினள்.

20. ஸ்வாமிகள் மீண்டுமொருமுறை கொல்லிமலைக்குச் சென்று சில நாட்கள்வரையில் அங்கே தங்கினார். அதனால் ஸ்வாமிகளை மலைஜ்வரம் பற்றித் தொந்தரவு செய்தது. ஸ்வா மிகள் அதை லட்சியஞ் செய்யாமல் உலவிவந்தனர். அப்படி அவர் செய்கையில் திருச்சிஜில்லா முசிரி தாலுகாவிலுள்ள திருஈங்கோய் மலையை அடைந்தனர். ஈங்கோய் மலை சிறந்த சிவஸ்தலம்; இது காவேரியின் வடகரையில் இலகுகின்றது; இந்த மலை பழனிமலையின் சாயலையுடையது; அதியற்புதத் தோற்றமுடையது. இதன் அடிவாரம் எந்தத் தபோதனரு

டைய மனத்தையும் வசீகரிக்கத் தக்க இயற்கை விநோத மமைந்திலகும். இங்கே மலைக்கு ஏற அடியெடுத்து வைக்கு மிடத்தில் போகர் ஸந்நிதியொன்று கிழக்கு நோக்கியபடி அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த விக்ரஹம் யோகத்தின் மகா உந்நத நிலையினைக் காட்டவல்லது. இங்கே இன்னும் பல விசித்திரங்களுண்டு; விரிவஞ்சி விடுத்தனம்.

இந்த மலைக்கு ஸ்வாமிகள் வந்ததும் காவேரியில் நீராடி ஈசுவர தரிசனம்செய்தார். திடீரென்று மலைஜ்வரம் வந்து விட்டது. ஸ்வாமிகள் அக்கணமே அடிவாரத்தில் காவேரிக்கு வடகரையா யமைந்துள்ளதும் கொறுக்காய்ப்புளி மரங்கள் பல அடர்ந்ததுமான படுகைக்குச்சென்று, அங்கே காலை 9 மணி முதல் மாலை 4 மணிவரையில் நிஷ்டையிலிருந்தார். அச்சமயம் ரிஷிகள் பலர் ஸ்வாமிகளிடம் தோன்றி நின்று ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்று ஸ்வாமிகளுக்கு வாழ்த்துக் கூறி மறைந்தனர். (இந்தச் செய்தியை ஸ்வாமிகள் தமது திருவாயினாலேயே வெளியிட்டனர்.)

21. ஒருசமயம் ஸ்வாமிகள் திருச்சி ஜில்லா முசிரி தாலூகாவைச் சேர்ந்த மிட்டா இலாகாக்களில் ஒன்றாகிய காட்டுப் புத்தூர் சென்றனர். அங்கே ஓர் அந்தணர் ஸ்வாமிகளை அன் போடழைத்துப் பிக்ஷை செய்வித்தனர். ஸ்வாமிகள், அவரிட்ட பிக்ஷையில் மகிழ்ச்சியடைந்து, பின்னும் இடச் சொல்லிப் புசித்தார். 'வைச்வாநராய......' என்று வயிற்றைத் தடவிக் கொண்டு மீண்டும் பசியை அபிநயித்துப் பின்னும் சொல்லிப் புசித்தார். இவ்வாறு மூன்று தடவை புசித்துப் பின்னும் வேண்டுமென்று கேட்டனர். கிருஹஸ்தர் வியப் புற்று ஸ்வாமிகளைச் சரணமடைந்தார். ஸ்வாமிகள் அவ்

வந்தணருக்குப் பூர்ண ஆசி வழங்கித் திடீரென்று மறைந்தார். இந்த ஆச்சரியத்தைப் பலர் கண்டு களித்தனர்.

22. அவ்வாறு மறைந்த ஸ்வாமிகள் அந்த ஊருக்குச் சமீபத்தில் காவேரிக்கு வடகரையில் நீர்வளம் நிலவளம் நிறைந்த காவேரி தீர மகிமையை விளக்கத் தக்க சிறப்புடன் விளங்கும் சீலைப்பிள்ளையார்புத்தூர் என்னும் ஊரிலே தோன்றினர். அந்த ஊரில் பலா மரங்களுடன் கூடிய தென்னந் தோப்புகளும் கரும்பு வாழைத் தோட்டங்களும் நிறைந்திருக்கும்; ஊருக்குள் பிரவேசித்தால், நல்ல வெயிற்காலத்திலும் மேலே வெயிலே படாமல் நடந்து செல்லலாம்.

ஸ்வாமிகள் அவ்வூரிலே பிரவேசித்ததும், அவ்வூர் அந்தணரில் அஷ்ட ஸஹஸ்ர வகுப்பைச சேர்ந்த வாலிப னொருவனைக் கண்டார். அந்த வாலிபன் இப்பொழுது நாராயண ஸ்வாமி ஐயர் என்ற பெயருடன் வியாபகனா யிருக்கிறான்.

ஸ்வாமிகள் நாராயணஸ்வாமியைக் கண்டதும் அவனை யழைத்து, "தாகமா யிருக்கிறது; இளநீர் வேண்டும்" என்று கேட்டார். நாராயண ஸ்வாமி நல்ல சிவ பக்தன்; ஆனதால் ஸ்வாமிகளிடம் வந்து வணங்கி அவருடைய விருப்பப்படி இளநீர் தர இணங்கி அங்கிருந்த ஒரு குடியானவனை யழைத்து மரத்திலேறி இரண்டு இளநீர் பிடுங்கிப் போடும்படி சொன்னான். அவன் அவ்வாறே செய்ய ஸ்வாமிகள் அந்த இளநீர் இரண்டையும் குடித்து இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும், எனக்கேட்டு ஐம்பது இளநீர் குடித்ததுமன்றி இரண்டு பலாப்பழங்களைப் பறித்துத் தரும்படிகேட்டு அவைகளையும் புசித்து, "வாடா, காவேரிக்குப் போகலாம்" என்று அவனை அழைத்துக்கொண்டு

காவேரிக்குச் சென்று காவேரியில் நீந்தி விளையாடி அவ்வாலி பனை மகிழ்வித்தார்; பிறகு கரையேறி அவ்வாலிபன் தம்மைத் தொடர்ந்து வரமுடியாதபடி மேற்குத் திக்கை நோக்கி வெகு வேகமாக நடந்து சென்றார். வாலிபன் நல்ல விவேகியாத லால் ஸ்வாமிகளை விடாமல் தொடர்ந்து நடந்து சென்றான்.

அவ்வாறு செல்கையில் ஸ்வாமிகள் அயிலூர் என்கிற கிராமத்தை அடைந்தனர். அங்கே ஓரிடத்தில் நங்கபுரம் ராஜப்பையர் என்று பிரசித்திபெற்ற பிரபு தங்கியிருந்தார்; அவர் ஸ்வாமிகளைக் கண்டதும் அருகில் நெருங்கிப்போய் வணங்கித் தம் விடுதிக்கழைத்து உபசரணை பல செய்தனர்.

ஸ்வாமிகள் அவ்வுபசரணைகளைப் பெரு மகிழ்ச்சியுடன் அங்கீகாரம் செய்கிற பாவனையிலிருந்து, பிறகு அந்தப் பிரபு ஸ்வாமிகளை ஒரு பல்லக்கில் ஊர்வலம் செய்விக்க ஏற் பாடு செய்வதை அறிந்ததும் எப்படியோ அவ்விடத்தை விட்டு மறைந்து, அந்த இடத்திற்கு ஒருகல் தூரத்திற்கப் பால் காவேரி தெற்கு வடக்காக ஓடுமிடத்தில் அதன் கரை யின்மேல் மந்தகாஸமென்கிற கிரணஒளி பரவ, ஞானபானு வென விளங்கினர்.

இவ்வாறு ஸ்வாமிகள் இங்கே விளங்குவதைக்கண்ட சிலர் ஓடி, ஸ்வாமிகளை நான்கு பக்கங்களுக்கும் ஆட்களை அனுப்பித் தேடிக்கொண்டிருந்த பிரபுவுக்குக் கூறினார்கள். பிரபு வண்டிபோட்டுக்கொண்டு நாராயணஸ்வாமியென்ற வாலிபனுடன் ஸ்வாமிகளைக் காணச்சென்றார். ஸ்வாமிகள் அங்கிருந்து இன்ன திக்கில் இன்ன இடத்துக்குச் சென்று ரென்பதை யாரும் அறியமுடியாதபடி மறைந்துவிட்டார்.

ஸ்வாமிகள் திருக்கோவிலூர்போய்ப் பல திருவிளையா டல்கள் புரிந்தனர். அங்கே சாதுஜனங்கள் பலர் ஸ்வாமி

களுடைய பரிபூர்ணமான அநுக்ரஹத்துக்குப் பாத்திரராயி னர்.

23. 1920-ஆம் வருஷம் திருக்கோவிலூரில் ஸப்மாஜிஸ்டிரேட்டாயிருந்த கிருஷ்ணையர் என்பவர் ஸ்வாமிகளுடைய திருவருளுக்குப் பாத்திரரானார். ஐயரைக் கவர்ண்மெண்டார் அவ்வூரிலிருந்து விருத்தாசலத்துக்கு மாற்றினார்கள். விருத்தாசலத்திற்குச் செல்வதில் ஐயருக்குப் பல அசௌகரியங்களிருந்தன. ஆதலால் ஐயர் ஸ்வாமிகளைச் சரணடைந்து, தமக்குள்ள அசௌகரியங்களைக் கூறிக்கொண்டார். ஸ்வாமிகள் விபூதி மந்திரித்தளித்து, "இதனைத் தரித்துககொண்டு கலெக்டரைப்பாரும் கலெக்டர் உமக்குச் சாதகமாய் உத்தரவு அனுப்புவார்" என்று கூறியனுப்பினார். ஐயர் அவ்வாறே விபூதி தரித்துக்கொண்டு சென்று கலெக்டரைக் கண்டனர். கலெக்டர், எல்லோரும் ஆச்சரியம் அடையும்படி முன் அனுப்பிய தமது உத்தரவை மாற்றித் திருக்கோவிலூரிலேயே இருக்கும்படி செய்தார்.

ஸ்வாமிகளின் இந்த அரிய திருவிளையாடலை, இப்போது இச் சென்னையில் புரசபாக்கத்திலே வசிக்கும் அந்தக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் எமக்கு 11-10-35-ல் எழுதியனுப்பியபடியால் அதனையும் பிரசுரிக்கலானோம்.

24. இப்பொழுதெல்லாம் ஸ்வாமிகள் மௌன விரதமுடையவராயிருந்தார். பலர் ஸ்வாமிகளை ஆராதனை செய்தனர். ஸ்வாமிகள் இங்கெல்லாம் ரதலபிக்ஷை யேற்றுண்டு காலகாலனாகிய சிவபெருமானைப்போல் விளங்கினார். ஸ்வாமிகளுக்கு நீண்ட ஜடையுண்டு. ஸ்வாமிகள் அந்த ஜடை விரிந்தாட வேகமாய் நடப்பார். அந்தக் காட்சியைப் பார்ப்பவர் நடராஜ மூர்த்தியை நினைக்காமலிரார். அவர்கள்

பக்தராயின், அந்த நடராஜ மூர்த்தியின் திருநடனத்தைச் சிந்தித்துத் தாமும் தாண்டவம் புரிந்து தம்மை மறந்த நிலையினையடைந்து அந்த ஆனந்தமநுபவிப்பரென்பது திண்ணம்.

இவவாறு மகா அற்புதவிக்ரஹமாக விளங்கிய ஸ்வாமிகளை, அவ்வூரில் அப்போது டெப்டிகலெக்டராயிருந்த ராமஸ்வாமி ஐயர் என்பவர் கண்டு, "அவதூத நிலையுடன் வெளியிலுலாவுவது கூடாது" என உத்தரவிட்டனர். அப்பால் அந்த டெப்டிகலெக்டரே ஸ்வாமிகளை நேரிலே போய்க் கண்டனர். அப்பொழுது ஸ்வாமிகளின் பரிபக்குவ நிலையினை உணர்ந்த அவர் அந்த உத்தரவைமாற்றி ஸ்வாமிகளுடைய தொண்டருள் ஒருவரானார்.

பின்னர் ஸ்வாமிகள் அங்கிருந்து பெரும் வைபவத்துடன் புறப்பட்டு மணலூர்ப்பேட்டை சென்றார். இங்கே ஸ்வாமிகள் அதிகுதூகலத் தாண்டவ நடையுடன் கரதல பிக்ஷையேற்றனர். இந்தத் தரிசனங்கண்டு ஆடவர் பெண்டிர் யாவரும் ஸ்வாமிகளிடம் ஈடுபட்டு அவரைப் பணிந்து விபூதிப் பிரசாதம் பெற்றனர்.

25. இச்சமயம் அவ்வூர் அந்தணரில் ஒருவராகிய கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்பவர் தமக்கு ஏதேனும் மந்திரோபதேசம் செய்யவேண்டுமென வேண்டிக்கொண்டார். ஸ்வாமிகள் நின்ற நிலையில் அவ்வந்தணரைக் கருணையுடன் நோக்கி, ஒருதுண்டுக் காகிதத்தில் 'ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே—ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே' என்னும் இதனை எழுதிக் கொடுத்து, 'இதை ஒவ்வொரு நாளும் ஆயிரந்தடவை சொல்லி ஜபம் செய்யும். இந்த ஜபஸித்தியினால் நீர் பல நன்மைகளை யடைவீர்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

ஸ்வாமிகள் ஆக்ஞைப்படி ஐயர் நாடோறும் அம்மந்திரத்தை ஜபித்து வரலானார். ஜபஉருவேறிய பின்பு ஐயர் அந்த மந்திரமோதி விபூதிதந்தால் ஜுரம் நின்றுவிடுகிறது; கட்டி முதலிய சிலந்திகள் ஆறிவிடுகின்றன; தேள்கடி, பாம்புக்கடி இவைகளின் விஷம் இறங்கிவிடுகிறது.

அன்பர்களே! இந்த மந்திர மகிமையை வகிக்கப்பாத்ரரான ஐயர் அவர்களை நாம் 12-8-33-ம் தேதி இரவு திருக்கோவிலூர் ரயில் ஸ்டேஷனில் சந்திக்க நேர்ந்தது. அவர்களிடம் சம்பாஷிக்கையில் நம் ஸ்வாமிகளைப் பற்றிப் பிரஸ்தாபம் வந்தது. ஐயர் அப்போது தம்மிடமிருந்த மடிசஞ்சியை அவிழ்த்து அதில் இருந்து ஒரு சம்புடத்தை எடுத்துத் திறந்து, "இதோ இந்தச் சீட்டைப் படித்துப் பாருங்கள்' என்று மடித்திருந்த ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுத்தார். நாம் அதை வாங்கிப் படித்துப் பார்க்கையில் ஸ்வாமிகளுடைய முத்துவரிசைபோன்ற கையெழுத்தில் மேற்படி மந்திரம் எழுதியிருப்பது கண்டு பரமாச்சரிய மடைந்து, ஸ்வாமிகளுடைய மகிமையை இன்னும் சொல்லும்படி அவரைப் பிரார்த்தித்துக் கொண்டோம்

ஐயர் அவர்கள் ஸ்வாமிகள் கரதல பிக்ஷையேற்ற விநோதத்தையும் ஆங்காங்கு அன்பர்களிடம் இரக்கம் பாராட்டி அநுக்ரஹம் புரிந்து வந்த அழகையும் பல படியாக எடுத்துக் கூறி மகிழ்ந்து, "இப்படிப்பட்ட பெரியாரைக் காண்பதரிது. இன்னொரு முறை தரிசிக்க அவாவுண்டு. என்ன செய்யலாம்! வயதாய்விட்டது. இனி இயலாதுபோலிருக்கிறது. ஆதலின் தேவாராதனை சமயத்தில் ஸ்வாமிகளை எண்ணிப் பலகோடி வந்தனங்கள் புரிந்தவண்ணம் திருப்தியடைந்து வருகிறேன்" எனக் கூறக்கேட்டோம்.



கடாக்ஷ விலாஸம்

Courtesy: 'Sachidanandam' Nungambakkam

26. திருவையாற்றில் வேங்கடராமையர் என்ற நியோகி அந்தணர் ஒருவர் ஸ்வாமிகளைத் தம் வீட்டுக்குப் பிக்ஷைக் கழைத்துப்போய், "அவதூதர் சுடுகாட்டில் வசிக்கவேண்டிய வர்கள்; அவர்களுக்கு ஸ்நானம் எதற்கு?" என எடுப்பாய்ப் பேசித் தாம் ஜனகரைப்போல் இருப்பதாகவும் பெருமை பாராட்டிக்கொண்டார். ஸ்வாமிகள் விடையெதுவும் பகராமல் மௌனநிலையில் புன்னகை புரிந்தார். அக்கணமே அவர் வீட்டுக் கொல்லையிலிருந்த வைக்கோற்போர் பற்றி எரிந்தது. அதையறிந்த போலிஜனகர் பதறித் துக்கத்தோடு அத்தீயை அணைத்தனர். இப்போது சிவபெருமான் புன்னகையினால் திரிபுரத்தை எரித்துச் சாம்பராக்கியதை இஃது அவ்வந்தணர்க்கு நினைப்பூட்டியது. உடனே, சூரிய கிரணத்திலும் சூரியகிரணம் படிந்த மணல் சுடுவதேபோல் அந்த ஈசுவர வைபவத்திலும் ஈசுவரனுடைய அடியார் வைபவம் பெரிதென்பதை ஐயர் உணர்ந்து ஸ்வாமிகளைச சரணமடைந்து மன்னிப்பு வேண்டிக் கொண்டனர்; அன்றியும் பல உபசரணைகளுடன் ஆராதனையும் செய்தனுப்பினர்.

27. அதே திருவையாற்றில் பாலயாநந்த ஸரஸ்வதி என்றபெயர் வகித்த சக்தி உபாசகர் ஒருவர் ஸ்வாமிகளைப் பணிந்து, ஸந்நியாசாச்ரம விஷயமாகவும் சக்தி விஷயமாகவும் பல கேள்விகள் கேட்டார். ஸ்வாமிகள் ஐந்து வயது நிறைந்த குழந்தையின் மூலம் சின்முத்திரையினால் விடை பகர்ந்தருளினர்..

இங்ஙனம் ஸ்வாமிகள் அங்கங்கே பல காலங்களில் இயற்றிய அற்புதத் திருவிளையாடல்கள் அளவிறந்தன.

## பாதம் 4

## ஸ்வாமிகள் மீண்டும் சேந்தமங்கலம் அடைதல்

இவ்வாறு பலவித அற்புத லீலைகளைச் செய்தவண்ணம் ஸ்வாமிகள் பதினேழு வருஷகாலம் பூப்பிரதக்ஷிணம் செய்துகொண்டிருந்து அப்பால் சேந்தமங்கல மடைந்து பல அன்பர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கி ஸங்யாஸிக்குன் றின் குகையைத் தமக்குத் திருக்கோயிலாகக் கொண்டார்.

அக்குகையை அடைந்த ஸ்வாமிகள் அக்கரட்டைத் தவிர வேறெங்கும் அதிகமாகச் செல்லாமல் அன்பர்களுக் குத் தரிசனம் கொடுத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது ஸ்வாமிகள் பச்சைப்பயற்றுக்கஞ்சியையே ஆகாரமாகக் கொண்டிருந்தார்.

அக்காலத்தில் கொண்டப்ப நாயக்கன்பட்டி கிருஷ்ணை யர் என்பவர் ஸ்வாமிகளிடம் அன்பு பூண்டு ஸ்வாமிகளுக்கு உணவிட்டு உபசரித்துவரும் கைங்கர்யத்தை மேற்கொண் டனர்.

இவ்வாறிருக்கையில் இப்போது சங்கரானந்தர் என்ற பெயருடன் ஸ்வாமிகளுடைய சிஷ்யரில் ஒருவராக விளங்கு பவர் ஸ்வாமிகளை வந்தடுத்தார். அப்போது அவருக்கு வயது பன்னிரண்டாம். அந்த வயதிலிருந்து அவர் ஸ்வாமிகளுக் குப் பணிவிடை செய்யத் தொடங்கி ஸ்வாமிகளுடைய மனங்கோணுமல் நடந்து வந்தார்.

ஸ்வாமிகள் திடீரென்று யாருக்குந் தெரியாமல் குகை யைவிட்டு மறைந்து எங்கேனும் போய்விடுவார். சில சமயம் சங்ககிரியிலே போய் உலாவுவார்; சில சமயம் நாமக்கல்லில்

நடமாடுவார்; சில சமயம் தேன் காட்டில் ஆகாய சஞ்சாரிக ளாகிய சித்தவித்யாதர கந்தர்வர்கள் கண்டு மகிழத் திகம்பரக் கோலத் திருநடனம் புரிந்து மகிழ்வார்.

இப்படி ஸ்வாமிகள் வெளிப்படுங் காலத்தில் சங்கராநந் தர் ஸ்வாமிகளைத் தேடிக் கண்டுபிடித்து ஆகாரங் கொடுப்பார். சில சமயம் ஸ்வாமிகள் சங்கராநந்தரைத் தம்மிடம் நெருங்க வொட்டாமல் செய்வதுண்டு. சங்கராநந்தர் அதற்கஞ்சாது ஸ்வாமிகளுக்குப் பணிவிடை புரிவதையே பிரதானமாகக் கொண்டு அவர்களை அடுத்து உபசாணை புரிவர்.

இவ்வாறிருந்தமையால் சங்கராநந்தர் ஸ்வாமிகளுடைய பரிபூர்ண அநுக்கிரகத்துக்குப் பாத்திரரானார். ஸ்வாமிகள் அவருடன் நெருங்கிப் பழகினர். பின்னர் ஸ்வாமிகள் மூலம் வேதாந்த ஞானத்தைப் பெற்று அப்பால் ஸந்யாஸமு மடைந்து இப்போது ஸ்வாமிகள் ஸந்நிதியில் பரம சிஷ்யரில் ஒருவராகவும் ஆசரம நிர்வாகியாகவும் விளங்குகிறார்.

அப்பால் சில வருஷங்களுக்கெல்லாம் ஸ்ரீமத் துரியா நந்தர் என்றபெயருடன் ஸ்வாமிகளின் ஸந்நிதியில் இப்போ திருப்பவர் நம் ஸ்வாமிகளை அடுத்து ஸந்நியாஸம் பெற்றுக் கொண்டார். துரியாநந்தர் கிருகஸ்தாச்ரமியாயிருந்து தமது 20-ஆம் வயதில் தம் மனைவியையும் ஓர் புத்ரனையும் விட்டுப் புறப்பட்டவர்.

துரியாநந்தருடைய வரலாறு அதியற்புதமானது. இவர் சிறுவயதில் ஆங்கிலக் கலாசாலையில் ஆங்கிலம்படித்து அதில் விசேஷ ஞானம் பெற்று அப்பால் ஸம்ஸ்கிருதமும் பயின்று அதிலும் திடஞானமடைந்து ஞான வைராக்கி யங்களைப் போதிக்கக்கூடிய நூல்களையோதி உணர்ந்து உலகவாழ்வின் தன்மை கண்டு தேர்ந்து ஸந்யாஸங்கொள்

வதே சிறந்த மார்க்கமென்று தீர்மானங்கொண்டு வெளிப் பட்டார்.

இவர் சுப்ரமண்ய பக்தரானபடியால், வீட்டை விட்டதும் நேரே பழனிமலையை அடைந்து அங்கே நாற்பத்தெட்டு நாட்கள் வரையில், கலியுக வரதனும் கருணாநிதியுமாகிய பழனியாண்டவனை நோக்கி, எனக்கு நல்ல உபதேச குருவைக் காட்டி ஆட்கொள்ளவேண்டும் என்கிற பிரார்த்தனையுடன் தவங்கிடந்தார்.

அடியார்க்கெளியனாகிய ஆறுமுகக் கடவுள் ஸ்வாமிகளுடைய தியான சமாதியில் காட்சிதந்து சேந்தமங்கலம் போய் நம் ஸ்வாமிகளைக் காணும்படி கட்டளையிட்டருளினார்.

துரியாநந்தர் இறைவனுடைய ஆக்ஞைப்படி சேந்தமங்கலம் வந்து ஸந்யாஸிக் கரட்டுக் குகையில் நம் ஸ்வாமிகளின் அவதூத தரிசனங்கண்டு ஆநந்த மேலிட்டுச் சரணமடைந்து கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருக, ஸ்வாமிகளை நோக்கி, தம்மைச் சிஷ்யனாக ஏற்றுக்கொண்டு ஸந்யாஸமளிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்.

ஸ்வாமிகள், "நீ இல்லறத்திலிருந்து வருகிறாய்; ஆதலால் மீண்டும் இல்லறத்தை நாடுவாய். நிச்சய புத்தியுடன் உன்னாலிருக்க இயலாது" என்று கூறி ஸந்யாஸ மளிக்க மறுத்தனர். துரியாநந்தர் மன்றாடிக் கேட்டுக் கொண்டதன்பேரில் ஸ்வாமிகள், துரியாநந்தரைப் பலவகையிற் சோதனைகள் செய்து 'இவன் தீவ்ரவைராக்ய சீலனாவான்' என்பதுணர்ந்த பின் சிஷ்யராக ஏற்றுக்கொண்டு உபதேசஞ் செய்யத் திருவுளங்கொண்டார்கள். இங்ஙனம் துரியாநந்தர் ஸ்வாமிகளி

டம் வந்த ஒரு வருஷத்திற்குப் பிறகு பிரணவ மகா வாக்ய உபதேசங்களைப் பெற்றனர்.

துரியாநந்தர், நம் ஸ்வாமிகளை அடைந்து 8 வருஷகால மாகிறது. இவர் முதிர்ந்த சாஸ்திர ஞான முடையவரா னதனால் ஸ்வாமிகளிடம் அவ்வப்போது வேதாந்த விஷய மான பல கேள்விகள் கேட்பதுண்டு. ஸ்வாமிகள் அக் கேள்விகளுக்கு அவ்வப்போது விடைபகர்வர். அது கேட்டு இவர் மகிழ்வர். இவ்வாறு ப்ரச்னோத்ரமாக வெளிப் பட்ட உபதேசங்கள் அநேகம். அவற்றுள் சுமார் 120 வரையில் இந் நூலின்கண் சேர்க்கப்பட்டிருப்பது காண லாம்.

துரியாநந்தர் ஸ்வாமிகளை அடைந்தபின் ஸ்வாமிகளுக் குச் சங்கராநந்தர் ஒரு கண்ணாகவும் இவர் ஒரு கண்ணாக வும் விளங்குகின்றனர்.

இதற்கு முன் ஸ்வாமிகளிடம் ஆச்ரமம் பெற்றுக் கொண்ட ஒருவர் நிஜாநந்தர் என்ற பெயருடனிருந்து வரு கிறார். அவர் பல வருஷங்களுக்கு முன் ஸ்வாமிகளைக் காசி யில் தரிசித்து உபதேசம் பெற்றவர்.

இவர் தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் சிறந்த பயிற்சி யுள்ளவர். அம்பிகையை உபாஸனை செய்து ஸ்வாமிகளின் திருவருளைப் பெற்றவர். ஸ்வாமிகள்மீது அவதூதவெண் பாமாலை யென்னும் பிரபந்தமொன்றை இயற்றியிருக்கிறார். தத்தாத்ரேயப் பிரதிஷ்டையின் பொருட்டு இவர் பல இடங் களுக்குச் சென்று உபந்யாஸம் செய்து பொருள் தொகுத் துக் கொடுத்தார்.

ஸ்வாமிகள் ஸ்ரீரங்கத்தில் இருந்த காலத்தில் அவர்க ளிடத்தில் ஈடுபட்டு அடிமை பூண்டவர்களில் ஸ்ரீ தியாகராஜ

பிள்ளை யென்பவர் ஒருவர். அவர் வைத்தியத்திற் சிறந்த அநுபவம் வாய்ந்தவர்; வியாபாரத்தொழில் செய்துவந்தார். அவர் ஸ்வாமிகளின் திருவடித் தொண்டு புரிந்து அவர்கள் பால் உபதேசம் பெற்று மெல்ல மெல்லக் குடும்ப பாரத்தை விலக்கிவிட்டுச் சேந்தமங்கலம் அடைந்தார். அக்காலத்தில் அவர் தாம் சேகரித்திருந்த திரவியத்திற் பெரும் பகுதியை ஸ்வாமிகளின் தொண்டு செய்வதிற் செலவிட்டார்.

பிறகு ஸ்வாமிகளுடைய ஆஞ்ஞையின்மேல், காவிரிக் கரையி லமைந்துள்ள மோகனூ ரென்னும் ஸ்தலத்தில் ஸ்ரீ தண்டாயுதபாணிக் கடவுள் கோயில் கொண்டெழுந் தருளி யிருக்கும் காந்தமலை யென்னும் குன்றிலிருந்து வந் தார். அடிக்கடி ஸ்வாமிகளைத் தரிசித்துச் செல்வார். அவ ருடைய வைராக்யத்தை யறிந்த ஸ்வாமிகள் அவருக்குத் துறவு நிலையையும் அபயானந்தரென்னும் தீக்ஷாநாமத்தை யும் அருளினர்.

சில வருஷங்களுக்கு முன் அபயான்ந்தர் இமாசல யாத்திரையாகச் சென்று அங்குள்ள பதரிகாச்ரமத்தில் ஸமாதியானர். அவரால் நல்வழிப்படுத்தப்பட்ட அன்பர்கள் பலர் இன்னும் மோகனூரில் அவருடைய குருபூஜையைக் கொண்டாடி வருகின்றனர்.

ஸ்வாமிகளிடம் இப்பொழுது இருந்து வருபவர்களுள் ஸ்ரீசிவானந்தமென்ற முதியவர் ஒருவர். அவர் நாராயண சாமி யென்னும் பெயருடையவராக இருந்தார். கோயிலூர் வேதாந்த மடத்திற் சில காலம் இருந்து வேதாந்த நூற் பயிற்சி பெற்றார். ஸ்வாமிகள் குகையில் தனியே இருந்த காலத்தில் உடனிருந்து சரீர உபாதிகளைப் பொருட்படுத்தா மல் ஸ்வாமிகளின் திருவடித் தொண்டையே இன்பமாகக்

கருதி இருந்தார். இப்பொழுதும் ஸ்வாமிகளுடனேயே இருந்து வருகிறார்.

இவர்களையன்றி ஸ்வாமிகளுக்குக் கிருஹஸ்தாச்ரமிகளிலும் சிஷ்யர் பலருண்டு. இன்னொரு அதிசயம்: நான்காம் வருணத்து வாலிபரொருவர் நம் ஸ்வாமிகளைச் சரணமடைந்து பணிவிடை புரிந்து அவர்களை மகிழ்வித்து அவரிடம் உபதேசம் பெற்று இப்போது தேசசஞ்சாரியாயிருந்து வருகிறார். இவ்வாலிபருடைய பரிபக்குவநிலை ஆச்சரியப்படத்தக்கது. இவர் மதுரையம்பதில் வசித்துவரும் தேதியூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள் என்ற பெரியாரை அடுத்து அவர் மனங் கோணமல் பணிவிடை புரிந்துவந்து அவரிடம் பல வேதாந்த சாஸ்திர நுட்பங்களைச் சிரவணஞ்செய்து, பிறகு ஸ்வாமிகளை அடைந்து ஸ்வாமிகளுடைய பலசோதனைகளுக்கு நடந்து முடிவில் அவர்களுடைய பரிபூர்ண ஆசீர்வாதத்துக்குப் பாத்திரராயினர். இவர் மகா சாந்தகுணசீலர்; சிவஞானச் செல்வத்துக்கு இயைந்த பெட்டகமெனப் போற்றத்தக்க மகிமையுடையவர்.

ஸ்வாமிகள் இவ்வாறு ஸங்யாஸிக் குன்றின் குகையில் திருக்கோயில் கொண்டதும் ஸங்யாஸிக்குன்று சிவபெருமானுடைய திருக்கோவிலமைந்த கைலாசமெனப் பிரகாசிக்கலாயிற்று. "அநித்தியத்திலிருந்து நித்தியத்திற்குக் கொண்டு சேர்க்கவல்லது இக்குன்று. அஞ்ஞானத்திலிருந்து ஸுஞ்ஞானத்தை ஊட்டவல்லது இக்குன்று. அந்தகாரத்திலிருந்து பிரகாசத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்க வல்லது இக்குன்று. ஆத்மவிசாரணையிலே சேர்த்து நிம்மதியை அளிக்க வல்லது இக்குன்று" என்று யாவரும் போற்றவும் அக்குன்றையடையும் விவேக சீலரெவரும் தீவிரவிவேகமென்கிற தினகரனுடைய ஸந்நிதியடையவும் செய்யுமொரு பிரகாசத்துடன் விளங்கலாயிற்று.

# அத்தியாயம் 4

## பாதம் 1

### தத்தாத்ரேயப் பிரதிஷ்டை

ஸ்வாமிகள் பூப்பிரதக்ஷிணம்செய்த காலத்தில் வடக்கே பதரிநாராயணத்தில் தத்தாத்ரேயருடைய குஹைக்கரு கில் தியானத்தில் வீற்றிருந்தனர். அச்சமயம் ஒரு நாளிர வில் தத்தாத்ரேயர் ஸ்வாமிகளுடைய கனவிலே தோன்றி, "எம்முடைய ஆலயப் பிரதிஷ்டை தக்ஷிணதேசத்திலே கிடை யாது. அங்கே குருபக்தியுண்டாவதன்பொருட்டு எமக்கு ஓர் ஆலயப் பிரதிஷ்டை செய்விக்கக் கடவாய்" எனக் கூறி மறைந்தருளினர்.

தத்தாத்ரேயர் யோகிக்கு யோகியும் ஞானிக்கு ஞானி யுமாவர். அவர் ஞானியாகிய நம் ஸ்வாமிகளைத் தக்ஷிண தேசத்துக்கு அனுப்பித் தம் மூர்த்தத்தைப் ப்ரதிஷ்டை செய் விக்கும்படி கட்டளையிட்டார். அதே சமயத்தில் யோகி யாக, அதே குகையில் தவம்புரிந்த தத்தாத்ரேய பக்தர் நாதா நந்தயோகிராஜ் என்பவரை நம் ஸ்வாமிகள் திருக்கோயில் கொண்டுள்ள குஹாலயத்துக்கு நேர் வடக்கே கொல்லிமலை யில் அறப்பளீசுவர ஸந்நிதிக்கு அருகிற்சென்று சித்தியடை யும்படி ஆக்ஞையிட்டனுப்பினர். அவர் அந்த ஆக்ஞைப் படி தக்ஷிணதேசம் வந்து கொல்லிமலையை அடைந்து அதே இடத்தில் சித்தியடைந்தனர்.

இவ்வாறு ஒரு ஞானியையும் ஒரு யோகியையும் தக்ஷிண தேசம் அனுப்பிய தத்தாத்ரேயர் தாமும் தக்ஷிணதேசத் தில் திருக்கோயில் கொள்ளத் திருவுளங்கொண்டு ஆக்ஞை



ஸ்ரீ தத்தாத்ரேயர்
(தத்தகிரியில் பூஜிக்கப்பெறும் மூர்த்தி)

யிட்டபடியால் அந்த ஆக்ஞையை நிறைவேற்றுவதில் ஸ்வாமிகள் தம் கருத்தைச் செலுத்தலானார்.

சங்கற்பம் ஈசுவர நியமனப்படி ஏற்பட்டபடியால், ஆலயப் பிரதிஷ்டைக்கு வேண்டியவைகளை யெல்லாம் அன்பர்கள் கவனிக்கத் தொடங்கினர். அப்பால் தத்தாத்ரேய விக்ரகமும் ஒரு பக்தரால் செய்தனுப்பப்பட்டது. ஆச்சரியப்படத் தக்கபடி விரைவில் ஸஹ்யாஸிக் குன்றின் உச்சியில் ஓர் அழகிய ஆலயமும் கட்டியாயிற்று.

அப்பால் ஸ்வாமிகள் அந்த ஆலயத்தில் தத்தாத்ரேய விக்ரஹத்தை வேதவிதிப்படி பிரஜோத்பத்தி வருஷம் வைகாசி மாதம் 16-ந் தேதி (29-5-31) சுக்லபக்ஷம் வெள்ளிக்கிழமை திரயோதசி ஸ்வாதி நக்ஷத்திரம் ஸித்தயோகம் கூடிய சுபதினத்தில் உதயாதி 1-20 க்குமேல் 2-45க்குள் வ்ருஷபலக்னத்தில் பிரதிஷ்டை செய்வித்து வெகு சிறப்பாகக் கும்பாபிஷேகம் நடத்தி முடித்தார். ஸ்வாமிகளின் ஜனன வருஷமும் பிரஜோத்பத்தி. இது கவனிக்கத் தக்கது. அறுபதாவது வயதில் இந்த அரிய கைங்கர்யம் செய்விக்கும்படி இறைவனுடைய திருவருள் அநுகூலமாயமைந்தது கிடைத்தற்கரியதாகும்.

மாதா, பிதா, குரு, தெய்வம் என்னும் வரிசையில் குருவிற்கு இந்தத் தக்ஷிணதேசத்தில் ஆலயமில்லாத குறையை நிவர்த்திப்பதற்காகவும், தத்தாத்ரேயர் சிவவிஷ்ணு பிர்ஹ்ம ஸ்வரூபியானதால் இத்தேசத்திற் சாதாரணமாக் காணப்படும் சைவ வைஷ்ணவ மத த்வேஷத்தை நிவர்த்திப்பதற்காகவும் ஸ்வாமிகள் இந்தப் பிரதிஷ்டை செய்வதில் திருவுளம் கொள்ளலானார்.

தத்தாத்ரேயர் அவதூத பரம்பரைக்கு ஆதி குரு. ஆதலால் அவருக்கு ஆலயம் கட்ட ஸ்வாமிகள் முன்வந்தனர். மேலும் அவதூதர்கள் மற்ற ஆலயம் எதுவும் கட்டுவது கூடாது.

இப்படி ஆலயப்பிரதிஷ்டை யேற்பட்ட பிறகு பக்தர்கள் உற்சவ விக்ரஹமும் ஒன்று செய்து ஸ்வாமிகளுக்கு அனுப்பினர். அப்பால் வருஷந்தோறும் மார்கழி மாதத்தில் தத்தஜயந்தி உற்சவம் வெகு விமர்சையாகப் பகவானுடைய திருவருள் துணைபுரிவதனால் நடைபெற்று வருகின்றது.

இவ்வாறு ஆலயமேற்பட்ட பின் அங்கே சுமார் ஐயாயிரம் ரூபா மதிப்பிடக் கூடிய கட்டடமொன்றும் பக்தர்களால் நிருமிக்கப்பட்டது. அதன்பின் ஸ்வாமிகளின் குஹைக்குமேற்கே ஸ்வாமிகள் குஹையிலிருந்து வெளிவந்து ஸ்நானம் செய்யத்தக்கபடி ஒரு பெரிய கிணறும் அமைத்தாயிற்று.

இந்த அரிய கைங்கர்யங்களுக் கெல்லாம் ஸ்ரீமான் சுந்தரஞ் செட்டியார் முதலியவர்களேயன்றி, மிட்டாதார் பாத்யமுடைய முத்தியாலம்மாள் என்கிற ரெட்டி வம்ச ஸ்திரீயும் ஜயம்பாளையம் தாண்டவராயப் பிள்ளை என்கிற் பிரபுவும் இன்னும் பலரும் உதவி புரிந்ததாக அறிகிறோம்.

திருச்சி டவுன் முன்ஸீப் கிருஷ்ணஸ்வாமி பிள்ளையவர்கள், தத்தாத்ரேய ஆலயத்தின் முன்வாயிற் கதவுகளைச் செய்து தந்ததாக அறியலானோம். உற்சவ விக்ரகஹத்திற்குக் காலஞ்சென்ற திருச்சி சேஷசாயி என்பவர் பொருளுதவியதாகத் தெரியவருகிறது. சேலம் செவ்வாய்ப்பேட்டை வியாபாரிகளாகிய எ. டி. ஐயாசாமி ஐயர், ஆதி. ஆர். ராமையர் என்பவர்களும் பேருதவி புரிந்துள்ளார்கள். இப்படி

அநேக பக்தர்கள் தத்தமக்கியன்ற வரையில் உதவிபுரிந்து கைங்கர்யத்தைப் பூர்த்திசெய்வித்திருக்கிறார்கள்.

இவ்வாறு தத்தாத்ரேயாலயம் இக்குன்றில் ஏற்பட்ட பின் இதற்குத் தத்தகிரி என்கிற பெயர் உண்டாயிற்று.

## பாதம் 2

## தத்தகிரியின் மகிமை

இப்போது தத்தகிரி இருக்கும் அழகை வர்ணிக்க ஆதிசேஷனும் பின் வாங்குவானென்பது திண்ணம்; காரணம் சொல்லவேண்டுமா?

குன்றினுச்சியில் தத்தாத்ரேயரின் திருக்கோயில் இலகுகின்றது. வயிற்றில் நமது ஸ்வாமிகளின் குஹாலயம் அமைந்திருக்கிறது. எதிரில் அறப்பளீசுவரரின் அற்புத ஸந்நிதியும் அந்த ஸந்நிதிக் கருகில் தத்தகிரிக்கு நேர் வடக்கில் நாதாநந்த யோகிராஜின் சமாதியும் விளங்குகின்றன.

ஆகா இன்னும் என்னவேண்டும்! ஞானம், யோகம், தெய்விகம் இவை மூன்றும் இலகும் ஓர் ஸ்தலத்தில் எந்த வைபவந்தான் விளங்காது? சகல வைபவங்களுக்கும் இருப்பிடமாகுமல்லவா அது?

இந்த ஸ்தலத்தில் வருஷந்தோறும் நடைபெறும் தத்த ஜயந்திக்கு ஒருமுறை போய்த் தரிசித்தவர், "பூலோகத்தில் இந்த ஸ்தலமே சகல வைபவங்களுக்கும் இருப்பிடம்" என்று திண்ணமாய் உணர்ந்து வருஷந்தோறும் உற்சவங் காணத் தவறாமற் செல்வர்.

ஜயந்தி உற்சவ காலத்தில் ஸ்வாமிகள் அக்குன்றின் மீதெங்கும் உலாவுவர். ஆயிரக் கணக்கான ஜனங்கள்

தத்தாத்ரேயரைத் தரிசனம் செய்து உடனே ஸ்வாமிகளையும் தரிசனம் செய்து மகிழ்வர். ஸ்வாமிகள் தத்தாத்ரேயருக்கு இச்சமயம் பூஜையை விதிவழுவாமல் அருகிலிருந்து செய்து வைப்பது வழக்கம். பூஜை முடிவில் ஸ்வாமிகள் எல்லோரையும்போல் ப்ரசாதம் பெற்றுக்கொண்டு மகிழ்வர்.

நாம் முதன்முதலில் ஸ்வாமிகளைக் கண்டபோது ஸ்வாமிகள் ஜயந்தியன்று முன்னிரவில் தத்தாத்ரேயரின் ஆராதனையைக் கவனித்துக் கொண்டிருந்தனர். ஸ்வாமிகளை நாம் நேரிலே காண்பதற்கு முன்பே அவர்களுடைய வரலாற்றினை ஒருவர்மூலம் கேட்டவளவிலே பிரசுரித்திருந்தோமாதலால் ஸ்வாமிகளை நாம் நெருங்கி அபிவாதனம் செய்ததும், “பெயர் கேட்டதுண்டு?” என ஜாடையில் தெரிவித்தனர். அதைக் கேட்டதும் எமது மனம் என்றுமடையாத ஆநந்தமடைந்தது; மேனியிலே புளகாங்கித முண்டாயிற்று; கண்களிலிருந்து ஆநந்த பாஷ்பம் பெருகியது; கைகளிரண்டும் சிரசில் தாமே குவிந்தன; உடனே வெட்டுண்ட மரம்போல் வீழ்ந்து பணிந்தெழுந்தனம். ஸ்வாமிகள் பரிபூர்ண ஆசீர்வாதம் செய்து தமது கரத்தினால் தத்தாத்ரேயருக்கு அபிஷேகஞ் செய்ததில் சிதறிக் கிடந்த பலாச்சுளை யில் ஒன்றை எமக்களித்துப் புசிக்கும்படி சொல்லித் தாமும் புசித்தனர்.

இவ்வாறு அவண் அச்சமயம் விஜயஞ் செய்திருந்த ஸ்ரீமான் சுந்தரஞ் செட்டியார் முதலிய தொண்டர்களுக்கும் அளித்தனர். அப்பால் வெளியே வந்து கொஞ்சநேரம் அங்கே பெரிய கூடையிலே வைக்கப்பட்டிருந்த பாணங்களைக் கொளுத்திக் கொளுத்தி எரிந்து குழந்தைகளைப்போல் விளையாடினர்.

ஸ்வாமிகள் பெருந் திரளான கூட்டத்தினிடையே இவ்வாறு விளையாடுவதை நோக்கிய கண்கள் நோக்கியபடியே இருந்தன. யாவரும் சித்திரப்பதுமைகளை நிகர்த்தனர். பெண்கள் மாத்திரம், "இது என்னே விந்தையடி தோழி!" என ஒருவர்க்கொருவர் முணு முணுக்கலாயினர். சில பெண்கள் ஸ்வாமிகளின் பாலப்பருவத்தைச் சிந்திக்கலாயினர். சிலர் கிருஷ்ணனுடைய கோபிகாலீலையை ஸ்மரித்தனர்.

இவ்வாறு விளையாடிய பின்பு ஸ்வாமிகளின் ஆக்ஞைப்படி தத்தாத்ரேய மூர்த்தம் கிரிப்ரதக்ஷிணமாக அழகிய விசித்ர புஷ்ப அலங்காரங்களுடன் கூடிய விமானத்தில் பவனி வரத் தொடங்கியது. விமானத்தின் முன் ஸ்வாமிகள் வைதிகப் பிராமண கோஷ்டியிலே கலந்து கொண்டு பிரம்மாநந்தாநுபவ விலாசத்துடன் மௌன நிலையிலே வாய்திறவாமல், வேத பாராயணம் செய்து வர முந்தினர். அப்பால், நடனமாதரின் பரத நாட்டியமும் அதற்கப்பால் நாதசுர மேள வாத்யமும் நடைபெறலாயின.

என்னவென்று வர்ணிப்பது இந்த வைபவத்தை! ஸ்வாமிகளை இச்சமயம் சுகரின் அவதாரமென்றனர் சிலர்; "மன்மதனைச் சுட்டெரித்த திகம்பரர் இவரே" என்றனர் சிலர்; "யாரே வகிக்கத்திறமுடையவர், மனத்தினும் கருத இயலாத இந்தக் கோலத்தை?" என்றார் சிலர்; "இவருடைய மனத்தின் பக்குவநிலைதான் யாதோ தெரியவில்லையே! இரும்போ கல்லோ? இல்லை இவைகளிரண்டையும்விடக் கடினமானதோ? யாதென ஊகிக்கமுடியவில்லையே! நடனமாதர் தம்முடைய கரும்புருவமாகிய விலையை வளைத்துக் கடைக்கண்ணும் கணை தொடுத்துக் குயிலினும் இனிய குரலினுடன் வெளிப்படுவதும் மோகமயக்கத்தைத் தரவல்லதுமாகிய கான

ஸத்தைச் செவிவழியே செலுத்தி, மெய்ம்மறதி உண்டாக்கத்தக்க நடன தரிசனத்தைக் கண்கள் களிக்கக் காட்டியும் இவர் நிலைகலங்கவில்லையே!" என வியந்தனர் சிலர். "ஸ்வாமிகளின் புன்முறுவல் தவழும் முக கமலத்தையும் விசாலமான திருநுதலையும் கிரீடம்போல் அமைந்திலகும் திருமுடியையும் நீண்டு வளர்ந்துள்ள தாடி மீசைகளையும் பரந்தகன்ற மார்பையும் ஒருமுறை பார்த்தவர்கள் பின் தங்கள் ஆயுளுள்ளவரையில் மறக்கவேமாட்டார்கள்" என்று பேசினர் பலர்.

இவ்வாறு தத்தாத்ரேயர் ஊர்வல உற்சவம் நடைபெற்ற பின்பு ஸ்வாமிகள் ஆலயத்தின்முன் மண்டபத்தில் ஒரு திவ்ய ஆசனத்தில் எழுந்தருளிப் பக்தர்களுக்கு விபூதிப் பிரஸாதம் அளிக்கத் தொடங்கினர். அப்போது இரவு மூன்று மணியிருக்கலாம். ஜனங்கள் தத்தம் குறைகளைக் கூறி விபூதிப் பிரஸாதம் பெற்று வணங்கிச் செல்ல முற்பட்டனர். ஸ்வாமிகள் சிறிதும் களைப்படையாமல் விபூதியைச் சிறு துண்டுக் காகிதத்தில் எடுத்து மந்திரித்து மந்திரித்துக் கொடுத்துக் கொண்டே இருந்தனர். விபூதிப் பிரஸாதம் கொடுத்து முடிய மறுநாள் பகல் நான்கு மணியாற்று.

ஸ்வாமிகளின் இந்த ஒரு சலனமற்ற நிலையைக் கண்டு வியந்தபடி இருந்த அன்பர் அநேகர் ஊணிலும் நினைவற்றவராயினர். இந்த நிலையினை நாமும் அடைந்தோமாதலின் மனமானது ஸ்வாமிகளின் பரிசுத்த தெய்விக நிலையை வர்ணிக்கத் தொடங்கியது. இன்னும் இப்பொழுதும் இச்சமயத்திலும் அப்போதெண்ணிய அந்த வர்ணனையை மனத்திருப்தியுடன் முடித்தபாடில்லை. அப்பால் இரவில், சேங்காலிபுரம் பிருஹ்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதரவர்கள் குரு

பக்தி என்கிற விஷயமாய் ஸ்வாமிகளின் ஸந்நிதியில் ஓர் உபந்யாஸம் புரிந்தார். பின் திருவாதி சகோதரர் என்கிற ஸங்கீத வித்வான்களால் ஜலதரங்கக் கச்சேரி நடைபெற்றது. இன்றும் அந்த வைபவங்கள் நடைபெறுவதுண்டு.

## பாதம் 3

## விபூதிப் பிரஸாத மகிமை

இச்சமயத்தில் நமக்கு,சேலம் வக்கீல் பாலகிருஷ்ணையரென்பவருடைய ஸ்நேகம் கிடைத்தது. அவர் ஸ்வாமிகளிடம பரிபூர்ண அன்புபூண்ட சிஷ்யர். அவர் தம்முடைய மனைவிக்குப் பேயின் உபத்திரவமிருந்ததாகவும் அதனால் அம்மாது தரிக்கும் கர்ப்பமெல்லாம் சின்னமாய் வந்ததாகவும் ஸ்வாமிகளின் விபூதிப்பிரஸாத மகிமையினால் அவ்வுபத்திரவம் நீங்கிச் சுகப் பிரஸவமடைந்து குழந்தையும் தாயும் சுகமாயிருப்பதாகவும் கூறியதுமல்லாமல், குழந்தையை ஸ்வாமிகளின் திவ்ய திருநயன திருஷ்டி படும்படி அவருடைய பாதத்தில் கிடத்தி ஸ்வாமிகளின் ஆசீர்வாதம் பெறும்படி செய்ததாகவும் கூறி ஸ்வாமிகளின் மகிமையை பின்னும் பல படியாக விளக்கலாயினர். அவரானும் ஸ்வாமிகளுடைய வரலாற்றின் விவரங்கள் சில கிடைக்கப்பெற்றோம். பாலகிருஷ்ணையர் பரம ஆஸ்திகசிரோமணி.

ஸ்வாமிகள் அமர்ந்து விபூதிப் பிரஸாதம் அளிக்க ஒரு பெரிய ஆசனமிருக்கிறது. அந்த ஆசனம் நல்ல வேலைப் பாடுகளுடன் கூடியது. அது, ஸ்வாமிகளின்விபூதிப் பிரசாதம் பெற்றுக் கண்டமாலை என்னும் கொடியநோய் தீரப்

பெற்ற ஒரு கணிகைமாதால் செய்வித்தளிக்கப்பட்டதாக அறிந்து மகிழ்ந்தோம்.

ஸ்வாமிகளின் விபூதிப்பிரஸாதம் பெற்று வந்த பைத்தியங்கள் சிலபேர் குணமடைந்து இப்பொழுது நல்ல விவேக சீலராக விளங்குகின்றனர். ஆத்தூரில் தாஸில்தாராக விருந்த ஒருவர், ஸ்வாமிகளுடைய விபூதி ப்ரஸாதம் பெற்று அநேக நன்மைகளை அடைந்ததாகவும் அவரிடத்தில் தமக்கு மனமார்ந்த பக்தியுண்டென்றும் கூறினர்; "நான், எனது என்னும் கொடிய விஷப்பாம்பினால் கடியுண்டு மயங்கிக் கிடைக்கும் நமக்கு இத்தகைய திடஞானியின் மகிமை தெரிவதில்லை. உரிமையையும் சுதந்தரத்தையும் பாராட்டிக்கொண்டலைகிறோம்; வீணுக்குழைக்கிறோம். வெறுக்கைக் குவைதேடுவதில்நாட்டமுடையவரா யிருக்கிறோம். பேதபுத்தியினால் அவஸ்தைப்படுகிறோம். மனம் தூய்மைப்படுவதற்குத் தடையாயுள்ள தீய எண்ணங்களை எழவொட்டாமல் தடுக்கிறோமில்லை. மனம் ஸமாதான நிலையிலிருந்து உண்மை உணர்வதற்குச் சாதகமான அனைபையும் அருளையும்வகிக்கின்றோமில்லை. இத்தகைய உயர் நலன்களையடைய வேண்டுமானால் திடஞானிதரிசனமும் திடஞானியின் திருவருள் நோக்கமும் உபதேசமும் பெறுதல் அவசியமாம்'' என்பவற்றையும் இன்னும் பலவற்றையும் கூறினர்.

இவ்வாறு எழுதிக்கொண்டேபோனால் கையும்மனமும் ஓய்கிறவரையில் எழுதலாமாதலினால் விரிவஞ்சி விடுத்தனம்.

## பாதம் 4

### ஸ்வாமிகளின் பாத பூஜை வைபவம்

ஸ்வாமிகளின் பாத பூஜை வைபவம் நடைபெற்றது. ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து தத்தகிரியில் எள்ளிடவும் இடமில்லையெனக் கூடி விட்டனர். தத்தாத்ரேயரின் ஆலயம் முதல்நாளிரவில் ஏராளமான தீப அலங்காரங்களுடனும் வாத்ய கோஷத்துடனும் கூடியதாய்ச் சுத்த சத்வ குருநாதமூர்த்தியாகிய அந்தத்தத்தாத்ரேயரின் திருவருளின் தேஜஸை விளக்கியபடி இலங்கியது. சேந்தமங்கலத்திலிருந்து தத்த கிரியை இப்பொழுது நோக்கு மன்பர்கள், "விநோதம் விநோதம்! காணக்கிடைக்காத காட்சி!" எனக் கூவிச் சிரசில் கரங்கூப்பித் தொழுதவண்ணம் துதி பாடிக்கொண்டே சென்று குன்றேறிப் பகவானைத் தொழுது மகிழ்வர்.

அப்படி மகிழ்ந்தவர்களில் நாமும் ஒருவரானபடியால் தத்தகிரியின் மேல் பகவானுடைய ஆலயம் இத்தகைய மனோரஞ்சித நிலையில் இலகக் காரண பூதராய் ஏற்பட்ட ஸ்வாமிகளை எண்ணிஅவர்களைத் துதிக்கத் தொடங்கினோம்.பாடித் துதித்துக்கொண்டே சென்று ஸ்வாமிகளை, தத்தாத்ரேய ஆலயத்தின் முன்மண்டபத்தில் பல அன்பர்களின்மத்தியில் ஓர் உயரிய ஆசனத்திலே நேராகக் கண்டோம். பரமானந்தங் கொண்டு கூப்பிய கையுடன் நெருங்குகையில் ஸ்வாமிகளின் திருவ்ஷ்டிக்குப் பாத்திரமானபடியால் சிரமசைத்து வரவு கந்து கையமர்த்தி ஆசீர்வதித்தார்.

அங்கே இச்சமயம் குருவின் பிரபாவம் என்பது பற்றிய உபந்யாஸம் நடைபெற்றது. அதனை நாமும் கேட்டோம். அங்கே அந்தக் கூட்டத்தில் ஸ்வாமிகளின் பூர்வாச்ரம

பந்துக்களில் ஒருவராகிய நாராயண ஸ்வாமி ஐயர் என்ப வரைக்கண்டோம். அவர் ஸ்வாமிகளுடைய தரிசனங் கண்ட வளவில் பரம ஆஸ்திகராய் மாறினதாகவும் ஸ்வாமிகளிடம தமது மனம் ஈடுபடுவதாகவும் கூறி மகிழ்ந்தார். அவர் தென் இந்தியா ரயில்வேயில், திருசியில் டிரான்ஸ்போர்ட்டேஷன் பிரிவில் ஸுபரிண்டெண்டாயிருந்து உயரிய சம்பளம் பெறுகிறார். ஸ்வாமிகளுடைய சரித்திரத்தை விஸ்தாரமாய் எழுதி வெளியாக்கும்படி எம்மைத் தூண்டிய அன்பர் பல ரில் அவரும் ஒருவர். தவிர, ஸ்வாமிகளின் சரித்திரத்துககு ஆதாரமான விஷயங்களையும் தாம் அறிந்த வரையில் அவா எழுதி யனுப்பினர்.

பிறகு அன்றிரவு ஸ்வாமிகள் அன்பர்களுக்கு விபூதி கொடுக்க ஆஸனத்தி லெழுந்தருளினர். அப்பொழுது நாம் பாடிய துதியும் ஸ்வாமிகள் சிஷ்யராகிய ஞிஜாநந்தர் பாடிய துதியும் ஸ்வாமிகள் திருவடியிலே சமர்ப்பிக்கப்பட்டன. ஸ்வாமிகள் அவற்றைப் படித்தும் கேட்டும் பரமாநந்த மடைந்தனர். அவை வருமாறு:—

சென்னை - "பாலவிநோதினி" பத்திரிகாசிரியர்

## வரகவி - திரு. அ. சுப்ரமண்ய பாரதி இயற்றிய தோத்திரப்பா

(அகவல்)

கங்கை புனைந்த சங்கரன் கோயில்
கொண்டருள் புரியுந் திண்டிறல் வாய்ந்த
கொல்லிமா மலையி னெல்லைசேர்ந் திலகும்
தத்த கிரியில் வித்தகக் குகையில்
வாசமா யமர்ந்து நேசமா யடையும்
தொண்டர் மனக்குறை விண்டிடத் தூய
வெண்ணீ றளிக்குந் தண்ணார் கருணைப்
புயலே யுலக மயலே யிலாத
அவதூத நிலையிற் சிவபோக மருந்த
ஏத மிலதெனும் வேதியர் மரபில்
தோன்றிய மணியே சான்றோர்க் கணியே
மும்மல மென்னும் வெம்மலை துளைத்த
கோதில் ஞான போதவை வேல்கொள்
ஒருமுகத் தேவே குருமுகங் கொண்டிங்
கெல்லோ ரிடமும் நல்லோ ரெனவே
சமபா வனையி லமைவதே யோகம்;
காமிய மொழிந்தநிஷ் காமிய கருமம்
பவக்கடல் கடத்துந் தவப்பெருந் தெப்பம்;
வெம்பெரும் பகையா மைம்புல னடக்கும்
மோன நிலையே ஞான வரம்பு
குருவருண் மொழியி லொருபே ருறுதி
கொண்டவர் ஞானங் கொண்டிட லுண்மை

எனுமித் தகைய வினியநற் போதனை
தருவது மன்றி யுருவழி பாடே
அருவமாம் பிரம தரிசனந் தருமெனல்
கண்டுநல் லுணர்வு கொண்டுல குய்யச்
சுத்தாத் துவிதத் தத்தாத்தி ரேயத்
தோன்றல் விளங்கும் ஆன்றநற் கோயில்
சமைத்துல கெவரும் சமத்துவ நிலையில்
வழிபட் டுய்யும் வழியினி தளித்த
திருவரு ணிலையா மொருபெரு மலையே
அபய மடைந்தன னுபயதாண் மலரே
உலகுயி ரளித்த மலைமகள் பாகன்
திலகவொண் ணுதலி லிலகுகண் ணதனில்
உதித்தசண் முகன்பொற் பதத்தினை யெண்ணி
வந்தனை செய்சிவா நந்தசா கரன்பால்
செந்தமிழ் பயின்றவன் றந்தநல் வழியில்
நின்று வரகவி யென்றுல கேத்தும்
பெயர்பெற் றுள்ளத் தயர்வற் றெல்லாம்
முருக னொருசீ ரருளே யாமென்
றெண்ணுஞ் சுப்ர மண்ய பாரதி
கரமல ரிரண்டுஞ் சிரமிசை குவித்துத்
தொழுது துதிக்கும் மொழிமகிழ்ந் தேற்றுச்
செல்வத் திருவருள் நல்கியாண் டருளே.

ஸ்ரீமத்ஸ்வாமிகளின் சிஷ்யர்
நிஜாநந்த ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வதி
பிரார்த்தித்து ஸமர்ப்பித்த வெண்பா

(மங்களம்)

பொன்னாட்டு வேந்தரும் பூவேந்தர் மற்றோரும்
நன்னாட்ட மெய்தி நலம்பெறவே—சொன்னாட்டும்
வேந்தர் சுயம்பிர காசர் விரைமலர்த்தாள்
ஏந்துக வெஞ்சென்னி யே.

(துதி)

ஓங்காரம் நானே உலகமும் அம்மயமே
நீங்களது வென்றே நிகழ்த்தினார்—நாங்களுமே
காணும் படிசுயம்ப்ர காசபிர மேந்திரப்பேர்
பூணும் ஸரஸ்வதியும் போந்து.

சுரர்நரராம் வேந்தருந்தம் தொன்முடிகள் எந்தை
அரவிந்தத் தாளி லணியக்—குருவாகி
நல்லுபதே சஞ்செய்து நாடோறுங் காப்பாற்றும்
வல்ல வவதூதர் வாக்கு.

வேதங்க ளிற்சொல்லும் மெய்ஞ்ஞானி லக்ஷணமும்
போதத் திடநிலையும் போதிக்க—மேதக்க
சாக்ஷாத் சுயம்பிரகா சக்குருவாய்நம்மையெலாம்
ரக்ஷிக்கும் ரூபமீ தே.

என்றுந் தரிசித்தே யின்ப நிலைபெறுவோம்
என்றேதான் காத்திருக்கும் எங்கட்குக்—குன்றாத
ஞானநிலை யைத்தந்த நல்லா ரவதூதர்
ஞானக் குகைபுகலிர் நாள்.

எண்ணிறந்த சீடவர்க்க மெல்லாந் தமைச்சூழப்
பண்ணிறைந்த வேதம் பலமுழங்கத்—தண்ணளியால்
எம்மையா சீர்வதித்தா ரின்ப நிலைதந்தார்
மெய்ம்மையவ தூதர் விழைந்து.

(தமக்கருளினமை)

என்னையே கண்டதும் நும்மை யெனக்களித்தீர்
என்னை நிஜாநந்த னென்றழைத்தீர்—என்னேநும்
பேரருட்குக் கைம்மாறு பேசவே றுண்டோநும்
ஏரருட்குள் யான்புக்க தே.

காசிப் பதியிற் கலந்தே யருள்செய்த
நேசத்தை யென்றும் நினைந்துருகி—மாசற்றேன்
நோக்கினே னென்னை யவதூத நுட்பத்தைத்
தேக்கினே னுள்ளந் தெளிந்து.

நீயேநான் நானேநீ யென்றே நிலைக்கவைத்த
தாயே பராபரையே சற்குருவே—நாயேனை
என்றென்றும் நின்வடிவி லேற்று மவதூத
குன்றாத நின்னருளிற் கூட்டு.

ஸ்ரீமுகவாண் டிற்றனுவின் றேதியேழ் பஞ்சமியில்
மாமுகஞ்சே ருங்குருவாம் வாரத்தில்—தாமுவந்து
சேந்தமங்க லத்திற் றிகழவதூ தர்குகையிற்
போந்தனரா ருள்ளம் புரிந்து.

சீர்சாலுஞ் சேந்தமங்க லத்திற் றிகழ்கின்ற
வூர்சால் குகையி லெழுந்தருளும்—பேர்சான்ற
எந்தையவ தூத ரிணையில் பதமலரை
முந்தி யணிவோம் முடி.

மறுநாள் அதிகாலையில் நான்கு மணிக்கு ஆரம்பமாகி ஆறரைமணிக்குள் பாதபூஜை வேதவிதி வழுவாமல் வெகு விமரிசையாகப் பிராமணோத்தமர்களால் நிறைவேற்றப்பட்டது. பாதபூஜைத் தரிசனவைபவம் எழுதி அடங்காது. கண்டு களித்தவர்களின் கண்கள் செய்த புண்யமே புண்யம். அன்பர் பலர் அச்சமயம் ஸ்வாமிகளிடம் தாங்கள்கொண்ட அன்பை ஆநந்த பாஷ்பத்துடன் தெரிவித்துக் கொண்டனர்.

பாதபூஜை நடந்ததும் ஸ்வாமிகள் குஹாலயத்துக்குள் பிரவேசமாயினர். அப்போது எம்மை அழைத்துச் சுமார் இரண்டுமணிநேரம் ஸ்வாமிகள் பேசிக்கொண்டிருந்தார். ஸ்வாமிகள் மௌன நிலையில் வாய்திறவாமல் பேசினாராதலால், அருகிலிருந்த துரியாநந்த ஸ்வாமிகள் எல்லாவற்றையும் எமக்கு விளக்கியருளினர்.

ஸ்வாமிகள் தமது திவ்ய சரித்திரத்தை எழுத உத்தரவளித்ததுமல்லாமல் ஆதாரங்களும் தெளிவான முக்ய விவரங்களும் திருவாய்மலர்ந்தருளினார்கள். ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்துத் தமது குகையிலே வைத்திருந்த தத்த புராணத்தை அச்சிடும்படி ஆஞ்ஞாபித்ததுமன்றி அதனைச் செய்யுள்வடிவிலும் இயற்றி அச்சிட உத்தரவிட்டார்கள். தத்தாத்ரேயர்மீது அன்பர் சிலர் பாடியிருந்த தோத்திரப் பாக்களையும் அச்சிடும்படி எம்மிடம் கொடுத்தனர். இந்த இரண்டுமணி சாவகாசத்துக்குள் இடைஇடையே அநேக உயரிய நற்போதனைகளையும் சிறு சிறு உதாரணக் கதைகளின் மூலமாக உபதேசம் செய்தார்கள். இவைகளையெல்லாம் பெரிய பாக்யம் என ஏற்றுக்கொண்டு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, "ஸந்நிதானத்துத் திருவருளின் துணையிருந்தாலன்றி இந்த எளியேன் - ஏதுமறியாத பேதை - யாது செய்யவல்லேன்? ஒன்றும் செய்ய இயலாதவனாதலால், ஸந்நிதானத்துப் பரிபூர்ண அநுக்ரஹம் பாலித்

துத் தொண்டினைக்கொண்டு ஏற்பட்ட கட்டளைகளை யெல்லாம் நிறைவேற்றும்படியான ஆற்றலை அளித்தாதரிக்கப் பிரார்த்தனை" என்று கரங்குவித்தனம். ஸ்வாமிகள் புன்னகையுடன் பரிபூர்ண ஆசீர்வாதம் செய்தனுப்பினார்கள்.

ஸ்வாமிகளை அன்று தரிசித்தபின் இன்னும் தரிசனம் செய்யவில்லை யானாலும் இசசரித்திரம் எழுதக் கடித மூலமாக ஆதரவளித்தனர்; அன்றியும் தம் சிஷ்யர் ஸ்ரீமத் துரியாநந்தர் அவர்களையும் அனுப்பிவைத்தார்கள்.

ஸ்ரீமத் துரியாநந்தர் அருகிலிருந்து வேண்டிய ஆதாரங்ரங்களைக் காட்டி எம்மைத் தூண்டி வந்தனர். ஸ்வாமிகளுடைய ஆசீர்வாத பலத்தாலும் எமக்குத் தமிழில் உணர்ச்சியேற்படும்படி செய்த எம் சற்குருநாதர் திரு. அ. சிவாநந்த சாகர யோகீச்வரரின் அநுக்ரஹத்தாலும் எம்மை ஆள்பவனும் எம்முள்ளிருப்பவனும் தன்னை யாந்தொழத் தண்ணளி தந்தவனுமாகியசெந்திலாண்டவன் திருவருளாலும் இச்சரித்திரம் மங்களகரமாக யாதோர் இடையூறுமில்லாமல் எழுதி நிறைவேறியபடியால், இத்தகை அரிய தொண்டை இயற்றியவன் இவனெனப் பேசும் பெருமையில் எம்மை ஈடுபடுத்திய ஒரு பெரிய நன்றிக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய வல்லோம்! அல்லும் பகலும் அநவரதமும் அவர்களுடைய திருவடியை மறவாமல் ஆராதனை புரிவதே நாம் செய்யத் தக்கதாதலால் அதனையே செய்து வர அவர்களுடைய திருவருளையே துணையாக நாடி வாழ்த்துகின்றோம்.

எந்த ஜோதியின் புன்னகை பிரபஞ்சத்தை விளக்குகின்றதோ, எந்தக் காந்தி அண்டபிண்ட சராசரங்களையெல்லாம் இயக்குகின்றதோ அந்தக் காந்தி ஸர்வமங்களங்களையும் தந்தருளட்டும்!

ஓம் தத்ஸத்.

---



ஸ்ரீ நடராஜ மூர்த்தி

Courtesy: T. V. Chetty & Sons, Tirupati.

உ

ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# அரிய உபந்யாஸங்கள்

சிவமயம்

# ஸ்வயம்ப்ரகாச விஜயம்

ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# அரிய உபந்யாஸங்கள்

[ஸ்வாமிகள் சில வருஷங்களுக்குமுன், தம்மைத் தரிசிக்கவரும் சிஷ்ய கோடிகள் கேட்டுய்யும் வண்ணம் ஒவ்வொரு பௌர்ணமி தினத்திலும் பல அரிய விஷயங்களை எழுதிப்படிக்கச் செய்தருளினார்கள். அவ்வுபந்யாஸங்கள் பல அரிய நூற்கருத்துக்களையும் அநுபவ உண்மைகளையும் கொண்டு விளங்குவன. அவற்றிற் கிடைத்த சிலவற்றை இங்கே வெளியிட்டிருக்கிறோம்.]

## தெய்வ வணக்கம்

**தா**ய் தந்தையரும், பத்னி புத்ரமித்ரர்களும், வீடு வாயில்களும், நிலமும், மற்றும் சகலவிதமான பொருள்களும் பெரிய துக்கத்திற்குக் காரணமாகின்றன வென்பதுணர்ந்து இவைகளை யெல்லாம் அறவே துறந்து, திகம்பரராய் ஓர் உறவினருமில்லாதவராய் மண்டை ஓட்டையே பாத்திரமாகக் கொண்டு பிக்ஷாடனம் புரிபவராய் இரண்டற்றவராய் ஏக ஸ்வரூபமாய் எப்பொழுதும் பிரகாசிக்கும் ஸ்தாணுவாய் விளங்கும் பரமேச்வரர் அடியேனுடைய மனத்தில் வசிக்கக் கடவர்.

महिम्नामाम्नायः स्तुतिषु तव नालं पशुपते
तदस्मिन्नर्थेऽलं तनितुमधरस्पन्दमपि कः ।
तदप्याशा मेऽन्तर्वलति यदयुक्तास्फुटवचो
निर्गुंभोडिंभोपि प्रदिशति मुदं चेतसि पितुः ॥

ஹே பசுபதே! ஹே பரமேசுவரா! உம்முடைய மகிமைகளை நன்கறிந்து போற்றும் விஷயத்தில் அநாதிகளாய் விளங்கும் வேதங்களும் சக்தியற்றவைகளே. இவ்விஷயத்தில் மற்றுமுள்ள எவர்தாம் தம் உதட்டை அசைப்பதற்காவது அருகராவார்? ஒருவராலும் உம்மைத் துதிப்பதென்பது முடியாத காரியமென்று நானறிந்தும் எனதாசையானது உள்ளத்திற் சுற்றுகின்றது! இது தவறேயாகும். ஆனாலுங் கேட்போர்களுக்கு ஒன்றும் புரியாமற் பேசுங் குழந்தையானது தன் வாக்காற் பிதாவினது மனத்துக்கு எங்ஙனம் சந்தோஷத்தைக் கொடுக்கின்றதோ, அங்ஙனமே உலகங்களுக்குப் பிதாவான உமக்கும் என்னுடைய ஸ்பஷ்டமான வாக்கும் திருப்தியை உண்டுபண்ணு மென்பது எனது துணிபு.

பகவானுடைய மஹிமையை நன்கறிந்து துதிக்கவேண்டுமானால், அறிவிற் சிறந்த பண்டிதர்களுக்குக்கூட முடியாத காரியமாகும். நம்போன்ற அற்பபுத்தி யுடையவர்களுக்கு எப்படி சாத்யமென்று கருதி அவ்வழியே செல்லாமலிருப்பது சரியல்ல. பின்னை, நமது புத்திக் கெட்டியவரையில் கபடமில்லாத உள்ளன்புடன் ஸ்தோத்ரஞ் செய்வோமாகில் புத்திரனின் மழலைச்சொல்லைச் செவியுற்ற தந்தையைப்போற் சகல ஜனங்களுக்கும், தந்தையான ஸ்ரீ மஹாதேவரும் ஸந்தோஷத்தை யடைவாரென்றும், அவரவர்கள் தம்தம் சக்திக்

கியன்றவாறு கடவுளைத் துதிசெய்து நற்கதிபெற வேண்டு மென்றும் இதனால் அறியவேண்டும்.

மூவுலகங்களுக்கும் அதிபதியாயும் நிக்ரஹாநுக்ரஹ சக்தி வாய்ந்தவனாயும் விளங்குகிற ஸ்ரீ பரமேச்வரன் கூட, “ஸம்ஸாரம் மிகவும் கஷ்டத்தை உண்டுபண்ணக்கூடிய தாகும்; ஆகையினால் அதன் ஸம்பந்தம் ஒரு சிறிதும் நமக் காகாது” என்று கருதி ஸம்ஸார சம்பந்தமான சகல பதார்த் தங்களையும் அறவே ஒழித்து வேறெவ்விதமான பற்றொன்று மில்லாமல் தான் மாத்திரம் ஏகாங்கியாய்ப் பிக்ஷாவிருத்தி யில் சுகமாயிருக்கிறான். ஸம்ஸாரத்தினால் ஏற்படும் கஷ்டம் அதிகமென்பதையும் அதனாலேதான் பகவான் கூட அதனை விலக்கியிருக்கிறானென்பதையும் நம்போன்றவர்கள்உணர்ந்து கொண்டு எத்துணைச் சிரமமேற்பட்டாலும் ஸம்ஸாரத்தி லிருந்து விலகி உய்யவேண்டிய வழியை அவசியம் தேட வேண்டுமென்பது விளங்குகின்றதல்லவா? அந்த ஸம்ஸார துக்கத்தினின்றும் நீங்குவதற்கு எவனுடைய திருவடித் துணை ஸர்வஸுலபமான ஸாதனமாக இருக்கின்றனவோ அவனை நாம் போற்றித் துதிப்போமாக!

# 1. ஆலய வழிபாடு

## விக்ரஹ ஆராதனம்

மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் விரும்புவதும் அடையவேண்டுவதும் சுகமே. ஈசுவரப்ரஸாதம் கிடைத் தாலன்றி அவ்வேட்கை நிறைவேருதாகையால் அது கிடைப் பதற்கு ஈசுவர ப்ரதிபிம்ப விக்ரஹத்தை வைத்துப் பூஜிக்க வேண்டும். அப்படி நெடுநாள் விக்ரஹத்தின்மீது ஈசுவர நாட்டம் வைத்துப் பூஜித்துப் பக்திசெய்துவந்தால், ஈசுவரக் கிருபையுண்டாகி முத்தியடைவதற்குச் சகாயமாகும்.

விக்ரஹாராதனஞ் செய்வதைப்பற்றிப் பூர்வத்திலேயே புத்தமத நூல்களும், முகம்மதியர்களும், கிறிஸ்தவர்களிற் சிலரும் கீழ்வருமாறு கூறுகிருர்கள்: கடவுளெங்கும் நிறைந் திருக்கும்போது ஓர் விக்ரஹத்தின்மீது ஏன் கடவுளை ஸ்தாபிக்கவேண்டும்? நாம் கடவுளை ஓரிடத்தில் ஸ்தாபிக்க முடியுமா? எங்கும் நிறைந்த கடவுளை ஓரிடத்தில் இருப்ப தாக மாத்திரம் நினைப்பதே பெரும்பாவமல்லவா? இப்படி அவர்கள் கூறுகிருர்கள். சிலையைக் கடவுளாகப் பாவிப்பது அறியாமை யென்றுஞ் சொல்லுகிருர்கள். அஃது எங்களது வேத சம்மதமில்லை யென்கிருர்கள்.

அப்படி அவர்கள் கூறுவது வேதப் பிரமாண மற்ற தாயும், யுக்திக்குப் பொருந்தாததாயும் இருக்கின்றது. ஆதியில், இப்பாரத நாட்டிலே பல பெரியவர்கள் பல காலம் வருந்தி உழைத்து மோக்ஷத்துக்குச் சாதகமென்று கண்டு பிடித்திருப்பதை விசாரணையற்ற இன்ஞேர்கள் திடீரென்று கெட்டதென்று கூறிவிடுகிருர்கள். எங்கும் ஒரேபடியாக

ஓடிக்கொண்டிருக்கிற பரிணும ரூபமனத்தை வசப்படுத்தி ஆத்மாகாரமாகச் செய்யமுடியாத மந்தபுத்தி யுடையவர் களுக்காக ஞானிகள் விக்ரஹாராதனையை ஏற்படுத்தி யிருக் கிறார்கள். மனது ஜனனமரண விகாரங்களுக்கு உட்பட்டுச் சலன சக்தியோடு கூடியதாகையால் அதை முதலிலேயே ரூபமில்லாத அகண்டாகார பரமாத்மாவில் நிறுத்துவது சுலபமன்று; ஆகையால் ஆரம்பகாலத்தில், பூதாகாரமான விக்கிரஹமொன்றை உண்டாக்கி அதில் மனத்தை நாட்டி அசைவற்று நிற்கச்செய்தால் ரூபமற்ற பிரம்ம ஸ்வரூபத்தி னிடத்தில் மனத்தை நிறுத்துவது எளிதாகும். இவற்றை எண்ணுமல் வீணுக வாயினுல்மாத்திரம் விக்ரஹாராதனம் எதற்கு என்று கூறுபவர்களை ஒன்றுந் தெரியாத லோகமயக்க உன்மத்தர்களென்றே கருதவேண்டும். யதார்த்த ஞான மடைய விருப்பம் இருப்பவர்களும் இருந்து அடைந்தவர் களும் அவ்விதம் கூறமாட்டார்கள். ஆதலால் விக்ரஹாரா தன ரூப லக்ஷணத்தைப் பற்றிச் சிலவற்றைக் கூற எண்ணு கிறோம்.

## ஆலயமென்பதன் பொருள்

'ஆ' வென்பதற்குப் பசுவென்றர்த்தம்; லய மென்பது சேர்க்கை யென்னும் பொருளுடையது. பசுவாகிய ஜீவாத்மா எதனிடத்துச் சேர்க்கையடையுமென்று ஆராயுமிடத்துப் பரம புருஷனிடத்தென்றே தெளிவாய் விளங்குகிறது. அப் படி ஜீவாத்மா பரமாத்மாவை அடையவேண்டிய அந்தரங்க ஸாதன ஆலய வழிபாடுகளின் லக்ஷணத்தை இங்கே கூற வில்லை. பாஹ்யஆலய வழிபாட்டின் லக்ஷணத்தை உள்ள வாறு கூறத்துணிகிறோம்:

## ஆலய வழிபாட்டின் லக்ஷணம்

ஸ்வாமி தரிசனத்தை உத்தேசித்து ஆலயத்துக்குப் போகப் புறப்படும்போதே வேறு யாதொரு சிந்தனையுமின்றி அதே ஞாபகத்துடன் செல்லவேண்டும். பின்னும், மிகுந்த பயபக்தியுடன் வெற்றிலை சந்தனம் இவைகளைத் தரித்துக் கொள்ளாமல், கையில் குடை தடி, காலிற் பாதரக்ஷை முதலியனவில்லாமல், பிரயோஜனமற்ற வீண்வார்த்தைகள் பேசாமல் ஜகதீசுவரனது பூர்ணபக்தியோடு அவன் லீலா விசேஷங்களைப்பற்றி நினைத்துப் பேசிக்கொண்டு செல்லவேண்டும். அங்கே சென்றபின் ஈசுவரதரிசனம் செய்வதற்கு முன் சாஷ்டாங்கமாக மூன்றுதரம் நமஸ்கரித்தெழுந்து கைகளை உயரத் தூக்கிக்கொண்டு பலவித ஸ்தோத்திரப் பாசுரங்களையும், ஈசுவர நாமங்களில் ராம ராம என்றுவது சிவ சிவ என்றுவது அநுஸந்தித்துக் கொண்டிருத்தல் வேண்டும். பிறகு தீபாராதனை முடிந்த பின்பு அருட்பாடல்களை வாக்கினுல் மெதுவாகக் கூறிக்கொண்டு ஆலயவலம் வரவேண்டும். ஒவ்வொரு வலத்திலும் மூன்று தடவை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து முடிந்தபின் ஸந்நிதானத்தில் நின்றுகொண்டு உருக்கமான மனத்துடன் கீழ்வருமாறு ஸங்கற்பித்தல் வேண்டும்:—

க. ஸ்வாமி ஆண்டவனே! எனக்கு அநித்தியமாதர், செல்வம், பூமி, புத்திரன் முதலியன வேண்டாம்.

உ. நித்யமான மோக்ஷத்தை மாத்திரம் அநுக்ரஹிக்க வேண்டும்.

ந. மாயையில் நான் மயங்கிப் போகாவண்ணம் அருளல்வேண்டும்.

இவ்வண்ணமாக நாடோறும் காலைமாலை ஆலயத்துக்குச் சென்று தரிசித்து வரல்வேண்டும். திரும்பி வீட்டுக்கு வரும்பொழுதும் ஸ்வாமிதரிசன விசேஷங்களை மனத்திற் பதியச் செய்துவரவேண்டும்.

இனி, ஆந்தர ஆலய வழிபாட்டின் லக்ஷணத்திற் சிலவற்றைக் கூறுகிறோம். ஆலயமென்பது ப்ரம்மரந்திரம். வழிபாடென்பது அங்கே மனத்தைச் சேர்ப்பிப்பது. விக்ரஹமென்பது பரமாத்மா. துவஜஸ்தம்பமென்பது சுஷும்நாநாடி. பலிபீடமென்பது பிடரிவழி. துவாரபாலகரென்பவை சூரியகலை, சந்திரகலை. சுற்றுப் பிராகாரமென்பது ஒஜஸ்வழி. சுற்றி வருதலென்பது மனத்தைச் சுஷும்நாநாடியிலேற்றிப் பிராணனையுஞ் சேர்த்துப் பிரம்மரந்திரத்திற் போய்ச் சேர்ப்பதாம். இவ்வாறு ஆந்தரரூப வழிபாடுகளை மிகச் சுருக்கமாகக் கூறினோம். ஆலய வழிபாட்டின் இரு தன்மைகளையும் யாவரும் இவ்விதமாக உணர்ந்து நடந்துகொண்டு வரவேண்டும்.

---

## மஹான்களின் நிலை

क्वचित्बालैस्सार्धं करतलजतालैस्सहसितैः
क्वचित्तारुण्यालंकृतनरनारीभिस्सह रमन् ।
क्वचिद्वृद्धैश्चिन्ताकुलितहृदयैश्चापि विलपन्
मुनिर्न्व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥

ஒரு சமயம் சிறு பையன்களுடன் ஸந்தோஷத்தை அடைந்து தம் கைகளாலே தாளம் போட்டுக்கொண்டு விளையாடுகிறவரும், பின்னொரு சமயம் யுவாக்களான ஸ்திரீகள் புருஷர்கள் இவர்களுடன் க்ரீடிப்பவரும், மற்றொரு காலம்

பலவித சிந்தைகளாற் பீடிக்கப்பட்ட ஹ்ருதயத்தையுடைய அதிகவயது சென்ற பெரியோர்களுடன்சேர்ந்து பலவாறாகப் புலம்புகிறவருமான முனியானவர் ஆசார்யருடைய அநுக்ரஹபலத்தால் விலக்கப்பட்ட அஞ்ஞானத்தையுடைய வராய் ஒன்றிலும் பற்றுதல் அடையமாட்டார்.

குரு கருணையால் அஞ்ஞானத்தை அறவே ஒழித்துச் சிறந்த ஞானம் பெற்று ஆத்மவித்தாய் விளங்கும் ஒரு மஹா னுடைய நிலைமையை இஃது அறிவிக்கிறது. இவ்வித மஹான், ஸ்படிகம்போன்ற சுத்தமான நிலைமையில் இருப்பார். ஸ்படிக மானது யாதொரு கல்மஷமுமில்லாம லிருந்துகொண்டு எந்த எந்த ஸமயத்தில் எந்தஎந்த வஸ்துக்களின் சேர்க்கை நேரு கின்றதோ, அதனதன் குணத்தைத் தானு மடைந்திருப்பது போல் பார்க்கிறவர்களுக்குத் தோற்றத்தை உண்டுபண்ணி அவ்வஸ்துக்கள் விலகிய பிறகு சுத்தமான தன்னிலைமை யுடன் எப்படி விளங்குமோ அவ்விதமே தம்மிடம் வரும் மனிதர்களின் நிலைமைக்கு ஏற்றவாறு பலமாதிரியாக இருப் பவராகத் தோன்றும் ஆத்மவித்தானவர் முடிவில் இயற்கை யான தம் சுத்த ரூபத்தோடுதான் விளங்குவார். அஞ்ஞா னத்தின் வாஸனை அற்பமேனும் அவரிடம் அணுகாது.

சில மஹான்கள், புத்திரேஷணை, தாரேஷணை, வித்தே ஷணைகளை (அதாவது தம் புதல்வனிடமும் பெண்டிரிடமும் பொருளிடமுமிருக்கும் ஆசையை) விட்டுவிட்டு, பசியேற் பட்ட காலத்தில் ஆங்காங்கே சென்று யாசித்துக் கிடைக்கும் பிக்ஷை யென்னும் அம்ருதத்தை யுண்டு சரீரத்தைத் தரிப்ப வர்களாயிருந்து மோக்ஷமார்க்கத்திற் செல்லவேண்டு மென் கிற விருப்பத்துடன் எல்லாவற்றிலும் மிகச் சிறந்ததும் பரமாத்மாவென்று பெயர்பெற்றதுமான ஜ்யோதியைத்

தாமிருக்கும் நிலையைப் பிறர் அறியாமலிருக்கும்படி ரகஸ்ய மாக ஹ்ருதயத்திலே தியானித்துச் சகல துக்கங்களையும் போக்கிப் பரமானந்தத்தை அடைந்துகொண்டிருக்கிறார்கள். எவருக்கும் துக்கத்தையடையாமல் எப்பொழுதும் சுகமாக இருக்கவேண்டுமென்கிற எண்ணமிருப்பது சகஜமே. அவ் விதத்தோற்றத்திற்கு உற்ற சாதனம் எதுவென்பதை மாத் திரம் கவனிப்பவர் அருமையினுமருமையாம். சாதனமின் றிச் சாத்தியமான சுகத்தைப் பெறச் சாத்தியமில்லையெனக் கருதி, ஒருவனுக்கு உண்மையான சுகத்தைப் பெற விருப்ப மிருப்பின், இங்கே காட்டிய மஹான்களின் நடத்தையைப் பின்பற்ற வேண்டும்.

## திரவிய ஸம்பாதனம்

“பிராம்மணத்வம் முதலான ஜாதிகளானவை பாதாள லோகத்தைஅடையட்டும்:அதாவது முற்றிலுங் கீழேபோகட் டும். உத்தமமான ஸ்வபாவமானது மலையிலிருந்து விழுந்து ஒன்றுமில்லாமற் சிதறிப்போகட்டும். தம்குலமானது அக்னி யால் தகிக்கப்படட்டும். சத்ருவைப்போல் மனத்துக்குக் கலக் கத்தை உண்டுபண்ணுகின்ற சூரத்தன்மையில் இடிவிழுந்து அதுவும் போகட்டும். எவ்விதமாகிலும் பொருளை யடைய வேண்டியதென்கிற இந்த ஒன்றுதான் நமக்கு முக்கியம். பொருளில்லாமல் இதர சிறந்த குணங்கள் எவ்வளவிருப்பி னும் அவை யாவும் அற்பமான புற்களைப்போல உபயோக மற்றவைகளாக ஆகின்றன. எது இருந்தாலும் எது போனா லும் ஒன்றையும் நாம் கவனிக்கவேண்டிய அவசியமில்லை. எப்படியாகிலும் தனத்தைச் சம்பாதிக்க வேண்டும்” என்று

தனத்தில் அதிக ஆசைகொண்ட ஒருவருடைய மனப்பான்மை இருக்கின்றது.

இல்லற வாழ்க்கைக்குப் பொருளைத் தேடவேண்டியது அவசியமே; ஆனாலும், தம் ஜாதி, குலதர்மம், தமக்கிருக்க வேண்டிய குணங்கள், பாபம், புண்யம், மற்று முள்ள சில தர்மங்கள் இவைகளில் ஒன்றையுங் கவனியாமல் முழுதும் தள்ளிவிடுவது சரியன்று; எவ்விதக் கெட்ட காரியங்களைச் செய்தாவது திரவிய ஸம்பாதனஞ் செய்வதே பெரிதென்று கருதக்கூடாது; அவரவர்களுக்கு ஏற்பட்ட தர்மங்களைக் கைவிடாமல், நியாய மார்க்கத்திலிருந்து கொண்டு பொருளை ஆர்ஜனஞ் செய்ய விரும்பவேண்டும்; அதிக ஆசைகொண்டு கெட்ட வழிகளிற் பிரவேசிக்கக் கூடாது.

---

## 2. ஆலய தத்துவ நிரூபணம்

शेषक्ष्माधरशेखरेन्द्रभवितः प्राकारसद्गोपुर-
क्रीडामण्डपकेतुपाकनिलयान्यागालयादीन्पुनः ।
पूजादीपनिवेदनोत्सवमहावाद्यानि नृत्यं तथा
तत्त्वानीति वदन्ति योगिनिकराः सत्त्वात्मकाः साधवः ॥

ஆதிசேஷமாமலைக்கு நிர்வாஹகரே! தேவரீருடைய திருக்கோயிலுக்கு உறுப்புக்களாக ஏற்பட்டிருக்கும் திருமதில்களும், திருக்கோபுரமும், மஹா மண்டபம் அர்த்த மண்டபம் சுகநாசி அந்தராளம் கர்ப்பமந்திரம் திருமடைப்பள்ளி யாகசாலை முதலியனவும், திருவாராதனமும், திருவிளக்கும், திருவமுது செய்தலும், திருவிழாக்களும், மேளம் தாளம் முதலான வாத்ய விசேஷமும், தாசிகளால் நடத்தப்படும் நடன விசேஷமும் ஸத்துவ வடிவினர்களாகிய யோகீந்திரர்களால் தத்துவங்களென்று சொல்லப்படுகின்றன.

" नाथ त्वत्सदनस्य गर्भनिलयः शीर्षं मुखन्त्वन्तरम्
कण्ठः स्याच्छुकनासिकार्धसदनं बाहू महामण्डपम् ।
कुक्षिः प्रावरणं सुजानु चरणं द्वारं पुनर्गोपुरम्
ह्येवं तावकमन्दिरं स्मृतमिदं त्वद्भक्तदेहात्मकम् ॥"

'ஓ நாதரே! தேவரீருடைய திருக்கோயிலுக்கு உறுப்புக்களாக ஏற்பட்டிருக்கிற கர்ப்பக் கிருஹமென்னும் மூலஸ்தானமானது சிரஸாகவும், அந்தராளம் முகமாகவும், சுகநாசி கண்டமாகவும், அர்த்த மண்டபம் தோள்களாகவும்,

மஹாமண்டபம் குக்ஷியாகவும், பிராகாரம் கால்களாகவும், கோபுரம் பாதமாகவும் விளங்கா நிற்கும். இவ்விதமாக அமைக்கப்பட்ட தேவரீருடைய திருக்கோயிலானது தேவரீருடைய அடியார்களின் சரீரமென்று நினைக்கப்படுகின்றது.

"सोपानञ्च पदं लसच्च कुमुदं ते सक्थि जंघे ज्वलत्
पद्मं सन्मकुटं शिखेति च दधन्नामानि लक्ष्मीपते ।
आसीनोत्तमपूरुषाकृति परं भूयाद्विमानं स्थितम्
भावत्कं मुनिवन्दितं च जगतां भव्याय दिव्यात्मकम्" ॥

ஓ லக்ஷ்மீபதியே! உபானம், பாதுகம், குமுதம், ஸக்தி, ஜங்கம், பதுமம், மகுடமென்னும் பெயர்களைப் பெற்றதும், முனிவர்களால் புகழப்பட்டதும், திவ்ய ஸ்வரூபத்தையுடையதும், மேன்மையை யடைந்ததுமா யிருக்கிற தேவரீருடைய விமானமானது தேவரீருடைய உத்தம பக்தனுடைய புருஷாகாரமாக அமைந்து இருக்கின்றது. ஆகையால் இத்திருக்கோலமானது உலகத்தின் க்ஷேமத்தின் பொருட்டு விளங்கிக்கொண்டு இருப்பதாகுக!

எம்பெருமானது திருக்கோயிலுக்கு உறுப்புக்களாயிலங்கும் ப்ராகாரம், கோபுரம், க்ரீடா மண்டபம், மஹாமண்டபம், த்வஜம், பாகசாலை, திருவாராதனம், திருவிளக்கு, நைவேத்யம், வாத்தியம், நிருத்தியம் முதலியவை யாவும் தத்துவங்களை விளக்குவனவென்று யோகீந்திரர்கள் கூறுகிறார்கள்.

இதன் விவரம் எங்ஙனமெனில்: எம்பெருமான் எழுந்தருளி யிருக்கின்ற மூலஸ்தான மென்பது சிரப்

பத்மஸ்தானம். அம்மூலஸ்தானத்துக்கு அடுத்த ஸ்தானமாகிய அந்தராளமென்பது முகம். அதற்கடுத்த ஸ்தானம் அர்த்தமண்டபம்; இது கண்டஸ்தானம். அதற்கடுத்தது மஹாமண்டபம்; இது மார்புந் தோளுங் கூடிய ஸ்தானம். இவையாவற்றையுஞ் சூழ்ந்து பிராகாரமென்று சொல்லப்படும் பகுதி துடைகளும் முழந்தாள்களுமாம். கோபுரமென்பது பாதம். இவ்விதமாகத் திருக்கோயில்கள் அடியார்களுடைய சரீராகாரமாக அமைக்கப்பட்டவை; பகவான் அச்சரீரங்களில் வசிக்கிறது போல ஆலயத்திலும் திருக்கோயில் கொண்டு ஆராதனத்தை உவந்தருளுகின்றார்.

இப்போது சொல்லப்பட்ட இவ்வாலய நிர்மாணம் அடியார்களது சயனத் திருக்கோலத்தைக் காட்டுவது. இவ்வாலயத்திற்குக் கர்பக் கிருஹத்தின்மேல் விளங்கும் விமானம் ஆஸீனத் திருக்கோலமாம். விமானத்திற்குச் சிற்ப சாஸ்திரங்களிலே கூறியவாறு, உபானம், பாதுகம், ஜகதி, ஜங்கம், குமுதம், பத்மம், கண்டம், சிரசு என்னும் பல நாமங்களைப் பெற்ற ஸ்தானங்கள் முறையே சரீரத்தில் அமைக்கப்பட்ட பாதம், முழந்தாள், தொடை, இடுப்பு, வயிறு, மார்பு, கண்டம், வாய், நயனம், நாசி, காது, புருவமையம், சிரசு என்னும் உறுப்புகளென்று அறியத்தக்கன. இவ்விஷயத்தைச் சிற்ப சாஸ்திரங்களும், வைகானஸ பாஞ்சாரத்திராதி வைஷ்ணவாகமங்களும், காமிகாதி சைவாகமங்களும் வேற்றுமையின்றி ஒருமுகமாகக் கூறும். ஆலயங்கள் மண்டபங்கள், ப்ராகாரங்கள், சபைகள், ஸ்தூபி, கோபுரவாயில், த்வஜஸ்தம்பம், திருவாசி, கதவு, திருமடைப்பள்ளி ஆகியவைகளின் தத்துவம் எல்லாம் அந்நூல்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

## கோபுர வாசல்

சயனத் திருக்கோலப்படி கோபுரத் துவாரத்தைச் சமீபத்திலுள்ள பாதஸதானமாகச் சிற்ப சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆயினும் இதனையே பாதப் பெருவிரல்களின் முடிவுகளாகவும் குதமலத்வாரமாகவும் ஆகமங்கள் கூறும். இது தக்ஷிண கோபுரத்துவாரமென்றறியத்தக்கது. கோபுரத்வாரங்களிற் சிறந்தது உத்தர கோபுரத்வாரம். இதுவே ப்ரஹ்மரந்த்ர ஸ்தானமாம். புருவமத்யஸ்தானம் அந்தராள கோபுரமும், உந்திஸ்தானம் பலிபீடமும், அந்தக்கரண புருடனுகும் கண்ட ஸ்தானம் கருடனுகாரம் அல்லது சைவாகமத்திற் கூறிய நந்தியாகவும் யோகீந்திரர்கள் அறிவார்கள்.

## த்வஜ ஸ்தம்பம்

ஆகமங்கள் த்வஜமென்பதற்குத் தர்மமென்று பொருள் கூறும். இதனை யோகீந்திரர்கள் தேகத்தில் வீணாதண்டம் போல் மூலாதார முதல் பிரம்மரந்திரம் வரைக்கும் மேனேக்கிச் செல்லுகின்ற ப்ரஹ்ம நாடியாகக் கூறுவர். ஸ்தம்பத்தைப்போலச் சரீரம் நேராக இருந்து பிரகாசிக்கும். இடைகலை பிங்கலையென்னும் இரண்டு நாடிகளின் வழியே போய்த் திரும்பும் பிராணவாயுவை நடுநாடியில் நிறுத்திச் சிறிதும் அசையாமல் தியானிக்கிற் பிராணவாயு நிற்கும்; அது நிற்க, மனமும் நிற்கும்; அது நிற்க ஐம்பொறிகளும், அவை நிற்க விஷயங்களும் அடங்கும். அவையடங்கலால் பிரபஞ்ச விஸ்மிருதியடங்கும்; அதனுல் ஆத்மஸாக்ஷாத்காரமும் அதன் மேற் பிரஹ்மாநந்தமும் தோன்றும். ஆதலால் இந்தத் துவஜ ஸ்தம்பம் தேவாலயங்களில் மூலஸ்தானத்துக்கு நேராக நிறுத்தப்பட்டமை காண்க.

## தீபங்கள்

"मूलाधारे प्रसुप्तं भुजगवरमयो वक्त्रमुद्बोध्य वायु-
ज्वालोन्मेषेण चक्राण्यथ षडपि मुदातीत्य योगक्रमेण ।
पीत्वा चान्द्रीं सुधाञ्च प्रमदभरजुषां योगिनां ज्ञानदृष्टे-
रुद्भूता ये प्रकाशास्तव सदनवरे ते हि दीपप्रदीपाः" ॥

மூலாதாரத்தில் அதோமுகமாய் உறங்கும் குண்டலி யென்னும் பாம்பை மூலக்கனலை மூட்டியெழுப்பி மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை யென்னும் ஆறு சக்கரங்களையும் யோகக்கிரமப்படி ஏறிப்போய்ச் சந்திரனுடைய அமிர்தத்தைப் பானஞ்செய்து அகம் மகிழ்கின்ற யோகிகளுடைய ஞானநேத்ரத்துக்குப் புலப்படும் மின்மினி, மின்னல், தீபம், பந்தம், சூரியன், சந்திரன் முதலியவற்றின் பிரகாசங்களைப்போல் உதிக்கும் அருட் பிரகாசங்கள் எவையோ அவையே ஆலயங்களில் தீபப்ரதீபாதிகளாம்.

## வாத்தியங்கள்

சைவ வைஷ்ணவாலயங்களில் திருவிளக்கிடல், வாத்தியம் ஸேவித்தல், திருவலகிடல், திருமெழுக்கிடல், விதானங்கட்டல், திரைச்சீலை சாத்துதல், திருமாலை சாத்தல் முதலியன புண்யங்களா மெனவும், செய்தவர்கள் ஞானவாயிலாக வீடடைவார்களெனவும் ஆகமாதி நூல்கள் கூறும். அவ்வுண்மை சரீரத்திலும் அறியப்படும்.

யோகிகள், சரீரத்திலேயுள்ள அசுத்த வாயுவைக் கழித்துப் புறத்தே யுள்ள சுத்தவாயுவைப் பூரித்துப் பெருவிரல்

களாற் காதுகளை அடைத்துத் தர்ஜனி விரல்களாற் கண்களை மூடி நடு விரல்களால் மூக்கை நெருக்கி வாயைப் பொத்திப் பிராணவாயுவைக் கும்பித்து வன்னி பீஜத்தால் மூலாக்கினி யைமூட்டிக் குண்டலி சக்தியை எழுப்புவர்; ஆறு தாரங்களை யும் ஆங்காங்குள்ள தேவதைகளையும் பிரணவத்தியானத்து டன் சென்று தரிசிப்பர்; ஆறு ஆதாரங்களுக்கு மேலாகிவிளங் கும் பிரஹ்மரந்திரத்திலுள்ள சந்திர மண்டலததை இளகச் செய்வர்; அங்கே உருகிப்பாயும் அமிர்தப்ரவாகம் நாடிகளில் நிரம்பும். அக்காலத்தில் அவைகளுள் தசநாடிகளினின்றும் சதங்கையோசை போலவும், சிலம்பின் அரவம்போலவும் "கண்டாமணியின் சப்தம்போலவும், சங்கத்தொனிபோலவும், வீணையின் இசைபோலவும், தாளத்தொனிபோலவும், வேய்ங் குழலிசைபோலவும், மத்தளத்தொனிபோலவும், மேக முழக் கம் போலவும் தசநாதங்களும் சிரமத்தியத்தில் அதோமுக மாகத் தோன்றுமென்பதும், அவர்க்கு அந்நாதங்களைக் கேட் டலே சாக்ஷியென்பதும், அதனுல் மெய்ஞ்ஞானம் உதிக்கப் பெற்றுப் பிறவாமுத்தியடைவாரென்பதும், நாம் ஒவ்வொ ருவரும் அவ்வாறே அந்நாதங்களைக் கேட்டுய்யவேண்டுமென் பதும் அறியத்தக்கன. அவர்கள் கேட்கும் நாதவிசேஷங் களே வாத்தியங்களாம்.

## திருவிளக்கிடல், விதானங்கட்டல்

இவை தேகாலயத்தில், மனமென்னுந் தகழியில் அறி வாகிய நெய்யை நிறைத்து உயிரென்னுந் திரியிலே பிராண னென்னுங் காற்றை நிறுத்தி, அஞ்ஞான மென்னும் இருள் நீங்க, பிரஹ்மஞானமென்னுந் தூண்டா விளக்கையேற்றி னோர்களும், ஸத்வமென்னும் மேற்கட்டுக் கட்டினவர்க ளுமே மோக்ஷமடைவார்களென்பதைக் குறிப்பனவாம்.

ஆலயங்களிற் பகவத் ஸந்நிதானத்திலுள்ள திரைச் சீலையினால் அவித்தையாகிய திரையே பிரஹ்மத்தைக் காண வொட்டாமல் மறைத்திருக்கிறதென்று உணர்ந்து, அதனை அவரது திருவருளென்னுங் கத்தியினாற் கீறி, ஞானக்கண் கொண்டு உள்ளபடி தரிசித்தவர்கள் பரகதி அடைவார்க ளென்பது அறியப்படும்.

## திருவலகிடல்

தேகாலயத்தினிடமாகப் பொருந்தி அழிவில்லாமற் கிடக்கும் காமம் வெகுளி மயக்கமென்னும் செத்தைகளை யும், ப்ரகிருதிதத்துவங்களென்னும் குப்பைகளையுங் களைந்து நீக்கிப் பரிசுத்தமாய் விளங்குதலையே ஆலயங்களில் திருவல கிடல் எனக் குறித்தனர்.

## திருமெழுக்கிடல்

இதன் உண்மை யூகிக்கற்பாற்று. இருதய கமலத்திற் பரவஸ்து தோற்றப்பெறுதலுக்கு, கோப முதலிய செத்தை களை யொருங்கே நீக்கி, வினைகடந்த தத்துவஞானமென்னும் நறுஞ்சாணத்தைக்கொண்டு, அன்பென்னும் ஜலத்தினோடு கலந்து மெழுக வேண்டுமென்பதற்கு ஆலயத்தில் திருமெழு கிடுதல் உபலக்ஷணமாய் விளங்கும்.

## ப்ரதக்ஷிண நமஸ்காரம்

ஆலயங்களை அடைந்தவுடனே ப்ரதக்ஷிண நமஸ்காரம் முதலியன செய்தல் வேண்டுமென்பதனால், பகவத் வ்யாபகம் ஆத்மாவினிடத்தில் விளங்குவதற்குக் காரணமாகச் செய்யப்

படுவது பிரதக்ஷிணமெனவும், தற்போதமென்னும் அதிகாரத்தை நடாத்தும் ப்ரஹ்மாதிகளான இச்சாஞானக்ரியைகளை நீக்கப் பரமபதியாகிய ஸர்வேசுவரனுடைய அடிமையாய் நின்று அவருடன் அத்துவிதமுற்றுநிற்றல் நமஸ்காரமெனவுங் குறிக்கற்பாலனவாம்.

## தேவமூர்த்தங்கள்

ஆலயத்தில் தேவமூர்த்திகள் இருத்தல்போலச் சரீரத்திலுந் தேவமூர்த்திகள் விளங்குவர். சரீரத்தின் புறத்திலே விராட்டும், சுரோத்ரத்தில் திக்கும், தொக்குவில் வாயுவும், சக்ஷுவிற் சூரியனும், ஜிஹ்வையில் வருணனும், ஆஹ்ராணத்திற் பூமிதேவியும், பாதத்தில் திரிவிக்ரமனும், பாணியில் இந்திரனும், வாக்கில் அக்னி தேவனும், உபஸ்தத்திற் பிரஜாபதியும், குதத்தில் மித்ரனும், பிராணனில் ஸூத்ராத்மாவும், அந்தக்கரணத்தில் ஹிரண்யகர்ப்பனும், மனத்திற் சந்திரனும், புத்தியில் தேவகுருவும், அஹங்காரத்திற் காலாக்னிருத்ரரும், சித்தத்திற் சிவபெருமானும், ரோமங்களிற் பலதெய்வங்களும், எலும்புகளிற் பூதப்ரேதாதிகளும், தசையிலே பைசாசரும் இராக்கதரும், நரம்புகளிற் கந்தர்வர் முதலிய தேவகணங்களும், வலக்கண்ணிற் சூரியனும், இடக்கண்ணிற் சந்திரனும், கழுத்தின் புறத்தில் மாயனது கோரவடிவமும், உள்ளே அவருடைய சாந்தவடிவமும், நாநுனியிலே சரஸ்வதியும், அனுஹதத்திலே லக்ஷ்மியும், மணிபூரகத்திலே பார்வதியும், விந்து மத்தியிலே ஜீவாத்மா பொருந்தும் ஸூக்ஷ்மரூபமும், ஹ்ருதயநடுவிலே ஸ்தூலரூபமும், இவ்விரண்டிற்கும் நடுவிலே அரூபவடிவமும், நெற்றிநுனியிலே மாயாசக்தியும், நெற்றிநடுவிலே நாதரூப பராசக்தியும், புருவமத்தியில் விந்து

சக்தியும், மூலாதாரத்திற் சிற்சத்தியும், பிரம்மரந்திரத்திலே ஸச்சிதாநந்த ப்ரஹ்மமும் இருப்பர். யோகீந்திரர்கள் இவ்வண்ணமாகவே தாரணை செய்வார்கள். அற்புதமான இந்தத் தாரணையானது உலகில் ஏனையோர்க்குப் புலப்படும் வண்ணம், ஆலயங்களிலே தேவமூர்த்தங்கள் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கின்றன.

## அஸ்த்ர பூஷண தத்துவம்

"चेतश्चक्रमसिश्च संवृतिरपि ज्ञानं तथैवेतर-
न्माला भूतगणा अहंकृतियुगं शंखश्च शार्ङ्गं शराः ।
अक्षाणां दशकश्च कौस्तुभमणिर्जीवः प्रधानं पुनः
श्रीवत्सोऽपि गदा महानिति हरे प्राज्ञैस्सदा भाव्यते ॥"

ஓ ஹரியே! தேவரீர் உவந்தருளுகிற அஸ்த்ர பூஷணங்களில் மனம் திகிரியாகவும், ஞானம் நந்தகமென்ற கத்தியாகவும், அஞ்ஞானம் அக்கத்தியாற் கிழிக்கப்படும் திரையாகவும், சூக்ஷ்ம பஞ்சபூதமும் ஸ்தூல பஞ்சபூதமும் முறையே ஜயந்திவனமாலையாகவும், இந்திரியாதி யென்கிற ஸாத்விகாஹங்காரம் சார்ங்கமென்னும் வில்லாகவும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் பத்தும் பாணங்களாகவும், ஜீவான்மாவே கௌஸ்துப மணியாகவும், ப்ரக்ருதி ஸ்ரீவத்ஸமென்கிற திருமறுவாகவும், மகத்தத்துவமாகிய புத்தி தத்துவமே கதை யென்கிற தண்டாகவும் சான்றோர்களாற் பாவிக்கப்படுகின்றன.

## பரிவார தேவதைகள்

"देवी स्यात्ज्ञानशक्तिर्बलनिचयपतिश्चागमस्सिद्धिसंघा
द्वास्थाश्शेषस्तुरीयं करणमहिपतिक्ष्माधरायीशितस्ते ।

पूजासामग्र्यभारः श्रुतिरपि खगराट् षड्गुणैश्वर्यमब्जम्
त्वोंकारो यज्ञसूत्रं प्रविमलपुरुषो भूषणं संविभाति ॥"

ஆதிசேஷமாமலைக்குத் (திருவேங்கடம்) தலைவராய் விளங்கும் வேங்கடேசுவரரே! இவ்வுலகமனைத்தையும் அஸ்த்ரங்களாகவும் பூஷணங்களாகவுந் தரித்துக்கொண்டிருக்கிற தேவரீர் அவ்வண்ணமாகவே தத்துவங்களையும் பரிவார தேவதைகளாகத் திருவுளம்பற்றி யருளுகிறீராகையால், அப்படித் திருவுளம்பற்றிய தேவரீருக்கு ஞான சக்தியே தேவியாராகவும், ஆகமம் ஸேனுபதியாகிய விஷ்வக்ஸேனராகவும், அணிமாதி அஷ்டசித்திகள் துவாரபாலகர்களாகவும், துரியமென்கிற அவஸ்தா விசேஷமே ஆதிசேஷனாகவும், அந்தக்கரணவிருத்திகளே பூஜோபகரணங்களாகவும், வேதமே கருடனாகவும், அருங்குணச் செல்வமே திருக்கரத்திற் றரிக்கும் கமலமாகவும், ப்ரணவமே பூணூலாகவும், சுத்த ஜீவனே பூஷணமாகவும் விளங்கா நிற்கும்.

## பூஜோபகரணங்கள்

" सत्याद्यष्टौ सुपुष्पाण्यखिलधमनिकाजीवनं चित्कळा सा
दीपः सत्कर्मधूपः परिचरणभटाः सर्वपापक्षयाश्च ।
छत्रं स्थानं परं ते व्यजनमपि यशश्चामरं पुण्यराशि-
र्वेदान्तः पीतवासो मकुटमजपदं कुण्डले ज्ञानयोगौ ॥"

ஸத்தியம், அஹிம்ஸை, இந்திரிய நிக்ரஹம், ஸர்வபூத தயை, க்ஷமை, ஞானம், தியானம், தபசு என்கிற எட்டு விதங்களே புஷ்பங்களாகவும், ஸகல நாடிகளும் கங்கை முதலிய அபிஷேக தீர்த்தங்களாகவும், சிந்தனைகளே தீபமாக

வும், ஸத்கர்மங்களே தூபமாகவும், ஸகல பாபக்ஷயமே பரி சாண படர்களாகவும், பரமபதம் குடையாகவும், கீர்த்தி விசிறியாகவும், புண்யஸமூகம் சாமரமாகவும், வேதாந்தமே பீதாம்பரமாகவும், பிரம்மலோகம் மகுடமாகவும், ஞானம் யோகம் என்னும் இரண்டும் கர்ண குண்டலங்களாகவும் விளங்கா நிற்குமென்பர் மேலோர்.

## விக்ரஹம்

க்ஷராக்ஷரமயரானவரும் உண்மையில் தமக்கோருருவ மில்லாமல் காரியகாரண ஸ்வரூபருமான பகவான் உபாஸ கர்களுக்கு ஸகல புருஷார்த்தங்களும் ஸித்திக்கும்பொருட் டுத் தம்மிடத்திலுண்டாகித், தம்மிடத்திலேயே நிலைபெற்று நின்ற சேதன விசிஷ்டமான லோகங்களை ஆபரணங்களாக வும் ஆயுதங்களாகவும் திருவுளம் உவந்தருளுகிறார்.

உற்பத்திநாச முதலான விகற்பங்களை யுடைய இப்பிரபஞ் சத்தைத் தமக்கொருரூபமாகக் கொண்ட பகவான் திருவுளம் பற்றிய அஸ்த்ர பூஷணாதி ஸஹிதமும் அப்ராக்ருதமுமான இந்த ரூபம், மந்த்ரஜபாதி ஸஹிதமான ஸாலம்பன மென் கிற மஹாயோகத்தை அப்யஸிக்கின்ற சமயத்தில் யோகிக ளுக்கு இன்றியமையாத ஸாதனமாயுபகரிக்கும். பரப்பிரஹ்ம ஸ்வரூபமாகிய இந்த ரூபம் பாவாஸ்பதவ ரூபமென்று சொல்லப்படும். சித்தத்தை நிச்சலமாக்கித் தியானிக்கும் யோகிகளுக்குத் தியான விசேஷத்தை ஸித்திக்கச் செய்யும் இத்திவ்யமங்கள ரூபத்தில் ஸகல லோகங்களும் வஸ்திரத் தில் கலந்த நூல்களைப்போல் கலந்து கோப்புண்டு விளங்கும்.

இத்திவ்யமங்கள விக்ரஹம் நீலமேக வர்ணமுடை யது. இத்தகைய திருமேனியை யுடைய இவ்வருட் பரஞ்

சோதி ரத்ந கசிதமான கிரீடமும், ஒளி விளங்கும் கர்ண குண்டலங்களும், சதுர்ப் புஜங்களும், மனோகரமான திரு முக மண்டலமும், செந்தாமரை மலர் போன்ற திருக்கண் களும், பவளத் திருவாயும், விசால மார்பும், மெல்லிய மலர்ப்பாதங்களும், சோபனமான ஸகல அவயவங்களும் நிறைந்தவராய், சுதர்சன பாஞ்சஜன்ய கௌமோதகி நந்தக சார்ங்காதி ஆயுதங்களும் ஸ்ரீவத்ஸ கௌஸ்துப வனமாலா வைஜயந்தி முதலிய பூஷணங்களும் தரித்து அனந்த ஸிம்மாஸ னத்தின்மீது வீற்றிருந்துகொண்டு, ஸகல லோகங்களிலும் தமது செங்கோன்மை பரவ விளங்கா நிற்பர்.

## பகவதாலய நிரூபணம்

" इष्टावासतनुर्द्विधा प्रभवति त्वग्रक्तमांसादिभि-
र्ज्ञेयैका मुनिधारणास्पदमसौ ब्रह्माण्डतुल्यापरा ।
तां युष्मद्वसतिं वदन्ति चरमां लक्ष्मीपते योगिनो
देहं तं वरपारमार्थिकमिमं ज्ञानास्पदं देहि मे ॥"

எம்பெருமானுக்கு வாஸஸ்தானமாகிய இச் சரீரம் வியாவஹாரிகமெனவும் பாரமார்த்திகமெனவும் இருவகைப் படும். அவ்விரண்டு வகைகளுள், துவக்கு, ரத்தம், மாம்ஸம், மேதை, மஜ்ஜை, அஸ்தி, சுக்லம் முதலியவைகளாற் காணப் படும் இச்சரீரமே வியாவகாரிகசரீரம். பாரமார்த்திக சரீர மென்பது முனீந்திரர்களுடைய தாரணைக் காஸ்பதமாயும் பிரஹ்மாண்டத்துக்கொப்பாயும் விளங்குவதொன்று. இப் பாரமார்த்திக சரீரமே எம்பெருமானுக்குத் தாரதம்மியத் தால் முக்கிய வாஸஸ்தானமாகப் பெரியோர்கள் கூறுவர். இக்கருத்துக்களைக் கருடபுராணத்திற் காணலாம். இவற்றை

யன்றி ஸப்த குலாசலங்கள், ஸப்த சாகரங்கள், ஸப்த த்வீ பங்கள், நவக்கிரக அண்டங்களென்பவற்றின் தத்துவங்களை யும் அப்புராணத்திற் காணலாம்.

வ்யாவஹாரிக சரீரத்தையும், பாரமார்த்திக சரீரத்தை யுங்கண்டு பாரமார்த்திக சரீரத்தில் எம்பெருமானை யோகி கள் பாவனைசெய்து வருவார்கள்.

## பிரம்ம வித்துக்களின் பெருமை

“ श्रीमत्ब्रह्मविदङ्गसाध्यसदने यं भोगमाप्नोषि तम्
सन्दर्श्य स्ववशीकरोषि हि जडानर्चागृहे साधने ।
तस्मिन्सज्जनविद्विषामफलदो नृणां पुनस्त्वं सदा
तस्माद्द्वेषविहीनभक्तममलं कृत्वाव मां श्रीपते ॥”

ஓ! லக்ஷ்மீபதியே! பெருமை பொருந்திய பிரம்மவித்துக் களின் தேஹமாகிற (ஹிருதயகமல) ஸாத்யாலயத்திலிருந்து கொண்டு, எந்தப்போகத்தைத் தேவரீர் அனுபவிக்கின்றீரோ அந்தப்போகத்தைத் தேவரீருக்கு ஸாதனலயமாகிற அர்ச்சா லயத்திற்காட்டி (எம்போலியரான) அறிவிலாரை வசீகரஞ் செய்துகொள்ளுகிறீர். அவ்வர்ச்சாவதாரமாகிய ஸாதன லயத்திலுள்ள தேவரீர் ஸாத்தியாலயமாய் விளங்குகின்ற மஹாத்மாக்களைப் பழித்து, தேவரீருடைய அர்ச்சையிற் சர ணம் புகுகின்றவர்களுக்கு எப்போதும் அருள் புரிகின்றதில்லை யென்று மேலோர் கூறுவர். ஆகையால் மஹாத்மாக்களைப் பழிக்காத (அவர்களிடத்தில் த்வேஷமில்லாத) வனாய், அர்ச் சாவதாரத்திற் பற்றுள்ள குற்றமற்ற பக்தனைச் செய்து அடி யேனை ரக்ஷிக்கவேண்டு மென்றார் ஒரு பாகவத சிரோமணி.

இதன் விசேஷார்த்தம்:-எம்பெருமான் பெருமைபொருந்திய பிரம்ம வித்துக்கள் முதலானவர்களின் ஹ்ருதயகமலமாகிற ஸாத்தியாலயத்திலிருந்து விளங்கிக்கொண்டு எந்த எந்த போகத்தை அனுபவிக்கின்றனரோ, அந்த அந்த போகங்களாகிய பகவதனுபவானந்த விஷயங்களையே தம் ஸாதனுலயமாகிற திருக்கோயில்களில் அடியார்களுக்குக் காட்டி, மந்தாதிகாரிகளையும் வசீகரித்துக்கொண்டு அருள்புரிகின்றனர். எம்பெருமானுக்கு ஸாத்தியாலயமாகிற மஹாத்மாக்களைப் பழித்து ஸாதனுலயமாகிற அர்ச்சையில் மாத்திரம் மந்தமதிகள் முதலியோர்கள் பக்திசெப்வாரேல், அவர்கள் அவ்வர்ச்சைவடிவினுல்உண்டாகும் பலனையடையாமல்துயரமடைவர். ஆதலால் ஸர்வபூத ஹ்ருதயவாஸரான பகவான் தம்மெய்யடியார்களது ஹ்ருதயத்தில் இருக்கின்ருரென்னும் ஞானத்தை அடைவதற்காகவே, அர்ச்சை ஏற்பட்டிருக்கிற தென்றும் அவர்களது ஹ்ருதயமே ஸாத்தியாலயமென்றும், அவர்கள் எம்பெருமானுக்கு ஸமானமானவர்களென்றும் நினைத்து அவர்களிடத்தில் மெய்யன்பு செலுத்தி, அர்ச்சையிலும் பக்திபுரிய வேண்டுமென்பது வேண்டப்பட்டதாம்.

नेत्रादिषु हरेरर्चाक्रियायै कविभिः कृता ।
ततोऽर्चायां हरिं केचिच्छ्रद्धया च सपर्यया ।
उपासत उपास्ता हि नार्थदा पुरुषद्विषाम् ।
" पुरुषेष्वपि राजेन्द्र सत्पात्रं ब्राह्मणं विदुः ।
तपसा विद्यया तुष्ट्या धत्ते वेदं हरेस्तनुम् ।
नन्वस्य ब्राह्मणा राजन्कृष्णस्य जगदात्मनः
पुनतः पादरजसा त्रिलोकं दैवतं महत् ॥"

என்று பாகவதம் 7-வது ஸ்கந்தம் 14-வது அத்தியாயத்தில், ப்ரஹ்லாத அஜகரஸம்வாதத்தில் அஜகரமஹா முனீந்திரர் ப்ரஹ்லாதனுக்கருளிய நிச்சயத்தால், பிரம்ம வித்துக்களிடத்தில் அன்பு விடாமல், அர்ச்சையிற் பக்தி புரிய வேண்டுமென்பது துணிபு. பிரம்ம வித்துக்கள் இன்னாரென்பது கண்டறிய ஸாத்தியப்படாததால் எம்பெருமான் ஸர்வ பூத ஸ்திதனாய் விளங்குகின்றா ரென்றாகிலும் நிச்சயங் கொண்டு மெய்யன்பு செலுத்தி அர்ச்சையில் வழிபட வேண்டு மென்பதறிக.

இதுவரைக்கும் ஆலய தத்துவங்கள் முதலியன விளக்கப்பட்டன. இவை யாவும் ஞானயோகிகள் தங்கள் சரீரத்திலே கண்டு மகிழ்வார்களென்பதும், அவர்கள் சரீரம் பாரமார்த்திக தசையில் அண்டத்துக்கு ஸமானமாய், அண்டத்திலுள்ள ஸர்வமும் பிண்டத்தில் விளங்குவனவாகுமென்பதும்; அதன் விவரமும் விளக்கப்பட்டன.

## பகவத் தரிசனம்

இதனுண்மையாவது: யோகீந்திரர்கள் தங்கள் ஹிருதயகமலத்தில் பகவத் ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்குஞ் சமயமாம். யோக சக்தியில்லாத ஏனையோர் கிரியைகளை அவலம்பித்துப் பகிர்முகத்திற் கண்டு வணங்குவர்.

## அபிஷேகம்

சிரத்தையாகிற நதியிலுள்ள நிர்மலமாகிய அன்பு என்னும் நீரினால், ஹிருதயகமலத்திலுள்ள பகவானைச் சுத்தி செய்தலே பகிர்முகத்திற் காணப்படும் திருமஞ்சன மென்பதன் உண்மை. யோகஞானபலத்தால் செய்யவேண்டிய அத்

திருமஞ்சனத்திற் சக்தியில்லாதார் தங்கள் தங்கள் அன்புக்கு அறிகுறிகளாக மஞ்சட்காப்பு, பசும்பால், தயிர், நெய், தேன், சர்க்கரை, இளநீர், பழவகைகள், பஞ்சாமிருதம் முதலியவைகளைக் கொண்டு பகிர்முகத்தில் திருமஞ்சனஞ் செய்விப்பார்.

## புஷ்பம்

பகிர்முகத்தில் அஷ்டபுஷ்பங்களென்று விசேஷ முற்றனவாகிய புன்னை, எருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரையென்பனவற்றைக் கொய்தலால் தோஷம் வருவதாலும், எச்சம், வாடல், வண்டு விழல் முதலிய குற்றமுறலாலும், அர்ச்சிக்கினும் ஸாயுஜ்யம் கொடுக்கா வாதலாலும் பிரம்மஞானிகள் இக்குற்றங்களொன்றும் இல்லாமல் விசேஷமாக விளங்கும் ஸமபாவம், சந்தோஷம் முதலிய மலர்களையும் கொல்லாமை, வாய்மை, ஐம்பொறிகளை யடக்கல், பொறை, அருள், அறிவு, தவம், அன்பு என்னும் அஷ்ட புஷ்பங்களையுங் கொண்டு அவை முக்திக்கேதுவாக இருப்பன வென்று உணர்ந்து ஹிருதய கமலாலயத்திற் பரமாத்மாவுக்குச் சாத்தி வீடடைவார்கள்.

## தூப தீபம

கிரியா சக்தி மலவாதனையைக் கழற்றுவதாதலால் அதைத் தூபமென்பர்; ஸத்கர்மங்களைத் தூபமென்று சொல்வதுமுண்டு. சிற்சக்தியின் வசமாய், ஞானம் விளக்கமாயிருத்தலால் அதுவே தீபமென்று கூறுவர். இவை அறியாமையையொழித்து அறிவைப் பெறும்பொருட்டாகப்பஹிர்முகத்தே கொடுக்கப்படுமென்னும் உண்மையை அறிந்து அந்தர்முகத்திட்டு உய்வர் பெரியோர்.

## நைவேத்யம்

எந்த எந்த வஸ்துக்களில் எவ்வெவர்க்கு அபிமத முளதோ அந்த அந்த வஸ்துக்கள் அவ்வவர்க்குப் போக்கியங்களாகும். ஸர்வேசுவரனுக்கோ ஆத்மவஸ்துவைக் காட்டிலும் பிரியமான வஸ்து வேறொன்றும் இல்லை. ஆதலால் அதுவே போக்கியவஸ்து; எனவே பூஜிப்பதற்கு யோக்கியமான வஸ்துவாகிய அதுவே திருவமுதென்னப்படும். அவ்வாத்மவஸ்துவை அவருக்கு ஸமர்ப்பிப்பதே நிவேதித்தலாம். பஹிர்முக நைவேத்யம் பிரம்மஞானிகள் மானஸிகமாகத் தங்கள் ஆத்மவஸ்துவைப் பரமாத்மாவினிடத்தில் ஸமர்ப்பிக்கும் கொள்கையை உணர்த்தும்.

## கற்பூர ஆரத்தி

பல திரவ்யங்கள் இருக்கவும் கற்பூரத்தையே விசேஷமாகக் கொண்டதன் காரணம் என்ன? வெண்மையான கற்பூர வடிவம்போலவே ஆன்மாக்களும் ஸ்வபாவத்தில் வெண்ணிறமான சுத்தஸத்துவமுறல் வேண்டும்; கற்பூரமானது அக்னிபற்றிய விடத்தே தன் வடிவமாக விளங்காது அவ்வக்னிஜோதிமயமாய் நிற்பதுபோல், ஆன்மாக்களும் ப்ரம்மஞானாக்னி பற்றியவிடத்தே மாயோபாதி நீங்கி, ப்ரம்மத்வம் விளக்கமுற்று நிற்கும். பின்னர் அக்கற்பூரம் யாதோர் பற்றுமில்லாமல் தன் வடிவம் முழுவதுங் கரையப்பெற்றுப் பஹிராகாசத்திற் கலந்து அதில் அத்துவிதமாய் விளங்குவதுபோல், ஆன்மாக்களும் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்கள் கரையப் பெற்று ஸகல பற்றுக்களும் கழன்று பரமாத்மாவுட் கலந்து, 'அஹம் பிரம்மாஸ்மி' என்று பேரின்பப் பெருவாழ்வடையும்; இவற்றைக் குறித்து

உணரவைத்த யுக்திக்கு ஏதுவான நற்குறியே கற்பூர ஆரத்தி யாகும்.

## பகவத் பிம்பம்

விஷ்ணுவாலயங்களில் த்ருவபேரம், உத்ஸவபேரம், ஸ்நபனபேரம், கௌதுகபேரம், பலிபேரமெனப் பஞ்ச பேரங்கள் விளங்காநிற்கும். அவை யாவும் கமலாலயாகா ரத்தை உணர்த்துவனவாம். எங்ஙனமெனில், தாமரைத் தடாகமானது தாமரைப் புஷ்பங்களையும், இலைகளையும், கொடிகளையும், கிழங்குகளையும் கொண்டு விளங்குவது போல, ஆலயங்களில் மூலஸ்தானமானது விமானத்தையே ஜலமாகக்கொண்டு பலிபேரம், ஸ்நபனபேரம், கௌதுகபேரம் முதலியவை இலைகளாகவும், உத்ஸவபேரம் புஷ்பமாகவும், ஸம்பந்தகூர்ச்சம் தண்டாகவும், துருவபேரம் கிழங்காக வும் பெற்றுவிளங்கும். மூலபேரமென்னுந் துருவபேர்மாகிய தாமரைக்கிழங்கினின்றுந் தோன்றிய ஸம்பந்த கூர்ச்சமாகிய நாளத்திற் பூத்த உத்ஸவபேரமென்னும் புஷ்பத்தையுடைய தாய், ஸ்நபன கௌதுக பலிபேரங்களாகிய இலைகள் நிறைந்து சோபாயமானமாய் இலகும். ஆதலால் இது ஹ்ருதயகமலால யத்துக்கு உபலக்ஷணமாகப் பஹிர்முகத்திற் காட்டப்பட்ட மை காண்க. தாமரை ஸம்பந்தமான இலை, கொடி, நாளம் முதலியவற்றிற்குக் கிழங்கு எப்படி மூலமோ, அப்படியே மேற்கூறிய பேரங்களில் துருவபேரமே சிறந்ததாக விளங்கும். ஆதலால் இதனை மூலபேரமென்றும், மூலஸ்தானமென்றுங் கூறுவர். இதுதான் முக்கியமான பகவத்பிம்பம்.

பகவானுக்குப் பிம்பமெனப்படுவது அடியார்களை அனு க்ரஹிக்கும் பொருட்டு அவர் ஸ்வேச்சையினால் தரித்த

சித்கன லீலா விக்கிரஹமான ஓர் அப்ராகிருத திவ்யசரீரமே யன்றி அனுத்யவித்யா ஸம்பந்தமான தோல், இரத்தம், மாம்ஸம் முதலிய தாதுக்களால் நிறைந்த ஜீவனது சரீரம் போன்றதன்று. இவ் வப்ராகிருத வடிவமே அடியார்களுக் குத் தியானம், பூஜை முதலியவைகளுக்கு ஆலம்பன சௌ கர்யமாய் உபகரிக்குமாதலால், இதனையே யோகீந்திரர்கள் யோகாரம்பத்தில் தியானிக்கக் கடவர்கள்.

இவ்வருட்டிருமேனி, பரமபதமென்னுமோர் அப்ராகிருத லோகத்தில் வெள்ளியங்கிரிபோலத் தவளவர்ணமான ஆதி சேஷஸிம்ஹாஸனத்தில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவியர்கள் சூழ்ந்து அகம்மகிழ, நீலமேக சியாமளவர்ணமுடையதாய்ப் பொன்னனும், பீதாம்பரமும் விளங்கக் கிரீடம், வைஜயந்தி, வனமாலை, கௌஸ்துபம், ஸ்ரீவத்ஸம், சங்கம், சக்கரம், கதை, சார்ங்கம், நந்தகம், லீலாகமலம், கர்ணகுண்டலங்கள் முதலானவையாகிய பூஷணாயுதங்கள் விளங்க, சதுர்புஜங் களும், வரதாபய ஹஸ்தங்களுமுடையதாய், அனந்த கருட விஷ்வக்ஸேனாதி நித்ய ஸூரிகளால் நிரந்தர பரிசர்யமான சரண நளினயுகளாலங்கிருதமாய் ஆன்மகோடிகளை அனுக்ர ஹித்துக்கொண்டிருக்கும். இத்தகைய திவ்யமங்கள விக்ர ஹம் யோகிகளுக்கே யல்லாது ஏனையோர்க்குத் தியான பூஜாதி விஷயங்களில்லாத சமயம் உபகரியாது; ஆதலால் அவித்யாசம்பந்தமான மானிடர்களுடைய நேத்திரங்களுக் குப் புலப்படும்படியான தாருலோஹ பாஷாணாதிகளில் அவ் வருட்டிரு வடிவை அமைத்து, ஹிருதய கமலத்தில் இருக் கிற பாவனையாக விமான விசிஷ்டமாயிருக்கிற ஆலயத் திற் பிரதிஷ்டை செய்து, அவ்வடிவத்தைத் தியானித்துத் தியானித்து ஆலம்பனத்துக்கு ஸௌகர்யமாக்கிக்கொண்டு

பூஜை முதலியவற்றால் உபசரித்து அன்பு பாராட்டி ஹ்ருதய கமலத்தில் அவ்வருள் வடிவம் நிலைபெறும்படியாக நாளடைவிலே ஸாதகஞ்செய்து வரவேண்டியதென்று மேலோர் விதித்திருக்கின்றனர்.

ஆன்மாக்களுக்குப் போகத்தை யூட்டவும், வினைகளை அறுக்கவும், யோகமுத்திகளை யுதவவுங் கொண்டருளிய இவரது அம்சங்களாகிய மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரசிம்ஹம், வாமனம், பரசுராம, ராம, பலராம, கிருஷ்ணாதி பலமூர்த்திகளும் இவரில்இடங்குவர். ஆகையால் ஸர்வஜனக்ஷேமத்தின் பொருட்டு அருள்வடிவங்கொண்டு பரமபதத்தில் விளங்கும் பரவாசுதேவாது பாவனாவிசேஷ ப்ரதிபிம்பமாகிய அர்ச்சாவதாரத்தில் அமர்ந்த திவ்யமங்கள் விக்ரஹத்தை யாவரும் எளிதில் அடைந்து பேறு பெற்றுய்யக் கடவாராக.

## சிவலிங்கம்

மேற் கூறிய வண்ணமாகவே பரமாத்மாவின் மூர்த்த ஸ்வரூபங்களில் ஒருவராகிய சிவபெருமானது திருவடிவைச் சிவாலயங்களிற் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று சைவாகமங்கள் கூறும். சிவபெருமான் பாலசந்திரன், கங்கை, கொன்றை முதலியன விளங்குஞ் சடாமுடியையும், ஐந்து திருமுகங்களையும், பத்துத் திருக்கரங்களையும், திரிநேத்ரங்களையும், இரண்டு திருவடிகளையும் உடையவராய், சூலம், மான், மழு, வாள், அக்னி, டமருகம், நாகம், பாசம், அங்குசம், கண்டாமணி, நீலோத்பலம், பரிவட்டம், மாதுளம் பழம், மாத்திரைக்கோல் ஆதியனவற்றைத் தரித்தவராய், வரதாபயஹஸ்தராய், தெளிபளிங்கு வடிவினராய் ஸ்ரீகைலாசமென்னும் ஸ்தலத்தில் வீற்றிருப்பர். இவரது மூர்த்தங்க

ளாகிய சந்திரசேகரர் முதலிய 25-வடிவங்களும், விநாயகர், பைரவர், வீரபத்திரர், சுப்ரமண்யர் என்னும் மூர்த்தங்களும் இவரில் அடங்குவர். சிவாலயங்களிற் பெரும்பாலும் இத் திருவடிவை லிங்காகாரமாகப் பிரதிஷ்டை செய்வர். ஆங்குள்ள பலிபீடம் பத்ரலிங்கமாகவும், ஸ்தூபி ஸ்தூலலிங்கமாகவும், சிவலிங்கம் ஸூக்ஷ்மலிங்கமாகவும் கொள்ளப்படும். இவற்றுள் ஸூக்ஷ்மலிங்கமே விசேஷமுள்ளது. லிங்கம் என்னும் பதத்துக்கு லயம், ஞானம், வ்யாப்யம், ப்ரகாசம், அர்த்த ப்ரகாசக சாமர்த்தியம், அறிகுறி என்பன பொருள்களாகும்.

"லிங்—கச்சதீதி லிங்கம்" என்னும் வியுத்பத்தியினால் லயார்த்தம் பெறப்பட்டு உலகமும் உயிர்களும் ஒடுங்கும் ஸ்தானமென்றறியப்படும். "லிங்க்யதே க்ஞாயதே அநேந இதி லிங்கம்" என்னும் வ்யுத்பத்தியினால் ஞானார்த்தம் பெறப்பட்டு ஸத்யஞானாநந்த லக்ஷணமுடையதென்று உணரப்படும். வ்யாப்யார்த்தத்தால் எங்கும் நிறைந்து விளங்குவதென்று பொருள்படும். ப்ரகாசார்த்தத்தால், "அங்கிங்கெனாதபடியெங்கும் ப்ரகாசமா"னதென்று கிரஹிக்கப்படும். அர்த்தப்ரகாசக சாமர்த்தியமாதலால், மேற்கூறிய அர்த்தங்களை யெல்லாம் விளக்குவதென்று பெறப்படும். அறிகுறியென்னும் அர்த்தத்தால் இத்தகைய அரிய அர்த்தங்களையெல்லாம் எளிதிலறியவைத்த ஓர் அறிகுறியென்று அறியப்படும். இவ்வுண்மைகளை யறியாதார் லிங்கமென்பதற்கு ஆபாஸ அர்த்தங்களைக் கூறிப் பாபம் மேலிட்டுத் தீயநரகிற்கு இரையாவர்; ஆதலால் "தெய்வமிகழேல்" என்னும் பழமொழியை உணர்ந்து இவ்வுண்மைகளையும் அறிந்து உய்வாராக.

---

# 3. அர்ச்சாவதார ஸ்தல விசேஷம்

எம்பெருமான் அர்ச்சாவதார ஸ்தலங்களில் திருவரங்கம் முதலிய எட்டு ஸ்தலங்களும் ஸ்வயம் வ்யக்த ஸ்தலங்களென்றும், அஸ்திகிரி முதலிய ஸ்தலங்கள் தேவ நிர்மித மான ஸ்தலங்களென்றும், திருவெவ்வுளூர் முதலிய ஸ்தலங்கள் ரிஷி நிர்மிதமான ஸ்தலங்களென்றும் மேலோர் கூறுவர். இம்மூவகைப்பட்ட ஸ்தலங்களிலும் ப்ராப்ய பூதகுண விசேஷங்களாகிற தத்துவங்கள் தத்துவ வேத்தாக் களால் அறியப்படுகின்றன. எம்பெருமானது திவ்ய தேச மானது எண்ணிறந்தனவாம். அவை யாவும் மூர்த்தி மகிமையும், ஸ்தல மகிமையும், தீர்த்த மகிமையும் பெற்று விளங்கா நிற்பன. அம்மூன்றையும் எம்பெருமானுகவே எண்ணவேண்டும். அவைகளை இப்படி முறையாக வணங்கு வோர் உண்மை விளங்கப்பெற்று முக்தி யடைவார்கள்.

பகவத் சொரூபங்களாகிய ஸ்தலங்கள் அளவிலாதன. அவற்றுள் ஸ்வயம் வ்யக்த ஸ்தலங்களே விசேஷம். அவை திருவரங்கம், திருவேங்கடம், தோதாத்ரி, சாளக்கிராமம், நரநாராயணாஸ்ரமம், புஷ்கரம், நைமிசம், ஸ்ரீமுஷ்ணம் என் பனவாம்.

நரநாராயணாஸ்ரமம், நைமிஸமெனப்படும் இரண்டும் ஸ்தல மான்மியமும், புஷ்கர க்ஷேத்திரம் தீர்த்த மான் மியமும், திருவரங்கம் முதலியன மூர்த்தி மான்மியமும் கொண்டு விளங்கும். ஸ்தலங்கள் தேவர்களாலும், முனி வர்களாலும் பகவான் ப்ரஸன்னமான ஒவ்வொரு கால விசேஷத்தாற் பிரார்த்திக்கப்பட்டுப் பிரதிஷ்டை செய்யப் பட்டவையாம். "ஞானிகள் வ்யவஹாரம் லோகோபகாரம்"

என்கிறபடி அவர்களுக்கு இவ்வர்ச்சையாற் பயனில்லை யாகுலும், தாம் அரிதிலடைந்த பெரிய பேற்றை யாவரும் எளிதில் அடைந்து உய்யவேண்டுமென்னும் கருணைநோக்கத் துடன் எம்பெருமானைப் பார்த்து, "இவ்விடத்தில் திருக் கோயில் கொண்டு வீற்றிருந்து வருகின்ற மெய்யடியார்க்குத் தேவரீர் எளிதில் அருள்புரியவேண்டும்" எனப் பலவாறு துதித்து வணங்கிக் குறையிரக்க, அன்பர்கள் வேண்டிய வேண்டியாங்கு ஈயும் பெருமான் அதற்கு உடன்பட்டு வீற்றிருந்தருளுகிற சிரேயஸ்ஸாதனமான ஸ்தலங்களே இவையென்பது திண்ணம்.

# 4. சிதம்பர ரகசியம்

" कृपासमुद्रं सुमुखं त्रिनेत्रं जटाधरं पार्वतिवामभागम् ।
सदाशिवं रुद्रमनन्तरूपं चिदम्बरेशं हृदि भावयामि ॥"

இப்பெரிய பூமண்டலத்துள்ளே, எல்லாவிதத்தாலும் மிகச் சிறப்புற்றோங்கி விளங்கும் நம் பரதகண்டத்தில் அநேக சிவாலயங்களும், விஷ்ணுவாலயங்களும், வேறு பல தேவர் ஆலயங்களும் இருக்கின்றன. அவைகள் அனைத்தினுங் கர்ப்பக்கிருகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், ஸ்தூபி, விமானம், பிராகாரம், கோபுரமென்னும் இவைகள் ஒரு தன்மையாகவே காணப்படுகின்றன. இவையன்றி ஒவ்வோர் ஆலயத்திலும் அவ்வாலயத்தின் பிரதான தேவதா பீடம் கர்ப்பக் கிருகத்திலேயே இருக்கிறது. இங்ஙனம் ஒன்று போல் எல்லா ஆலயங்களும் கட்டப்படுவதற்குச் சில முக்கிய காரணங்கள் உள்ளன. இங்கே சிலவற்றை விளக்கிக் காட்டுவாம்:

## ஆலயங்களின் வகை

உலகத்திலுள்ள மாந்தர் அனைவரும் உண்ணோக்காக அகப்பொருளை அறிந்து உய்யும் ஆற்றல் பெற்றிலாதலால், யாவருக்குந் தத்தம் சரீர இயல்பு ஆலயங்களில் வெளிநோக்காகக் காட்டப்பட்டிருக்கின்றன. இவ்வாலயங்கள் ஹ்ருதய கமலப்பிரஸ்தாரம் (ஹ்ருதய கமலத்தை விரித்துக் குறிப்பது) எனவும் சரீரப் பிரஸ்தாரம் (சரீரத்தை விரித்துக் குறிப்பது) எனவும் இருவகைப்படுமென்று ஆகமங்கள் கூறுகின்றன. இவற்றுள், ஹ்ருதய கமலப்பிரஸ்தாரத்தாற் சிதம்பர முதலிய

சிவஸ்தலங்களும் சரீரபிரஸ்தாரத்தால் வேறு பல ஸ்தலங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. மனிதருள்ளத்தே சொல்லாயும் பொருளாயும் அமைந்துள்ள ஒவ்வொரு வஸ்துவும் ஹ்ருதய கமலப் பிரஸ்தார ஆலயங்களாலும்,யோகிகள் அறிய வேண்டி எழுவகைத் தாதுக்களின் நிலைமை சரீரப்பிரஸ்தார ஆலயங்களாலும் குறிப்பித்துக் காட்டப்படும்.

## பிராகாரங்கள்

ஸ்ரீ பஞ்சாக்ஷரத்து ஒவ்வோரெழுத்தின் பொருளென ஆகமங்களில் ஒவ்வோரிடத்தில் குறிக்கப்பட்ட அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம். என்னும் பஞ்சகோசங்கள் சிவாலயங்களிலே ஐந்துபிராகாரங்களாக வுள்ளன. பிரணவமொழிந்த ஸ்ரீ அஷ்டாக்ஷரப்பொருளெனப் பாஞ்சராத்திரத்தின் ஓரிடத்திற்கூறப்படுஞ் சரீரத்திலடங்கிய சர்மம், மாமிசம், இரத்தம், மேதை, நரம்பு, எலும்பு, சுக்கிலம் என்னும் சப்ததாதுக்கள் விஷ்ணுவாலயங்களிலே ஏழு பிராகாரங்களாய் இருக்கின்றன. பிரணவத்தைக் கூட்டினால் சிவமந்திரம் ஆறெழுத்தும், நாராயண மந்திரம் எட்டெழுத்துமாகும்.

சிலவிடங்களிலே ஆலயங்கட்டுவதற்கு இடம், பொருள் குறைவுபடின், அங்கு ஸ்தூலஸூக்ஷ்மகாரண சரீரங்களைக் குறிக்கும் மூன்று பிராகாரங்களேனும், அனைத்திற்கும் பொதுவாக ஒரு பிராகாரமேனும் அமைப்பதுண்டு.

ஒவ்வொரு சரீரத்திலும் யோகிகள் அறியவேண்டிய மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறாதாரங்கள் இங்கே முறையே கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், ஸ்நான

மண்டபம், அலங்கார மண்டபம், சபாமண்டபமெனக் குறிக்கப்படுகின்றன. ஒவ்வொரு கர்ப்பக் கிருகத்திலும் கமலமுகைபோன்ற விமானம் ஒன்றிருக்கும். அதன் உட்புறத்திற்குள் கடவுளுடைய திருவுருவம் அமைக்கப்படும்.

இனி, ஹ்ருதய கமலப்பிரஸ்தார ஆலயங்களிலே ஹ்ருதயத்திலுள்ள விஷயங்கள் விரித்துக் குறிக்கப்படுமென்று முன்னே கூறியதற்குச் சிதம்பராலயத்தையே திருஷ்டாந்தமாக எடுத்து நிரூபிப்பாம்.

## சிதம்பரம் ஹ்ருதய கமலம்

இச்சிதம்பர க்ஷேத்திர மகிமை புராணங்களிலே மாத்திரம் புகழப்படுவதன்று; வேதத்திலும் தர்சனோபநிஷத்திலே, "சிதம்பரம் ஹ்ருதய மத்தியிலுள்ளது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால் இது விராட் புருஷனுடைய ஹ்ருதயஸ்தானமென்பது துணிபாம். அதுபற்றியே புராணங்கள், "இவ்வாலயங் கட்டும்பொழுது யோகமுதல்வராகிய ஸ்ரீபதஞ்சலி முனிவர் சிதம்பரரகசியம் அறிந்து அதை விச்வகர்மாவுக்கு அனுக்கிரஹிக்க அவன் அவராணையைச் சிரமேற்கொண்டு ஆலயஞ் சமைத்தனன்" என்று கூறுகின்றன. ஓர் மஹா யோகியின் சரீரத்தை வடக்கே தலையும் தெற்கே பாதமுமாக வைத்து நோக்கினால் அந்நிலையும் இவ்வாலய அமைப்பும் ஒத்திருக்கும்.

## சிதம்பர ஆலயத்தின் உண்மை

இவ்வாலயத்துள்ளே ஆயிரக்கால் மண்டபம் தலையின் புறத்திருக்கும் ஆயிரவிதழுள்ள கமலமென்னப்படும் மூளையைக் குறிக்கும். சிவகங்கை அம்மூளையின் மேற்புறத்துள்ள சந்திர புஷ்கரிணியெனப்படும் அமிர்தவாபியைக் குறிக்கும்.

தோன்றும். அது ஜீவன் முக்தாநுபவமாகையால் ஏனையோர்க்குத் தோன்றாது. ஜீவன் முக்தன் ஜீவேசுவரர்களைப் பார்த்தவனானதால் த்ருஷ்டாவாவன்; தன்னையே ஸாக்ஷியாக அறிதல் தரிசனம்; முக்தியில் தன்னைத்தானாகப் பார்த்தல், த்ரிசியம்; இவ்வண்ணமான ஸ்வரூபஞானமே திரிபுடிபோற் காணப்பட்டதேயன்றி, முன் சொல்லிய திரிபுடிபோலாகாது. ஸ்வரூபஞானத்துக்கு இவ்வண்ணமாய்த் தோன்றினாலும் ஸம்ஸாரபந்தமில்லை. இந்தத் திரிபுடிலக்ஷணமே திருவரங்கத்தில் மூன்றுவாயில்களால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

## புன்னை விருக்ஷம்

புன்னைவிருக்ஷமென்பது வடமொழியிற் புன்னாகமென்றும், புருஷனென்றும், தேவவல்லபமென்றும் பெயர் பெறும். புருஷசிரேஷ்டனைப்போற் பூஜிக்கப்படுவதால் புன்னாகமென்றும், புருஷனைப்போல் உன்னதமாகையாற் புருஷனென்றும், தேவர்களுக்குப் பிரியமானதாகையால் தேவவல்லபம் என்றும் இவ்விருக்ஷத்துக்குப் பொருள் விளங்கினமையால், இது புருஷனுக்கு அறிகுறியாமென்பது வ்யக்தம். புருஷனுக்கும் விருக்ஷத்துக்குமுள்ள ஸாம்யம் சுருதிஸ்மிருதிகளாற் பெறப்படும்.

## சந்திர புஷ்கரிணி

சந்திர புஷ்கரிணியென்பது ஹ்ருதயகமலம். சிரஸ்தானத்தில் விளங்கும் சந்திர மண்டலத்தின் அம்ருத கிரணங்கள் இதிற் பிரஸரித்து அம்ருதப் பொழிவினால் நிறைகின்றமையை நோக்கி இதனை மேலோர் சந்திர புஷ்கரிணியென்

பர். இக்கமலத்தைச் சுற்றி விளங்கும் எட்டுத் தளங்களே இந்த க்ஷேத்திரத்தைச் சுற்றி விளங்கும் அஷ்டதீர்த்தங்களாம். இச் சந்திர புஷ்கரிணியின்மீது புன்னைவிருக்ஷம் விளங்கலாற் புன்னைவிருக்ஷத்துக்குச் சமானமாகிய புருஷன் ஸமாதி நிஷ்டையினால் தனது ஹ்ருதய கமலத்தில் அம்ருதப் பொழிவை நிரப்பிவைத்துக்கொள்ள வேண்டுமென்பது அறியற்பாலதாம். ஹ்ருதய ஸ்தானத்தைக் கமலாகாரமாகக் கூறுவதென்னையெனின், கமலத்தைப்போல இதுவும் கிழங்கு, நாளம், தளம், கர்ணிகை முதலியன பெற்று விளங்கலாலென்க. ஹ்ருதய கமலத்துக்குத் தர்மம் கிழங்காகவும், ஞானம் நாளமாகவும், அஷ்டைசுவர்யம் தளங்களாகவும், வைராக்யம் கர்ணிகையாகவும் வைகானஸ ஆகமம் கூறும்.

## நதி முதலியன

இத்தகைய தத்துவத்தையுடைய இவ்வரங்கத்துக்கு மாலைபோல் இருபுறங்களிலும் ஓடும் நதிகள் சந்திர சூரிய கலைகளெனவும், ஸுஷும்நாநாடி விரஜா நதியெனவும், ஆகாமியசஞ்சித ப்ராரப்த கர்மங்கள் தான்ய பீஜங்களையுடைய களஞ்சியமெனவும், ஜாடராக்னி மடைப்பள்ளியெனவும், உண்ணாக்கு துவிஜஸ்தம்பமெனவும், அண்ணாக்கு அக்னிஸம்பந்தமான சூரிய புஷ்கரிணி யெனவும், உபநிஷத்துக்கள் கிளிகளெனவும், சாந்தாதிகள் ஆழ்வார்களெனவும், புஜங்கம் பஞ்சப்ராணனெனவும், அதன்மேலே கொள்ளும் சயனம் வாசிவசீகரமெனவும், பள்ளிகொண்ட ஸ்தலமே ரங்கமெனப்படுகிற ஹ்ருதய புண்டரீகமெனவும் கூறப்படும். இங்கே சயனத்திருக்கோலங்கொண்டு விபீஷணனைக் கடாக்ஷித்தல், எம்பெருமான் ஹ்ருதய கமலத்தின்கண் சயனித்

துக்கொண்டு ஜீவனை அருளோடு கடாக்ஷிப்பதை யொக்கு மென்று கூறுவர். இதற்குச் சுருதி "தஸ்மாத் ஜீவகநாத் பராத்பரம் புரிசயம் புருஷ மீக்ஷதே" என ஸூத்ரபாஷ்யங் கூறியவாற்றால், சிரவணமனன நிதித்தியாஸனங்களால் ஸமாதிகாலத்தில் ஹ்ருதயகமலத்தில் தியானிக்கத்தக்க பரவஸ்துவே எல்லாரும் ஸுலபமாகக் கண்டுகொள்ளும் படி யோகநிஷ்டையை ஸ்ரீரங்கக்ஷேத்திர வியாஜத்தாற் காட்டியருளுகிறாரென்பது விவேகிகளாவா ரனைவருக்கும் தெளிவாம்.

ஆதலால், மேற்கூறிய யாவும் அமர்ந்திலங்குகின்ற இம் மனுஷ்ய தேகத்திற்குப் பூர்ணமான அறிகுறி இத்திருவரங்க மாதலால் இது சிறப்பு நோக்கி 'கோயில்' எனப்படுகின்றமை காண்க.

## திருப்பள்ளி

ஸ்ரீரங்கநாதர் தனியாய்ப் பள்ளிகொண்டுள்ளார். இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீரங்கநாதருக்கும், ஸ்ரீரங்க நாச்சியாருக் கும், ஒருவர்க்கொருவர் ஸம்பந்தமில்லாமற் பிரத்யேகமாய் விளங்குங் காரணமென்னையெனின், கூறுவாம்:

'ஸமாதி நிஷ்டையிலிருப்பவன், ப்ரக்ருதி பரிணமமாகிய சரீரவானாக இருந்தபோதிலும், அந்தப்ரக்ருதியிற் பற்றில் லாதவனாக இருக்கக் கடவன். ப்ரக்ருதி தத்துவங்கள் தானல் லனாகையால், தான் அத்தத்துவங்களைக் கடந்து சின்மாத்ர னாய் விளங்குகின்றமை அறிந்துய்யக் கடவன்' என்னும் இவ் வுண்மையை ஸேவார்த்திகளுக்கு உணர்த்திக்கொண்டு, திரு வரங்கத்தின்கண் ஸ்ரீரங்கநாதர் நாச்சியார் ஸம்பந்தத்திற் பற்றில்லாதவராய்ப் ப்ரத்யேகமாகச் சயனத்திருக்கோலங் கொண்டருளுகின்றார்.

ஆலயங்களின் மங்களத்தை உத்தேசித்து ஓர் மங்கள தேவதையைப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்கிற ஆகம விதியினால் திருக்கோயில்களில் 'தனிக் கோவில் நாச்சியார்' என்னும் பெயரினால் ஓர் மந்திரம் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றமை எங்கும் பிரஸித்தம். திருவரங்கத்தின்கண் இலங்கும் ஸ்ரீரங்க நாயகி ஸந்நிதி என்னுமோர் தனிக்கோயிலும் இதனை நோக்கியே ப்ரதிஷ்டை செய்யப்பட்டுளதென்று உணரற்பாலது. இந்த ஸ்தலத்தில அறியவேண்டிய விசேஷமொன்றுண்டு. இங்கே திருவரங்கத் தெம்பெருமானுக்கும் இத்தனிக்கோயில் நாச்சியாருக்கும் ஒரு கோயிலின் சம்பந்தம் மற்றொரு கோயிலுக்கு நேரிடாவண்ணம், ப்ரத்யேகம் ப்ரத்யேகமாகத் திருமடைப்பள்ளிகளும், அர்ச்சகர்களும், பரிசாரர்களும் நியமிக்கப்பட்டிருப்பதும், ஒரு கோயிற் பிரசாதம் மற்றொரு கோயிலுக்குச் சம்பந்தப்படாமலிருப்பதும் பிரஸித்தமேயன்றோ? பிரகிருதிகாரியமாகிய சரீரத்துக்கு ஆலயம் உபலக்ஷணமாகையால், தனிக்கோவில் நாச்சியார், பிரகிருதிக்கு அதிஷ்டானதேவதையெனப்படுவாள்; ஸமாதிநிஷ்டர்களான பிரஹ்மவித்துக்கள் சரீரத்துடன் கூடினவர்களாயிருந்தும், அந்தப் பிரக்ருதிகுணங்களில் ஒட்டாமலும், அவை தம்மிடத்தில் அணுகாமலும், ப்ரக்ருதியை வெளியேவிடாமலும் தங்கள் தங்கள் வசத்திலே அந்தப்ரக்ருதியை வைத்துக்கொண்டு புளியம்பழத்திற்கும் அதன் ஓட்டிற்கும் ஸம்பந்தமில்லாமற் பார்வைக்கு ஒன்றேயென விளங்குவதுபோல விளங்கவேண்டும். ஆதலால், சமாதி நிஷ்டையை நூலாலறிவித்த பகவான் இவ்வுண்மையைத் தனியாயிருந்துகொண்டு தாமே தமது அர்ச்சா ஸமாதியாலும் அறிவிக்கிறாரென்பதை உணர்க.

## பகவத் கல்யாண குணங்கள்

எம்பெருமானது கல்யாணகுணங்கள் எண்ணிறந்தன. அவை ஒவ்வொரு சமயத்தில் அடியார்களை ஆட்கொள்ளும் பொருட்டு முக்கியமாய் விளங்காநிற்கும். அவையாவன:— மலமறப் பெற்றவர்களுடைய ஹ்ருதய கமலத்தை ஆலயமாகக்கொண்டு ஞானத்தைக் காட்டிக்கொடுத்தல்; ஞானத்தாலடையும் பயனைப்பெறுதலுக்கு மானிட சரீரமன்றி ஏனையவொன்று ஸாதனமன்றென்று அறிவித்தல்; ஆன்மாவும் ஈசனும் குணமும் குணியும்போல ஓர்பொருளாய் ஓங்காரவடிவாய் விளங்கினபோதிலும் ஆன்மாவுக்கு அச்சமில்லாதபோது அது பாவங்களை இயற்றித் துன்பக்கடலிலாழ்தலுக் கேதுவாமாதலால், ஆன்மாவினது நன்மையை விரும்பிப் பரசித்ரூபத்தையடைந்து விளங்கல்; ரக்ஷகாபேக்ஷை பிறந்தார்க்குத் தமது திருவடியே ரக்ஷகமென்று காட்டுதல்; தம்பால் ஆதாங்கொண்டவர்களுடைய மனம் உருகும்படி செய்தல்; தமது நிரதிசயமான போக்யத்தை விரைவிற்கிட்டி அனுபவிக்கப்பெரிதும் மெலிகின்றவர்களுக்கு உறுதியைக்காட்டிச் சுகமருளுதல்; அடியார்களைக் காக்கும் விஷயத்தில் தம்மனம் ஒருகால் பிறாற் சலிக்கப்படுங்கொலோவென அன்பர்கள்சங்கையடைந்துழி, அஃது அனுகூலராலுஞ் சலிக்கப்படாதென்று அவர்கள் திடங்கொள்ளும்படியான ஸ்திரத்வகுணத்தை உடையவராயிருத்தல்; கைமுதலிழந்த காலத்தில் ஆபத்ஸஹாாதல்; அன்புமேலீட்டினால் அடியார்களின் காமினித்தன்மையால் வரும் நாணத்தைப் போக்கித் தாமே அவர்களைக் கூடி அனுபவித்தல்; தமக்கேனும் தம் அடியாருக்கேனும் ஒருகால்தீங்குநேரிடுங்கொலோவென்று ஐயமுற்று அச்சம்மேலிட்டவர்கள், அவ்வச்சம்நீங்கிஇன்பமடையு

மாறு சௌரியாதிகளையுடையவராயிருத்தல்; அடியார்களுக்கு அருள்புரிதலில் அன்புள்ளவராகிய தாம் அங்ஙனம் அருள் புரிந்து ஸாத்தியமாகிய அவர்களுடைய ஹ்ருதயகமலத்தில் வஸிப்பவராக இருந்தும், அந்த ஸாத்தியத்திற்கு யாதொன்று தமக்குச் சாதனமாயிருந்ததோ அதனிடத்தில் நன்றி மறவா திருத்தல்; அன்பர்களுடன் கூடியிருக்குங்கால் தமது சிவம் மாறும்படியான ஸௌசீல்யத்தை யடைதல்; தம்முடன் கலந்த அன்பர்கள் மற்றொருவருக்கு அர்ஹமாகாவண்ணம், தாமே நாதரென்னும் திண்ணங்கொள்ளுதற்கு நாயக லக்ஷணத்தைப் பெறுதல்; தம்மைப் பிரிந்தவர்கள் விஷயத்தை நினைத்துத் தான் துயரமடையும்படியான மார்த்தவ குணத்தையடைதல்; தம்மை அடைந்தவர்களுக்குப் பிறவிநோயை அறுத்து இன்ப வீடருளுதல்; ஆன்மாக்களின் துன்பக்கடலைக் கடத்துவதற்குத் தாமே தமது திருவடியை ஓர் தெப்பம் போல உதவுதல்; மோக்ஷவழிக்குத் தாமே வழித்துணையாதல்; தம்மை அடைவதற்கு உபாயங்களாகிற கர்மம், பக்தி, ஞானமென்னும் மூன்று புருஷார்த்தங்களுக்கும் தாமே உபாயபூதரென்று அவற்றைக் காட்டியருளுதல்; அன்பர்களுக்கு மோக்ஷ மருளும் விஷயத்தில் அவர்கள் இச்சைப்படி நடத்துதல்; மோக்ஷம் விரும்புவோர்களுக்குத் தேகவ்யாமோஹங்கள் விரோதிகளாகையால் அவற்றை யொழிக்க வேண்டுமென்று தாம் தமதருளால் விளக்குதல்; ஆன்மாக்களுக்கு மோக்ஷந்தரும் விஷயத்தில், அவர்கள் பரிபாகமடையும் ஸமயத்தை எதிர்பார்த்திருத்தல்; யோக பலத்தாற் பூத சுத்தியை யடைந்து ஹ்ருதய கமலத்தை நிர்மலமாக்கிக்கொள்ளும் யோகிகளுடைய ஹ்ருதயத்தில் ஆராதிக்கப் பட்டு விளங்குதல்; இப்பிரபஞ்சமனைத்தும் ஓங்கார வடிவின்

பரிணுமமெனத் தாமே அறிவித்தல்; ஸர்வ சேதனு சேதனங் களுந் தம்மையே அடைந்திருக்குமென்னும் உண்மையை வாஹன ஆயுத பூஷணங்கள் வாயிலாகக் காட்டியருளுதல்; இவைபோன்ற அனந்த கல்யாண குணங்களைப் பெற்றுப் பேரருட் கடலாகிய பகவான் விளங்குகின்றார். ஆதலால் இவ்வருட்குணங்களையே உலகில் அறிவிலார் எளிதிற் கண்டு மகிழ்ந்து தம்மிடத்தில் அன்பு செலுத்தி உய்யுமாறு, அவ் வருட்குணங்களை அர்ச்சாவதாரத்திற் பிரகாசப்படுத்தி யருளுகின்றார்.

எம்பெருமானுக்கு ஸர்வ சக்தித்வம், ஸர்வ வ்யாபகத் வம், ஸர்வக்ஞத்வம், ஸர்வேசுவரத்வம் என்னும் பலவகை யான குணங்களுண்டு. ஆன்மகோடிகளுக்கு அவரவர் கர்மா னுஸாரமாய்ப் பலன்களைக் கொடுப்பதற்கு நீதிமான் என் னும் பெயரையும் அவர் வகித்திருக்கிறார். அவர் ஸர்வசக்தி வந்தராயிருந்தபோதிலும், நீதிமானுயிருக்க வேண்டியதும் நியாயமே. ஆயினுந் தமது நீதியின்படி தமது ஸ்வாஸமாகிய வேதத்திற் சொல்லப்பட்ட கிரமப்படி, அவர் ஆன்ம கோடி களை உய்விக்கத் திருவுளம்பற்றுவரேல், அனுதி கர்மபந்தத் திற் சிக்கி மேன்மேலும் பாவங்களை இயற்றித் துன்பக்கடலில் ஆழ்ந்து கிடக்கும் ஆன்மகோடிகளில் அவரது சட்டப்படி நியாயம் பெறுதலுக்கு யோக்கியமுள்ளவர் ஒருவருமில்லை. எல்லோரும் அவரது திருவருளைநோக்கித் தங்கள் பாபங்களை மன்னித்துக் கிருதார்த்தர்களாகச் செய்யவேண்டுமென்று பிரார்த்திப்பதற்கு மாத்திரம் யோக்கியர்களென்பது தங் கள் தங்கள் நிலைமையை உணர்ந்தார் யாவருக்கும் நிர்விவா மான விஷயம். எத்தகையோரும் எம்பெருமானது அருளை நோக்கி குறையிரக்கற்பாலராவார். ஆதலால், சர்வ சக்

த்வமும் சர்வேசுவரத்வமுமுள்ள எம்பெருமான் ஆன்ம கோடிகளை ஆட்கொள்ளுவதற்கு அருட்குணங்களைத் திரு வுளம் பற்றியருளுகிறாரென்பது வேதத்தின் துணிபு.

இவர் திருவுளம் பற்றிய பூஷணயுதங்கள் யாவும் சேதனு சேதனங்களைக் காட்டும் அறிகுறிகளெனக் கூறுவர் மேலோர். அவை வருமாறு:—

## கௌஸ்துபமணி

ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் தரிக்கின்ற கௌஸ்துபமணி யென்பது ஆத்மதத்துவத்திற்கு உபலக்ஷணமாம். ஆத்ம தத்துவம் லோகத்தோடு ஒட்டாதது; ப்ரக்ருதி குணங்க ளிற் சேராதது; க்ஷேத்ரக்ஞ ஜீவனென்று சொல்லப்படு வது; ஸ்வயம்பிரகாசமானது; ஈசுவரத்வத்தைப் பெற்று விளங்குவது; ஸர்வேசுவரனுக்குப் பாரவசியமாயும் பரம போக்மாயுமுள்ளது; ஆதலால் இதனைக் கௌஸ்துபமணி யென்பர். இதற்கு மணி ஸாம்யம் வந்தது எங்ஙனமெனின், எப்படி மணியானது ஸ்வயம் நிர்மலமாயும், ஸ்வயம் பிர காசமாயும், இதர வஸ்துக்களைப் பிரகாசிக்கச் செய்வதாயும், எவர்க்கும் மனோகரமாயும், பூஷணத்திக்கு உபயுக்தமாயும் இருக்குமோ அப்படியே ஆத்மவஸ்துவும் விளங்குகின்றமை யால் பூஷணங்களிற் சிறந்ததாகிய கௌஸ்துப மணிபோல் தரிக்கப்பட்டமை காண்க. இம்மணி, ஜீவாத்மாக்கள் பரமாத் மாவின் அங்காரமெனவும் அவை அவரிடத்திலேயேதோன்றி நின்று ஒடுங்குமெனவும், அவை எம்பெருமானுக்குப் பர மப் பிரியமான வஸ்துக்களெனவும், அன்பு மேலீட்டிற் பூஷணமாகத் தரிக்கப்படுகின்றனவெனவும், ஸ்வயம் நிர்மல மான ப்ரகாசமுடைமையால் மணி ஸாம்யத்தைப் பெற்று

விளங்குவனவெனவும் உணர்த்தும் பொருட்டுக் காட்டும் நற்குறியென்று அறியப்படும். இதற்குப் பிரமாணம், விஷ்ணு புராணம் முதலாவதம்சம், 22-வது அத்தியாயத்திற் காணப்படும்.

## ஸ்ரீ வத்ஸம் கௌமோதகி

ஸ்ரீ வாஸுதேவருடைய திருமார்பில் விளங்கும் மறுவுக்கு ஸ்ரீ வத்ஸமென்று பெயர். மேலோர் இதனைப் பிராட்டி யெழுந்தருளியிருக்கும் ஸ்தான மென்பர். அதனால் திருமால் திருமறுமார்பரெனக் கூறப்படுவார். ப்ரகிருதி தத்துவங்கள் அனைத்திற்கும் ப்ரதானமாயும் எம்பெருமானது லீலைக்கு உபகரணமாயு மிருக்கும் மூல ப்ரகிருதியையே ஸ்ரீ வத்ஸமென்னும் மறுவாகவும், மஹாதத்துவமாகிய புத்தி தத்துவம் ஸ்திரமாகையால் அதனைக் கௌமோதகி என்கிற கதையாகவும் புராணங்கள் கூறும்.

## சார்ங்கமும் பாஞ்சஜன்யமும்

ஸாத்விக ராஜஸ தாமசங்களென்னும் மூவகைப்பட்ட அகங்காரங்களிற் பூதாதியென்கிற தாமசாஹங்காரமானது சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தமென்பவைகளுக்குக் காரணமாகையால் அதனைச்சார்ங்க மென்னும் வில்லாகவும்; இந்திரியாதியாகிய ஸாத்விகாஹங்காரம் பாஞ்சஜன்ய மென்கிற சங்கமாகவும் எண்ணப்படும்.

## சுதர்சனம்

பகவானுடைய வலது திருக்கரத்தில் தரிக்கப்பட்ட சுதர்சன மென்னும் சக்கிரம், சலனாத்மகமாயும், மகாவேகத்தினால் வாயுவையும், நிராகரிக்கத்தக்கதுமான மனஸ்தத்துவத்திற்கு உபலக்ஷணமாம். இதனால் வேகத்தோடு கூடிய

அவரவர் மனத்தை அவரவர் அடக்கியாள வேண்டுமென்பது விளங்கப்பெற்றோம்.

## வைஜயந்தி வனமாலை

ஸ்தூல பூதங்களாகிய, பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாசமென்னும் பஞ்சமஹாபூதங்களும், தன்மாத்திரைகளாகிய சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களென்னும் ஸூக்ஷ்ம பூதங்களுமே முத்து மாணிக்க மரகத இந்திரநீல வஜ்ரமாகிய பஞ்சவர்ணமான வைஜயந்தி வனமாலையாகக் கருதப்படும். இதனால் ஸ்தூல ஸூக்ஷ்மங்களாகிய இருவகைப் பூதங்களும், அவரிடத்திலேயே தோன்றி நிற்குமென்பது அறிவித்ததாம்.

## அம்புகள்

அம்புகளைப்போல் விஷயங்களிற் பாயும் வேகத்தையுடைய சுரோத்ரம் துவக் சக்ஷு ஜிஹ்வை ஆக்ராணமென்னும் ஞானேந்திரியங்களும், வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தமென்னும் கர்மேந்திரியங்களுமாகிய பத்து இந்திரியங்களையுஞ் சரங்களாகத் தரிக்கின்றனர் பகவான். இவற்றால் தம்மடியார் இந்திரிய ஜயம் பெற்றவராதல் வேண்டுமென்பது விளங்கும்.

## நந்தகம்

நிர்மலமான ஞானமே நந்தகமென்னுங் கத்தியாகவும், அஞ்ஞானமே அதன் உறையாகவும் விளங்கும். அஞ்ஞானத்தினால் ஞானம் மறைக்கப்படுதலாலும், ஆணவக்காட்டை வெட்டுவதற்கு ஞானமானது கத்திபோல் விளங்குதலாலும், ஞானத்தைக் கத்தியெனவும் அஞ்ஞானத்தைஉறையெனவும் உவமை யாக்கினமை காண்க. இதனால் அடியார் நிர்மலமான

ஞானகட்கத்தை யுடையவராய் ஆணவக்காட்டை வெட்டிப் பேரின்பமடையவேண்டுமென்பது பெறப்பட்டதாம்.

## பீதாம்பரம் யக்ஞஸூத்ரம்

பீத+அம்பரம்=பீதாம்பர மென்பதனல், பீத - பானம் பண்ணப்பட்ட, அம்பரம் - அவித்யா ஆவரணமாகிய வஸ்திரத்தை யுடையவரென்று பொருள்படும். ஆதலால் தம்மையடைந்த அடியார்களுடைய அஞ்ஞானத்தைத் தாமே ஆகர்ஷித்துக் கொள்ளுபவரென்பதைப் பீதாம்பரத்தால் தோன்றச் செய்கிருரென்பதாம். அதுவுமல்லாமல், அறிவு சாதன நூலாகிய வேதாந்தமே பீதாம்பரமென்றும், ப்ரணவமே யக்ஞசூத்ர மென்றும் மேலோர் கூறுவர். இப்படியே எம்பெருமான் ப்ரகிருதி புருஷர்களையெல்லாம், அஸ்த்ர பூஷணமாகத் தரித்துச் சேதனர்களுக்கு ஹிதஞ் செய்தருளுவரென்பதுங் காண்க. (பாகவதம். 12-11, பார்க்க.)

## கர்ணகுண்டலம் கிரீடம்

எம்பெருமான் தரிக்கும் கர்ணகுண்டலங்கள் இரண்டனுள் ஒன்று ஸாங்கிய சாஸ்திரமெனவும், மற்றொன்று யோகசாஸ்திரமெனவும், கிரீடம் பிரம்மபதமெனவும் அறியற்பாலனவாம்.

## அனந்தாஸனம் சாமரம் விசிறி

ஸத்துவம் அனந்த ஸிம்ஹாஸனமாகவும், புண்ணியம் சாமரமாகவும், கீர்த்தி விசிறியாகவும் விளங்கும்.

இவற்ருல், மேற்காட்டிய பூஷணயுதங்களைத் தரித்த எம்பெருமானது திருவுருவம, அவரது ஸ்வதேஹமன்றும, தியான பூஜாங்கத்தம கறபனையாக அடியார்களுக்குக காட்டப்படுவதென்றும் அறிந்து கொள்ளவேண்டும்.

---

# 11. வரலக்ஷ்மி விரதம்

ஸ்ரீ பரமேச்வரன் பார்வதிதேவிக்கு வரலக்ஷ்மி விரதத்தைப் பற்றிக் கூறுகிறார்:—

முன்னொரு காலத்தில் மகததேசத்திலே குண்டினபுர மென்று ஒரு நகரமுண்டு; அந்த அழகிய நகரத்தில் சாருமதி என்னும் பெயர் கொண்ட பிராமண ஸ்திரீ ஒருத்தியிருந்தாள். அப்பெண்மணி மகா பதிவிரதையாகையினால் பதியினிடத்திலும் பெரியோரிடத்திலும் தெய்வத்தினிடத்திலும் பய பத்தியுடன் இருந்து சகல செளபாக்கியங்களையும் அடைந்து வந்தாள். சாருமதி தன் கணவனையே தெய்வமாக எண்ணியவளாதலால் நாடோறும் உதயகாலத்தில் எழுந்து பதியை வணங்கி அவனுடைய பாதங்களைச் சுத்தி செய்து புஷ்பமிட்டுப் பூஜைசெய்வாள். அப்பால் மாமி மாமன்மார்களையும் வணங்கி அவர்கள் விரும்பும் பணிவிடைகளைப் புரிந்து பின்பு வீட்டு வேலைகளையும் கவனித்து வருவாள். அவள் யாரிடத்திலும் மிதமாய்ப் பேசுவாள்; உரத்த குரலிலே பேசமாட்டாள்.

இவ்வாறு பதிவிரதைக்குரிய உயரிய குணங்களுக்கு இருப்பிடமாக விளங்கிய சாருமதியினிடம் மகாலக்ஷ்மிக்குக் கருணை உண்டாயிற்று. அப்பால் ஒருநாள் அந்த வரலக்ஷ்மி சாருமதியின் கனவிலே தோன்றி, "ஓ சாருமதி, உன்னிடம் எனக்குக் கிருபை உண்டாயிருக்கிறது. ஆதலால் உனக்கு அநுக்ரஹம் புரியப் பிரஸன்னமானேன். ஆவணி மாசம் பூர்வபக்ஷத்தில் சுக்ரவாரதினத்தில் என்னை ஆராதனை செய்தால் நான் உனது கோரிக்கைகளையெல்லாம் நிறைவேற்றுவேன்" என்று கூற, சாருமதி பரமசந்தோஷமடைந்து

சொப்பனவஸ்தையிலேயே லக்ஷ்மி தேவியை வலம்வந்து நமஸ்கரித்து, அநேகவிதமாய் ஸ்தோத்ரம் செய்தாள்; "ஏ ஜகத்ஜநநீ, உன்னுடைய கருணை கடாக்ஷத்தினால் அன்பர்களுக்குச் சகல சம்பத்தும் வித்தைகளும் உண்டாகு மென்பதற் கென்ன தடை? என்னுடைய பூர்வ புண்யவசத்தினால் உன்னுடைய பாததரிசனம் கிடைத்தது" என்றுகூறிப் போற்றினாள். லக்ஷ்மி பரம சந்தோஷமடைந்து சாருமதிக்குப் பல வரங்களை யளித்து அந்தர்த்தான மடைந்தாள்.

அப்பால் சாருமதி துயில் நீங்கிக் கண்விழித்து வீடு முழுவதும் சுற்றிப்பார்த்து மகாலக்ஷ்மியைக் காணமல், "ஓ, நாம் கண்டது கனவு!" எனத் தெளிந்து அக்கனவைத் தன் கணவனிடமும் மாமி மாமனார்களிடமும் சொன்னாள். அவர்கள் கேட்டு மகிழ்ந்து, திருமகள் திருவாய்மலர்ந்தருளியபடி ஒவ்வொருவருஷமும் ஆவணிமாசத்தில் வரலக்ஷ்மி விரதம் நடத்துவது என்று நிச்சயஞ் செய்தார்கள்.

அப்பால் ஆவணிமாசம் பூர்வபட்ச வெள்ளிக்கிழமை வந்தவுடன் உதயகாலத்தில் எழுந்து ஸ்நானம் செய்து விசித்ரமான பட்டாடை உடுத்து ஓர் திவ்ய ஆசனத்தைக் கோலமிட்ட சுத்தமான இடத்திற் போட்டு அதில் புதிய அரிசியைக் கொட்டி ஆல், அரசு, புரசு, அத்தி, மாங்கொத்துக்களும் வெற்றிலை பாக்கும் பழவர்க்கங்களும் வைத்து ஒரு தேங்காயுடன் கலசத்தை அலங்கரித்து வரலக்ஷ்மி தேவியை அந்தக் கலசத்தில் ஆவாஹனஞ் செய்தனர்; பின்பு மகா பக்தி சிரத்தையுடன் சாயங்காலத்தில் அந்த லக்ஷ்மியைத் தியானஞ் செய்து அர்சித்து ஷோடசோபசார பூஜைகள் செய்து ஒன்பது இழைகளும் முடிகளுமுள்ள நோன்புச் சரட்டை வலக்கையிலே கட்டிக்கொண்டு வரலக்ஷ்மிதேவிக்கு

ஒன்பது விதமான பலகாரங்கள் நிவேதனம் புரிந்து கற்பூர தீபாராதனை யெடுத்துப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்யலாயினர்.

ஒருதரம் வலம்வந்தவுடன், அந்தஸ்திரீகளுடைய கால்களிலே கலகலவென்னும் ஓசையுண்டாகியது. எல்லோரும் ஆச்சரியத்துடன் கால்களைப் பார்த்தனர். கால்களிலே கஜ்ஜை முதலிய ஆபரணங்கள் பூட்டப்பட்டிருப்பது கண்டு, "மகாலக்ஷ்மியினுடைய கருணையினாலே இந்த ஆபரணங்கள் நமக்குக் கிடைத்துள்ளன" என்று சொல்லிக்கொண்டே இரண்டாவது தடவை வலம் வந்தனர். அப்போது அவர்களுடைய கைகளில் நவரத்தின கசிதமான கங்கணாதி ஆபரணங்கள் இலகக்கண்டார்கள். அப்பால் மூன்றாவது முறை வலம்வந்தபின் வஸ்திராபரண பூஷணாலங்கிருதரானார்கள்; ஸ்வர்ணமயமான ரதகஜ துரகாதி வாகனங்களும்மாட கூடங்களுடன் கூடிய வீடும் உடையவர்களானார்கள். அப்பால் அப்பெண்மணிகளை அழைத்துக் கொண்டு போக அவரவர் வீடுகளிலிருந்து வேலைக்காரிகள் பலவிதமான வாகனங்களுடன் வரலக்ஷ்மிதேவியை ஆராதிக்கும் இடத்துக்கு வந்தார்கள். சாருமதி முதலிய ஸ்திரீகள் தங்களுக்கு வரலக்ஷ்மி பூஜையைச் செய்துவைத்த பிராம்மணர்களைக் கந்தபுஷ்பாக்ஷதைகளினால் பூஜை செய்து, வரலக்ஷ்மிக்கு நிவேதனமான பலகார வகைகளில் பன்னிரண்டு எண்ணுற்ற பலகாரங்களைத் தக்ஷிணை தாம்பூலங்களுடன் அவர்களுக்குக் கொடுத்து வணங்கி அவர்களிடம் ஆசீர்வாதம் பெற்று எஞ்சிய பலகாரங்களை எடுத்துக்கொண்டு தங்களுக்கென்று பணிப்பெண்கள் கொண்டு வந்திருந்த வாகனங்களில் ஏறித் தத்தம் வீடு நோக்கிச் சென்றனர். போகும்போது ஒருவரோடொருவர்,

"சாருமதி தேவியின் பாக்யமே பாக்யம். சாருமதிதேவியின் சொப்பனத்தில் வரலக்ஷ்மி வந்து வாக்களித்தபடியே நடந்தது பரமாச்சரியம்! அவளால் நாமெல்லாரும் மகாபாக்யவதிகளானோம்" என்று பேசிக்கொண்டே வீடுபோய்ச் சேர்ந்தார்கள்.

அது முதல் சாருமதி முதலிய உத்தம ஸ்திரீகள் இந்த வரலக்ஷ்மி விரதத்தைப் பிரதி வருஷமும் செய்து புத்ர பௌத்ர அபிவிருத்தியுடன் சகல ஸம்பத்தையுமடைந்து ஒரு குறைவுமில்லாமல் வாழ்ந்து வந்தார்கள்.

ஆகையினால் பார்வதி! இந்த விரதத்தைப் பிராமணர் முதல் நான்கு வருணத்தவர்களும் செய்யலாம். அவ்விதம் செய்கிறவர்கள் சகல ஸம்பத்துகளையு மடைந்து சுகமாயிருப்பார்கள். இக்கதையைக் கேட்கிறவர்களும் படிக்கிறவர்களும் விரதபூர்த்தி செய்கிறவர்களும் ஸ்ரீவரலக்ஷ்மிதேவியின் பிரஸாதம் பெற்று ஸர்வகாரிய சித்தியுடன் வாழ்ந்து முடிவில் நற்கதி யடைவார்கள்.

---

# 12. மஹாலய பக்ஷமும் நவராத்திரியும்

இந்த உலகத்திலே பிரவிர்த்தியையுடையவர்களாய்க் காம்ய கிருத்யங்களை வகிக்கும் ஜீவர்கள் அவரவர் விரும்பும் காம்ய பலன்களை அடைவதற்குக் கன்னியை அடைந்த சூரியன் மூலமாக, மாயா அவிச்சின்னனாகிய சகுணேசுவரனை ஆராதனை செய்கிறார்கள். அந்த ஆராதனைக்குக் கன்னியும் சூரியனும் சேர்கின்ற புரட்டாசி மாசமே உசிதமான தென்று நிச்சயிக்கப்பட்ட காலமாம். அந்த ஆராதனை புத்தியினால் சிரத்தையோடு அநுஷ்டிக்கப் படவேண்டியது. புத்திக்கு அதிஷ்டான சக்தியாகிய புதனுக்குக் கன்னி ஆட்சி வீடாகவும் மூலத்திரிகோணவீடாகவும் சொல்லப் படுகிறது. இம்முறையாகவே ஞானத்தைக்குறிக்கின்ற தநுசில் சூரியன் இருக்கும் காலம், அதாவது மார்கழி மாசமானது நிஷ்காமமாகிய உபாஸனைக்குரிய காலமாம். இவ்வுபாஸனை ஞானத்தினால் அதாவது வித்தையோடு அநுஷ்டிக்கப்பட வேண்டியது. ஞானத்துக்கு அதிஷ்டான சக்தியாகிய பிருகஹஸ்பதிக்கு தநுஸ் ஆட்சி வீடாகவும் மூலத்ரிகோண வீடாகவும் சொல்லப்படுகிறது. இக்காரணத்தால் கீதா சாஸ்திரத்தில் பகவான் மார்கழி மாசத்தை மேன்மைப்படுத்துகிறார்.

ஸ்தூலமாயமைந்த பிரதீக ஆராதனை முறையாலும் தநுர்மாஸ பூஜையும் ஆருத்ராதரிசனமும் வைகுண்ட ஏகாதசியும் மார்கழிமாசத்திலே அநுஷ்டிக்கப் படுவதைக் காணலாம். பன்னிரண்டுராசிகளையும் அத்யாத்ம திருஷ்டி ஸ்தானத்தில் ஆதி பௌதிக திருஷ்டிவைத்துப் பார்த்தால்

பிரம்மாண்ட முழுவதும் ஹிரண்யகர்ப்பருடைய சரீரம் என்பது உணரலாம். அவருடைய சக்திகள் பல பதங்களாகப் பிரிந்து பிரம்மாண்டமுழுவதும் வியாபகமாயிருக்கின்றன. அந்தச்சக்திகளில் ஒவ்வொன்றும் பிரவர்த்தித்துச் செல்வதற்குமார்க்கமும் காலப்பிரமாணமும் ஏற்பட்டிருக்கின்றன. பிரம்மாண்டத்தினுடைய அவயவங்களைப் பன்னிரண்டு ராசிகளாகிய ஸ்தானங்கள் சங்கேதமாகக் குறிக்கின்றன. அந்த ஸதானங்களின் வழியாக அந்தச் சக்திகளுக்கு நம்முடைய பிராணவாயுவைப்போலப் போக்குவரத்தாகிய சஞ்சார மேற்பட்டிருக்கிறது. அப்படி அவைகள் சஞ்சரிக்கையில் சகல சராசரங்களும் அவைகளாலே பாதிக்கப்பட்டுப் பலவாறான விகாரங்களுக்குள்ளாகிச் சுகதுக்க பேதமான போகங்களை நாடுகின்றன. அந்தப் பின்ன சக்திகளைக் கிரஹித்துக் கொண்டு உலகத்திலுள்ள சராசரங்களை ஆண்டு நடத்த அதிகாரம் பெற்ற தேவதைகள் அநந்தமானவர்கள். அவர்களுக்குச் 'கிரகம்' என்று பெயர். பிரதான புருஷனுக்கு இயற்கையான சக்தி பேதங்களைக் கிரகித்துக்கொண்டு அவர்கள் நடக்கின்றனர். 'க்ருஹ்' என்னுந் தாதுவிலிருந்து பிரதிநிதி என்கிற பொருளில் அவர்களுக்குக் 'கிரகம்' என்னும் நாமம் அமைந்திருக்கிறது. அவர்களில் முக்யமானவர்கள் ஒன்பது பேர்.

1. சூரியன் ஆத்மா; 2. சந்திரன் மனம்; 3. இராகு மனத்தின் ஸங்கல்ப விகல்பமென்னும் தோற்றங்களில் ஒன்று; 4. கேது அவைகளில் மற்றொன்று; 5. செவ்வாய் அதிஷ்டானமாகிய ப்ராப்தம்; 6. புதன் புத்தி; 7. குரு ஞானம்; 8. சுக்கிரன் போக இச்சை; 9. சனி மரணம்.

முன்னே கூறியபடி ராசிகளுக்கு ஸங்கேதமான அர்த்தமுள்ள பெயர் அமைந்தபின் அப்பெயர்களினுலே ஸாமான்ய

மாய்க் குறிக்கப்படும் பதார்த்தங்களின் வடிவங்கள் ராசிக ளுக்கு அமைக்கப்பட்டுள்ளன. அந்த வடிவங்களுக்கு அர்த்தமில்லை. வாஸ்தவத்தில் ராசிகள் வியவஸ்திதமான பொருள்களுமல்ல; ஸங்கேதமான கற்பனையாதலால் அவை களுக்கு வடிவமுமில்லை. ஆகவே மேலே விவரித்தபடி ஆத் மாவுக்குப் பிரேரகனை சூரியன் புத்திக்குப் பிரேரகனை புதன் வீடாகிய கன்னியிலிருக்குங் காலம் அதாவது புரட் டாசி மாசமானது காமியமான ஆராதனைக்குப் பொருத்த மான சமயமென்று கைக்கொள்ளப் பட்டிருக்கிறது.

## மஹாலயம்

மானிடர்களால் ஆராதிக்கப்பட்டு அவர்களுக்கு அநுக் ரஹம் செய்யும் அதிகாரத்தை வகித்தவர் இருவகுப்பினர். அவர்கள் பிதிர்க்கள், தேவர்கள் என்பவர்களே. மஹாலய மென்பது பிதிர்க்களின் ஆராதனையாகும். இவர்கள் தூம மார்க்காபிமானிகள். இவர்களின் ஆராதனைக்குக் கிருஷ்ண பக்ஷம் பொருந்தியது. இவ்ர்கள் ஐந்து வகையானவர்கள்:

| | | | |
|---|---|---|---|
| 1. புரூரவர்கள்<br>2. ருத்ரவர் | விசுவேதேவர் | 3. வஸு<br>4. ருத்ரர்<br>5. ஆதித்யர் | பிதிர்க்கள் |

இவர்களில் விசுவேதேவர் பிதிர்க்களுக்கு ஆதாரமான வர். இவரை முதலில் ஆராதித்த பின்புதான் பிதிர்க்களை ஆராதனை செய்தல் வேண்டும். பிதிர்க்கள் விசுவேதேவரை ஒருபோதும் பிரிந்திருக்கமாட்டார்கள். இவர் புவனத் திலுள்ள தேவர்களெல்லோருடைய அம்சத்தையுங் கைக் கொண்டு விளங்குகிறவர். அதனால்தான் இவர்க்கு விசுவ(எல் லாம்) என்னும் பகுதியுடன்கூடி எல்லாத் தேவர்களு மடங்

கியவர்களென்று பொருள்படுகின்ற நாமமானது கொடுக்கப்பட்டிருக்கிறது. 'வஸு' என்னுஞ்சொல் வஸ என்னும் தாதுவிலிருந்து உண்டானது. அதற்கு, 'கூட வசித்தல்' அல்லது இருத்தல் என்று பொருள். ஸ்தூலதேகமொழிந்தவர்களாயினும் ஸூக்ஷ்ம தேகத்துடன் நம்முடைய பக்கத்திலிருந்து நம்முடைய க்ஷேமத்தைக் கவனித்துக்கொண்டு இவர்கள் நம்மைக் காப்பாற்றி வருகிறார்கள்.

ருத்ரர் — (ருஜ:+த்ராவயதி) என்னும் தாதுக்களின் சேர்க்கையினால் நம்முடைய துக்கங்களை யெல்லாம் அகற்றிக்கொண்டு நமக்கு அநுக்ரஹம் செய்கின்றவர்களெனப் பொருள்படுகின்ற பெயரை யுடையவர்கள்.

ஆதித்யர் ஸ்வயம் பிரகாசத்தினால் எப்பொழுதும் விளங்குகிறவர்கள். இவர்கள் நமக்கு நல்லறிவையும் ஞானத்தையும் கொடுத்துக் காப்பாற்றுகிறவர்கள்.

பிதிர் கிருத்தியங்களில் நாம் ஆராதிக்கும் மூன்று பிதிர் வர்க்கங்களில் நமக்குச் சமீபமுறையுள்ளவர்கள் வஸுவினிடத்திலும், அதற்கடுத்தவர்கள் ருத்ரரிடத்திலும், அதற்கடுத்தவர்கள் ஆதித்யரிடத்திலும் அந்தர்க்கதமாகி அந்த அந்தத் தேவதைகளுடைய பிரஸாதத்தை நமக்கு வாங்கித் தருகிறார்கள். ஆகையாலேதான் அம்மூவரையும் அந்தத் தேவதைகளின் ரூபமாக நாம் ஆராதிக்கின்றோம்.

முன்சொன்ன ஐவகைத் தேவர்களும் மஹாலயபக்ஷகாலத்தில் ஸமஷ்டி சக்தியாகிய மாயாவிசிஷ்ட ஹிரண்ய கர்ப்பனுடைய பிரதிநிதியான கன்னியையடைந்த சூரியனிடத்தில் லயமாகிக்குறைதலை யடைந்த தங்கள் தங்கள் சக்திகளைப் பூர்ணப்படுத்திக்கொள்ளுகிறார்கள். அக்காலத்திற் செய்யப்படும் ஆராதனையானது ஸமஷ்டி சக்தியாகிய ஹிரண்யகர்ப்பன் அல்லது

சூரியனைத் திருப்தி செய்து அவர்களுக்குள் அந்தர்க்கதமாகின்ற சகல பிதிர்க்களையும் திருப்தியடையும்படி செய்கின்றது. அவ்வாராதனை மேலே கண்ட மூன்றுவிதமான பிதிர்க்களோடு கூட இறந்துபோன எல்லா உறவினர்களுக்கும் செய்யப்படுகிறது. மற்றக் காலங்களிற் செய்யப்படும் ஆராதனையைக் காட்டிலும் மஹாலய பக்ஷ ஆராதனையானது விசேஷமான பலனை யளிக்கும் பான்மையுடையது.

## நவராத்திரி

அவ்விதமாகவே நவராத்ரி உபாஸனையுங் கொண்டாடப்படுகிறது. மேலே கண்ட ஐந்துவிதமான பிதிர்த்தேவதைகளைத் தவிர மற்றத் தேவர்களெல்லாம் சுக்லபக்ஷ அபிமானிகளாகையால் புரட்டாசி மாசம் சுக்லபக்ஷத்தில் அவர்களுக்காக நவராத்ரி ஆராதனை செய்யப்படுகிறது. அவ்வாராதனையிலே பராசக்தியாகிய ஸமஷ்டி சக்திரூபத்தையே பிரதான தேவதையாகவும் பின்ன சக்திகளை வகிக்கும் மற்றெல்லாத் தெய்வங்களையும் அங்க தேவதைகளாகவுங் கொண்டு உபாஸிக்கிறார்கள். இவ்விதமாக நவராத்ரி காலத்தில் பின்ன சக்திகளெல்லாம் பூர்ணசக்தியில் அந்தர்க்கதமாகின்ற முறையேதான் தேவீமகாத்மியம் இரண்டாவதத்தியாயத்தில் அடியிற் கண்டவாறு எல்லாத் தேவதைகளும் அவரவர்களுடைய சக்திகளை ஸமஷ்டி சக்தியாகிய பரதேவதையிடத்தில் ஒப்புவித்தார்கள் என்று ஸ்தூலமாகச் சொல்லப்படுகிறது.

எல்லாத் தேவதைகளும் அவரவர்களுடைய ஆயுதமுதலியவைகளிற் காப்பாற்றி வைக்கப்பட்டிருந்த சக்தியினை அவரவர்கள் ஆகர்ஷித்து எடுத்துப் பரா சக்தியினிடத்தில் கொடுத்தார்கள். அதாவது: சூலத்திலிருந்து

பரமசிவனும், சக்கரத்திலிருந்து நாராயணனும், சங்கத்திலிருந்து வருணனும், சக்தியிலிருந்து அக்னிதேவனும், சாபம் முதலியவைகளிலிருந்து வாயுவும், வஜ்ராயுதத்திலிருந்தும் ஐராவதத்தின் மணியிலிருந்தும் இந்திரனும், காலகண்டத்திலிருந்து யமனும், பாசத்திலிருந்து அம்புபதியும், அக்ஷமாலையிலிருந்து பிரஜாபதியும், கமண்டலத்திலிருந்து பிரம்மாவும், ரோமகூபங்களிலிருந்து சூரியனும், கட்கமுதலியவைகளிலிருந்து காலனும், ஹாரம் முதலியவைகளிலிருந்து பாற்கடலும், பரசு முதலியவைகளிலிருந்து விசுவகர்மாவும், தாமரைப் புஷ்பத்திலிருந்து ஸமுத்ரதேவனும், ஸிம்ஹ வாஹனத்திலிருந்து ஹிமவானும், ஸுராபாத்திரத்திலிருந்து குபேரனும் இவ்விதமாகவே மற்றத் தேவதைகளும் தங்கள் தங்களுடைய பின்னசக்தி விசேஷங்களை ஆகர்ஷித்துக் கொடுத்தார்கள்.

இவ்விதமாகச் சக்திகளை யெல்லாம் தன்னிடத்தில் லயமாகச் செய்து கொள்ளுகிற பராசக்தியானவள் ஒன்பது ரூபமாக இருப்பதால் அந்த ரூபங்களில் ஒருரூபம் பிரதானமாகவும், மற்றஎட்டு ரூபங்கள் பரிவாரம் அல்லது அங்கமாகவு மிருக்கின்றன. அந்த ஒன்பது ஸ்வரூபங்களாவன:

| | | |
|---|---|---|
| 1. மாஹேஶ்வரி | 4. மஹாலக்ஷ்மி | 7. ப்ராஹ்மி |
| 2. கௌமாரி | 5. வைஷ்ணவி | 8. நாரஸிம்ஹி |
| 3. வாராஹி | 6. இந்திராணி | 9. சாமுண்டி |

இவ்வாறு பராசக்தி ஒன்பது சக்திகளாக ஆவிர்ப்பாகமாகின்றனள்.

நவராத்திரி ஒன்பது நாட்களிலும் மேலேகண்ட முறையாகச் சக்திக்கு ஆவிர்ப்பாகமுண்டாகிறது. முதல் மூன்று பேர்களும் மாஹேஶ்வரியாகிய துர்க்கையின் அம்சம். அந்த

அம்சங்களுக்கு முதல் மூன்று நாட்களிலும் பிரதான ஆவிர்ப்பாவம். நான்காவது ஐந்தாவது ஆறுவது ரூபங்கள் மஹாலக்ஷ்மியின் அம்சங்கள். அந்த அம்சங்களுக்கு நான்காவது ஐந்தாவது ஆறுவது நாட்களிற் பிரதான ஆவிர்ப்பாவம். ஏழாவது எட்டாவது ஒன்பதாவது நாட்களிற் பிரதான ஆவிர்ப்பாவமும் இவ்விதமாகவும் ஒவ்வொரு நாளும் ஓர் அம்சம் பிரதானமாகவும், மற்ற அம்சங்கள் பரிவாரங்களான அங்க தேவதைகளாகவும் அமைகின்றன. இம்முறையை யுட்கொண்டுதான்,

"அஷ்ட மாத்ருக மத்யஸ்தாம் அஷ்ட பைரவ பூஜிதாம்" என்று பரதேவதை பூஜிக்கப்படுகிறாள். பிரதானசக்தியும் பரிவாரசக்திகளும் நவராத்திரியில் ஒவ்வொருநாளும் அமையும் முறையாவது :

| | | |
|---|---|---|
| 2 | 3 | 4 |
| 9 | 1<br>மாஹேஶ்வரி | 5 |
| 8 | 7 | 6 |

| | | |
|---|---|---|
| 1 | 3 | 4 |
| 9 | 2<br>கௌமாரி | 5 |
| 8 | 7 | 6 |

இவ்விதமாக மூன்றுவது நாளில் மூன்றுவது ரூபமாகிய வாராஹி மத்தியிலும், 1, 2, 4, 5, 6, 7, 8, 9-வது ரூபங்கள் பரிவாரமாகவும்; நான்காம் நாளில் மஹாலக்ஷ்மி பிரதானமாகவும், 1, 2, 3, 5, 6, 7, 8, 9-வது ரூபங்கள் பரிவாரமாகவும்; ஐந்தாம் நாளில் வைஷ்ணவி பிரதானமாகவும், 1, 2, 3, 4, 6, 7, 8, 9-வது ரூபங்கள் பரிவாரமாகவும்; ஆறும் நாளில் இந்திராணி பிரதானமாகவும், 1, 2, 3, 4, 5, 7, 8, 9-வது

ரூபங்கள் பரிவாரமாகவும்; ஏழாம் நாளில் ப்ராஹ்மியாகிய ஸரஸ்வதி பிரதானமாகவும், 1, 2, 3, 4, 5, 6, 8, 9-வது ரூபங்கள் பரிவாரமாகவும்; எட்டாவது நாளில் நாரஸிம்ஹி பிரதானமாகவும்; 1, 2, 3, 4, 5, 6, 7, 9-வது ரூபங்கள் பரிவாரமாகவும், ஒன்பதாவது நாளில் சாமுண்டி பிரதானமாகவும், 1, 2, 3, 4, 5, 6, 7, 8-வது ரூபங்கள் பரிவாரமாகவும் அமைகின்றன.

நவராத்திரியின் முடிவில் மூன்று நாட்களிலும் ஸரஸ்வதியின் ரூபங்களுக்கு ஆவிர்ப்பாவமிருப்பதால் நவராத்திரியின் கடைசியில் ஸரஸ்வதி பூஜையென்ற உபாஸனையானது அநுஷ்டிக்கப்படுகின்றது. பெயர்மட்டும் அப்படியிருந்தாலும், எல்லா ரூபங்களும் ஆவிர்ப்பாவமாகி, அந்த ரூபங்களில் ஸரஸ்வதியின் அம்சமாகிய சாமுண்டி ரூபம் பிரதானமாகவும், மற்ற ரூபங்கள் அங்கமாகவுமிருப்பதால் பூஜா மந்த்ரத்தில் சமஷ்டியாக "துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீம் பூஜயாமி" என்று வழக்கமாய் ஜபிக்கப்படுவதைக் காண்க.

இவ்விதமாக மஹாலயபக்ஷமும் நவராத்திரியும் அநுஷ்டிப்பதற்கு ஸூக்ஷ்மமான காரணமிருப்பதால் அந்த அநுஷ்டானங்கள் தொன்றுதொட்டு நமது நாட்டில் ஆசரிக்கப்பட்டு வருகின்றன. இந்த நவராத்திரி உத்ஸவம் வேறுவிதமாகவும் சொல்லப்படுகிறது.

## நவராத்திரி விரதம்

"நவராத்ரம்" என்னுஞ் சொல்லுக்கு ஒன்பது தினங்களென்று அர்த்தம். இங்கே ராத்ரம் என்பது இரவைக்குறிப்பதன்று. நவராத்ரமென்னும் வடமொழிச்சொல், நவராத்ரி யென மருவியது. பகலிற் செய்யும் பூஜை ஈசுவரனுக்கும் இர

விற் செய்யும் பூஜை ஈசுவரிக்கும் உரியதென்பது சாமான்ய வழக்கு. ஆனால் இந்த ஒன்பது தினங்களிற் பகலிற் செய்யும் பூஜையும், இரவிற் செய்யும் பூஜையும் ஈசுவரிக்கே உரியன வாகும். ஒவ்வொரு தேவதையை உபாஸிப்பதற்கும் பூஜிப்பதற்கும் ஒவ்வொரு விரததினம் குறிப்பிடப்பட்டிருக்கும். நவராத்ரி பூஜை மற்றப்பூஜைகளைவிட விசேஷமானது. மற்றத் தேவதைகளைவிட ஒன்பது மடங்கு அதிகமாக ஈசுவரியைப் பூஜிக்கவேண்டுமென்னுங் கருத்தை உணர்த்தும் பொருட்டே இதற்கு ஒன்பது தினங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

நவராத்திரிவிரதம் புரட்டாசி மாசத்தில் அநுஷ்டிக்கத் தக்கது. சித்திரை மாசமும் புரட்டாசி மாசமும் யமனென்னுங் காலனுடைய இரண்டு கோரப்பற்களாம். கோரப்பற்களென்பவை நச்சுப்பற்கள்; விஷத்தன்மையுடையவை. ஆதலினால் அவ்விரண்டு மாசங்களிலும் பலவிதமான விஷவியாதிகள் உண்டாகும். அவைகளைத் தடுப்பதற்கும் போக்குவதற்கும் ஈசுவரியின் அருள் அவசியமாகவேண்டும். அவ்வருள் படைப்பதற்காக, சித்திரை மாசத்தில் வஸந்த நவராத்ர விரதமும் புரட்டாசி மாசத்தில் பாத்ரபத நவராத்ர விரதமும் ஏற்பட்டன. இவ்விரண்டினுள் பாத்ரபத நவராத்ர விரதமே பிரபலமாக நடைபெற்று வருகின்றது. தீர்க்க வொண்ணாத திகிலையும் துன்பத்தையுந் தீர்க்கத்தக்க தேவதை பராசக்தியே.

## மஹிஷாசுர மர்த்தனம்

மகிஷனென்று ஓர் அசுரன் இருந்தான். அவன் எந்தத் தேவதையினாலும் கொல்ல முடியாத வரம் பெற்றிருந்தான். பிரம்மன், விஷ்ணு, ருத்ரன் முதலானவர்களும் அவனை

வெல்லமாட்டாமல் வருந்தினார்கள். அவர்களும் தேவதைகள் அனைவரும் அவனை வெல்வதற்கு வகைதெரியாமல் தாபம் மிகுந்திருந்தபோது, அவர்கள் ஒவ்வொருவரிடத்திலிருந்தும் ஒவ்வோர் உக்ரமான சக்தி வெளிப்புறப்பட்டு மகாசக்தி யென்னும் ஒருருவாகத் திரண்டு தோன்றியது. அம்மகாசக்திக்கு ஒவ்வொரு தேவதையும் தத்தம் ஆயுதாதிகளை அளித்து உதவினார்கள். எல்லாவற்றையும் வெல்லத் தக்க பராக்ரமம் மிகுந்த அப்பராசக்தியானவள் மகிஷாசுரனை மர்த்தனஞ் செய்து உலகமனைத்துக்கும் மங்களமருளினள். எல்லாவகையிலும் வெற்றியை விரும்பிய மானிடர்கள், முக்கியமாய் அரசர்கள் அப்பராசக்தியைப் புரட்டாசி மாதத்தில் ஆண்டுதோறும் ஆராதிக்கலாயினர்.

## தேவி பூஜை

இந்தக்காலத்தில் தேவியின் மூன்று ஸ்வரூபங்களும் வேறு வேறாக ஆராதிக்கப்படுகின்றன. அவையாவன: துர்க்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி. ஒவ்வொருஸ்வரூபத்திற்கும்மும் மூன்று நாள் வீதமாக ஒன்பது தினங்களிற் பூஜை ஏற்பட்டது. இம்மூன்று ஸ்வரூபங்களும் ஏன் அவசியமென்பதும் இவைகளைப் பூஜிக்கும் முறையும் அத்தகைய பூஜையின் உத்தேசம் தாத்பரியம் முதலிய விஷயங்களும் தேவி உபநிஷத்திலும், தேவிபூஜையைக் குறித்துச்சொல்லும் அதர்வவேதத்தின் சில பாகங்களிலும் விவரித்துஉரைக்கப்பட்டிருக்கின்றன. தேவி அல்லது சக்தியை ஸூக்ஷ்மரூபமாகவும், ஆத்ம சைதந்யமாகவும்பூஜிக்கும்இவ்வொன்பது தினங்களுக்கும் நவராத்ர மென்பது சிறப்புப்பெயராம். அதற்கு அடுத்ததாகிய பத்தாம் நாளில் தேவியின் ஸ்தூல ரூபத்தைப் பூஜிப்பது வழக்கம்.

'சக்தி' என்னும் பதத்திற்கு, விசை, ஆண்மை, வல்லமை, ஊக்கம் என்று அர்த்தஞ் சொல்லலாம். இந்தத் தினங்களிற் பூஜிக்கப்படுந் தெய்வம் அந்த ஆண்மை அல்லது வல்லமையின் உருவமேயாம். இவ்வாறு பூஜிக்கப்படும் சக்தி அல்லது வல்லமையே உலகத்தின் சிருஷ்டிக்கிரமத்தில் அதனூடே நிகழும் மஹாசைதந்யமாம். மனிதர்களின் காரியங்களை யெல்லாம் நடத்துவது அதுவேயாகும். யாவரையும் ரக்ஷிக்கும் திறனுடையதும் அதுவே. அதன் கிருபையை ஒவ்வொருவரும் ஏதேனும் ஒருவகையில் நாடல் அவசியமாகும். அந்தணர் முதலான துவிஜர்கள் தினந்தோறும் ஆவாகனஞ் செய்து 'காயத்ரீ' எனத் தொழுவதும் இந்தச் சக்தியையேயாம். இவ்வுலகில் எந்தக் காரியஞ் செய்ய வேண்டியிருப்பினும் அதற்குச் சக்தி வேண்டும். ஜனங்கள் ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்யவோ அல்லது எதனையேனுஞ் சாதிக்கவோ நமக்குச் சக்தியில்லை என்று முறையிடுவதைக் கேட்டிலோமோ? இவ்வாறாக நமக்கு இஷ்டமிருப்பினும் இல்லாவிடினும், நமக்குத் தெரிந்தும் தெரியாமலும் மானிடரான நாம் அனைவரும் இந்தத் தேவியின் (சக்தியின்) சகாயத்தை ஏதேனும் ஒருவிதமாக விரும்புகின்றோம்; பிரார்த்திக்கின்றோம்; அவளுடைய அருள் நமக்கு அவசியமாய் வேண்டியிருக்கிறது. ஆகவே இயற்கையில் அமைந்துள்ள இந்தத் தெய்வ சைதன்யத்தை (சக்தியை)ப் பூஜிப்பது ஆவசியகமென்று ஏற்படுத்தியது மேன்மையான காரியம். இத்தகைய பூர்வாசாரத்தை ஒருபொழுதும் கைவிடாது மிகுந்த பக்தியோடும் சிரத்தையோடும் அநுஷ்டிப்பது நம் கடமையாகும்.

## ஸரஸ்வதி பூஜை

இவ்வுத்ஸவத்தின் கடைசித்தினமான பத்தாம் நாள் தேவீ பூஜையில் பிரதான தினமாகும். இந்த உத்ஸவத்தின் 6-வது 7-வது தினத்தில மூலமென்னும் நக்ஷத்ரம் உச்சமாயிருக்கும்போது ஸரஸ்வதியை ஆவாஹனஞ் செய்வது வழக்கம். இது கலைமகள் பிறந்தநாள் என்பது கொள்கை. அதாவது, அவள் ஸ்தூலவடிவங்கொண்ட தினமாம். இந்த ஸரஸ்வதி பூஜை சிரவணமென்னும் நக்ஷத்ரம் உச்சமாகும் தினத்தில் பூர்த்தி செய்யப்படும். இது சாதாரணமல்ல. இவ்வுத்ஸவத்தின் பத்தாம் நாளாகும். ஸரஸ்வதியை ஆவாஹனஞ்செய்யுங்காலத்து நக்ஷத்ரம் மூலம் (ஆரம்பம்) ஆகும். அதாவது ஒரு புஸ்தகம் அல்லது ஒரு சாஸ்திரத்தைப் படிப்பதற்கு ஆரம்பஞ் செய்வதென்று அர்த்தமாகிறது. ஆரம்ப காரியம் ஸரஸ்வதியின் அருள் படைப்பதற்குச்செய்யும் ஆராதனையே. இதனால் அறிந்து கொள்வதென்னை யெனின், நாம் வித்தையை நாடின் முதன் முதலிலிருந்து ஆரம்பிக்கவேண்டும், வித்யாப்யாஸம் அடிப்படையிலிருந்து ஆகவேண்டும்; மத்தியிலோ எங்கோ முறையும் துணையுமின்றி ஆரம்பிப்பது கூடாதென்பதேயாம். அதமபக்ஷம் வருஷத்துக்கொரு முறையேனும் ஒரு புதிய விஷயத்தை, புதிய சாஸ்திரத்தை, புதிய புஸ்தகத்தைப் படிக்கவும் ஆராயவும் ஆரம்பித்து, மறுவருஷம் அந்தத்தினம் வருவதற்குள் அதனை நன்றாய்க் கற்று ஊக்கத்துடன் அதில் உழைத்துத் தேர்ந்து புதிய கிரந்தத்தை ஆரம்பிக்கவுஞ் சித்தமாயிருக்கவேண்டுமென்ற கருத்து புத்தி கூர்மையுள்ளவர்களுக்கு இதனால் புலப்படுமன்றோ? கல்வி கற்பதற்கு மிகவும் அநுகூலமான நல்லமுறை இதுவே யன்றோ? இவ்வாறு ஒருவன் வருஷந்தோறும் ஒவ்வொரு புதிய

சாஸ்திரத்தை அப்யஸித்தால் பெரிய பண்டிதனாக விளங்கக் கூடும். இக்கருத்தின் விசேஷத்தைக் கவனிக்கையில் நம் முன்னோர்களின் உபதேசத்தின் உபயோகமும் பெருமையும் நன்கு விளங்குகின்றன.

மூலம் என்னும் நக்ஷத்திரத்தில் ஸரஸ்வதி பூஜையை இடையில் ஒரு தினமும் தவறாமல் பத்தாம் நாளில் சிரவண நட்சத்திரம் வரைக்கும் தினந்தோறும் செய்துவர வேண்டுமென்பது விதி. சிரவணமென்றால் ஆசார்யாது மொழிகளைக் கேட்டல் என்றர்த்தமாகும். அன்றியும் சிரவணமென்பது வித்யாப்யாஸத்துக்குரிய நால்வகை ஸாதனங்களுள் (சிரவணம், மனனம், நிதித்தியாஸநம், ஸ்வாநுபவமென்னும் நான்கனுள்) முதலாவதாகும். இவ்விடத்தில் அந்நான்கையுங் குறிப்பிப்பதற்குப் பதிலாக முதலாவதான சிரவணத்தை மாத்திரம் குறித்தபோதிலும், ஏனையமூன்று முறைகளையுங் கூடச் சேர்த்துசொன்னதாகவே கொள்ளல் தகும். ஸரஸ்வதி பூஜையைச் சிரவண நக்ஷத்ரம் வரையிற் செய்யவேண்டுமென்பதனால். மூல நக்ஷத்திரத்தில் ஆரம்பித்த கல்விமுயற்சியை அது சித்தியாகுமளவும் அதற்குரிய ஸாதனங்களைக் கொண்டு, அதாவது படித்தல், ஆசார்யாது வியாக்யானம் முதலிய மொழிகளின் விஷயத்தை மனத்தில் ஆலோசித்தல் (ஊக்கத்துடனாராய்தல்), உறுதியான ஞானம் ஸம்பாதித்தல், அதனையாசரித்தல் (அதற்குத் தக்கபடி நடத்தல்) என்னும் இவ்விதங்களாக அந்தப் படிப்பைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்பதாயிற்று. கட்டுக்கதை போலவும் மூடபக்திக்குரியது போலவுந் தோன்றுகின்ற இவ்வுத்ஸவத்தில் இவ்வளவு பெரிய அரிய நீதி அடங்கியிருக்கிறது.

## புஸ்தக பூஜை

கல்விக்கு அறிகுறியான ஸ்தூலவடிவம் எவர்க்கும் எளிதிற் கிடைக்கக் கூடியதாயிருக்கின்றது. அது புஸ்தகமே யாம். ஆனதுபற்றி இந்த நவராத்திரி பண்டிகையின் கடைசியிற் புஸ்தகங்களைப் பூஜிப்பது வழக்கமாயிற்று. இது மிகவும் நல்லவழக்கம்; வெகு அநுகூலமானது. மூலை முடுக்குகளிற் கிடக்கும் பழைய புஸ்தகங்களும் ஏடுகளும் தேடியெடுக்கப்படுகின்றன. அவற்றின் மீது படிந்துள்ள தூசியைத் தட்டித் துடைத்துச் செப்பனிட்டுப் பூஜையில் அவைகளை வைக்கிறார்கள். இவ்வழக்கமில்லாவிடின், நம் நாட்டிலுள்ள பல அருமையான ஓலைப் புத்தகங்கள் கரையான் முதலியவைகட்கு இரையாகி நசித்திருக்கும்; அரிய பெரிய பொருளடங்கிய வித்தியா நிதிகளின் பிரயோஜனம் நமக்கு எட்டாமற் போயிருக்கும். கல்வியைக் காப்பாற்றித் தலைமுறை தலைமுறையாக வைத்து ஜனங்களுக்கு உதவுதற்குப் பயபக்தியுடன் செய்யப்படும் இப்புஸ்தக பூஜை எவ்வளவு உபயோகமா யிருக்கின்றது! நாம் தமோகுணம் மேலிட்டுச் சோம்பேறிகளாய்க் கெட்டலைவோ மென்று தமது ஞானதிருஷ்டியின் மகிமையினால் உணர்ந்த முனிசிரேஷ்டர்கள் வித்யா விஷயத்தில் நமக்குச் சிரத்தை ஊட்டுமாறு செய்துள்ள பல நல்ல ஏற்பாடுகளுள் இப்புஸ்தக பூஜையும் ஒன்றாகும்.

## துர்க்காபூஜை—ஆயுத பூஜை

"அறிவேசக்தி, ஞானமே பலம்" என்பது யாவருக்கும் தெரிந்த விஷயமாதலின், நாம் ஸரஸ்வதியாகிய கலைமகளை இயற்கையில் அமைந்துள்ள மூன்று வல்லமைகளுள் ஒன்றெனத் தொழுவது அதிசயமாகாது. இந்நவ

ராத்திரி உற்சவத்தில் சக்தியை (வல்லமையை) இன்னுமொரு விதமாகவும் தொழுவதுண்டு. அந்த ஸ்வரூபம் துர்க்கை அல்லது காளி யெனப்படும். இதனை அனுசரித்து வங்காளத்தில் இந்நவராத்திரி பண்டிகையை, 'துர்க்கா பூஜை தினங்கள்' என வழங்குகின்றார்கள். வீரம், தைரியம், பராக்ரமம் முதலியவைகளுக்குத் துர்க்கை அறிகுறியாவாள். இந்தச் சக்தியை ஆராதிக்குங்கால் உபயோகப்படும் பதார்த்தங்களே இக்குணங்களை உணர்த்துகின்றன. அவை சரீரம் திடப்பட்டு நரம்பு, சதை முதலியன உறுதியுறுவதற்கு ஏற்றவைகளாகவாவது, போர்த்தொழிலில் ஆயுதங்களை உபயோகிப்பதன் பயன்களாகவாவது இருக்கும். ஆனால் துர்க்கைக்கு மிருகங்களைப் பலிகொடுப்பதும், இறைச்சி, மதுவர்க்கம், (கள், சாராயமுதலியன) ஆகிய இவற்றை அவளுக்கு முக்ய நிவேதனமாகக் கொடுப்பதும், தாமஸத் தன்மை வாய்ந்த பூஜையென்றும், அது நீசமானது, தகாதது, ஆதலின் அத்தகைய பூஜையைத் தவிர்க்கவேண்டுமென்றும் நமதுசாஸ்திரங்கள் தெளிவாக விதித்திருக்கின்றன. இவற்றிற்குப் பதிலாக உழுந்து, பயறு முதலியவற்றாற் செய்த பணியாரங்களையும், இன்னும் இவைபோன்ற ராஜஸகுணத்திற்குரிய பதார்த்தங்களையும் நிவேதனஞ் செய்யலாமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இந்தச் சக்தி இத்தேசத்தில் அநேகம்பெயர்களால் வழங்கப்படுகின்றது. அவற்றுள் துர்க்கை, பத்திரகாளி, வைஷ்ணவி, விஜயை, முகுந்தை, சண்டிகை, மாதவி, கிருஷ்ணை, நாராயணி, கன்னிகை, மாயை, ஈசானி, சாரதை, அம்பிகை யென்பன சிலவாம். கல்விக்குரிய தேவதையாகிய ஸரஸ்வதிக்கு அறிகுறியாய்ப் புஸ்தகங்களைக் கொள்வதுபோல, சரீரபலத்திற்கும் போர் வீரத்திற்கும் உருவமாக ஏற்பட்ட

துர்க்கைக்கு ஸ்தூல அறிகுறியாக, ஆயுதங்களைக் கொண்டு அவ்வாயுதங்களை நன்றாகத்துலக்கி அவற்றிற்குக் குங்குமம், சந்தனம், முதலியன இட்டு அலங்கரித்துத் தூபதீபங்கள் கற்பூர ஹாரத்திகள் முதலிய உபசாரங்கள் செய்து இந்துக்கள் அனைவருந் தொழுவார்கள். அன்றையதினம் பழைய கத்தி கேடயம் முதலிய இருப்புக் கருவிகளும், எஃகு ஆயுதங்களும் எண்ணெயைக்காணும்; பளபளப்பாய்ப் பிரகாசிக்கும்.

சூரத்தன்மை, உக்கிரம், யுத்த சாமர்த்தியம், தேகபலம் முதலியவைகளைத் துர்க்கையின் ஸ்வரூபம் குறிக்கின்றமையின், இந்தியாவிலே எங்கும், முக்கியமாய் வடஇந்தியாவிலும், சுதேச ராஜாங்கங்களிலும் ஜனங்கள் ஆயுத பூஜைதினத்தில் வெகு உத்ஸாகத்துடன் மும்முரமாய்த் தத்தம் புஜபல பராக்கிரமங்களைப் பிரகடிப்பார்கள். எங்கே பார்த்தாலும் குஸ்தியும், கஸரத்தும், வேடிக்கையும், பந்தயமுமாயிருக்கும். அன்றையதினத்தில் தம் திறமையைக் காண்பிக்கும் கருத்துடன், ஜனங்கள் வருஷமெல்லாம் பயிலுவார்கள். இது தேகப் பயிற்சிக்காக ஏற்பட்டதோர் நியமனமாம்.

சுருதியிற் சொல்லியபடி, மகா சைதன்யத்தின் வல்லமையினால், வாயுவும், சூரியனும், இந்திரனும், அக்கினியும், வருணனும், அசுவினிகளும், மருத்தும், பர்ஜன்யரும், அழகிய உஷஸும், மிருத்யுவும் அவரவர் அதிகாரம் பெற்றுத் தத்தம் பணிகளைச் செய்கிறார்கள். வாயுவின் இரதங்கள், காற்றைக் கிழித்துப் பெருமுழக்கம் செய்து வருகின்றன; அவன் வானுலகை அளாவிப் பொருள்களனைத்தையும் சிவக்கச் செய்து செல்கிறான்; மண்ணினின்று தூளியை விரட்டிப் பாய்கிறான். சூரியன், காலையிலும் மாலையிலும் இருளையுண்டாக்கும் அசுரருடன் யுத்தஞ்செய்து நம் மனம் களிக்கு

மாறு ஒளியைத் தருகிறான். இந்திரன் வானிலிருந்து விருத்திரனையும், நமுசியையும் தலைவராகக்கொண்டு, காய்ந்து மூச்சுத் தடுமாறும் பூமிதேவிமேற் குளிரவிழாமலும், அவள் வறட்சியைத் தொலைக்காமலும், மழையை மேகத்திலடைத்து வைக்கும் அரக்கருடன் வஜ்ராயுதங்கொண்டு போராடுகிறான். வருணன் ஆறுகளைத் தோண்டி அவைகளில் நீரையோட ஆக்கினை யிட்டிருக்கிறான்; அவன் மாயையால் எல்லா நதிகளும் ஒரே சமுத்திரத்தில் விழுந்தாலும் அது நிரம்பாது. இருண்ட இரவு பழுப்புநிறமுள்ள பசுக்களைப் போன்ற விடியற்கால கிரணங்கள் நடுவில் நிற்குங்கால், அசுவினிகள் பிரகாசிக்கும் தங்கள் தேர்களை ஆகாசமூலமாயோட்டுகிறார்கள் மருதர், காற்றுக்கடலில், தோளிற் சூலமும் காலில் நூபுரங்களும் மார்பிற் பொன்கவசமும் கைகளில் மின்னல்களுமாகப் போகிறார்கள். பர்ஜன்யன் இடிமூலமாய்ப் பேசுகிறான்: அவன் குரல் எருதுகளின் முழக்கம் போன்றது; மின்னல்களால் மரங்களைப் பிளக்கிறான்; அரக்கரை அவன் கொல்லுங்கால் உலகு நடுங்கும். பழுப்பு எருதுகள் உஷவின் தேரையிழுக்கும்; வானில் அவன் கதிர்களைப் பரப்பிச்செல்கிறான்; வில்வீரன் பகைவரைத் தொடர்வதபோல் அவன் இருட்டை விரட்டுகிறான். இத்தகைய பல தேவர்களுக்குப் பின் நிற்பவர் ஒருவர்; அவரை அறிவோர் ஸ்துதிகளிற் பலவாறுப் கூறுகிறார்கள். அவரை இந்திரனென்றும், மித்திரனென்றும், வருணனென்றும், அக்நியென்றும் அழைக்கிறார்கள். அவரே அழகிய இறகையுடைய கருத்மந்தர். அவர் ஒருவருக்கே விப்ரர் பல பெயரிட்டிருக்கிறார்கள். அவரையே அக்நியென்றும், எமனென்றும், மாதரிச்வனென்றுஞ் சொல்கிறார்கள். அவரது வலிமையினால்

வரதன் அடிக்கிறான். அவராற்றலாற் சூரியன் நடக்கிறான். அவர் திறத்தால் இந்திரனும் அக்னியுந் தத்தம் தொழிலைச் செய்கிறார்கள். மிருத்யு (யமன்) ஐந்தாவதாகச் செல்கிறான்.

அத்தேவரிடம் புறப்படும் கிரணங்கள், அவர் பலத்தின் சிறு பங்குகள் நம்முடலில் பல விடங்களில் வசிக்கின்றன. சந்திரன் மனதிலும், வாயு தோளிலும், வருணன் நாவிலும், ஆதித்யன் இருகண்களிலும் குடிகொண்டிருக்கிறார்கள். அக்னி தொண்டையிலிருந்து பேச உதவி செய்கிறான். இந்திரன் கைகளிலிருந்து நம்மாற் பணிகள் செய்விக்கிறான். அசுரர்களும் நம்முள் வசிக்கிறார்கள். அவர்கள் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் முதலான தோஷங்களேயாம். மிகப் பலமுற்றுப் புயல் அலைமேல் தோணியை யாட்டுவதுபோல இவைகள் நம்மை யாட்டிவைக்கின்றன. நம் இருதயத்தில் தேவாசுர யுத்தம் எப்போதும் நிகழ்கின்றது. அப்போரில் அடிக்கடி தேவர் தோல்வியுற்று அசுரரே நம்மை ஆள்கிறார்கள். சண்டிகையும் மகிஷனும் போர் புரிந்தபோது நடந்தவாறு எல்லாச் சக்திகளுஞ் சேர்ந்து நின்றால், அசுரரை வென்று சண்டிகை அசுரப்படையை யழித்ததுபோல் நாமும் ஜயத்துடன் வெளிவரலாம்.

முற்காலத்தில் நம்முன்னோர் வருஷம் பிறந்தது முதல் நான்கு மாதங்கள் வயலில் வேலை செய்தார்கள். கார்காலந் தொடங்கிப் பயிர் தானே முதிர ஆரம்பிக்க மக்களது பணி வேண்டாதிருந்தபோது, அவர் வீட்டில்தங்கி சுருதியோதுவதிலும், ஸ்மிருதி கற்பதிலும் காலங்கழித்தார்கள். மாரி நட்ட நடுவில், ஆச்வியுஜ சுக்ல பக்ஷத்தில் தேவியை நவராத்ரபூஜை செய்தார். தினந்தோறும் அவளைத் தியானித்து

ஹ்ருதயாகாசத்திற் பிராணன்களைத் திரட்டிச் சேர்த்துத் தேவாசுர யுத்தஞ்செய்து கடைசியில் விஜயதசமியன்று விஜயம்பெற்று ஜய விஜய அசுரர்களை அடித்தனர். தேவி அவர்களை (அசுரர்களை) யழித்தாள். இன்னோர் ஆண்டு சொந்தமாயிருக்கலாமென்று தேர்ந்தார். இதுதான் ஸரஸ்வதி பூஜை; நவவர்ஷாரம்பம்; மரணத்தினின்று அமரநிலைக்குப் போவதற்கு ஒருபடி.

---

# 13. பக்தி

மனுஷ்ய ஜன்மம் எடுப்பதற்கு வேண்டிய புண்ணியங்களை அனந்த ஜன்மாக்களாகப் பிரபலமாக இயற்றிவந்த நமக்குக் கடவுள் கருணை கூர்ந்து மோக்ஷத்தை அடைவதற்கு மிகுந்த உபகார முடையதான சரீரத்தைக் கொடுத்திருக்கிறார். இதை விருதாவாக ஸ்திரீ தனம் முதலியவை ஸம்பந்தமான காரியங்களில் இதுவரையிலும் விநியோகப் படுத்தி விட்டோம. இனி இவ்விதமாகாமல நாம ஆது கடவுளின் அனுக்கிரஹத்தால் வரும்போது எதற்காக இங்கு வந்தோமோ, அக்காரியத்தை ஞாபகத்துடன் பூர்த்தி செய்யப் பிரயத்தனப் படவேண்டும். அப்படிப் பிரயத்தனப் படுவதில் அநேகவிதமான விஷயங்களுண்டு. அதில் முக்கியமானதும் சிறப்புடையதும் ஸுலபமானதும் பக்தி யென்பதாம்.

பக்தி யென்பது பொதுவாக, அன்பு அல்லது பிரிய மென்றாகும். அதில் அளவற்ற கூறுபாடுகள் உண்டு. சில பேர்களுக்கு மனைவி, கிருகம், பூமி, தனம் இவைகளிலன்பும் பிரியமும் இருக்கலாம். அவ்வன்பும் பிரியமும் நெடுநாள் நில்லாமல் மத்தியிலழிந்து போவனவாயிருக்கிற படியால், அழியாத கடவுளன்பைப் பெற நாம் பிரயத்தனஞ் செய்து அடைய வேண்டும். புருஷனிடத்தில் மனைவிபோற் பகவானிடத்து நாம் பக்தி செய்யவேண்டும். பிதாவிடத்தில் புத்திரன்போலும், எஜமானனிடத்திலே தாஸன் போலும், ஸ்நேகிதனைப் போலும் நினைத்துப பகவத்பக்தி செய்ய வேண்டும். அவற்றில் கோபிகாஸ்திரீகள் கண்ணபிரானிடத்திற் செலுத்திய பக்தி புருஷ ஸ்திரீ பாகமானது. நரஸிம்ஹ

ரிடத்தில் பிரக்லாதன் செலுத்திய அன்பு புத்திர பிதா அன்பு. ஸ்ரீராமனிடத்தில் ஆஞ்சநேயர் செய்த பக்தி தாஸ்ய மான அன்பு. ஸ்ரீகிருஷ்ண பகவானிடம் அர்ஜுனன் செலுத்திய அன்பு ஸ்நேகபாவ அன்பு. பக்தியும் பிரஹ்மமும் ஒன்றே. பக்திவேறு கடவுள் வேறென்று எவன் கூறுகின்றானோ அவன் பேதவாதி யெனப்படுவான்.

"அன்பும் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப் பாரே"

என்று திருமூலர் கூறுகிறார்.

பக்தியின் ஆரம்பமே ஞானம்; முடிவே மோக்ஷம். ஆகையால் முக்தியையடைய இச்சை கொள்பவர்களுக்குப் பக்தியே முதன்மையாகும். ஞானம் விட்டதை விட்டுப் பற்றற்று நிற்பது. பக்தியோவெனில் இடைவிடாத அன்பு பிரியாமலிருப்பது. ஆகையாற் பக்தியினாற் கடவுளைச் சீக்கிரமடையலாம்; ஞானத்தால் நெடுநாட்செல்லும். பக்தியின் வழிசென்றால் துரியாதீதம் வரை போகலாம்; ஞானத்தின் வழியே போனால் துரீயம் வரைதான் போகலாம். ஞானம் புருஷன் போன்றது; பக்தி ஸ்திரீ போன்றது. ஞானம் கடவுள்; பக்தி கடவுளின் சக்தி. ஞானம் மாறும்; பக்தி மாறாது.

இன்னும் இவ்விதமான அநேகவித பிரமாண தாத்பரியங்களால் ஞானத்தைக் காட்டிலும் பக்தியே சிரேஷ்டமாம். கண்ணப்ப நாயனார், சிறுத்தொண்டர், கோபிகா ஸ்திரீகள், ஹனுமார், சபரி, விபீஷணன், ராதை, விதுரன், ஆழ்வாராதியர், நாயன்மாா முதலானவர்கள் பக்தியினாலேதான் முக்தி

யை அடைந்திருக்கிறார்கள். இன்னும் பக்தியினால் மோக்ஷத்தை அடைந்தவர்கள் கணக்கற்றிருக்கிறார்கள். பகவானை நினைத்துப் பரவச மடைந்தும், நர்த்தனஞ் செய்தும், ஸ்தோத்திரஞ் செய்தும், சரீரத்தை மறந்து நின்றும் ஸதா பகவத் தியானத்திலேயே காலங்கழிப்பது பரம சாந்த பக்தியாம். சதானந்தப் படியினின்று சாத்துவீக நிஷ்டையிலிருப்பது பரம வேதாந்த பக்தியென்று கூறுவார்கள். பக்தியானது ஒன்பது பாகங்களாகப் பிரிவுபட்டிருக்கிறது. அதனதன் பூர்வ லக்ஷணங்களை யெடுத்துச் சொல்லப்புகில், விரியுமாதலின் இத்துடன் விடுத்தனம். ஆகையால் நீங்கள் யாவரும் பரமஞான பக்தியை முறையே விதிப்படி அனுஷ்டித்து பரம யோகானந்த ஞான முடிந்த ப்ரம்பொருளை அடையக்கடவீர்களாக.



# 14. விபூதி மகிமை

விபூதி, திருநீறு, பஸ்மம், க்ஷாரம், பஸிதம், கவசம் அல்லது காப்பு என்பன ஒருபொருட் சொற்களாம். ஸகல பாபங்களேயும் நீற்றலால் நீறு எனவும், எந்த ஐசுவரியத்தைக் காட்டிலும் மேலான ஐசுவரியமில்லேயோ அப்படிப்பட்ட ஐசுவரியத்தைக் கொடுப்பதால் விபூதி எனவும், உயிர்களின் மலத்தைப் போக்குவதால் க்ஷாரமெனவும், அறியாமையாகிய இருள் நீங்க விளங்குதலால் பஸிதமெனவும், பூதாதிகளேப் போக்கிக் காத்தலாற் காப்பு அல்லது ரக்ஷையெனவும் கூறப்படும். ஜீவர்களின் ஜனனமரண வடிவ வியாதியை நீக்கப் பவரோக் வைத்தியனுகிய பரமசிவம், திருநீற்றை ஔஷதமாகவும், ருத்திராக்ஷத்தை மணியாகவும், பஞ்சாக்ஷரத்தை மந்திரமாகவும் அருளிச் செய்திருக்கின்ருரென்பது வேதாகமத்துணிபாம். ஆதலின் ஜனன மரண வடிவ வியாதியினின்றும் நீங்க இச்சிக்கும் ஒவ்வொருவனும், ஔஷதமாகிய விபூதியின் சொரூபம், திரவியம், வகைகள், பிரமாணம், தாரணைவிதி, தரிக்க வேண்டிய இடங்கள், தரிக்கும்போது உச்சரிக்க வேண்டிய மந்த்ரம், ரேகைகள், சக்தி, தெய்வம், பலன் முதலிய விஷயங்களேச் செவ்வனே ஆராய்ந்துணர்தல் அத்தியாவசியமாம்.

## விபூதியின் தத்துவம்

விபூதி யென்பது மேலான ஐசுவரியமாம்; அதாவது சிவஸ்வரூபமான பேராநந்த நிலேயாம். இது பசுவாகிய ஜீவர்களின் மலமான அஞ்ஞான கர்மநாசத்திற் சித்திப்பதாம். கோமய பிண்டங்கள் ஜீவர்களாம். கோமயமென்பது ஜீவர்

களின் மலமாம். இதைச் சிவ வடிவ அக்கினியில் இடுதல் ஸோஹம் பாவனையாகிய சிவயோக நிஷ்டையாம். இந் நிஷ்டையால் ஜீவனிடத்துள்ள உபாதிகள் நீங்கப் பரமசிவத்தோடு இரண்டறக் கலத்தலாகிய பரமைசுவரிய வடிவ விபூதியாகிய நித்தியாநந்த நிலை உண்டாகின்றது. அன்றியும், மாயாகாரியப் பிரபஞ்ச வடிவ நாமரூபங்களை அகண்டாகார விருத்திவடிவத் தீயால் எரித்து, மிஞ்சிய சச்சிதாநந்த வடிவ பரமசிவ ஸ்வரூபமே விபூதியாம். சகல பிரபஞ்சங்களும் முடிவில் நீறாம்; சிவம் ஒன்று மாத்திரம் நீறுததாய் மிஞ்சுகின்றது. இங்ஙனம், மிஞ்சியதாயும், சுத்தமாயும், எல்லாவற்றின் முடிவான வீரியமாயும், ஸ்வயம்ப்ரகாசமாயும், ஸகலஜகத்துக்கும் அபின்னநிமித்தோபாதான விவர்த்த காரணமாயுமுள்ள பரமசிவத்தைக் குறிப்பாயுணர்த்துவதே திருநீறும். ஆதலாற்றான், விபூதியைப் பரமசிவத்தின் லிங்கமென்று வேதாகமங்கள் கூறுகின்றன.

இங்ஙனம், சச்சிதாநந்த ஸ்வபாவமாய், எங்கும் இடைவிடா நிறைவுடைய ஸர்வவியாபகனை பரமசிவமே விபூதியில் அபேதமாய்ப் பாவிக்கப்பட்டிருப்பதால், இதுவே பஞ்சபூதங்களும் தன்மேந்திரியங்களும் பஞ்ச விஷயங்களும் ஸர்வ ஜீவர்களுமாக இருக்கின்றது. பரசிவமாம் விபூதியைத் தவிர அணுவும் வேறாக வில்லையெனப் பாவித்து அப் பரமசிவம் அகண்டமாதலால், காற் கட்டைவிரல் முதற் சிரசுவரை சரீரத்தில் வியாபித்திருப்பதாகப் பாவித்து உத்தூளனஞ் செய்து, அகண்ட பரமசிவத்தில் முக்குணம், மும்மூர்த்தி, முச்சக்தி, மூன்றக்கினி, முத்தொழில் முதல் திரிபுடி வடிவமாய்த் தோன்றி விளங்குவதால் ஆதேய மெனவும் (கற்பிதமெனவும்) முற்கூறிய பரமசிவமே ஆதாரம் (அதிஷ்

டானம்) எனவும், முடிவில் எல்லாம் பரமசிவமாம் ஞானக்கினியாலே தகிக்கப்பட்டுப் போவதாகவும் பாவித்து, அத்தகைய சிவவடிவத் திருநீற்றை உத்தூளனத்தின்பேரில் திரிபுண்ட்ரமாக அணிதல் வேண்டும். பக்தியோடு நான்கு சந்திகளாகிய காலை, உச்சி, மாலை, அர்த்தராத்திரிகளில், ஸ்நானம் செய்தவுடனும், பூஜாகாலத்துக்கு முன்னும் பின்னும், நித்திரைக்கு முன்னும் பின்னும், எவன் மேற்கூறியபடி ஐக்கிய பாவனை செய்து தரித்துக் கொள்ளுகிறானோ அவன் இம்மை மறுமை பொருள் வீடென்னும் நான்கு புருஷார்த்தங்களையும் பெறுகின்றான்.

"முக்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே"

"காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே"

—தேவாரம்

இங்ஙனம் தேவாரங் கூறுகின்றது இங்குணர்தற்பாலது. அன்றியும், விபூதியைத் தரியாதவர் ஆத்மஸாக்ஷாத்காரத்தினை யடையாரென்றும் அவர்கள் என்றும் அஸாரமாகிய 'கும்பீபாக' நரகத்தில் ஆழ்ந்து வருந்துவரென்றும் அவர்களால் இயற்றப்படும் புண்யங்கள் யாவும் பாவமாய் முடியுமென்றும் தெள்ளிதாய்ப் புலப்படுகின்றது. ஆதலால் விபூதியை அலக்ஷியஞ் செய்யக்கூடாது.

"பூத்யைர ப்ரமதிதவ்யம்" என்று யஜுர்வேதத்திலுள்ள தைத்திரியோபநிஷத்துக் கூறுவதும் இங்கு உணர்தற்பாலதாம். இங்கே சுருக்கமாகவே விபூதியின் மகிமை கூறப்பட்டது. இதை நன்குணர்ந்து, ஸ்ரீநடராஜமூர்த்தி வடிவவிபூதியைக் கனவிலும் மறவாது தரித்தவரின், பஞ்ச கிருத்திய வடிவ ஆனந்தத் தாண்டவத்தினைத் தரிசிக்கும் வாயிலாக, நித்தியானந்தப் பெருவாழ்வை அடைவரென்பது திண்ணம். பவநோயைக் காக்கவல்ல மருந்து இதைக்காட்டிலும் மற்றொன்று இல்லையாம்.

உயிர்களுக் கின்பினை ஊட்ட வல்லது
செயிர்தரு மலத்தினைத் தீக்க வல்லது
துயர்தரு பேய்முதற் சேதக்கும் பெற்றிய
தயர்தரு நடப்பிரான் அணியும் நீறரோ.

# 15. ருத்திராக்ஷ மகிமை

ருத்திராக்ஷமென்பது ஒருவகை மணியாம். இது ருத்திரனது ஞானாக்கினி வடிவ நேத்திரங்களிலிருந்தும் (அதாவது, ஸோம ஸூர்ய அக்கினி நேத்திரங்களிலிருந்து) திரிபுரஸம்ஹார காலத்தில் ஆநந்தாமிர்தவிந்து பூமியில் விழ உண்டானதாம்.

## ருத்திராக்ஷ வகை

இத்தகைய மகிமை பொருந்திய ருத்திராக்ஷமானது லிங்கம், ஸாத்தியம், ஸாதனமென மூன்று வகைப்படும். (1) லிங்க ருத்திராக்ஷமாவது: தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் பரிச்சேதப்படாமல், ஸ்வயம்பிரகாச ஸதாநந்த வடிவாக விளங்கும் அறிவாம். (2) ஸாத்திய ருத்திராக்ஷமாவது: அழிவில்லாமல் என்றும் ஒருபடித்தாய்ச் சிதாநந்த வடிவமுள்ளதிருக்காம். (3) ஸாதன ருத்திராக்ஷமாவது :ஆன்மாக்கள் சிவவடிவாய் விளங்குவதற்கு ஸாதனமானதாம். இச்சாதன ருத்திராக்ஷம், ஆக்நேயம், ஸௌரம், சாந்த்ரமென மூவகையாம்.

வாதுளாகமத்தில் ருத்திராக்ஷம் முப்பத்தெட்டு வகைகளென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றிற் பரமசிவத்தின் ஸூர்ய நேத்திரங்களில் உற்பத்தியானவை கபிலநிறமுடைய பன்னிரண்டு வகையாம். சந்திரநேத்திரத்தில் உற்பத்தியானவை வெண்மை நிறமுடைய பதினாறு வகையாம். அக்கினி நேத்திரத்தில் உற்பத்தியானவை கறுப்பு நிறமுடைய பத்து வகையாம்.

பிராம்மணஜாதி ருத்திராக்ஷம் வெண்மை நிறமுடையதாம்; க்ஷத்திரியஜாதி சிவப்பு நிறமுடையது; சிவப்பும் வெண்

மையும் கலந்த பொன்னிறமுடையது வைசிய ஜாதியைச் சேர்ந்ததென்றும், கறுப்பு நிறமுடையது சூத்திர ஜாதியைச் சேர்ந்ததென்றும் கூறப்படும். அவ்வவ் வருணத்தார் அந்த அந்த ஜாதி ருத்திராக்ஷத்தைத் தரிக்கவேண்டும். சிகையில் ஒருமணியும், தலையில் முப்பத்திரண்டு மணிகளும், காதுகளில் ஒவ்வொன்று அல்லது அவ்வாறு மணிகளும், கழுத்தில் முப்பத்திரண்டு மணிகளும், புஜங்களில் தனித்தனி பதினாறு மணிகளும், கைகளிலும் கழுத்திலும் முப்பத்திரண்டு மணிகளும், மார்பிலே நூற்றெட்டு மணியுங்கொண்ட மாலையைத் தரிக்கவேண்டுமென்று ஆகமங்கள் கூறுகின்றன.

## ஜபமாலைகள்

ருத்திராக்ஷங்களை வெள்ளி, பொன், முத்து, பவளம் முதலியவற்றை இடையிடையே யிட்டு முகத்தோடு முகமும், அடியோடு அடியும் பொருந்தக் கோத்துத் தரிப்பது நலம். மார்பிலே தரிக்கும் ஜபமாலை நூற்றெட்டு மணிகளாலேனும் ஐம்பத்துநாலு மணிகளாலேனும் இருபத்தேழு மணிகளாலேனும் செய்யத்தகும்.

இம்மூன்றுவகை மாலைகளும், போகத்தை அதாவது இம்மை மறுமைப் பயன்களை இச்சிக்கிறவர்கள் தரிக்கத்தக்கன. என்று மழியாப் பேரானந்த நிலையாகிய வீட்டை அடைய இச்சிப்பவர் இருபத்தைந்து மணிகளைக்கொண்ட மாலையை அணிவது அவசியம். இதுவே அவர்கட்குரிய ஜபமாலையுமாம். ருத்திராக்ஷ மாலைக்கு மணிகள் கொள்ளும்போது எல்லாம் ஒரேவிதமான முகங்களை உடையனவாய்க் கொள்ளுதல் அவசியம். பலவிதமான முகங்களையுடைய ருத்திராக்ஷங்களைக் கோத்த மாலையைத் தரிக்கக்கூடாது. ஜப

மாலைக்கு இரண்டு முகம், மூன்று முகம், பன்னிரண்டு முகம், பதின்மூன்று முகம் உடைய ருத்திராக்ஷங்கள் ஆகாவாம்.

## ருத்திராக்ஷம் அணிதலின் பயன்

எங்ஙனம் விபூதியானது மேலான ஐசுவரியத்தைத் தருவதாமோ, அங்ஙனமே ருத்திராக்ஷமும் ஜனனமரண வடிவ ஸம்ஸார துக்கத்தை நீக்கவல்லதாம். இதனாற்றான் இதற்கு 'ருத்ராக்ஷம்' என்னும் காரணப்பெயர் சுருதிகளிற் கேட்கப்படுகின்றது. அன்றியும், ருத்திராக்ஷந் தரிப்பவர் இகத்தில் ஸகலவிதமான ஐசுவரியங்களையும் புகழையும் பெற்றுப் பரத்தில் தேவர் போற்றும் ஸ்வர்க்கவின்பத்தையும் பெறுவரென்பது வேதாகமத் துணிபாம். எந்த ஜீவனானவன் ருத்திராக்ஷந் தரிக்கவில்லையோ அவன் பரமேஶ்வரனுடைய அருளுக்குப் பாத்திரமாவதில்லையாம். அன்றியும் ருத்திராக்ஷமணிகளில் மின்சாரசக்தி அதிகமாயிருப்பதால் அதைத் தரித்துக்கொள்வதால் தேகாரோக்கியமும், மனவலிமையும் உண்டாகுமென்பது அநேக புத்திமான்களுடைய தீர்மானமும் அனுபவமுமாம்.

## ருத்திராக்ஷ தத்துவம்

ருத்திராக்ஷமே ஸ்ரீ நடராஜ ஸ்வரூபமாம். கீழதிகாரிகளுக்கு ருத்திராக்ஷம், பரமசிவத்தின் குறியாக விளங்குகிறது. எங்ஙனம் புகையைப் பார்த்து மலையில் மறைந்திருக்கும் நெருப்பை அனுமானஞ் செய்கிறோமோ அங்ஙனமே ருத்திராக்ஷத்தைக் கண்டமாத்திரத்திற் பரமசிவத்தின் அனுமான ஞானம் உண்டாகிறது. ஆதலால் இஃது அவர்கட்குக் குறியாம். இது ஸித்தம், ஸாத்தியம், ஸாதனமென மூவகைப்படுமென்று முன்னர்க் கூறப்பட்டது.

உத்தமாதிகாரியானவன், ஸித்த ருத்திராக்ஷத்தை, அதாவது தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் பரிச்சேதப்படாமல் ஸ்வயம்பிரகாசமாய் விளங்கும்பரமசிவத்தை, ஸதா தானாக அனுபவித்துக் கொண்டிருப்பன். இவ்வுருத்திராக்ஷஞ் சொல்லுக்கும் மனசுக்கும் எட்டாததாம். இதன் தத்துவம் கேவலம் அனுபவத்தால் மாத்திரமே அறியத் தக்கதாம்.

ஸாத்திய ருத்திராக்ஷம் மத்திமாதிகாரிகட்கு ஏற்பட்டதாம். மத்திமாதிகாரிகளே அப்பியாசிகளெனப்படுவர். இவர்கள் ருத்திராக்ஷத்தைத் திருக்குவடிவமாய்ப் பாவித்தல் அவசியம். இதன் விளக்கமாவது, ஸகல ஜகத்தின் அவஸ்தாத்திரயங்களான ஜாக்கிரம், ஸ்வப்னம், சுஷுப்திகளாகிய முப்புரங்களை (ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களை)த் தானே ஸகுணரூபமாயாவது அல்லது மானிடச்சட்டை பூண்ட குருமூர்த்தமாயாவது அல்லது தன்னருட் சக்தியாலாவது, ஸர்வ ஸாக்ஷியான அகண்டாகார விருத்தி வடிவஞானத்தாலே ஸம்ஸாரதுக்க நிவிர்த்தி செய்விப்பதாய் வேதாந்தங்களிற் காணப்படுவதால், இவ்வித அநுபூதியின்பொருட்டு ஈசன், குரு இவர்களின் திருஷ்டியே ஸாக்ஷாத் ஸாதனமாவதால், இதுவே ஸாத்திய ருத்திராக்ஷமாம். இதனால்தான், ருத்திராக்ஷமென்னும் சொல்லுக்கு 'ஸம்ஸார துக்கத்தை நிவிர்த்திக்கும் அருட்பார்வை' என்பது பொருளென்று கூறப்பட்டது.

திரிபுரஸம்ஹார காலத்தில் பரமசிவனது மூன்று நேத்திரங்களினின்றும், பூமியிலே விழுந்த ஆனந்தக் கண்ணீரே ருத்திராக்ஷமாயிற்றென்று முன்னர்க் கூறப்பட்டது. ஆதலின் திரிபுர சங்காரத்தின் தத்துவத்தையும் ஆராய்

தல் அத்தியாவசியமாம். இதன் தத்துவமாவது: காமம், வெகுளி, மயக்கமென்னும் மூன்றசுரர்கள், தேவர்களாகிய ஜீவர்களின் ஸச்சிதாநந்த வடிவ ஆத்ம ஸ்வரூபத்தை மறைத்து ஸம்ஸார வடிவ துக்கத்தை உண்டாக்கினரென்றும், காமாதிகளாகிய துர்வாஸனையினுல் மொத்துண்ட ஜீவர்கள் பரமசிவமாம் ஸத்குருவை அடைந்து பிரார்த்திக்க, அவர் ஜீவர்களாகிய தேவர்களிடங் கருணைகொண்டு, ஞான நேத்திர திருஷ்டியால் துர்வாஸனைகளாகிய அசுரர்களை எரித்தருளினுரென்றும் நன்கு புலப்படுகின்றது. இதுவே இதன் தத்துவமாகும்.

இதனுல், ஸம்ஸார பந்த நீக்கத்திற்கு ஞான விசாரமே சாதனம், மற்றவையல்லவென்த் தெளிவாகப் புலப்படுகின்றது. வில்லாகிய மேருவும், நாணுகிய வாசுகியும், அம்பாகிய விஷ்ணுவும், அம்பின் வாயாகிய அக்கினியும், திரிபுர ஸம்ஹார காரியத்துக்குச் சற்றும் பயன்படவில்லை. மற்ருே, பரமசிவம் தம்முடைய மூன்று நேத்திரங்களையும் திறந்து புன்சிரிப்புடனே திருஷ்டித்த நோக்கே அஞ்ஞான காரியமாகிய துர்வாஸனைகளை ஒழித்தது. இத்திருஷ்டியேதான் ஸாத்திய ருத்திராக்ஷமாம்.

ஆத்மானுஸந்தான அகண்டாகார விருத்தியும் ஸாத்திய ருத்ராக்ஷமாமென ஆன்ருேர் கூறுவர். இவ்வுருத்ராக்ஷத்தை மத்திமாதிகாரிகள் (அப்பியாசிகள்) பாவித்து அணிதல் அத்தியாவசியமாம்.

ஸாதனருத்ராக்ஷம்: வேதாகமங்களிற் கூறிய விதிப்படி இதன் ஸ்வரூபம், வகைகள், உற்பத்தி, காரணம், தரிக்க வேண்டிய இடங்கள் முதலியவற்றைச் செவ்வனே அறிந்து இது பரமசிவத்தின் அருளுக்கமேயாமென்று பாவிக்கின்.

இது ஸமாதியாகிய ஸாத்தியருத்ராக்ஷ நிலையையும் சிவவடிவாகவே இருக்கும் ஸித்தருத்ராக்ஷநிலையையும் அடைவிக்குமென்பதில் ஓரையமும் இன்றாம். இது வேதாகமங்களின் துணிபாம். இதுவே ஜனன மரண வடிவ நோயை நீக்கவல்ல மணியாம். ஆதலால் பிறப்பை யொழிக்க முயலும் ஒவ்வொருவரும் இதனைப் பக்தியோடு அணிதல் வேண்டும்.

தங்கிய மலவிருள் சாடும் நன்மணி
மங்கல வுருவமார் வடிவஞ் சார்மணி
பங்கமில் சிவமெனப் பரசும் பொன்மணி
துங்கருத் ராக்கமாம் சோதி மாமணி.

# 16. பஞ்சாக்ஷர ரகசியம்

"காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதநான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே"

## பஞ்சாக்ஷரத்தின் சிறப்பு

பஞ்சாக்ஷரமென்பது ஐந்தெழுத்துக்களைக் கொண்ட ஓர் மறை மந்த்ரமாம். மந்த்ரமென்பது, தன்னைக் குருமுகமாய் விதிப்படி தெரிந்து மனனஞ் செய்பவனை ஸகல துன்பங்களினின்றும் ரக்ஷிப்பதாம். பஞ்சாக்ஷரம் ஸப்தகோடி மகா மந்த்ரங்களினும் சிறந்து விளங்குவது. அன்றியும் யஜுர்வேதத்தின் காண்டங்கள் ஏழனுள் நடுக்காண்டத்தின் மத்தியில் ஸ்ரீ ருத்ராத்யாயமென்னுஞ் சதருத்ரீயமந்த்ரம் சிறந்து விளங்குகின்றது. அச் சதருத்ரீயத்தின் மத்தியில் நாயகத்தன்மை பூண்டு பிரகாசித்துக் கொண்டிருப்பதே 'நமசிவாய' என்னும் சிவ பஞ்சாக்ஷரமாம். வேத புருஷனாகிய பரமேஸ்வரனுக்கு யஜுர்வேதம் சிரசாகவும், அதன் நடுவேயுள்ள ஸ்ரீ ருத்திரம் முகமாகவும், அந்த ஸ்ரீ ருத்திரத்தின் மத்தியிலேயுள்ள பஞ்சாக்ஷரம் கண்ணாகவும், அப் பஞ்சாக்ஷர மத்தியிலேயுள்ள 'சிவ' என்பது கண்மணியாகவும் அமைந்து விளங்குகின்றன. இதுதான் ருத்ராக்ஷமாம். இத்தகைய மகிமை வாய்ந்த பஞ்சாக்ஷரத்தை எந்த ஜீவனானவன் பக்தி விசுவாசத்துடன் ஜபிக்கிறானோ அவன் பிறப்பென்னும் பெரு வியாதியினின்றும் நீங்கிப் பேரானந்த நிலையை அடைவனென்பது வேதாகமப் பிரசித்தமாம். இத்தகைய பஞ்சாக்ஷர வடிவமே ஸ்ரீ நடராஜ மூர்த்தியின்

ஸ்வரூபமாமென்று முன்னர்க் கூறப்பட்டது. ஆதலால் இப் பஞ்சாக்ஷரமே பரம சிவத்தின் வாசகமாகும்.

## பஞ்சாக்ஷரத்தின் வகைகள்

ஆன்மாக்களின் அதிகாரத்துக்குத் தக்கவாறும் அவரவர்கள் உத்தேசிக்கும் பயனுக்குத் தக்கவாறும், இப்பஞ்சாக்ஷரமே பலவகையாகக் குருமார்களால் உபதேசிக்கப்படும். பஞ்சாக்ஷரத்தோடு பிரணவத்தைச் சேர்க்கின் 'ஷடக்ஷரம்' எனப்படும். இது ஸூதஸம்ஹிதை முதலிய பிரமாண நூல்களில் மிகப் பிரசித்தமாம். பஞ்சாக்ஷரம் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம், மகா காரணம், மகாமனுவென ஐவகைப்படும். அவையாவன:—

1. ஸ்தூல பஞ்சாக்ஷரம்—'நமசிவாய'
2. ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரம்—'சிவாய நம'
3. காரண பஞ்சாக்ஷரம்—'சிவயசிவ'
4. மஹாகாரண பஞ்சாக்ஷரம்—'சிவ'
5. மஹாமனு—'சி'

ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரமாகிய, 'சிவாயநம' என்பது ஒரு தலை மாணிக்கமென்றும், காரண பஞ்சாக்ஷரமாகிய 'சிவயசிவ' என்பது இருதலை மாணிக்கமென்றும், மஹாமனுவாகிய 'சி' என்பது நாயோட்டி மந்திரமென்றும் முத்தி பஞ்சாக்ஷரமென்றும் பெரியோர் பரிபாஷையாகக் கூறுவர். இவற்றில் ஸ்தூல பஞ்சாக்ஷரமாகிய 'நமசிவாய' என்பது பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இம்மை மறுமைகளைப் பயப்பதாகும். 'சிவ' என்பதுமுதலாகிய அழகு பொருந்திய பஞ்சாக்ஷரம் ஐந்தும் இடைவிடாது உச்சரிக்கில், சகல கேவலங்களற்ற பேரானந்தத்தில் ஆன்மாக்களிடத்திலே

தோற்றும்படியான ஆணவமானது நீங்கும், அருட் சக்தி யான்து ஆன்மாக்களைப் பொருந்து மென்று ஆன்றோர் கூறி யுள்ளார். ஆதலின், சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமே பிறப்பாகிய பெரு நோயை நீக்கவல்ல மந்த்ர மென்று ஏற்படுகின்றது. ஸ்தூல பஞ்சாக்ஷரத்துக்குப் பந்த பஞ்சாக்ஷரமென்னும் பெயர் ஆகமங்களிற் காணப்படுகின்றது.

## பஞ்சாக்ஷர அர்த்த விசாரம்

"சிவாயநம":—சிவாய—ஸகள நிஷ்கள வடிவமான சச்சிதாநந்த பிரம்மத்தின் பொருட்டு, நம: ஜீவனது வணக் கம்; "சிவத்தின்பொருட்டு நமஸ்காரம்" என்பது பஞ்சா க்ஷரத்தின் பொருளாம். சிவத்துக்கு ஆன்மா (ஜீவன்) தேகா பேக்ஷயால் தாஸனெனவும், சேதந பேக்ஷயால் அச் சிவத்தைத் தவிர வேறல்ல வெனவும் உபநிஷத்துக்களிற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலின் ஈண்டு (வியவ கார தசையில்) "சிவத்தின் பொருட்டு நமஸ்காரம்" என் பது பொருந்தும்; ஆனற் பாரமார்த்திக தசையிலோ "நமஸ் காரம்" என்பதன் பொருள் சிவஜீவ பேதபாவனையே யாம்.

'நம:' என்னும் பதம் ஜீவான்மாவையும் 'சிவ' என் னும் பதம் பரமான்மாவையும் 'ஆய' என்னும் பதம் ஐக் கியத்தையும் பொருளாக உடையனவாம். ஆதலின் 'சிவாய நம:' என்பது சாந்தோக்யோபநிஷத்தின் முடிவாகிய 'தத் துவமஸி' என்னும் மஹா வாக்கியத்தைப்போல, ஜீவப் பிரம்மைக்யங் கூறும் மஹா வாக்யமேயாம்.

## பிரணவமும் பஞ்சாக்ஷரமும்

**மந்திரங்கள் யாவற்றிலும் பிரணவமே சிறந்தது. பஞ்சா க்ஷரம் அதற்குச் சமமானதே. பிரணவமும் அகாரம்**

உகாரம், மகாரம், அ என்ற மாத்திரை, அர்த்தமாத்திரை (அ, என்றது மிகக்குறுகிய சத்தம்; பின்னிரண்டும் சத்தம் மட்டுமே யுடையன) என்ற ஐந்து எழுத்துக்களையுடையது. இந்த ஐந்தெழுத்துக்களும் பஞ்சகிருத்தியத்தையும், பஞ்ச பூதங்களையும், அவற்றாலுண்டான சகல சிருஷ்டிகளையும் குறிக்கும். அதுபோலவே, பஞ்சாக்ஷரத்தின் ஐந்து அக்ஷரங் களும் எல்லாச் சிருஷ்டிகளையும் குறிக்கும்.

மேலும் பஞ்சாக்ஷரத்திலுள்ள நகாரம் பாசத்திரோப வத்தையும், மகாரம் மலத்தையும், சிகாரம் சிவத்தையும், வகாரம் அருட்சக்தியையும், யகாரம் ஆன்மாவையும் குறிக் கும். இப்பஞ்சாக்ஷரம் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம், மகா காரணம், முக்தி பஞ்சாக்ஷரம் என ஐந்துவகையாய் மாறும். இது முக்தியளிக்கவல்லது; "முக்தி பஞ்சாக்ஷர முறைமையி லக்கியம், சத்திய மிதுவெனச் சான்றோர்க் குரைத்தோர்" என்று தாயுமானவரைப்பற்றி அவர் சீடர் கூறியுள்ளார்.

இவ்வாற்றாற் பிரணவமும் பஞ்சாக்ஷரமும் நெல்லும் அரிசியும் போன்றனவே யன்றி வேறல்லவென்று வெளி யாகும். பிரணவம் ஆண்டவனுடைய வெளி வடிவத்தையும், பஞ்சாக்ஷரம் உள் வடிவத்தையும் குறிக்கும். ஆகையால் மற்ற மந்திரங்களனைத்தையும் பிரணவ ஸகிதமாக ஜபித்தாற் றான் பயனுண்டென்று கூறியிருக்க, பஞ்சாக்ஷர மட்டும் பிரணவமின்றி ஜபித்தால் முக்தி சித்திக்குமென விதிக்கப் பட்டிருக்கிறது.

## பஞ்சாக்ஷர ஜபவிதி

ஆசார்ய மூலமாய் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டு, அவருடைய அநுமதியைப் பெற்று, ஸ்நானஞ் செய்து,

விபூதி தரித்து, ருத்திராக்ஷ மணிந்து, நதிக்கரை, சமுத்திரக் கரை, மலையுச்சி, சிவாலயம், வனம், பூந்தோட்டம், நிர்ப்பய மான சுத்ததேசம் இவற்றிற் கிழக்கு அல்லது வடக்கு முக மாய்ச் சுகாஸனத்தில் உட்கார்ந்து, முதலில் மூன்று பிராணா யாமம் செய்து, இம்மந்த்ரத்தின் ரிஷி, சந்தஸ், தேவதை, சக்தி, பீஜம் என்பவைகளை மனத்திலே தியானித்து, கர நியாஸ, அங்கநியாஸஞ்செய்து, குருவை ஸ்மரித்து நமஸ்காரஞ் செய்து, பின்னர்த் தனது ஹ்ருதய கமலத்தின் மத்தியில் சூரிய சந்திர அக்கினி மண்டலத்தில் மின்னற்கொடிபோலப் பிரகாசமாயும், அக்கினி ரூபமாயும், மங்களமாயும் இருக்கிற சிவத்தைத் தியானித்துச் சஞ்சலமற்ற மனத்துடன் பஞ்சா க்ஷரத்தை ஜபஞ் செய்ய வேண்டும்.

## ஸ்ரீ பஞ்சாக்ஷர ஜபத்தின் பலன்

இங்ஙனம் விசுவாசத்தோடு இடைவிடாது தியானித்து வரின் ஸ்ரீ நடராஜமூர்த்தியின் மஹாகாச நடனஸேவை (தியா னம்) சித்திப்பதன் மூலமாய்ச் சிதாகாச நடன ஸேவையா கிய சிவயோக நிஷ்டை (ஸமாதி) சித்திக்கின்றதென்பது சுருதிப் பிரசித்தமாம்.

“ சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளும்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்னச் சிவகதி தானே.”

# 17. நல்லொழுக்கம்

"நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்.

பெரும்பான்மையும் எல்லா ஜாதியாருக்கும், எல்லா ஆசிரமத்தாருக்கும் பொதுவாயுள்ள நல்லொழுக்கங்களை இயன்றமட்டும் திரட்டிச் சொல்வாம்:—

## பொதுவான ஒழுக்கங்கள்

கடவுளும், புண்ணிய பாவமும், சுவர்க்க நரகமும், மறுபிறப்பும், முத்தியும் உண்டென்னும் உண்மையை ஒருபோதும் மறக்கலாகாது. ஓர் உயிருக்கும் சிறிதாயினும் தீங்கு நினைக்கலாகாது. தனக்குத் துரோகஞ் செய்தவரிடத்தும் தான் துரோக சிந்தை யில்லாதவனாயிருத்தல் வேண்டும். பிற உயிர்களுக்குத் துன்பம் வந்தபோது, தன்னை நெருப்பிலே தோய்த்தாற் போல மனம் தபித்து அதை நீக்க முயல வேண்டும். பொறுத்தற்கரிய கோபமும் துன்பமும் வந்தாற் சகித்துக் கொள்ளல் வேண்டும். பிறருடைய பொருளைக் காஞ்சிரங்காயைப்போல் நினைத்தல் வேண்டும். தனக்குப் பிறர் லாபங் கருதாமற் செய்த நன்றியை மறக்கலாகாது. வஞ்சனையை ஒழித்தல் வேண்டும். பகைவரும் சிநேகிதரும் அயலாருமாகிய மூன்று திறத்தாரிடத்தும் பக்ஷபாதமின்றிச் சமமாயிருத்தல் வேண்டும்.

பிறருடைய கல்வி, செல்வம் முதலியவற்றைக் கண்டு பொறாமைப் படலாகாது. கல்வியும் அறிவும் நல்லொழுக்கமும் செல்வமும் அழகும் தம்மைப் பார்க்கிலும் பிறருக்கு மிகப்பெருகல் வேண்டுமென்று நினைத்தல் வேண்டும்.

காணுதவிடத்துப் பிறரை இகழ்ந்து பேசலாகாது. விளையாட்டுக்காயினும் பொய்பேசலாகாது. எந்நாளுஞ் சத்தியமே பேசவேண்டும். தன்னை வைதவனிடத்துங் கடுஞ்சொற்களைப் பேசாமல் இன்சொற்களையே பேசவேண்டும். தனக்கும் பிறர்க்கும் பயனில்லாத வீண்வார்த்தைகளைப் பேசலாகாது. கோள் மூட்டலாகாது.

தமையன் பத்தினியைக் குருபத்தினியாகவும், தம்பி மனைவியை மருமகளாகவும், பிறர் மனைவியரைத் தாயும் தமக்கையும் தங்கையுமாகவும் பாவித்தல் வேண்டும். பிறரிடத்தே குற்றமுண்டாயின், அவரைத் தனித்த இடத்திற் கண்டு அதனையும் அதனால் வரும் கேட்டையும் அவருக்கு அறிவித்து அவரை நல்வழிப் படுத்தவேண்டும். ஒன்று ஒருவருக்கு மிக அப்பிரியமாயிருப்பினும், அஃது அவருடைய நன்மைக்குக் காரணமாயிருக்குமாயின் அதனை அவசியமாகச் சொல்லவேண்டும்.

ஈசுவரத்துரோகி, கொலைஞன், கள்வன், கள்ளுண்போன், பொய்யன், சூதாடுவோன், தூர்த்தன், வஞ்சகன், பொறாமையுடையவன், புறங்கூறுவோன், பலரோடு பகை கொண்டவன், மிகச் செலவு செய்பவன், பைத்தியம் பிடித்தவன் ஆகியவர்களோடு உறவாடலாகாது.

## குரு வழிபாடு

தனக்கு மந்தரங்களையேனும் சாஸ்திரங்களையேனும் உபதேசிக்கும் குருவை வழிபடல்வேண்டும். குருவுக்கு வழிபாடு செய்யாது பெறும் வித்தை சித்திபெறாது. கிரியை, ஞானம் என்னும் இரண்டினுள்ளும் ஞானஞ் சிறந்தது போல, கிரியாகுரு, ஞானகுரு வென்னும் இருவருள்ளும்

ஞானகுரு சிறந்தவர். அதிகமாகவேனும் அற்பமாகவேனும் ஆன்மா உய்யும் விதிக்குரியதை அறிவித்தவரையும் குரு வென்றே நினைத்தல் வேண்டும். சமயசசடங்கு செய்விப்ப வரும் ஆசாரியரேயாவர். அவரையும் வழிபாடு செய்தல் வேண்டும். குருவின் ஆசனத்திலும் படுக்கையிலும் இருத் தலும் படுத்தலும் அவைகளைக் காலினல் தீண்டலும் ஆகாவாம்.

## வந்தன வகை

தகப்பன், தாய், பெரிய தகப்பன், சிறிய தகப்பன், பெரிய தாய், சிறியதாய், பாட்டன், பாட்டி, மாமன், மாமி, தமையன், தமையன் மனைவி, குரு, குருபத்னி, உபாத்தியாயர் முதலிய பெரியோர்கள் வந்தால் இருக்கைவிட்டெழுந்து வந்தனஞ் செய்தல் வேண்டும். வயதினுலும் கல்வியினுலும் ஒழுக்கத்தினுலும் முதிர்ந்த பெரியோர்கள் வரும்பொழுது சிறியவன் இருக்கைவிட்டு எழும்பாதிருந்தால் அற்பாயுசை அடைவான். பெரியோர்களை நாள்தோறும் வந்தனஞ்செய்ப வனுக்கு ஆயுள், கல்வி, கீர்த்தி, பலம் என்னு நான்கும் அபி விருத்தியாகும். தன்னினும் உயர்ந்தோரையாயினும், தன்னை யொத்தோரையாயினும் வணங்கும்போது அவ்வணக்கம் அவருக்கென்று புத்திபண்ணுமல், அவரிடத்திலிருக்கும் கடவுளுக்கென்று புத்திபண்ணி வணங்கவேண்டும். தன்னை யாராவது ஒருவர் வணங்கும்போது, "இவ்வணக்கம் ஆன் மாவாகிய நமக்கன்று; நம்மிடத்திலிருக்கும் கடவுளுக்கே யாம்" என்று புத்தி பண்ணல் வேண்டும்.

தான் ஒருவருக்குச் செய்த உபகாரத்தைச் சொல்லலா காது. தனக்கு ஒருவரிட்ட போஜனத்தை இகழ்ந்து பேசலா

காது. தான் செய்த தருமத்தையும் விரதத்தையும் புகழ்ந்து பேசலாகாது. அங்கஹீனர், ஆறுவிரல்களுள்ளவர்கள், வியாதியாளர்கள், படியாதவர்கள், கிழவர், குரூபிகள், தரித்திரர், ஹீனஜாதியார் என்பவர்களை அவர்களுடைய தோஷத்தைச் சொல்லிப் பரிகாசஞ் செய்யக்கூடாது. ஒருவரை அடிக்கும் பொருட்டுத் தடி முதலான ஆயுதங்களை உயரத் தூக்குதலும் அவைகளால் அடித்தலும் ஆகாவாம். புத்திரன், சீடன், மனைவி யென்பவர்கள் குற்றஞ்செய்தால் அவர்களைப் பிரம்பினால் தண்டிக்கவேண்டும். கோபத்தினால் ஒருவர் தலைமயிரைப் பிடித்திழுத்தலும், தலையில் அடித்தலும் ஆகாவாம். தன் வேலைக்காரர் தன்னிழலாயும், தன் மனைவியும் பிள்ளையும் தன்சரீரமாயும் இருத்தலால், அவர் செய்த பிழையை வருத்தமின்றிப் பொறுத்துக்கொள்ளல் வேண்டும். அயனம், விஷுவம், அமாவாசை, பௌர்ணமி முதலிய விசேஷ தினங்களில் தேவாலயத்தையும், பிதா, மாதா, குரு, உபாத்தியாயர், அரசன் முதலிய பெரியோர்களையும் தரிசித்தல் வேண்டும்.

## தினசர்யை

நாடோறும் சூரியன் உதிக்க ஐந்துநாழிகைக்கு முன்னே நித்திரை விட்டெழுந்து, கடவுளைத் தியானித்து உச்சஸ்வரத்திலே ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு, அவசிய கருமமுஞ் சௌசமுந் தந்தசுத்தியும் முடித்து ஸ்நானஞ்செய்து ஸந்தியாவந்தனம் முதலிய கருமங்களைச் செய்தல் வேண்டும்.

சூரியன் உதிக்க ஐந்துநாழிகையுண்டென்னும் அளவில் எழும்புவது உத்தமம்; மூன்றே முக்கால் நாழிகை உண்டென்னும் அளவிலே எழும்புவது அதமம்; உதயத்தின்பின் எழும்புவது அதமாதமமாம். அவசியகரும முதல் தந்தசுத்தி

யிறுதியாகிய கருமங்களைச் சூரியோதயத்திற்கு முன்னமே முடித்தல் வேண்டும். சூரியோதத்திற்குப் பின்பு தந்தசுத்தி பண்ணினுனையின் தேவரும் முனிவரும் பிதுர்க்களும் அவன் செய்யுங்கருமத்தைப் பிரசன்னமாகக் கொள்ளாமற் பரா முகமாயிருப்பார். ஆதலால் அக்குற்றம் நீரும்படி பிராயச்சித் தஞ் செய்துகொள்ளவேண்டும். உதயகாலத்திலும், அஸ்தமன காலத்திலும் சயனமும் போஜனமும் அத்தியயனமும் செய்யலாகாது. சயனித்தால் மூதேவி சேர்வாள். புஜித்தால் வியாதியுண்டாகும். அத்தியயனஞ் செய்தால் ஆயுசு குறையும்.

தேவாலயம், ஆறு, குளம், கிணறு, பூந்தோட்டம், வீடு முதலியவற்றிற்குச் சமீபத்திலும், ஜனங்கள் சஞ்சரிக்கும் இடங்களிலும், பசு மேயும் இடங்களிலும், மர நிழலிலும், உழுத நிலத்திலும், பயிர் நடுவிலும், வழியிலும், சுடுகாட்டிலும், அறுகம் பூமியிலும், புற்றிலும், மலையிலும், தண்ணீரிலும் மலஜலம் கழிக்கலாகாது. காலிலே பாதக்குறடேனும் செருப்பேனும் இட்டுக்கொண்டு மலஜலம் கழிக்கலாகாது. சந்திரன், சூரியன், அக்கினி, தண்ணீர், காற்று, பசு, பெரியோர் என்னும் இவரெதிரே காறி உமிழ்தலும், மலஜலம் கழித்தலும் ஆகாவாம். எண்ணெய் தேய்த்துக் கொண்டாயினும், ஈரவஸ்திரம் தரித்துக் கொண்டாயினும், நின்றுகொண்டாயினும், நடந்துகொண்டாயினும், கையிலே ஜலபாத்திரத்தை வைத்துக்கொண்டாயினும் மலஜலம் விடலாகாது. தலையையும் காதுகளையும் வஸ்திரத்தினாலே சுற்றிக்கொள்ளாமலும், பூணூலை வலக்காதிலே சேர்க்காமலும் மலஜலம் விடலாகாது. மலஜலங் கழித்தவுடனே விதிப்படி மண்ணிட்டுச் செவ்வையாகச் சௌசஞ்செய்தல் வேண்டும். ஜலமலங்

கழிக்கப்புகுங்காலந் தொடங்கிச் சௌசாசமனம் முடிக்கும் வரைக்கும் ஒருவரோடும் பேசலாகாது. மயிர், எலும்பு, முள், பலியிட்ட சாம்பல், உமி, குளித்தநீரால் நனைந்த பூமி, கோழை, எச்சில், மலம், மூத்திரம், உதிரமென்னும் இவைகளை மிதியாமல் தூரத்தில் விட்டு ஒதுங்கிப்போதல் வேண்டும். மலமூத்திரங்களைப் பார்க்கலாகாது.

## ஸ்நானம்

ஆறு, தடாகம், ஓடை, மடு முதலியவைகளிலே ஸ்நானஞ்செய்தல் வேண்டும். இவைகள் இல்லையானால், கிணற்றினின்றாம் தண்ணீரை எடுத்து ஸ்நானம் செய்தல் வேண்டும். ஒருவர் வெட்டிய குளத்திலே ஸ்நானஞ் செய்யப்புகின் அந்தக் குளத்தில் ஐந்து கை மண்ணெடுத்து வெளியிற் போட்டுவிட்டு ஸ்நானம் செய்தல் வேண்டும். தீண்டத்தகாத ஜாதியாரையும், மாமிசம் உண்போரையும், அசுத்தரையும், ஜனன மரணசௌசம் உடையவரையும், தூரஸ்திரீயையும், ஊர்ப்பன்றி நாய் கழுதை நரி காகம் கோழி கழுகு கூகை முதலியவைகளையும், எலும்பையும் தீண்டினாலும், க்ஷௌரஞ் செய்து கொண்டாலும், சுற்றத்தார் இறக்கக் கேட்டாலும், கெட்ட ஸ்வப்னங் கண்டாலும், பிணப்புகை பட்டாலும், சுடுகாட்டிற் போனாலும் உடுத்த வஸ்திரத்துடனே ஸ்நானம் செய்தல் வேண்டும்.

திருவிழாவிலும், யாகத்திலும், விவாகத்திலும், தீர்த்தக் கரையிலும், யாத்திரையிலும், வீடு அக்கினியிற் பற்றி எரியுங் காலத்திலும், கலகத்திலும், இடருற்ற காலத்திலும் நீசரல்லாத மற்றவர்களைத் தீண்டினால், தீட்டில்லை. வஸ்திரம் தரித்துக் கொள்ளாமல், சயனம், ஸ்நானம், ஸந்தியா

வந்தனம், பூஜை, போஜனம் முதலியவைகளைச் செய்யலாகாது. ஜலத்தைக் காலினால் உழக்கலாகாது. ஸ்நானம் செய்தவுடனே உடம்பை வஸ்திரத்தினால் துடைத்தல் வேண்டும்; கையினாலே துடைக்கலாகாது. பிறர்மேல் நீர் தெறிக்கும்படி வஸ்திரத்தைத் தோய்த்தலும், மயிரை உதறலும் ஆகாவாம். நடக்கும்போது மயிரை உலர்த்தலாகாது. வஸ்திரத்தைத் தண்ணீரினுள்ளே பிழிதலாகாது. காலினாலே காலைத் தேய்த்து அலம்பக்கூடாது.

ஈர வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டிருப்பதாகாது. மயிர், கரி, சாம்பல், எலும்பு, முள், விஷம், எச்சில் இவைகளை ஜலத்திற் போடக்கூடாது. கோழையை ஜலத்தில் உமிழ்தலாகாது. நோயினால் ஸ்நானஞ் செய்ய முடியாதபோது கழுத்தின் கீழ், அரையின் கீழ், கால் என்னும் இவைகளுள் ஒன்றை இயன்றபடி ஜலத்தினால் அலம்பிக்கொண்டு அலம்பாமல் எஞ்சிநின்ற உடம்பை நனைந்த வஸ்திரத்தினால் ஈரம் படும்படி துடைத்துத் தோய்த்து உலர்ந்த வஸ்திரந் தரித்துக்கொண்டு ஸந்தியாவந்தனம் முதலியவை செய்யலாம்.

## போஜனம்

முகத்தையும் கை கால்களையும் அலம்பாமற் புஜிக்கலாகாது. ஜலத்தினாலே காலலம்பி, அவ்வீரம் இருக்கும் போதே புஜித்தல் வேண்டும். படுக்கையிலிருந்து கொண்டும், மூலைக்கெதிராக இருந்து கொண்டும், இடக்கையில் அன்னத்தை வைத்துக்கொண்டும், உள்ளங்கையில் அன்னத்தை வைத்துக்கொண்டும், ஆசனத்தின்மீது இலை போட்டுக் கொண்டும், நின்று கொண்டும், நடந்து கொண்டும் புஜிக்கலாகாது. அசுத்தமாகிய இடங்களிலும், நானாவித ஜனங்

கள் சேர்ந்த சங்கத்திலும், ஸந்தியா காலங்களிலும் புஜிக்கலாகாது. கனி, கிழங்கு, வற்றல், வடகம், பணியார மென்பதை யொழிந்த மற்றைப் பழைய உணவுகளையும், பிண்ணாக்கு முதலிய சாரமில்லாத உணவுகளையும் உண்ணலாகாது.

அங்கஹீனர், வியாதியாளர், ஆசார மில்லாதவர் முதலியோராலே தீண்டப்பட்டதும், அருவருப்புள்ளதுமாகிய அன்னத்தைப் புஜிக்கலாகாது கோபமும் கவலையுமின்றி முகமலர்ச்சியோடும் மனமகிழ்ச்சியோடும் இருந்து புஜித்தல் வேண்டும். வயிற்றிலே பாதிப் பங்கை அன்னத்தினாலும், காற்பங்கை ஜலத்தினாலும் நிறைத்துக் காற்பங்கை வாயு சஞ்சரிக்கவிடல் வேண்டும். இரவில் எட்டு நாழிகைக்குள்ளே புஜித்தல் உத்தமமும், பதினொரு நாழிகையளவேல் மத்தியமும், பதினன்கு நாழிகையளவேல் அதமமுமாம். அதன்மேல் புஜிக்கலாகாது. இராத்திரியில் மிகப் புஜிக்கக்கூடாது. மத்தியான்னத்தில் அதிக போஜனம் செய்தால் ராத்திரி புஜிக்கக் கூடாது. ராத்திரியில் தயிரையேனும் வெண்ணெயெடுத்த மோரையேனும் உட்கொள்ளலாகாது. வெண்கலப் பாத்திரத்தில் விடப்பட்ட இளநீரும் தாமிரபாத்திரத்தில் விடப்பட்ட பாலும் கள்ளுக்குச் சமானமாதலால் அவைகளை உண்ணலாகாது.

நின்றுகொண்டு தீர்த்தம் சாப்பிடக்கூடாது. இரண்டு கையினாலும் முகந்தாயினும் ஏற்றாயினும் தீர்த்தம் சாப்பிடக்கூடாது. வாயைக் கொப்புளிக்கும்போது வாயிற்புகுந்த ஜலத்தை உள்ளேபுகாமல் உமிழ்ந்துவிடவேண்டும். வெண்கலப் பாத்திரத்தினாலும் தாமிரப் பாத்திரத்தினாலேனும் ஒருபோதும் கால் அலம்பக்கூடாது. புஜித்தபின் காரணமின்றி ஸ்நானஞ் செய்யக்கூடாது. வியாதியஸ்தன் தலைக்கு ஸ்நானஞ்

செய்யலாகாது. ஜனனம், மரணம், கிரகணம், மாசப்பிறப்பு இவைகளிலன்றி ராத்திரியில் ஸ்நானஞ் செய்யலாகாது.

அஷ்டமி, சதுர்த்தசி, அமாவாசை, பௌர்ணமி, மாசப் பிறப்பென்னும் பஞ்ச பர்வங்களிலும் பிரதமை, ஷஷ்டி, துவா தசிகளிலும், உத்திரம், திருவோணம், திருவாதிரை, கேட்டை யென்னும் நக்ஷத்திரங்களிலும், ஜன்ம நக்ஷத்திரங்களிலும், வ்யதீபாத புண்ணிய காலத்திலும், ராத்திரியிலும் எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாகாது. எண்ணெய் தேய்த்துக் கொள் வதற்கு ஆடவர்களுக்குப் புதன்கிழமையும் சனிக்கிழமை யும் நல்லனவாம்; பெண்களுக்குச் செவ்வாய்க்கிழமையும் வெள்ளிக்கிழமையும் நல்லனவாம். விலக்கப்பட்ட திதி வார நக்ஷத்திரங்களிலே எண்ணெய் தேய்த்துக்கொள்ள வேண்டி னால், நெய்யும் மண்ணும் தெறித்து எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாம். வியாதியஸ்தரும், விருத்தரும், சிசுக்களும் காலம் விசாரியாமல் தைலாப்யங்களஞ் செய்யலாம். தலையில் தேய்த்து வடிந்த எண்ணெயை உடம்பில் தேய்க்கலாகாது. ஜலமோசனம், எண்ணெய்தேய்க்கு முன்னே செய்துகொள்ள வேண்டும். ஸ்நானஞ் செய்தபின்பு எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாகாது.

## வபனம்

க்ஷௌரஞ்செய்து கொள்வதற்குத் திங்கட்கிழமை யும் புதன்கிழமையும் உத்தமம்; வியாழக்கிழமையும் வெள் ளிக் கிழமையும் மத்திமம்; பிரதமை, சதுர்த்தி, ஷஷ்டி, அஷ்டமி, நவமி, ஏகாதசி, சதுர்த்தசி, அமாவாசை, பௌர் ணமியென்னும் திதிகளிலும், ஞாயிறு செவ்வாய், சனிக் கிழமைகளிலும், கார்த்திகை, ரோஹிணி, மகம், உத்திரம், மூலம், உத்திராடம், உத்திரட்டாதி என்னும் நக்ஷத்திரங்

களிலும், ஜன்ம நக்ஷத்திரங்களிலும், மாசப்பிறப்பிலும், வ்யதீபாத யோகத்திலும், விரததினத்திலும், பத்னி கர்ப்பிணியாயுள்ள காலத்திலும், ஸந்தியா காலத்திலும், குதப காலத்திலும், ராத்திரியிலும், போஜனஞ் செய்தபின்னும், வியாதியான காலத்திலும் வபனஞ்செய்து கொள்ளக் கூடாது.

தீக்ஷை, ஆசார்யாபிஷேகம், மகுடாபிஷேகம் செய்து கொள்ளும்போதும், பிரதிஷ்டை யாகம் உற்சவம் இவை தொடங்கும்போதும், விவாகத்துக்கு முதல் தினத்திலும், புண்ய ஸ்தலத்தையும் புண்ய தீர்த்தத்தையும் அடைந்த போதும், வியாதி நீங்கியகாலத்தும், சிறைச்சாலையை விட்டுப் பிரிந்தகாலத்திலும், ஆசௌச முடிவிலும், தன்னுடைய மாதா பிதா ஆசார்யன் பெரிய தகப்பன் சிறிய தகப்பன் தமையன் தாயுடன் பிறந்த மாமன் பெண்கொடுத்த மாமன் இவர்களுடைய மனைவியர் பிதாவுடன் பிறந்தவன் சிறிய தாய் தமக்கை இவர்கள் இறந்தகாலத்திலும், தன் தலையிலே பொல்லாதவை விழுந்தபோதும் திதிவார நக்ஷத்திரம் பாராமல் வபனஞ் செய்துகொள்ளல் வேண்டும். ஜனனாசௌச முடிவிலே பிதா வபனஞ் செய்துகொள்ளல் வேண்டும். மரணாசௌச முடிவிலே எல்லாரும் வபனஞ் செய்து கொள்ளல் வேண்டும் இப்படிச் செய்யாதொழிந்தால் ஆசௌசம் நீங்காது. ராத்திரி காலத்திலே தகனஞ் செய்தால் வபனம் அன்றைக்குச் செய்து கொள்ளாது மறுநாள் செய்துகொள்ளல் வேண்டும்.

## கூடாத செயல்கள்

தெய்வபிம்பத்தின் நிழலையும், பிதா மாதா குரு உபாத்தியாயர் அரசன் முதலியபெரியோர்களுடைய நிழலையும், பசு

வின் நிழலையும், ஜோதியின் நிழலையும் மிதித்தலும் தாண்டலு மாகாவாம். எருக்கு, கள்ளி, தான்றி, ஆமணக்கு இவை களின் நிழலிலே பகற்காலத்திலும் இருக்கலாகாது. விளா நிழலிலும் அரசநிழலிலும் இராக்காலத்தில் தங்கலாகாது. நீசர் நிழல், விளக்கு நிழல்களும் ஆகாவாம்.

ஆடு, கழுதை, துடைப்பம் இவைகளின் தூளி மேலே படும்படி நெருங்கலாகாது. இரண்டு தெய்வ பிம்பத்திற்கு நடுவிலும், பிராம்மணர் முதலிய பெரியோர் பலருக்கு நடுவி லும் ஊடறுத்துப் போகலாகாது. பசுவானது தண்ணீர் குடிக் கும்போதும், புல் தின்னும்போதும், கன்று பால் குடிக்கும் போதும் தடை செய்யலாகாது. பசுவின் கன்றையேனும் அதைக் கட்டும் கயிற்றையேனும் தாண்டலாகாது.

தான் உடுத்திய ஆடைக்காற்றுப் பிறர் மேல் உறைப்பப் போதலும், பலர்நடுவே நின்று வஸ்திரத்தை உதறலும் ஆகா வாம். பிறர் எழுந்துபோகத் தொடங்கும்போது அவரைப் பின்னேநின்று அழைத்தலும், தும்முதலும், எங்கே போகின் றீரென்று கேட்டலும் ஆகாவாம். அவருக்கு யாதாயினும் சொல்லவேண்டுமாயின் விரைந்துசென்று அவர் பக்கத்திலே நின்று சொல்லல் வேண்டும். அவர் முன்னே போய் எதிர் முகமாக நின்று ஒன்றையும் சொல்லலாகாது. பிறரைப் பார்த்து உம்முடைய உடம்பு நன்றாக இருக்கின்றதென்று சொல்லலாகாது. அவர் புசித்த போஜனங்களைப் பற்றிக் கேட்கலாகாது.

மார்க்கத்திலே போகும்போது தேவாலயமும், தெய்வ பிம்பமும், ஆசார்யர், பிராம்மணர், அரசர், வித்வான்கள், தயிர்க்குடம், தேன் குடம், நாற்சந்தி இவை எதிர்ப்பட் டால் வலமாகச் சுற்றிப் போதல் வேண்டும். பெரியோர்களும்

வயோதிகர்களும், சுமை சுமப்போர்களும், வியாதியஸ்தர்களும், பிள்ளைகளும், பசுக்களும், பெண்களும் எதிர்ப்பட்டால் அவர்களுக்கு வழிவிட்டு விலகிப் போகவேண்டும். பிறர் இரகசியம் பேசும்போது அதைக் கேட்கலாகாது. இருவர் இருந்து பேசுமிடத்தில் அவர் அனுமதியின்றிப் போகலாகாது. பிறர் பேசும்போது கதவு முதலியவைகளின் பக்கத்தில் மறைந்து நிற்கலாகாது. பிறருடைய வீட்டின் கண்ணே, புறக்கடை வாயிலாலே போகக்கூடாது.

பற்கடித்தலும், நகங்களைக் கடித்தலும், மீசையைக் கடித்தலும், நகத்தினாலே பல்லைக் கிளைத்தலும், உதட்டைக் கசக்கிக் கொண்டிருத்தலும், மூக்கைத் தூக்கி இழுத்தலும், கண்மயிரைப் பிடுங்கலும், நகம் மயிர் இவைகளைத் தானாகச் சேதித்தலும் ஆகாவாம். வாயை மூடாமல் கொட்டாவி விடுதலும், பெருமூச்செறிதலும் ஆகாவாம். இரைச்சலிட்டுச் சிரித்தலும், காரணமின்றிச் சிரித்தலும், ஓசையுடன் அபானவாயு விடுதலும் ஆகாவாம். காரணமின்றி மண் கட்டியை உடைத்தலும், துரும்பு கிள்ளுதலும், நிலத்தைக் கீறலும், கையையும் தலையையும் உதறலும், கையினாலே அடிக்கடி உடம்பிற் புடைத்தலும் ஆகாவாம்.

தலைசொறிதல் வேண்டின் வலக்கையினாற் சொறிதல் வேண்டும். இரண்டு கையினாலே தலைசொறிதலும் இடக்கையினால் தலைசொறிதலும் முகத்தை இடக்கையினாலே தீண்டலும் ஆகாவாம். அரையின் கீழே தொட்டால் கை அலம்ப வேண்டும். காலை இடக்கையினாலன்றி வலக்கையினாலே தொடக்கூடாது. இருந்த ஆஸனத்தைக் காலினால் உதைக்கக்கூடாது. நெருப்பை வாயினால் ஊதலாகாது. அதனை ஆடையினாலேனும், முறத்தினாலேனும், கையினா

லேனும் வீசி மூட்டலாகாது. அதனை இருவருக்கு நடுவே கொண்டுபோகலாது; கொண்டுபோக வேண்டிற் கீழே வைத்து எடுத்துக்கொண்டு போகவேண்டும். அக்கினியைத் தாண்டலும் அக்கினிக்கு எதிரே காலை நீட்டலும் அக்கினியைத் தரையின்கீழ்த் தாங்கலும் அக்கினியிற் காலைக் காய்ச்சலும் அசுத்தமாகிய பொருளை அக்கினியிற் போடுதலும் அடுப்பிலுள்ள அக்கினியை ஜலம்விட்டு அணைப்பதும் ஆகாவாம். விளக்கை வாயினால் ஊதி அணைப்பதும் கையினாலே தூண்டுவதும் ஆகாவாம். தான் உயரமாய்ப் படுத்துக் கொண்டு அக்கினியைக் கீழே வைக்கக்கூடாது.

சூரியனை உதிக்கும்போதும் அஸ்தமிக்கும்போதும் கிரகணம் பிடிக்கும்போதும் ஜலத்திற் பிரதிபிம்பித்திருக்கும் போதும் உச்சியில் இருக்கும்போதும் பார்க்கலாகாது. சுடுகாட்டு அக்கினியைப் பார்க்கலாகாது. திகம்பரத்தைத் தரிசிக்கலாம்; வஸ்திரந் தரித்துக் கொள்ளாதவரைப் பார்க்கலாகாது. பாதக்குறடு, செருப்பு, வஸ்திரம், பூணூல், புஷ்பம், கமண்டலம் என்பவைகள் அன்யனால் அநுபவிக்கப் பட்டிருந்தால் அவைகளைத் தான் அநுபவிக்கக்கூடாது. குடுமிக்கு வெளியிலே பூவைச் சுற்றிக்கொள்ளக் கூடாது. துஷ்ட வாகனத்தின்மேல் ஏறலும், தண்ணீரை மோதியடித்து ஆற்றங்கரைமுதலியவைகளைச் சேர்தலும், தீப்பட்ட வீட்டிற்பிரவேசித்தலும், மரத்தின் நுனியில் ஏறலும், மழை பெய்யும்போது காலைப் பரப்பி ஓடலும், ஜலப்பிரவாகத்திற்கு எதிராக நீந்தலும், ஒருவனைய் ஓடமேறிக் கடத்தலும், மந்தையினுள்ளே காரியமின்றிப் போதலும், சர்ப்பம் மதயானை முதலியவற்றிற்கு எதிரே நிற்றலும், அவைகளைத் தொடர்தலும், குடியில்லாத வீட்டிலே தனித்துத் தூங்கு

தலும், பாழ்ங்காட்டுக்குத் தனித்துப் போவதும், பாழ் வீட்டிலே தனித்திருப்பதும் ஆகாவாம்.

துணையின்றித் தனித்தாயினும் இன்னானென்றறியப் படாதவனோடாயினும் வழி நடப்பது கூடாது. போக வேண்டின் ஒருவரைக் கூட்டிக்கொண்டு போகவேண்டும். இருட்டிலே வெளிச்சமின்றிப் போவது கூடாது. மழையிலும் வெயிலிலும் இராவிலும் காடுகளிலும் குடை பாதரக்ஷை தடி இவைகளைத் தரித்தவனாகித் தேகத்துக்குத் தீங்கு வாராதபடி சஞ்சரிக்க வேண்டும். சஞ்சரிக்கும்போது மேற்பார்வையும் பக்கத்துப் பார்வையும் தூரப்பார்வையும் விட்டு, நுகத்தடியளவு தூரம் வழியை நன்றாகப் பார்த்துப் போக வேண்டும். மிக விழித்திருத்தல், மிகத் தூங்கல், மிக இருத்தல், மிக நிற்றல், மிக நடத்தல், மிகப் படுத்திருத்தல், மிக அருந்தல், மிகப் பேசுதல் இவை யெல்லாம் நன்மையல்ல. பகலிலே ஒரு போதும் நித்திரை செய்யலாகாது. வடக்குத் திக்கிலே தலை வைத்துச் சயனிப்பது கூடாது. காலீரம் உலர்வதற்கு முன் சயனிப்பது கூடாது.

# 18. யோக்கியதையின் உயர்வு

இவ்வுலகில் மன்னுயிர்களுக்கு மகுடமும் மகிமையும் அவரவர்களுடைய யோக்கியதையேயாம். மனிதர்களுக்கு எல்லாப் பேறுகளிலும் நற்குணமே பெரும்பேறும். அவர்களுக்கு உயர்ந்த அந்தஸ்தும் இதுவே. அனைவரும் உள்ளம் உவந்து அங்கீகரிக்கத்தக்க ஆஸ்தியும் இதுவே. யோக்கியதை எத்தகைய நிலைமைக்கும் பெருமை உண்டாக்கும்; எவ்வளவு தாழ்ந்த ஸ்திதியையும் உயர்த்தும். சற்குணம் செல்வத்திலும் அதிகச் செல்வாக்குள்ளது; பிரசித்தி பெறவேண்டுமென்கிற பேராவலில்லாமலே பலவிதமான கீர்த்தியை உண்டாக்கும். சற்குண முண்டானால் அதனோடு ஸகலவிதமான செல்வாக்கும் உண்டாகும். எப்படியெனில் யோக்யதை, உண்மை, மாறுபடாத மனவுறுதியாகிய இந்நற்குணங்களே செல்வாக்கை உண்டாக்குகின்றவை. மனிதர்களுக்கு இந்நற்குணங்கள் உள்ளவரிடத்தில் உண்டாகும் நம்பிக்கையும், மதிப்பும், மற்றெந்தக் குணமுள்ளவரிடத்திலும் உண்டாவதில்லை.

யோக்யதை யென்பது மனிதருடைய நல்ல ஸ்வபாவத்துக்கு அடையாளமாம். அது வடிவெடுத்துவந்த நீதிநெறியேயன்றி வேறில்லை. நற்குண முள்ளவர்கள மற்றெல்லோரும் தத்தம் ஹ்ருதயம் போலவே நம்புவதற்கு இடமாயிருப்பது மாத்திரமேயன்றி, செம்மையாக அரசாளப்படும் ராஜாங்கமனைத்திலும் உபயோகமான காரியங்களெல்லாவற்றையும் நடத்துவதற்குச் சிறந்த முதற்காரணமாகிறார்கள். ஏனெனில், முக்யமாய் இவ்வுலகத்தை யாள்வன நீதி நெறிகளேயன்றி வேறல்ல. "யுத்தரங்கத்திலும் நீதி பலத்தால்

எவ்வளவு காரியஞ் சாதிக்கலாமோ அதிற் பத்தில் ஒருபங்கு தான் தேக பலத்தாற் சாதிக்க இயலும்" என ஒருவர் மொழிந்தார். ஒரு தேசத்தின் பலம், தொழில் முயற்சி, நாகரிகம் இவை யனைத்திற்கும் ஆதாரம் மனிதர்களுடைய நடத்தையே. தேச ஸம்ரக்ஷணத்துக்கு மூலாதாரம் இதுவே. சட்டதிட்டங்களும்,நிபந்தனைகளும்இதனினின்று உற்பத்தி யானவையே. கடவுளுடைய கோளுதை கருணையால் இப் பிரபஞ்சத்திற் சகலதேச ஜாதி மதஸ்தர்களுக்கும் அவரவர் நடதைக் கேற்ற வண்ணம் இன்ப துன்பங்கள் அமையுமே யன்றி மற்றப்படி அமையா. ஒரு காரியம் உண்டானால் அதற்குக் காரணமுண்டென்பது எப்படி நிச்சயமோ, அப் படியே அவரவருடைய நடத்தையும் அதற்கேற்ற பயனை விளைவிக்குமென்பதும் நிச்சயம். ஒருவன் மற்றவர்களைப் போல் அறிவிற் பண்படாதவனும், அற்ப சாமர்த்தியனும், தனம் சிறியனுமாயிருப்பினும், அவன் நடத்தை மட்டும் மாற்றுயர்ந்திருக்குமானால், தொழிற் சாலையோ, கணக்குச் சாலையோ, வர்த்தக சாலையோ, மந்திராலோசனை சபையோ, எவ்விடத்திலாயினும் அவனுக்குச் செல்வாக்குஅதிகமாகும். அறிவு மிகுந்தவர்களைக் கண்டு வியப்படையலாமென்றாலும், யோக்கியதையின் விசேஷகுணம் இருந்தாலன்றி அவர்களி டத்தில் நம்பிக்கை கொள்ளலாகாது.

அறிவே பலமென்பர் சிலர்; ஆசாரமே பலமென்பர் சிலர். இவ்விரண்டினுள்ளும், இரண்டாவதிலேயே உண்மை அதிக மிருக்கிறதென்று எண்ணவேண்டும். ஹ்ருதயமில்லாத மனமும், ஆசாரமில்லாத அறிவும், சுகுணமில்லாத சாமர்த் தியமும் ஆகிய இவையெல்லாம் தத்தம் வழியில் வலிமை உள்ளவைகளேயாயினும், அவற்றின் வலிமை விசேஷமாய்த்

தீமை விளைவிப்பதற்குமட்டும் பயன்படுமே ஒழிய மற்றப்படி நன்மைக் கிடமாகா. அவை நமக்கு அறிவு புகட்டினும் புகட்டும்; விநோதமாய்ப் பொழுது போக்காயிருந்தாலும் இருக்கும்.

உண்மை, மனநிறை, நன்மையாகிய இவைகளே ஒருவனுடைய குணங்களில் மிகவும் முக்யமானவையாம். இக்குணங்களோடு ஒருவனுக்கு மனவுறுதியும் இருக்குமானால், அவனுடைய வல்லமைக்குத் தடையொன்றும் இல்லை. அவன் நன்மை செய்வதற்குஞ் சலிக்கமாட்டான். தீமைகளை வெல்லவும் பின்வாங்கமாட்டான். வருத்தங்களையும் கஷ்டநிஷ்டூரங்களையுஞ் சகித்துக் கொள்ள வல்லவனாவான். மனநிலை மாறாத நெறியோனுடைய நற்குணம் நன்றாகப் பிரகாசிப்பது அவனுடைய கஷ்டகாலத்திலேதான். மற்றவையெல்லாம் துணை நில்லாது தவறிப்போக, மனநிறையும், ஆண்மையுமே அப்போது அவனுக்கு முக்கிய ஆதாரமாகின்றன.

நன்னடக்கை யுடைமையே இவ்வுலகத்தில் உயர்ந்த பேறென்று ஒவ்வொரு மனிதனும் அதை நாடுவது கடன். தகுந்த சாதனங்களால் அதைப் பத்திரமாய்க் கைக்கொள்ளச் செய்யும் யத்தனமே, அவனுக்கு முயற்சிசெய்த முகாந்தரத்தைக் காட்டும். ஆண்மையைப்பற்றி அவனுக்குள்ள அபிப்ராயம் உயர உயர, அம்முகாந்திரமும் நிலைபெற்றுத் திடமுறும். உயர்ந்த ஒழுக்கத்தின் அளவை உள்ளபடி உணரகாம் வல்லவரல்லராயினும், அதைக் கைக்கொள்வதுநல்லது.

மேல்நோக்கம் இல்லாத வாலிபன் கீழ்நோக்குவன்; உயரப் பறக்காத ஐந்து தவழும் அமைப்புள்ளது. பணிந்த நடையும், உயர்ந்த நோக்கமுமுள்ளவனாயிரு. அப்படி யிருந்தால் தாழ்மையுடன் நடக்குந் தன்மையும், மேன்மையு முண்டாகும்.

தன்னிடத்தில் விளங்கிய சாத்விகம் அனைத்திலுங் குறையாமல் பின்னும் ஆயிரமடங்கு அதிகமுண்டென நெஞ்சார நினைவார அறிந்திருப்பவனும், உள்ளமு மொழுக்கமும் ஒத்திருப்பவனும், நால்வருடன் கலந்து உறவாடும்பொழுது செய்யும் உபசார மனைத்தோடுங் கூடப் பெருந்தன்மையுள்ள மனதில் முளைத்தெழுந்த செடியிற் பூத்த மலர்போலும் மிருந்த மரியாதைகள் இணைந்திருக்கப் பெறுவோனும், இவ்வண்ணம் சாதுவென்னுஞ் சிறப்புப் பெயரை ஏசுவாரின்றி அணிந்து கொள்வோனுமாகிய இத்தன்மையரைத் தவிர எப்பொழுதும் பெருமை பெற வல்லவர் வேறு யார்? ஒரு தேசத்தை உயர்த்துவதும், ஒரு தேசத்தைத் திடப்படுத்துவதும், ஒரு தேசத்துக்கு மஹத்துவம் உண்டாக்குவதும், அதன் அதிகாரத்தைப்பரப்பி அதற்குச் செல்வாக்குண்டாக்கிப் பிறர் அதற்கடங்கி அதை அபிமானிக்கும்படிச் செய்வதும், லக்ஷோபலக்ஷம் பெயர்களுடைய ஹ்ருதயத்தை உருக்கி அதற்கு முன் இதர தேசத்தார்கள் கர்வ மடங்கித் தலைகுனியும்படி செய்வதும், கீழ்ப்படியச் செய்வதற்கேற்ற கருவியும், மேன்மை பெறுவதற்கு மூலாதாரமும், ஒரு தேசத்தாருக்கு மெய்யான ஸிம்மாசனமும், கிரீடமும், செங்கோலுமாகிய இவையெல்லாம் 'குலப்பெருமையால் அமைந்தன வல்ல; நாகரிகத்தாலும் வரப்பெற்றவையல்ல; புத்தி ஸாமர்த்தியத்தாலும் அமைவனவல்ல; நல்லொழுக்கத்தால் அமைந்தனவே யாம். மனிதர்களுக்கு இந்த யோக்கியதையே மெய்யான குலபிருதும் வித்தையுமாகும்; இதைக் கடைப்பிடித்தொழுக இறுதி நாள்வரையும் ஒவ்வொருவரும் முயல வேண்டும்.

# 19. பரம புருஷார்த்தம்

## சுகமே பிரதான புருஷார்த்தம்

பிராணிகள் அனைவரும் அடைய விரும்புவது புருஷார்த்தமாம். அதில் முக்கியமானது சுகம். அது நித்தியமென்றும், அநித்தியமென்றும் பேதத்தால் இருவகைப்படும். நித்திய சுகத்தைத்தான் மோக்ஷமென்று சுருதி கூறுகின்றது. அநித்திய சுகத்தைக் காமமென்பர். அஃது இந்த்ரிய ஜன்ய ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமாகக் கூடியது; இந்திரியங்களுக்கும் விஷயங்களுக்கும் ஸம்பந்தம் நேரும்போது உண்டாகக் கூடியது; சரீரம், வாக்கு, மனம் என்பவைகளால் அனுபவிக்கக் கூடியது; பிரம்மதேவர்முதல் ஸ்தாவரபரியந்தமான பிராணிகளிடத்தில் தாரதம்மியத்தோடு கூடியதாகப் பிரஸித்தமாயுள்ளது; துக்கத்தோடு கலந்துள்ளது; அவிவேகிகளால் மாத்திரம் இச்சிக்கப்படுவது. நித்திய சுகமோ வென்றால் இப்படியெல்லாம் இல்லாதது. இவைகளுக்குச் ஸாதனமாதல்பற்றித் தர்மத்தையும் அர்த்தத்தையும் புருஷார்த்தமாகச் சேர்த்தார்கள். ஸாதனத்தையும் பலன்போற் கருதுவது உண்டு.

ஆகவே தர்மமும், அர்த்தமும் முக்கிய புருஷார்த்தங்களல்ல; ஆனால், காமமெனப்படும் விஷயசுகத்துக்கு ஸாக்ஷாத் ஸாதனமாயும், மோக்ஷமெனப்படும் நித்திய புருஷார்த்தத்துக்குப்பரம்பராஸாதனமாயும் ஆவதாலே கௌணபுருஷார்த்தமாம். ஆதலின், தர்மார்த்தங்களை முக்கிய புருஷார்த்தங்களென்றாவது, முக்கிய புருஷார்த்த ஸாதனங்களென்றாவது நினைக்கக்கூடாது. அப்படி நினைத்தால் அவர்கள் மீண்டும் ஜனனமரணங்களையே அடைவார்களென்று முண்டக சுருதி கூறுகின்றது. ஆகையால் அவைகளை எவ்வாறு உபயோகித்

தாற் பரம்பரையாகவாவது பரமபுருஷார்த்த ஸாதனங்களாகுமோ அவ்வாறு ஸம்பாதித்து உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

## அவிவேகிகளின் தனம்

அர்த்தமென்பது (தனம்) அவிவேகிகளுக்கு அனர்த்தத்தையே விளைவிக்குமாம். அதனுலேதான், தைத்திரீய சுருதியும், "நல்லறிவு கிடைத்தபின் தனக்கு ஐசுவரியங் கிடைக்க வேண்டும்" எனச் சிரேயஸை விரும்பியவன் பிரார்த்தித்ததாகக் கூறுகின்றது. அந்த வாக்கியத்தின் பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யக்காரர்களும், "அறியாதவனுக்கு ஐசுவரியம் அனர்த்தத்தையே விளைவிப்பதாகும்" என்று கூறினுர்கள்.

இதனுல், அக்ஷரங்களை உச்சரிக்கும் சக்தி வருமளவும் தாயின் அனுசாஸனத்திலும், அதன் பிறகு உபநயனமாகும் வரையில் பிதாவின் அனுசாஸனத்திலும், அதன்பிறகு ஸகல வித்தியா ஸாதனங்களைக் கசடறக் கற்கும்வரையில் ஆசார்யனுடைய அனுசாஸனத்திலும் இருந்து புத்தியைச் சுத்தப் படுத்திக்கொண்டு நல்லறிவை அடைந்தவன் ஐசுவரியத்தை அபேக்ஷிக்கவேண்டும். அப்படியானுல் அந்த ஐசுவரியம் அகாரியங்களில் உபயோகப்பட்டு அனர்த்தத்தைத் தனக்கும் ஜகத்துக்கும் விளைவிக்காமல் தர்ம ஸாதனமாகவே ஆகும். இன்றேல் விபரீதமாகவேயாகும். இந்தக்கருத்தை, "யௌவன வயதும், நிறைந்த தனமும், பிரபுத்தன்மையும், அவிவேகமும் ஒவ்வொன்றும் அனர்த்த ஹேதுவாகும். இந்நான்கும் ஒருவனிடத்தில் இருந்துவிட்டாற் கேட்கவேண்டுமோ?" என்ற நீதியும் நன்றுய் விளக்கிக்காட்டுகின்றது. அதனுல் நல்லறிவு கிடைத்தபிறகு ஏராளமான பணத்தை அடைந்து

தர்மத்தில் தாராளமாக மனத்தைச் செலுத்தி, அது காமியத்தாற் குறுகிய பயனைக் கொடுத்துக் குன்றிவிடாமல், நிஷ்காமமாக ஈசுவர ப்ரீதியுண்டாவதற்காக அநுஷ்டித்துச் சித்த சுத்தியையடைந்து அபரவைராக்யத்தையும் பின்பு பரவைராக்யத்தையும் பெற்று ஸதாசாரியரை யடுத்து அவர தருளாற் சிரவணாதி ஸாதனத்தைத் தவறாது ஸம்பாதித்து ஸாக்ஷாத்காரம் பெற்றுப் பரமபுருஷார்த்தபாகிகளாக எல்லோருமாகவேண்டுமென ஸ்ரீ பரமேஸ்வரரைப் பன்முறையும் பிரார்த்திக்கின்றோம்.

ஆரிய வம்சத்தில் உதித்த ஒரு மனிதன் முன் ஜன்மங்களிற் செய்த புண்யத்தால், மேற்கூறும் விதமாகவே நற்கதி அடைய முயலவேண்டும். பலவிதமான மதங்களும், சாஸ்திரங்களும், மதாசாரியர்களும் அவரவர்களாற் செய்யப்படும் ஈஸ்வரமூர்த்தி பேதங்களும் பலவிருந்தபோதிலும், பாரமார்த்திகமாய் விரோதமில்லையென்று ஸமாதானபுத்தியுடன் இருக்கவேண்டும்; பிறமதம், பிறசாஸ்திரமென்கிற அசூயையை விலக்கிக்கொள்ளவேண்டும். பிறகு புத்திரன், மித்திரன், பொருள், தானியம், வீடு, பூமி, சரீரம், இந்திரியங்கள் இவை முதலானவைகளால் உண்டாகும் இம்மைப் பயனே பெரிய புருஷார்த்தமேயன்றி, பின்னொன்றில்லையென்கிற நாஸ்திகத்தை விலக்கி, ஆமுஷ்மிக (மோக்ஷ) சுகமே பெரிதென்று கருதி அதை அடைய விரும்பவேண்டும்.

## குருவுபதேசத்தின் அவசியம்

“அங்ஙனம் சிறந்ததான ஆமுஷ்மிக புருஷார்த்தத்தை நம்முடைய முயற்சியாலேயே அடையக்கூடிய ஸ்வாதந்திரியம் நமக்கு உண்டோ? அல்லது எல்லாம் விதி போலவே நடக்கும், நாம் பாதந்திரர்களென்பது உண்

மையா?" என்று விசாரித்தால், மனிதர்களுக்கு ஸ்வாதந்திரியத்தை முன்னிட்டே ஸகல சாஸ்திரங்களும் ஏற்பட்டிருப்பதால் நமது முயற்சியால் எவ்வித புருஷார்த்தத்தையும் பெற்றுவிடலாமென்கிற திண்ணமான உறுதி பெறவேண்டும். இவ்விதந் திடமான உறுதிகொண்ட ஒரு மனுஷ்யன் அதற்குற்ற உபதேசம் பெறவேண்டிய நிமித்தம், ஆசார்ய லக்ஷணம் இன்னதெனத் தெரிந்துகொண்டு அவ்வித லக்ஷணம் பொருந்திய ஒருவரிடஞ் சென்று அடிபணிந்து சிஷ்யனுடைய லக்ஷணத்தையும் தெரிந்து கொண்டு அவ்விதிப்படி நடக்கவேண்டும்.

'ஒருவன் தன் முயற்சியாலேயே சாஸ்திரங்களை ஸாதனமாகக் கொண்டு பரலோகத்துக்கு வேண்டிய சுகத்தை ஏன் பெறக்கூடாது? வீணில் ஆசார்யரென்ற ஒருவரிடம் சென்று அவருடைய நோக்கத்தை எதிர்பார்த்து அவர் இஷ்டப்படியெல்லாம் நடந்து அவருக்குத திருப்தியை உண்டுபண்ணி அவரிடமிருந்துதான் உபதேசத்தைப் பெறவேண்டுமென்று எதற்காக இவ்வித நிர்ப்பந்தத்தைக் கொடுக்கவேண்டும்?' என்று சிலருக்குச் சங்கை நிகழலாம். அது சரியல்ல. ஸத்கர்மானுஷ்டானத்தைச் செய்து சித்த சுத்தியடைந்த உத்தம புருஷன், ஆசார்ய லக்ஷணம் பொருந்திய சிறந்த குருவை நாடி அவரது அனுக்கிரஹத்தால் ஏற்படும் உபதேசத்தினுலேயேதான் ஞானமடைய வேண்டுமென்பது முண்டகம், சாந்தோக்யம், தைத்திரீயம் முதலான உபநிஷத்துக்களாலும், மனுஸ்மிருதி முதலிய ஸ்மிருதிகளாலும் பல புராணங்களாலும் நன்கு வெளியாகிறது.

ஆத்மஞானத்திற்கு ஸாதனங்களைக் கூறத்தொடங்கிய சுருதி, முதல் ஸாதனமாகச் சிரவண மென்பதைக் கூறி

யிருக்கிறது. சிரவணம் என்றால் கேட்பது என்று பொருள். இது தான் ஞானத்திற்கு முக்கிய ஸாதனம். இதனால், அறிந்தவரொருவர் சொல்லி அதைக் கேட்டு அறிந்து கொள்வதுதான் ஞானத்திற்கு உபாயமே யொழிய வேறில்லை யென்று நன்றாக ஏற்படுகிறது.

அவ்விதம் ஒரு குருமுகமாய்ச் சிரவணஞ் செய்வ தால் ஏற்படும் பிரயோஜனம் யாதெனில், நமக்குக் குருவாக ஏற்பட்டவர், தாமும் ஒரு குருமுகமாகவே கேட்டு உபதேசம் பெற்றவராக இருப்பார். அவருடைய குருவும் அதேவிதமாய் மற்றொரு குருவை அடைந்து உபதேசம் பெற்றிருக்க வேண்டும். இவ்விதம் முன்னிருக்குங் குரு பரம்பரையை யோசித்தால் மூலகுருவாகிய பரமேஶ்வரனது உபதேசத்தால் வெளியான தத்துவார்த்தத்தையே குரு பரம்பரையில் ஒருவர் பின் ஒருவராகப் பாதுகாத்து வந்தி ருப்பதாகப் புலப்படும்; அதே அர்த்தத்தை நாம் கேட்பதில் நேரில் ஈஶ்வரோபதேசமான பரமலாபம் இருக்கிறது.

இதனையன்றி அவரவர் புத்தியால் ஆலோசித்தால் புத்தி யின் ஸ்வபாவம் பலவிதமாகையால், ஒரு சமயந் தோன்றி யதுபோல், மறுசமயமும் சரியானபடி கிரகிக்குமென்ற நியம மில்லை. இவ்விதம் நிலையற்றதான நம் புத்தியைக் கொண்டு ஒருவிதமான நிர்ணயமும் ஏற்படமுடியாது. சாஸ்திரங் களின் தத்வார்த்தமும் நிலைபெறாது. அவ்விதம் நிலைபெறாத சாஸ்திரார்த்த ஸாதனத்தைக் கொண்டு புருஷார்த்த சித்தி யும் பெறமுடியாது. ஆகையால் பரமதத்துவமான ஆத்ம ஸ்வரூபஞானத்திற்கு குருபதேசமே முக்கியமான ஸாதன மென்பதும், அஃதில்லாவிடில் தத்துவஞானம் ஏற்படா

தென்பதும் சாஸ்திரங்களின் கருத்தென்று அறிந்துகொள்ள வேண்டும்.

### ஈஸ்வர ஆராதனே

பிறகு தன் குருவினுல் உபதேசிக்கப்படும் சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம் முதலான பிரமாணங்களின் பொருளேயும், அவைகளின் வேற்றுமையையும் (அதாவது தத்வார்த்த மின்ன தென்பதையும்) நன்கு யறிந்து கொள்ள வேண்டும். இவ்விதம் தெரிந்து கொள்வதால் மாத்திரம் பயனே யடைய முடியாதாகையால், குருவின் உபதேசத்தை முக்கியமாகக் கொண்டு தன் புத்திக்கும் வாசனேக்கு மேற்ற படி எவ்விதமான ஈஸ்வர விக்கிரகத்தை ஆராதிக்கும்படி ஆசார்யர் கட்டளேயிட்டாரோ, அந்த விக்கிரகத்தை உபதேசப்படி மிகுந்த பக்தி சிரத்தையுடன் ஆராதித்து வரவேண்டும். இம்மாதிரி ஆராதிக்குஞ் சமயத்திற்கூட, தம்மால் ஆராதிக்கப்படுகிற விக்கிரகந்தான் உயர்ந்தது, மற்ற மூர்த்திகள் ஈஸ்வரனல்ல வென்கிற பேதாபிமானம் அடையாமல், 'ஒரே பரமாத்ம ஸ்வரூபத்துக்கே, உலகிலுள்ள பலவாருன பேத புத்திகளுடன் கூடிய அதிகாரிகளே அனுக்கிரகிப்பதற்காக அநேக உருவங்கள் இருக்கின்றன; அவைகளில் நமக்கு இவ்விதமான உருவத்துடன் பகவான் அனுக்கிரகஞ் செய்கிருர்' என்று பாவிக்க வேண்டுமே யல்லாமற் சிறியது பெரியது, உயர்ந்தது தாழ்ந்த தென்கிற வேற்றுமையை ஒரு காலும் பாராட்டக் கூடாது.

இவ்வித பாவனேயுடன் பகவானே ஆராதித்து வந்தாற் பரமேஸ்வர அனுக்கிரஹத்தால் ஏற்படும் பிரஸாதத்தினுல், தத்துவ ஞான சித்தி ஏற்படும். அவ்வித ஞான சித்தி

பெற்றவன் அத்வைத பதவி யென்கிற மோக்ஷத்தை அடைகிறுன். அவ்வித மடையப்படும் மோக்ஷதசையைத்தான் பாரமார்த்திக பதவியென்று சாஸ்திரங்கள் கருதுகின்றன. அதற்கு முன்னுள்ள ஸ்திதிதான் வியாவஹாரிக தசையென்று சொல்லப்படுகிறது. இத்தசையில் தான் பிரகிருதியின்பரிணமமான ஜகத்து, மனது இவ்விரண்டுமுள்ளன. இவைகள் பாரமார்த்திகமென்று கூறப்பட்ட மோக்ஷ தசையில் இல்லை. இவ்விதமான தத்துவங்களை லோகக்ஷேமார்த்தமாய்க் கருணையுடன் உபதேசஞ் செய்தவர்கள் ஸ்ரீ சங்கர பகவத் பாத ஆசார்ய ஸ்வாமிகள். இம்மகாத்மாவினுடைய சிறந்த சரித்திரங்களைக் கவனித்தால் இன்னும் பிரஸித்தமாய் நன்கு விளங்கும்.

ஆனுல் மோக்ஷ பதவியைப்பற்றி, ஸ்ரீ சங்கராசாரியார், ஸ்ரீ ராமானுஜாசாரியார், ஸ்ரீ மத்வாசாரியார் இம்மூன்று ஆசார்யர்களும் வெவ்வேறுன அபிப்பிராய முள்ளவர்களென்பது அவர்களால் லோக க்ஷேமார்த்தமாய் அனுக்கிரகிக்கப்பட்ட பாஷ்யங்களால் வெளியாகிறது. அவர்களுள் ஒவ்வொருவரும் சுருதி, ஸ்மிருதி முதலியவைகளைப் பிரமாணமாகக் காட்டியே தாங்கள் சொல்லும் ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்கிறுர்கள். ஒவ்வொரு மதாசார்யாரையும் அவரவருடைய சிஷ்ய பரம்பரையினர்கள் ஈஶ்வர மூர்த்தியின் அவதாரமென்றும், மகான்களென்றும் தகுந்த மேற்கோளுடன் அறிவிக்கிறுர்கள். இவ்வித மகிமை பொருந்திய மதாசார்யர்கள் ஒருவர்க்கொருவர் ஒற்றுமையில்லாத ஸித்தாந்தத்தை எங்ஙனம் ஸ்தாபித்திருக்கிறுர்களென்று சங்கிப்பது சரியல்ல. இவ்வித அபிப்பிராய பேதங்கள் மூலாசார்யர் ஏற்பட்டது உலகிலுள்ள அதிகாரிகளின் புத்தி

பேதத்தை அநுசரித்ததாகுமென்று அறிஞர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள்.

இவ்விதம் தத்துவ ஞானமடைந்த உத்தமாதிகாரிக்கும் மோக்ஷ பதவியானது ஜீவன்முக்தி யென்றும், விதேக முக்தி யென்றும் இரண்டுவிதமாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஸாதன முதல் (அதாவது முமுக்ஷுத்வமென்னும் முதற் படி முதல்) விதேக முக்தியென்ற மோக்ஷம் வரையிலுள்ள மோக்ஷபூமி ஏழுவிதமாக வராஹோபநிஷத்திலும், வாஸிஷ்ட முதலிய கிரந்தங்களிலும் பிரித்து எழுதப்பட்டிருக்கிறது. எவ்விதத்திலும் மேற்படி விதேக முக்தி யென்ற மோக்ஷத்தை யடைந்தவன் கிருதார்த்தன். அவனே பரமாத்மா. அப்பதவிதான் எல்லாவற்றிற்கும் மேலானதும் முடிவானதுமாம். மற்றவைகளெல்லாம் ஸம்சாரதசையை விட்டு விலகாதவைகளேயாகும். ஆகையால் அதிக புண்ய கர்மத்தினுற் சிறந்த மானிடப்பிறவியைப் பெற்றவர்கள் அனைவரும் இக்கொடிய ஸம்ஸாரதுக்கத்தை அறவே ஒழிக்க வேண்டி ஸத்குருக்களை யடைந்து அவர்களுடைய உபதேசத்தைப் பெற்று, உத்தமமானதும், என்றும் அழிவில்லாததும் பரமபுருஷார்த்தமுமான மோக்ஷசுகத்தைப் பெறவேண்டியது முக்கியம்.

---

# 20. கல்வியின் மர்மங்கள்

மனிதர்களுக்குக் கல்வியே பெருந்துணையாம். அஃது அவர்களுக்கு எவ்வகை நன்மையையும் விளைவிக்கின்றது. எவருக்கும் கல்வி மிகவும் மனக்களிப்பை உண்டாக்குகின்றது. கல்வி ஓர் உயர்ந்த ஆபரணமாகின்றது; சிறந்த சாமர்த்தியமும் சம்பாதிக்கின்றது. ஏகாந்தமாய் உட்கார்ந்திருக்கும்போது கல்வி மிக்க மனமகிழ்ச்சி தரும். பண்டிதர்களுடைய சபையிலே போய்ப் பிரசங்கஞ் செய்யும்பொழுது அத்தனையும் ஆபரணமாகும். யுக்தாயுக்தமறிந்து வியாபாரங்கள் நடத்துவதில் மிகத்திறமையை உண்டாக்கும். அச்சமயங்களில் அதற்கு ஏற்றபடி யோசித்து நடப்பதும், நியாயாநியாயங்களை யறிந்து நியாயாதிகாரிகள் தீர்ப்புச் செய்வதும், பின்னும் பற்பல காரியங்களைத் தக்கபடி நடத்துவதும் இவையெல்லாம் கல்வியினால் அமைந்த திறமையேயன்றி வேறென்ன? கல்வியில் நெடுநேரம் பொழுதுபோக்குவது சோம்பலாகும். அதை ஆபரணமாக அடிக்கடி உபயோகிப்பது மிகவும் இகழ்ச்சியாகும். கல்வியின் திறமையை அதிகமாக உபயோகிப்பதும் பொல்லாங்கு செய்வதாகும். கல்வியானது அவரவர்களுடைய ஸ்வபாவசித்தமான குணங்களைப் பரிபூர்ணமாக்கித் தானும் அப்யாஸத்திற் பூர்ணமாகின்றது. இயற்கையான திறமைகள், இயற்கையாக உற்பத்தியாகும் செடிகளைப் போன்றவை. கல்வியாகிய ஆயுதத்தைக்கொண்டு அவற்றின் தழைகளைக் கழித்து வந்தாலல்லது அவை செம்மையாக வளரமாட்டா. அக்கல்வியையும் உலக நடவடிக்கைகளைக் கொண்டு ஒரு நிதானத்தினின்றும் தவறவிடின், அதன் செய்கைகள் யாவும் அளவுகடந்த

தாகிவிடும். தந்திரசாலிகள் கல்வியைப் பகைக்கிறார்கள். ஒன்றும் தெரியாத சாமானியர்கள் கல்வியைப்புகழ்கிறார்கள். விவேகிகள் கல்வியை உபயோகப்படுத்துகிறார்கள். விவேகிகள் தம் புத்திக்குத் தோன்றியபடியே நடப்பதில்லை. பிறருடைய அபிப்பிராயங்களை நன்றாய்க் கண்டறிந்து அதற்கேற்ப நடக்கிறார்கள். நாம் கற்பது ஆக்ஷேபணை செய்வதற்கும் எதிர்த்துப் பேசுவதற்குமன்று; எதையும் உண்மையாக நம்பி அப்படியே அங்கீகரிப்பதற்கன்று; வீண் வாதாடிப் பொழுது போக்குவதற்கும் அன்று; எதையும் ஆய்ந்தாலோசித்து யுக்தப்படி நடப்பதற்காகவேயாம்.

கற்கவேண்டிய பல புஸ்தகங்களுள் சிலவற்றை ருசியை மாத்திரம் பார்த்தறிந்து கொள்ளவேண்டும்; சிலவற்றை அப்படியே விழுங்கிவிடவேண்டும்; சிலவற்றை நன்றாக மென்று தின்று ஜரிப்பித்துக்கொள்ள வேண்டும். அதாவது: 'இங்கு மங்குமுள்ள விசேஷங்களை மட்டும் கண்டறிந்து கொள்ளவேண்டிய புஸ்தகங்கள் சில; ஒருவாறு முழுதுமே கற்கவேண்டியவை சில; சிறிதும் தப்பாமல் முழுதும் மிக்க ஊக்கத்தோடு கருத்தாய்ப் படித்து முற்றும் மறவாது வைத்துக்கொள்ள வேண்டியவை சில; பிறரைக் கொண்டு வாசிக்கச் செய்து அவற்றின் முக்யதாத்பர்யத்தை மட்டும் எழுதி வைத்துக்கொள்ள வேண்டியவை சில.

கல்வியினால் மநுஷ்யன் பூர்ணனாகிறான். சிந்தையினாற் சம்சயமற்றவனாகிறான். விஷயங்களை எழுதி வைத்துக்கொள்ளாதவனுக்கு ஞாபகசக்தி விசேஷமாக வேண்டும். கல்லாதவனுக்குத்தான் கல்லாதவனல்லவெனப் பார்ப்போரைப் பிரமிக்கச் செய்வதற்காகச் சூது விசேஷமாகவேண்டும். சரித்திரங்களைக் கற்பதனால் மனிதர்களுக்கு ஞானம் அதிகமாகும்.

காவ்யங்களைப் படிப்பதனாற் சாதுர்யம் அதிகமாகும். கணிதத்திற் பழகுவதனாற் புத்தி சூக்ஷ்மமுண்டாகும். பிரகிருதி தத்துவசாஸ்திரங்களைக் கற்பதனால் ஆழ்ந்த அறிவும், நியாய புத்தியும் உண்டாகும். தர்க்கசாஸ்திரமும், அலங்கார சாஸ்திரமும் கற்பதனால் வாதஞ் செய்யந் திறமை உண்டாகும்.

புத்தி சாதுர்யத்திற்கு எவ்விதமான இடையூறுமில்லையென்றாலும், கல்வியைக்கொண்டு அதைச் சீர்ப்படுத்தலாம். சரீரத்தில் உண்டாகும் உபாதிகளுக்குப் பலவிதமான தேகப் பயிற்சிசெய்து பரிகாரஞ் செய்வதுபோலப் புத்தி செம்மைப் படுத்துவதற்கும் பயிற்சி செய்யலாம். பந்தாடுவது குடல்களுக்கும், வில்லடித்து வேட்டையாடுவது சுவாசப்பைக்கும் ஹிருதயத்துக்கும், மெதுவாய் உலாத்துவது இரைப்பைக்கும், சவாரி செய்வது சிரசுக்கும் பயன்றரும்; இப்படியாகச் சரீரப் பயிற்சி பலவுள. அதேவிதமாக, புத்திநிலையில்லாதவன் கணித சாஸ்திரம் கற்கலாம்; அதிலுள்ள நியாயங்களை நிரூபித்துக் கொண்டிருக்கும்போது புத்தி சிறிதளவு சலிக்குமானால் மறுபடியும் அடியைப் பிடிக்க வேண்டியதுதான். பகுத்தறியுந் திறமையில்லாதவன் உபாத்தியாயத் தொழிலைக் கற்கலாம். இவ்வாறே ஒவ்வொரு விதமான மனக்குறையையும் மாற்ற வழியுண்டு. யாரோ சில கொடியர்களுக்குக் கல்வி பொல்லாங்குக் கேதுவாகிறதென்றாலும், பெரும்பாலும் கொடுமை, முரட்டுத்தனம், மடமைமுதலிய குறைகளை நீக்கி, ஐயந்திரிபற எல்லா விஷயங்களையும் எளிதாக விளங்கச் செய்கின்றது.

---

# 21. வித்யா

வித்யாப்யாஸத்தால் வணக்கம் முதலிய நற்குணங்கள் உண்டாகின்றன. இவ்வித குணங்களால் நல்ல யோக்யதை உண்டாகிறது. யோக்யதையுள்ளவர்களை ஜனங்கள் ஆதரிப்பார்கள். அவ்வித ஆதரவால் ஏராளமான தனம் கிடைக்கிறது. இத்தனத்தினாலே தர்மஞ் செய்தால், சுகமுண்டாகிறது. தனத்தினால் ஸாக்ஷாத்தாக சுகமுண்டாகிறதில்லை. உதாரணமாக ஒரு மனுஷ்யனுக்கு வேண்டிய மட்டிற் பணமிருக்கிறது. அப்பணமானது அவனது க்ஷுத்பாதையை நிவிர்த்திக்குமா? அப்பணத்தைக் கொண்டு சாமக்கிரியைகள் வாங்கிச் சமையல் செய்து சாப்பிட்டாலொழிய, க்ஷுத்பாதை நிவிர்த்தியாகாது. இம்மாதிரியாகத் தனத்தால் ஸாக்ஷாத்தாக சுகமடைய முடியாது. ஆனால் தனத்தாற் சுகமடைவதற்குத் தர்மம் மார்க்கமாக இருக்கிறது. தர்மமென்றாலென்ன? சுகமென்றாலென்ன? என்பதை முதலில் நன்கு விசாரித்துத் தெரிந்துகொள்வோம்.

## தர்மம்

தர்மத்தையும், நிஜமான சுகத்தையும் தெரிந்து கொள்வதற்குச் சாஸ்திரபரிசயம் அவசியஞ் செய்யவேண்டும். தர்மமென்றால், 'தர்மோ-விச்வஸ்ய ஜகத: ப்ரதிஷ்டா' என்று உபநிஷத்துக்களிற் சொல்லப்பட்டிருக்கிறது. தர்மந்தான் உலகம் முழுதும் இருப்பதற்குக் காரணமாயிருக்கிறது. இப்பேர்ப்பட்ட தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டுமானால், சாஸ்திரத்தில் சொல்லியபடி நடந்தால்தான் சாத்தியமாகும். அப்பொழுதுதான், அது ஸத்பலம் உள்ளதாகிறது.

## சுகம்

லோகத்தில் எல்லோரும் சுகம் வேண்டுமென்றும் துக்கம் வேண்டாமென்றும் அபேக்ஷிக்கிறார்கள். ஆனால் சுகமென்பது என்னவென்று சற்று யோசிக்கவேண்டும். புத்ர மித்ர களத்ராதிகளும், தனதான்யாதிகளும், ஸம்ருத்தியாக இருப்பதே சுகமென்று தெரியாத பிராகிருத ஜனங்கள் நினைக்கிறார்கள். சற்று நிதானித்து விசாரித்துப் பார்த்தால் இவைகளெல்லாம் சுகமல்லவென்றும் துக்கத்திற்கே காரண பூதங்களென்றும் ஸ்பஷ்டமாய்த் தெரியவரும். சர்க்கரை தித்திப்பாக இருக்கிறதென்றால், எல்லோருக்கும் ஒரே மாதிரியாகத் தித்திப்பாக இருக்கவேண்டுமே யல்லாது, ஒருவனுக்குத் தித்திப்பு, மற்றொருவனுக்குக் கசப்பு, பின்னுமொருவனுக்குக் காரம், வேறொருவனுக்குப் புளிப்பு இந்த மாதிரி இருக்கிறதில்லையல்லவா?

இப்பொழுது உலகத்தில் எத்தனையோபேருக்குப் புத்ர மித்ர களத்ரேச்சையில்லாததையும் பார்க்கிறோம். கிருகாராமாதிகளில் இச்சை இல்லாதவர்களையும் பார்க்கிறோம். இத்தகைய பத்னீபுத்ரஸாதனங்களிருந்தாலும் அவற்றிலே மிகவுந் துக்கப்படுகிறவர்களையும் பார்க்கிறோம். இவையெல்லாம், நசுவரமென்றெண்ணி, எல்லாவற்றையும் விலக்கிவிட்டு லோகத்தில் ஆனந்தமாயிருக்கிற ஸந்யாசிகள் வெகுபேர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் புத்தியும் விவேகமும்இல்லையென்று சொல்லமுடியுமா? பத்னீ புத்ராதிகளும் தன தான்யாதிகளும் யதேஷ்டமிருந்தாலும் எத்தனையோ பேர்களுக்குச் சுகமில்லாததை நாம் பார்க்கிறோமல்லவா? இவைகளெல்லாம் சுகஸாதனங்களாயிருந்தால், ஏன் அவர்கள் சுகமாக

இருப்பதாகத் தெரியவருகிறதில்லை. ஸார்வ பௌமனான சக்ர வர்த்திக்கு உலகப்பொருள்களெல்லாம் நிறைய இருக்கின் றனவல்லவா? அப்படிப்பட்டவன்கூட, ஏன் எப்பொழுதும் சுகமாயிருக்கிறேன் என்று சொல்லிக்கொள்வதில்லை? அவன் கூட இடையிடையே எவ்வளவோ துக்கங்களை அடைந்ததா கத் தெரியவருகிறது. இவற்றையெல்லாம் யோசித்துப்பார்த் தால், ஐஹிக போக மொன்றும் ஸுக ஸாதனமல்ல வென்றும் ஐஹிக சுகங்களெல்லாம் மிகவும் க்ஷணிகமென் றும், கடைசியில் இவையெல்லாந் துக்கத்திற்கே ஹேதுவா கின்றனவென்றும் ஸ்பஷ்டமாயறிந்து கொள்ளலாம்.

## துக்க மூலம்

முக்கியமாய்த் துக்கத்திற்கு மூலம் என்னவென்று யோசிக்குமளவில், தேகாத்மபாவமே இத்துக்கத்திற்கு மூல மாகவிருக்கிறதென்பது நன்குய்ப் புலப்படும். இச்சரீரத்தினி டம் ஆத்ம பாவம் இருப்பதனாலேயே, இச்சரீரத்துக்கு யார் கெடுதி செய்வார்களோவென்ற பயமும், அதன் காரண மாகவே அப்படிப்பட்டவர்களிடம் த்வேஷமும், அதனால் துக்கமும் உண்டாகின்றன. இத்தகைய துக்கத்துக்கு அஞ் ஞானமே முக்ய காரணமாயிருக்கிறது. தேகாத்மபாவத்தால் நமக்குச் சத்ருக்களென்று யாரை நாம் நினைக்கிறோமோ அவர்களால் நமக்கேற்படுங் கெடுதியானது மிகவும் ஸ்வல்ப மானதே. அவர்களைக் காட்டிலும் சரீராத்மபாவமுள்ள நாமே நமக்குப் பெரிய சத்ருவாக இருக்கிறோம். பகவத் கீதையில் "ஆத்மைவ ரிபுராத்மன:" என்று சொல்லி யிருப் பதுபோல, அஞ்ஞானத்தினால் நாமே நமக்கு முக்கியமான சத்ருக்களே தவிர, வேறொருவர் சத்ருவாகமாட்டார்.

தேகாத்ம பாவத்தினுலேயே பயமும், அதன் மூலமாய்த் துக்கமும் உண்டாகின்றன வென்பதற்கு உதாரண மென்னவென்ருல், நாம் ஜாக்ரதாவஸ்தையில் இருக்கும் போது சாமான்யப் பூச்சி ஏதாவது நமது ஸமீபத்தில் வந்தாலுங்கூட நாம் பயப்படுகிறேம். தூங்கும்பொழுதோ பெரிய புலியொன்று வந்து நம் பக்கத்தில் உட்கார்ந்தாலும் நமக்குப் பயம் ஏற்படுகிறதில்லை. ஜாக்ரதாவஸ்தையில் சரீரமே நாமென்றெண்ணி யிருப்பதால் அத்தகைய பயமும் துக்கமும் உண்டாகின்றன; நித்ராவஸ்தையிலோ இச்சரீராத்ம பாவமில்லாததாற் பயமும் துக்கமும் உண்டாவதில்லை. உலகத்தில் சரீராத்ம பாவமே ஸகல பாபத்துக்கும் துக்கத்துக்கும் ஹேதுவாக இருக்கிறது.

## ஞானத்தின் சிறப்பு

இவ்விதமான அஞ்ஞானத்தை நீக்குவதற்கு வேதாந்த சாஸ்திரத்தால் உண்டாகும் ஞானத்துக்குத்தான் சாமர்த்தியம் இருக்கிறது. இத்தகைய பிரம்மஞானமானது சற்குருவினிடம்போய் ஸேவைசெய்து அவருடைய அநுக்ரஹத்துக்குப்பாத்ரராய் அதிலிருந்து உண்டாகுஞ் சிரவணமனன நிதித்தியாஸனங்களினுலேயே அடையத்தக்கதாக இருக்கிறது. இந்த நித்யாநந்தம் உண்டாகவேண்டுமானுல், இதற்குள்ள பிரதிபந்தங்களெல்லாம் போகவேண்டும்.

## உண்மையான வித்தை

நீங்கள் இப்பொழுது அப்யசிக்கின்றனவெல்லாம் வித்தையென்று சொல்வதற்கிடமில்லை. ஏனென்ருல் ஸூத ஸம்ஹிதையில் நித்யானந்தமான மோக்ஷத்தை ஸம்பாதித்துக்கொடுக்கக்கூடிய வித்தைதான் வித்தையென்று சொல்

லப்பட்டிருக்கிறது. மற்றவையெல்லாம் ஸாமர்த்தியத்தை உண்டாக்குங் குசலவித்தைகள். இச்சாமான்ய வித்யாப்யாஸத்தால் ஏற்படுங் கௌசலத்தால் லௌகிகமாயுண்டாகும் பற்பல தொந்தரவுகளை விலக்கிக் கொள்ளலாம்.

நீங்கள் அப்யஸித்துவரும் குசலவித்தைகளால் நித்யமான சுகானுபவத்துக்கு வேண்டிய ஞானம் ஏற்படமாட்டாது. நித்யமான சுகமில்லாமல் ஒருநாள் சுகமும், ஒருநாள் துக்கமும் ஏற்படுவதிற் பிரயோஜனமில்லை. அந்த ஸ்திதியை ஒருவரும் அபேக்ஷிக்கிறதும் இல்லை. ஆனால் நீங்கள் அப்யஸிக்கிற வித்தையே முக்கியமானதென்றும் அதனாலேயே ஸமஸ்த ஞானமும் உண்டாகிறதென்றும் நீங்கள் நினைக்கக்கூடாது. வியவகார ஸாதனமாக இந்த ராஜகீயவித்தை அவசியமென்று நினைத்து நீங்கள் அப்யஸித்தாலும் முன்னே நித்யசுகத்துக்கு ஸாதனமான வித்தையை அப்யஸிப்பதே ச்ரேயஸ்கரமென்று நிச்சயமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். நியாய வைசேஷிகாதி சாஸ்திரங்கள்கூட ஆத்ம ஞானத்துக்கு ஸாக்ஷாத்தாக ஸாதனங்களல்லவாதலினால், வித்தை அல்லவென்று சொல்லப்பட்டிருக்கின்றன. நித்திய சுகத்துக்கு ஸாதனமானவை உபநிஷத் சாஸ்திரங்கள். அதாவது வேதாந்த சாஸ்திரத்தினாலுண்டாகும் ஞானமொன்றேதான் அப்படிப்பட்ட நித்யசுகத்தைக் கொடுக்கிறது. நீங்களெல்லோரும் ஸ்வதர்மத்தைப் புரிந்துகொண்டு, ஸ்வஸ்வ வர்ணாச்ரமங்களுக்கு விஹிதமாயுள்ள கர்மங்களைச் சிரத்தையுடன் செய்துகொண்டு, அதனாற் சித்தசுத்தியையடைந்து இவ்விதமாய்ப் பிரம்மவித்தையை அடைவதற்கு யோக்யதையை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும்.

---

# 22. கர்மம்

## கர்மமே முதல் ஸாதனம்

மானிடர்கள் யாவரும் ஆதியிலிருந்து சுகமுந் துக்கமுங் கலந்து அனுபவித்துக்கொண்டே வருகிறார்கள். அங்ஙனம் மாறி மாறி மனசுக்குச் சுகதுக்கங்கள் வந்து கொண்டிருப்பதற்குக் காரணம் யாதென்று ஆராயின், யதார்த்த ஆத்ம ஞானத்தை அடையாத குற்றமென்றே நன்கு புலப்படும். ஏனெனின், ஆத்மாவிடத்துச் சுகதுக்கங்கள் எப்போதும் இல்லையாகையாலும் செல்லாவாகையாலும் அங்ஙனம் கூறியதாம். ஸர்வ துக்க நிவர்த்திப் பரமானந்த ப்ராப்தி வடிவ மோக்ஷத்தை அடைவதே ஒவ்வொரு மனிதனுக்கும் முக்கிய கடமையாம். அவ்வகையான பரம மோக்ஷத்தை அடைவதற்குச் சாதகமாக முதன் முதலில் நிற்பது ஜீவன்முக்தி; அதற்கு ஸாதனம் நிஷ்டை; நிஷ்டைக்கு ஸாதனம் ஸமாதி; ஸமாதிக்கு ஸாதனம் விருத்தி ஞானம்; விருத்தி ஞானத்துக்கு ஸாதனம் யோகம்; யோகத்துக்கு ஸாதனம் பக்தி; பக்திக்கு ஸாதனம் கர்மம்; இதற்கும் மேலே ஸாதனங் கிடையாதாகையால், இதோடு நிறுத்தப்பட்டது.

## நிஷ்காம கர்மம்

யாவரும் முதன்முதலிற் செய்ய வேண்டியது என்னவென்பதைக் கவனித்துப் பார்க்குமளவிற் கர்மயோகமென்றே தெரிகிறது. அதில் அழிந்துபோகக்கூடிய அநித்தியமான உலக விஷய போக சுகங்களை உத்தேசித்துப் பகவானை நினைத்துச் செய்யப்பட்ட புண்யகர்மத்துக்கு ஸகாம

கர்மமென்று பெயர். அழிவில்லாத நித்தியமான மோக்ஷத்தை உத்தேசித்துப் பரமேஶ்வரனை நினைத்துச் செய்யப்பட்ட புண்ணிய கர்மாவுக்கு நிஷ்காம கர்மமென்று பெயர். புத்திசாலிகள் பகவானிடத்தில் மோக்ஷத்தை விரும்பிப் புண்ணிய கர்மங்கள் செய்வார்களே யன்றி, ஸகாம கர்மஞ் செய்ய ஸ்வப்நத்திலும் நினைக்கமாட்டார்கள். கற்பக விருக்ஷம் போன்று கேட்டவற்றையெல்லாம் தரக்கூடிய பகவானிடத்தில், நித்யானந்த வடிவ மோக்ஷத்தைக் கேட்டுக் கொள்ளாமல், தோன்றித் தோன்றி மறைந்துபோகும் உலகத்தில் எள்ளளவும் பயனில்லாத அசுத்த மலபிண்டமாகிய ஸ்திரீ, செல்வம், பூமி, புத்திரன் முதலியவைகளையா கேட்பது? இஃது எப்படியிருக்கிறதென்றால், காவேரி நடுமத்தியில் நின்று கொண்டு உப்புக்கிணற்று ஜலத்தைத் தேடுவதொக்கும். பின்னை பகவானைநாடோறும் மனத்தில் நினைத்து, 'பகவானே! எனக்கு அடிக்கடி மனநிலை மாறுகிறது; அது நிற்கவேண்டும். 'அநித்ய வாழ்வு என்னை விட்டு அகலவேண்டும். நல்ல ஞானம் உண்டாகவேண்டும்' என்று பிரார்த்திக்க வேண்டும். திரிவித கரண சுத்தியுடன், யதார்த்தமான நிஷ்காம கர்மம் இயற்றல் வேண்டும்.

## பரம்பரா ஸாதனம்

எவ்வகை மனிதனும் கர்மானுஷ்டானமின்றி மோக்ஷமடைதல் முடியாத விஷயமாம். மனத்திலுள்ள அழுக்கைப் போக்குவதற்கு அடிப்பட்ட ஸாதனமாக இருப்பது கர்மமே. இந்தக் கர்மயோகத்தைப்பற்றியே முன் ஸ்ரீ கிருஷ்ணபகவான், ஆழ்வாராதியர்கள், ஆசார்யர்கள், நாயன்மார்கள் முதலான மகான்கள் மிகவும் விரிவாக வற்புறுத்திக் கூறியிருக்கின்றார்

கள். அஞ்ஞானியானல், தான் மோக்ஷமடையும் நிமித்தம் கர்மம் செய்தல் வேண்டும்; ஞானியானல் லோகோபகார நிமித்தமாகச் செய்யவேண்டும். இவ்வகைக் காரணத்தால் இரண்டு பேர்களும் கர்மஞ் செய்தே தீரவேண்டுமென்பதாயிற்று. கர்மயோக சாஸ்திரப்படி கர்மத்தை வழுவாது முறைப்படி செய்து முடிக்கவல்லவர்கள், உலகத்தில் எவரும் இல்லை. கர்மமென்னுமோர் தேவதை கண்ணுற் காணக்கூடாதது; அசையாதது; பேசாதது; யாருக்கும் சொந்தமானது; மோக்ஷத்திற்குப் பரம்பரா சாதனமானது. இன்னும் இதைப் பற்றிக் கூறுவதானல் மிகப் பெரிய விஸ்தாரமாகி விடும்.

## கர்மத்தின் அவசியம்

பெரிய ராஜாங்கத்தை ஆளுகை செய்யும் அரசனும், லௌகிக கர்மாநுஷ்டான முறைகளினலேயே இராஜ்யத்தை நிலைநிறுத்துகிறான். நமக்குக் கிடைத்திருக்கிற சரீரம், மனம், இந்திரியம், தொழிலென்பவைகள் கர்மயோகத்தால் உண்டாகின்றன. அதனல் உண்டான ஸாதனவஸ்துக்களாலேயே மோக்ஷமடைய முயற்சியுஞ் செய்யவேண்டி யிருக்கிறது. கர்மம் பிறந்தவிடம் மாயை; மாயை பிறந்தவிடம் பரமாத்மாவென்று கூறலாம். மற்றோ, எல்லாம் பரமாத்மாவாக இருக்கும்போது கர்மம் மாத்திரம் தள்ளுபடியா? கர்மயோகத்தின் உண்மையைக் கண்டுகொண்டவன் எவனே, அவன் கடவுளைக்கண்டு கொண்டவனவான். கர்வமற்ற மனமுடைய ஒருவன் கடவுளைஅறிய விரும்பினல் முதலிற் கருமயோகத்தை வழுவற இயற்றி முடித்துவிட்டு மற்றவைகளைச் செய்ய முயலவேண்டும். அங்ஙனம் கர்மயோகம் பூர்த்தி

யாக வில்லையாயின், முக்திக்குப் போகும் வழியில் ஒரு பிரதி பந்தமாக வந்து தடுத்துவிடுகிறது. கர்மாநுஷ்டானத்தைச் செய்து முடிப்பதற்கு இடையில் அநேகக் கெடுதல்கள் உண் டாகின்றன. அவற்றில் மயங்காது திடதைர்யத்துடன் வென்று கர்மத்தை முடிவுபெறச் செய்யவேண்டும்.

## பிராயச்சித்த கர்மம்

கர்மத்தில் பிராயச்சித்த கர்மமென்று ஒன்றுண்டு. அஃதாவது பெரிய பாபகர்மங்கள் செய்பவர்கள் இன்ன இன்ன பிராயச்சித்தம் செய்து விடுவார்களாயின் அப்பாபம் நசித்துவிடுமென்று கூறுவதாம். அதில் பரதார கமனஞ் செய்தவன் அநுஷ்டிக்க வேண்டிய பிராயச்சித்த கர்மத்தை மாத்திரம் இங்கே கூறுகிறோம்: ஓர் அமாவாசையன்று முப்பத்திரண்டு பிடியன்னமுண்டு, ஒவ்வொரு நாளும் ஒவ் வொரு பிடி குறைத்து மறு அமாவாசைக்குள் ஒரு பிடி யன்னத்துக்குக் கொண்டுவரவேண்டும். இப்படியே அதற் கடுத்த மறு அமாவாசைக்குள் மறுபடியும் முப்பத்திரண்டு பிடி அன்னம் உண்ணப்பழகவேண்டும். இவ்வாறே இருபத்து நான்குதரஞ் செய்தால் அப் பாபம் நசிக்கும்.

**கன்ம முறையறிந்து காசினியிற் செய்வார்க்குச்**
**சன்மமறும் ஞானம்வருந் தான்.**

# 23. கிரியையின் பெருமை

## வ்ருந்தகுஸுமாதி நியாயம்

**வை**கானஸ பாஞ்சராத்ராதி ஆகம சாஸ்திரங்களில் பிரஸித்தமாகக் கூறப்பட்டுள்ள வ்ருந்த புஷ்பாதி நியாயம் போன்றுள்ளனவாகிய சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு உபாயங்களுள் ஞானமொன்றே மோக்ஷத்துக்கு ஸாக்ஷாத் ஸாதனமாயுளதாயினும், அந்நான்கு உபாயங்களிலே கிரியையென்னும் உபாயத்தைக் கைப்பற்றி, அதனை வழுவாது அநுஷ்டிப்போர்க்குச் சரியை, யோகம், ஞானமென்னும் ஏனைய மூன்று உபாயங்களால் உண்டாகும் பலத்தை அந்தக் கிரியையொன்றே கொடுக்க வல்லதாகும்; அது கருணாநிதியான பகவானது அர்ச்சாரூபமாக விளங்கிப் பக்தர்களுக்கு மேன்மேலும் க்ஷேமத்தைப் பெருக உண்டாக்கிக் கொண்டிருக்கும். எம்பெருமான் இவ் வர்ச்சாவதாரத்தை அடைந்து பிரகாசித்துக் கொண்டிருந்த போதிலும் அவருடைய ஸாத்யாலயமாகிற ஹ்ருதயத்தின் கண் அவர் எப்போதும் ஆவிர்ப்பவித்தருளும்படி வேண்டுவோமாக.

ஆகமங்களிலே கூறப்படுகின்ற சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதங்களும் வ்ருந்தகுஸுமாதி நியாயம் போல்வன என்பதனால் அவை அரும்பு, மலர், காய், கனி யென்னும் நான்கு பரிபக்குவ பேதங்களென்பது பெற்றாம்.

"விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே"

என்னும் பாடலும் இதற்குச் சான்றும். அரும்பெடுக்கும் ப்க்குவத்தைப்பெற்ற ஒரு மரத்தில் இலங்கும் அவ்வரும்பானது மலர்ப்பக்குவத்தையும், மலர் காய்ப்பக்குவத்தையும், காய் கனிப்பக்குவத்தையும் முறையே அடைந்து விளங்குவது போல, சரியையாதி நான்கினுள், சரியை நிலையைக் கைப்பற்றி அதில் முறை பிறழாது நின்று தடிப்பேறப் பெறுவரேல் அச் சரியை கிரியை, நிலையை அடைவிக்கும். அதன்மேற் கிரியை, நிலையிலே தடிப்பேறிப் பரிபக்குவத்தைப் பெறுவரேல் அது யோக நிலையை யடைவிக்கும். மூன்றும் பாதமாகிய யோக நிலையில் நின்று சித்தபரிபாகத்தை அடைந்தோர்க்கு அந்நிலை நான்காவது நிலையாகிய ஞானநிலையை அருளும். இந்நான்கு நிலைகளும் ஒன்றுக்கொன்று உயர்ந்து ஸோபானமார்க்கமாய் உபகரிக்கின்றமையால் அரும்பு, மலர், காய், கனி போல்வன வாதல் நோக்கி இதனை வ்ருந்தகு ஸமாதி நியாயமென்றனர்.

## நான்கு மார்க்கங்கள்

சரீரமானது அநித்ய ஜடதுக்க ஹேதுவென்று அதனிடத்து உபேக்ஷை பிறந்து தபஸ்வாத்யாய ஈஶ்வர ப்ரணிதானங்களால் எம்பெருமானது மூர்த்த ஸ்வரூபத்தை ஆலம்பன ஸௌகர்யமாக்கி, பாஹ்யத்தில் ஆராதித்துக்கொண்டு, பகவத்பக்தர்களிடத்திலும் விசுவாசம் வைத்து வர்த்திப்பது சரியை. இதனைத் தாத மார்க்க மென்பர். பாஹ்யாப்யந்தரங்கள் இரண்டினுள்ளும் பகவன் மூர்த்த ஸ்வரூபத்தை ஷோடசோபசாரங்களால் பூதசுத்தி பூர்வகமாக ஆராதிப்பது கிரியை; இதனைப் புத்திர மார்க்க மென்பர். சித்தவிருத்தி நிரோத பூர்வகமாக (ஸமாஹித சித்தமுடையவர்களாய்) த்யேயாகாரத்தை ஹ்ருதய கமலத்தில் மாத்திரமே த்யானித்துக்

கொண்டு ப்ரகிருதி ஸம்பந்தமில்லாமல் பாசமற்று வர்த்திப்பது யோகம்; இதனை ஸக மார்க்கமென்பர். வியாபார ரஹிதனுயிருந்துகொண்டு, பகவானது மூர்த்தஸ்வரூபத்தையும், அமூர்த்த ஸ்வரூபத்தையும், ஸாலம்பன நிராலம்பனங்களென்றெண்ணி உபயாலம்பனங்களாற் சேதனு சேதனங்கள் முதலான ஸகல வஸ்துக்களிடத்திலும், ஞானமாத்ரத்தால் யாவும் அதுவாகப் பாவித்து ஸாக்ஷாத்கரித்து மகிழ்வடைந்து வர்த்திப்பது ஞானம்; இதனை ஸன்மார்க்க மென்பர்.

## அர்ச்சாவதாரம்

எம்பெருமானது மூர்த்த ஸ்வரூபம் அவரவர் அபிமதங்களுக்குத் தக்கபடி உலகத்தில் அர்ச்சாவதாரமாய் விளங்குகின்றமையாலும், அம்மூர்த்த ஸ்வரூபங்களைப் பாஹ்யத்திலும், ஆந்தரத்திலும் பூதசுத்தி பூர்வகமாக ஆராதிக்கவேண்டுமென்று விதிக்கப் பட்டிருப்பதனுலும் அம்மூர்த்த ஸ்வரூபத்தை ஞானிக்குச் சமமாக ஆதரிக்க வேண்டுமென்று ப்ரமாணம் கேட்கப்படுகின்றமையாலும், அவ்வாராதனம் ஸர்வாதிகாரிகளுக்கும் ஸர்வ சுலபமாக இலங்குகின்றமையாலும், ஞானிகள் தங்கள் தேகதேவாலயத்திற் கண்டு மகிழும் பகவதனுபவானந்த விஷயங்களான தத்துவங்களே அர்ச்சையில் நிகழ்ந்து ஏனையோர்கரு உபகரிக்கின்றமையாலும், சரியை, கிரியை, யோகம், ஞானமென்று கூறப்படுகின்ற இந்நான்கு பாதங்களிற் கிரியையே ஏனைய மூன்று பாதங்களின் பலனைக் கொடுக்க வல்லதாகும்.

## அர்ச்சாராதனம்

எங்ஙனமெனின், எழுத்தை ஒவ்வொன்றாகவும், அவைகளைக்கூட்டிப் பதமாகவும், பின்பு வாக்கியமாகவும், முடிவிற் பாடலாகவும் ஒருவன் படிக்குங்கால் எந்த

எழுத்துக்களை அவன் அநுஸந்திப்பது விட்டொழியாது. பாடலைத் தட்டாமல் படிக்கிறவன், எழுத்தை ஒவ்வொன்றாக உச்சரிக்கின்றவனை இழிந்தவனென்று கூறுதல் கூடாது. ஸாதக ஸாத்தியர்களாக அவர்களை அறிய வேண்டியது போலவே, அர்ச்சாவலம்பகர்களிடத்திலும் அறியவேண்டியது. ஸாதகரும், ஸாத்தியரும் எழுத்துக்களை விடாது வர்த்திப்பதுபோல, சரியை கிரியை யோக ஞானங்களை அநுஸந்திப்பவரும் அர்ச்சையை விடாது வர்த்திப்பது அவசியம். யாவருக்கும் அர்ச்சாராதனம் கேட்கப்பட்ட காலத்திலும் அவரவர்களுடைய பரிபாக பேதங்களே அவ்வர்ச்சையில் தாரதம்மியமாக நிகழும். இதுவே வ்ருந்தகுஸுமாதிநியாயம். அரும்பை விட்டால் மலரில்லை. மலரைவிட்டால் காயில்லை. காயைவிட்டால் கனியில்லை. ஒரு பொருளே தன்மை வேறுபட்டு முதற்குன்றாமல் நின்றபடியே, திருக்கோயிலை முதலாகவுடைய அர்ச்சாராதனம் தானே ஞானியின்றாக முதற்கெடாமலும் தன்மை வேறுபட்டும் அநுபவவேத்யமாகின்றது.

சாஸ்திரங்களால் திருத்தவொண்ணாத மந்தாதிகாரிகளைத் திருத்தி அவர்களுடைய ஹ்ருதயகமலத்தில் வசிக்க வேண்டுமென்கிற இச்சையால், எம்பெருமான் உலகத்தில் அர்ச்சாவதாரமாகிய வலையை வீசி, அம்மந்தாதிகாரிகளை அகப்படுத்தி அவர்களைப் பக்தியாகிற கயிற்றால் கட்டி, அவர்களுக்கு ஞானப்பாலை யூட்டி, அவர்கள் ஞானத்தைப் பெற்று விளங்குவதைக்கண்டு அப்போது அர்ச்சாலயத்தில் ஆதாவற்றவராய், அவர்களது ஹ்ருதய கமலத்தில் எப்போதும் வஸித்துக்கொண்டிருப்பர். ஸர்வ ஆத்ம பூதரான எம்பெருமான் நம் ஹ்ருதயஸ்திதராயிருக்கிறா ரென்னும் ஞானத்தையுண்டாக்குவதே அர்ச்சாவதாரத்துக்குப் பரமப்

பிரயோஜனம். பரிபூர்ண ஞானம் பிறக்கிறவரையிலும் (ஹ்ரு தயத்திலிருக்கிற எம்பெருமானை அறிந்துகொள்ளுகிற வரை யிலும்) அர்ச்சையை வழிபடல்வேண்டும் என்று கூறப்படு கின்றமையாலும், ஸர்வத்திர வாஸுதேவபுத்தி பிறந்து விளங்குகின்ற பெரியோர்களைப் பாகவதோத்தமர்களென்று நினைத்து அவர்களிடத்தில் அன்பு செலுத்தி அவர்களை நிந்தியாமல் அவர்களும் எம்பெருமானுக்குத் திருக்கோயில் களாக விளங்குபவர்களென்கிற நினைவுடன் அர்ச்சையில் வழிபடவேண்டுமென்று விதிக்கப்பட்டமையாலும் அர்ச்சை பூர்வபக்ஷமாகாமற் சித்தாந்தமாகாமல் இனிது சித்திக்கும். இதனால் ஸர்வாத்மபூதனை வாஸுதேவன் நமது ஹ்ரு தயத்தில் இருக்கிறானென்னும் பரமஞானமே அர்ச்சையிற் பகவதாராதனஞ் செய்தலுக்குப் பரமப் பிரயோஜனமென்று அறியத்தக்கதாம்.

போராத பக்தவத்தின் பேற்றியினுக் கேற்பவே
ஆராத னஞ்செய்தா லாண்டவன்றன்—தீராத
கன்மமலக் கட்டறுத்துக் காட்சியின்பம் நல்கியினிச்
சன்மமிலா வண்ணந் தரும்.

# 24. பிராம்மணர்களுக்குரிய தர்மங்கள்

## சில பொதுவான தர்மங்கள்

சூரியனை உதிக்கும்போதும், அஸ்தமிக்கும்போதும், ஆகாச மத்தியில் இருக்கும்போதும், ஜலத்திலும் பார்க்கலாகாது. கிரகணம் பிடிக்கும்போது சூரிய சந்திரர்களைப் பார்க்கலாகாது. பசு, தேவதை, பிராம்மணன், நெய், மது, பிரவலித்தமான விருக்ஷங்கள் இவைகளைப் பிரதக்ஷிணமாகவே செல்லவேண்டும். அக்கினியை வாயினால் ஊதக்கூடாது; தாண்டக்கூடாது. அக்கினியிற்காலைக் காய்ச்சக் கூடாது; அசுத்தமான வஸ்துக்களைப் போடக்கூடாது. அதனைப் பூமியில் வைக்கக்கூடாது. தனக்கென்று பூமாலையைத் தொடுக்கக்கூடாது. தீர்த்தத்தில் எச்சில் உமிழக்கூடாது. தூங்குகிறவனை எழுப்பக்கூடாது; அதிலும்பெரியவர்களை எழுப்பக்கூடாது. பாழ் வீட்டில் ஒருவனாய்த் தூங்கக்கூடாது. தூர ஸ்திரீயினிடத்திற் பேசக்கூடாது. பிறருடைய நிலத்தில் மேய்ந்துகொண்டிருக்கும் பசுவைத் தடுக்கக்கூடாது; வேறொருவரிடத்திலும் சொல்லக்கூடாது.

ஆகாசத்தில் இந்திரதனுஸைப் பார்த்தாற் பிறருக்குக் காண்பிக்கக்கூடாது. பிறர் தரித்த பாதரக்ஷை, வஸ்திரம், பூணூல், மாலை, கமண்டலம் இவைகளைத் தரிக்கக்கூடாது. இளம் வெயிலிற் காயலாகாது. பிணப்புகை மேலே படக்கூடாது. நகம் மயிர் இவைகளைக் கிள்ளக்கூடாது. பற்களால் நகங்களைக் கடிக்கக்கூடாது. துரும்புகளைக் கிள்ளக்கூடாது. மண்ணாங்கட்டி, ஓடு இவைகளை நொறுக்கக்கூடாது. புஷ்

பத்தை வெளியிலே தெரியும்படி தரிக்கக்கூடாது. எருது களின் முதுகின்மேல் ஏறக்கூடாது. கிராமத்திலும், வீட்டிலும் சரியான வழியிலன்றிப் பிரவேசிக்கக்கூடாது. இராத்திரி காலத்தில் மரநிழலை விலக்கவேண்டும்.

தானாகவே பாதரக்ஷை செய்யக்கூடாது. ஒரு காலமும் சூதாடக்கூடாது. கைகளால் நீந்தி நதியைக் கடக்கக்கூடாது. நான்காம் வருணத்தினருக்குப் புத்தி சொல்லக்கூடாது; தர்மத்தையும் விரதத்தையும் உபதேசிக்கக்கூடாது. தேவதைகள், பிதா, குரு இவர்களுடைய நிழலைத் தாண்டக்கூடாது; கபிலைப் பசுவின் நிழலையும் தாண்டக்கூடாது. ஸத்தியத்தையே சொல்லவேண்டும்; ஆனாலும் பிரியத்தையே சொல்லவேண்டும். ஸத்தியமாயிருந்தாலும் பிரியமாக இல்லாததைச் சொல்லக்கூடாது; பிரியமிருந்தாலும் ஸத்தியமல்லாததைச் சொல்லக்கூடாது.

ஒருவனைப் பாபி என்றாவது பாபியல்லவென்றாவது சொல்லக்கூடாது. எப்பொழுதும் சுப வார்த்தைகளையே சொல்லவேண்டும். நாஸ்திக புத்தி, வேத நிந்தை, தேவ தூஷணம், துவேஷம், டம்பம், கோபம், குரூரம் இவைகளை விட்டுவிடவேண்டும். கேசம், நகம், மீசை இவைகளை கிருகஸ்தன் மூன்று பக்ஷத்துக்கு மேற்படாமல் வபனஞ் செய்து கொள்ளவேண்டும். ஜலத்திலும், எண்ணெயிலும் நிழலைப் பார்க்கக் கூடாது. தீர்த்தத்தில் வாயைக் கொப்புளிக்கக்கூடாது. காலினாலேயே காலைத் தேய்த்துக் கழுவக் கூடாது. அக்கினியோடு அக்கினியைக் கலக்கக் கூடாது; அணைக்கவும் கூடாது; வஸ்திரத்தால் விசிறவும் கூடாது.

காலைமாலைகளிற் பிச்சையிடாமல் தெருக்கதவுகளைச் சார்த்தக் கூடாது. பற்களை நெறிக்கக் கூடாது. வாயைக்

கையினால் மறைத்துக் கொள்ளாமற் கொட்டாவி விடக் கூடாது. ஸ்திரீகளை ஒருபோதும் நம்பக்கூடாது. கிருகஸ்தர்களில் வஸ்திரமில்லாதவனையும் கச்சமில்லாதவனையும் கௌபீனத்தை மாத்திரம் தரித்தவனையும் மூதேவி வந்தடைகிறாள். விளக்கு நிழல், மனிதர் நிழல், வஸ்திரத்தீர்த்தம், மயிர்ஜலம், ஆட்டின் புழுதி, கழுதையின் புழுதி, துடைப்பத்தின் புழுதி, ஸ்திரீகளின் பாததூளி, முறக்காற்று இவைகள் மேலே பட்டால் ஸம்பத்துத் தொலைந்தே போய்விடும்.

மனைவியுடன் கூட இருந்து புஜிக்கக் கூடாது. பகலிலே தூங்கக் கூடாது. இரவிலே பூமியைக் கீறக்கூடாது. பசுக்களைத் தொடக்கூடாது. தான்றி மரம், விளாமரம் இவைகளின் நிழலை அணுகக்கூடாது. பசுவுக்கும் அந்தணர்க்கும் மத்தியிலும், அந்தணர்க்கும் அக்கினிக்கும் மத்தியிலும், தம்பதிகளுக்கு மத்தியிலும், குருசிஷ்யர்களுகடு மத்தியிலும் நந்தி சங்கரர்களுக்கு மத்தியிலும் போகக்கூடாது. ஆயுள், பொருள், வீட்டின் இரகசியம், மந்த்ரம், ஔஷதம், ஸங்கமம், தானம், மானம், அவமானம் இந்த ஒன்பதையும் மறைத்துக் காக்கவேண்டும்.

பிறர் வீட்டிலிருந்து ஒருபோதும் அக்கினி கொண்டு வரக்கூடாது. ஸ்திரீகள் பூசணிக்காயை உடைக்கக் கூடாது. தும்மும்போது "சதம் ஜீவே" என்று சொல்லியும், இடறினால் அவ்விடத்திலுள்ள புழுதியை நெற்றியிலிட்டுக்கொண்டும், கொட்டாவி விட்டால் விரலைச் சொடுக்கியும் பரிகாரஞ் செய்யவேண்டும். பிதா அல்லது தமையன் இருந்தால், தர்ஜனியில் வெள்ளியைத்* தரிக்கக் கூடாது.

## காயத்ரீ ஜபம்

சதுர்த்தி அஷ்டமி சதுர்த்தசி இவைகளில் 54, ஸப்தமியில் 37, அமா பூர்ணிமா பிரதமை இவைகளில் 36, திரயோதசி விஷு இவைகளில் 28 என்ற கணக்குடன் ஸாயங்காலத்தில் காயத்ரீ ஜபஞ் செய்யவேண்டும். எப்போதும் பிராதக்காலத்தில் 108 காயத்ரீ ஜபிக்கவேண்டும். ஆசௌச காலத்தில் 10 காயத்ரீ ஜபிக்க வேண்டும். நாலு மாசங்களுக்கு ஒருதடவையும், உபாகர்மதினத்திலும், ஸூதக நிவிர்த்தியிலும், அறுந்துபோன காலத்திலும் வேறு யக்ஞோபவீதம் தரித்துக்கொள்ள வேண்டும்.

## உபவாஸம்

அஷ்டமி, சதுர்த்தசி, அமா, பூர்ணிமா, ஸங்க்ரமணம், மந்வாதி, யுகாதி, ஞாயிற்றுக் கிழமைகளின் இரவிலே போஜனம் விலக்கப்பட்டிருக்கிறது. ஏகாதசியில் அஹோராத்ரமும் போஜனம் விலக்கப்பட்டிருக்கிறது. 8 வயதிற்கு மேற்பட்டு 80 வயதுக்குட்பட்டவர்கள் எல்லோரும் ஏகாதசியில் உபவாசமிருக்கவேண்டும்.

மேற்கண்ட தினங்களைத் தவிர மற்றத் தினங்களில் பரோஹநி தர்ப்பணத்திற்கு ராத்திரி போஜன நிஷேதமாவது பலஹார நியமமாவது வேண்டியதில்லை. நிசியில் மூத்திரோத்ஸர்ஜனம் செய்தால் ஆசமனம் வேண்டுவதில்லை; செய்யவும் கூடாது.

நிசியில் ஸ்நானஞ் செய்யக் கூடாது. அப்படிச் செய்யு நேர்ந்தால் அக்கினி ஸந்நிதியிற் செய்யவேண்டும். சகிருத் பந்துக்களை வழியனுப்பிய பிறகும் பூஜை செய்த பிறகும்

ஸ்நானம் செய்யக்கூடாது. இராத்திரியில் நெல்லிக்காய், இஞ்சி, நெல்வறுத்த மா இவைகளை உபயோகிக்கூடாது. மஞ்சள், நெய், பொடி, உப்பு, தான்யம், மருந்து, பாக்கு, வெல்லம் இவைகட்குப் பாகதோஷமில்லை. தீர்த்தம், கிழங்கு, நெய், பால், ஹவிஸ், மருந்து, பழம் இவைகளைச் சாப்பிடுவதனால் விரதபங்கம் நேரிடமாட்டாது. இதரர்களின் இஷ்டத்திற்காகச் சிராத்த போஜனம் செய்தாலும் விரத பங்கம் நேரிடாது. சாப்பிடும்போது பூர்வாபோசன ஜலத்தை முழுவதும் உட்கொள்ளவேண்டும்; உத்தரா போசன ஜலத்தை பாதி உட்கொண்டு பாதியைப் பூமியில் விடவேண்டும். மூத்திர சௌசத்தில் 4 தடவையும், மல சௌசத்தில் 8 தடவையும், போஜனமானபின் 12 தடவையும் தந்ததாவனமானபின் 16 தடவையும் வாய் கொப்புளிக்கவேண்டும்.

நதிகளில் புதுஜலம் வந்தவுடன் 10 நாளும் ஆடிமாசம் பிறந்து 3 நாளும் ஸ்நானம் செய்தலாகாது. ஆனால் உபாகர்ம ஸ்நானம், கிரகண ஸ்நானம், பிரேத ஸ்நானம், ஸங்க்ரமண ஸ்நானம் முதலியவைகள் செய்யலாம். சூரிய கிரகணத்துக்கு முன் 4 ஜாமஞ் சாப்பிடக்கூடாது. சந்திரகிரகணத்துக்குமுன் 3 ஜாமம் சாப்பிடக்கூடாது. கிரஸ்தாஸ்தமன சந்திர கிரஹணத்தில் பகலில் உபவாசமிருந்து ஸாயங்காலத்தில் சந்திரனைக்கண்டு ஸ்நானஞ்செய்த பிறகுதான் சாப்பிடவேண்டும். அப்படியே கிரஸ்தாஸ்தமன சூர்யக்ரகணத்திலும் ராத்திரி சாப்பிடாமலிருந்து, மறுநாட்காலையில் ஸ்நானஞ்செய்து சூரியனைப் பார்த்துவிட்டுப் பிறகு சாப்பிடவேண்டும்.

வெண்கலப் பாத்திரத்தில் எடுக்கப்பட்ட இளநீர்கள் ளுக்குச் சமானம். தாமிர பாத்திரத்தில் வைக்கப்பட்ட சந்தனம், புஷ்பம் இவைகளும் சிலாக்யமில்லை. தேவர்கள், பிதுர்க்களுக்கன்றி, திலான்னம், பாயஸம் இவைகளைச் செய்து சாப்பிடக்கூடாது.

## ஏகாதசி த்வாதசி

துவாதசியிற் சிரவண நக்ஷத்திரஞ் சேர்ந்தால் அதற்கு 'ஶ்ரவணத்வாதசி' என்று பெயர். அதில் உபவாசம் இருக்க வேண்டும். அது மெத்த புண்ய வ்ரதம். உபவாசமில்லாவிடில் தோஷமுண்டு. சிரவண நக்ஷத்ரமானது ஏகாதசி, துவா தசி. இரண்டிலுந் தொட்டுக் கொண்டிருந்தால் மேலேகண்ட துவாதசியைக் காட்டிலுஞ் சிரேஷ்டமானது. இதை மட்டிலும் சிலர் அநுஷ்டிக்கிறார்கள்

ஏகாதசி, சிரவணத்வாதசி இவ்விரண்டும் முதல் நாளும் மறுநாளும் வரும் பக்ஷத்தில் ஏகாதசியில் உபவாசம் இருக்கவேண்டியதில்லை. அந்தப்பலன் சிரவண துவாதசியில் உபவாசம் இருப்பதாற் கிடைத்துவிடுகிறது. அல்லது துவாதசியில் அருணோதயத்தில் ஸ்நானம், தேவபூஜை, தானம், ஹோமம் இவைகளெல்லாவற்றையும் முடித்துக் கொள்ளலாம். துவாதசியிலேயே பாரணை செய்யவேண்டும்; நேரமில்லாவிட்டால் துளசி தீர்த்தத்தைப் பானம் செய்துவிட்டுப் பிறகு போஜனஞ் செய்யலாம். நீட்டிலும் ஏகாதசி விரதமுண்டு. அடிக்கடி தீர்த்தம் சாப்பிடுதல், பகலில் நித்திரை செய்தல், தாம்பூலம் தரித்தல் இவைகள் உபவாசத்திற் கூடாது. உபவாச தினத்தில் பல் துலக்கக்கூடாது.

துவாதசி பாரணையிற் காட்டுவாழைமை விலக்கவேண்டும். சில தோஷ நிவிர்த்திக்காக துளசி, காசாந்தழை, சுண்டைக்காய், ஆத்தீக்கீரை, நெல்லிக்காய் இவைகளில் ஏதேனும் ஒன்றையாவது புஜிக்கவேண்டும். துவாதசியிற் பகலில் நித்திரை, பரான்னம், இரண்டு தடவை சாப்பாடு, ஸ்திரீ போகம், தேன், வெண்கலம், மாம்ஸம், எண்ணெய் இந்த எட்டையும் நீக்கவேண்டும். துவாதசியின் முதலில் எட்டிலொரு பாகத்திற்கு ஹரிவாஸம் என்றுபெயர். அதிற் பாரணைசெய்யலாகாது. உள்ளிப்பூண்டு, வெங்காயம் இவைகளைப் புத்தி பூர்வமாய்ச் சாப்பிட்டாற் சுராபானத்திற்குச் சமானம.

## வேறு சில தர்மங்கள்

வெண்கலத்தில் வைத்த இளநீரும், உப்புக்கலந்த பாலும்,. வண்ணான் துறையில் ஸ்நானஞ் செய்தலும் தாமிரத்தில் வைத்த பாலும்,கைநகத்தின் நுனியினுல் ஜலத்தைப் பானம் பண்ணுதலும், இடது கையினுல் தீர்த்தத்தை எடுத்துச்சாப்பிடுதலும் கள்ளுக்குச்சமானம். பிராம்மணர் குடித்து மிகுந்த தீர்த்தத்தைச் சாப்பிட்டால் அது கள்ளுக்குச் சமானம். ஆனுல் ஸங்கடவிஷயத்தில் அந்தத் தீர்த்தத்தில் கொஞ்சம் கீழே கொட்டிவிட்டுப் பாக்கியைச் சாப்பிடலாம். சிவனுக்கு மட்டில் நிவேதனஞ் செய்யப்பட்ட அன்னம் தீர்த்தம் முதலியவற்றைச் சாப்பிடலாகாது. சாலக்ராமத்தோடு கூடின சிவநிவேதனத்தைப் புஜித்தால் விசேஷ பலனைக் கொடுக்

இரும்புப் பாத்திரத்திலுள்ள. தீர்த்தமும், ஸப்தமிதிதி ஞாயிற்றுக்கிழமை இவ்விரண்டிலும் நெல்லிக்காயும்,ராத்திரி

யில் எள்ளும் தயிரும், பகலிற் பாலும் கையினாற் குழப்பிய மோரும், ஆபத்தில்லாத ராத்திரிகாலத்திற் கடுகும், அஷ்டமியில் தேங்காயும், துவாதசியிற் புடலங்காயும், த்விதியை யிற் கண்டங்கத்தரிக்காயும், ப்ரதமையிற் பூசணிக்காயும், பஞ்சமியில் வெள்ளரிக்காயும் சாப்பிடுதல் கள் சாப்பிடுவதற் குச் சமமென்று சாஸ்திரம் கூறும்.

## சந்திர தரிசனம்

சந்திர தரிசனத்தில் பிறை பார்ப்பதன் பலன் ஞாயிற் றுக்கிழமையில் சுகமுண்டாகும்; திங்களில் அதிகப்பிரயோ ஜனமில்லை; செவ்வாயில் மரணக் கேள்வியுண்டாகும்; புதனில் பயமுண்டாகும்; வியாழனில் தனமுண்டாகும்; வெள்ளியில் தேஜஸ் உண்டாகும்; சனியில் ரோகமுண்டாகும்.

## ஆசாரம்

சொந்தக் கிராமத்தில் முழுவதும், இதரக் கிராமத்தில் அதிற் பாதியும், பட்டணங்களில் அதிற் பாதியும், மார்க்கத் தில் நான்காம் வருணத்தின்ரைப் போலவும் ஆசாரம் கொண்டாடுவது போதுமானது.

## வேறு பல நியமங்கள்

கோவில், நதி, குளம், அரசமரம் இவைகளின் ஸந்நிதியிலே தன்னைத் தானே பிரதக்ஷிணம் செய்து கொண் டால் மகாதோஷமுண்டு.

கர்ப்பதீக்ஷை யுடையவன் ஸமுத்ரஸ்நானஞ் செய்வது கூடாது; பிணத்தைச் சுமப்பது கூடாது. வியதீபாதத்தின் நாலாவது பாதம், அமாவாசையின் முதல் பாதம், திரு

வோண நக்ஷத்திரத்தின் மத்தியபாகம் இம்மூன்றும் புஷ்ய மாசம், அல்லது மாக மாசத்தில் ஞாயிற்றுக் கிழமையின் உதயகாலத்திற் சேர்ந்தால் அர்த்தோதய மென்றும், திங்கட் கிழமையின் உதயத்திற் சேர்ந்தால் மஹோதய மென்றும் சொல்லப்படும்.

இளம் வெயிற் காய்தலும், பிணப்புகை மேலேபடுதலும், தன்னைக் காட்டிலும் பெரியவளைக் கலியாணஞ் செய்து கொண்டு அவளுடன் ஸம்போகஞ் செய்தலும், கலங்கல் ஜலத்தைச் சாப்பிடுவதும், இரவில் தயிரன்னம் சாப்பிடுவது மாகிய இந்த ஐந்தும் தினந்தினம் ஆயுளைக் குறைக்கும்.

சாயந்திர வெயிற்காய்தலும், ஹோமப்புகை மேலே படு தலும், தனக்குச் சிறியவளைக் கல்யாணஞ் செய்து கொண்டு அவளுடன் ஸம்போகஞ் செய்தலும், நிர்மலமான ஜலத் தைச் சாப்பிடுதலும், இரவிற் பாற்சாதஞ் சாப்பிடுதலுமாகிய இந்த ஐந்தும் தினந்தினம் ஆயுளை விருத்தி செய்யும். அதிதி, வாசலில் நிற்கும்போது ஒருவன் சாப்பிட்டால், அந்த ஆபோசனம் கள்ளுக்குச் சமானமாகும்; அந்த அன் னங் கோமாம்ஸ ஸமானமாகும்.

ஒருபோதும் கடன் வாங்கக் கூடாது. கடனில் மிச்ச மும் வ்ரணத்தில் மிச்சமும் வைக்கக் கூடாது. வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்யக் கூடாது.

பிராணனைக் காட்டிலும் மானம் பெரிது. நாளைக்கு வருவது நமதென்றிருக்கக் கூடாது. தேகம் அநித்யம். திரவியம் நிலையில்லாதது. தர்மத்தை நினைத்தவுடனே செய்ய வேண்டும். கல்லின்மேல் வைத்த சந்தனத்தைப் பூசிக்கொள் வதும், பூனை தின்ற அன்னத்தைச் சாப்பிடுவதும், நீரில் தன்

நிழலைப் பார்ப்பதும் இந்திரனுக்கானாலும் ஐசுவரியத்தைப் போக்கிவிடும்.

பிறருக்கு உபகாரஞ் செய்வதே புண்யம்; பிறருக்கு உபத்திரவஞ் செய்வதே பாபமாகும். பிராம்மணனுடைய சொத்து விஷத்துக்குச் சமானமாகும். வண்டிக்கு ஐந்து முழமும் குதிரைக்குப் பத்துமுழமும் யானைக்கு ஆயிரம் முழமும் விலகவேண்டும்; துஷ்டருக்கோ அவனிருப்பிடம் விட்டுத் தூர விலகவேண்டும். தேளுக்கு விஷம் கொடுக்கில்; ஈக்கு விஷம் தலையில்; பாம்புக்கு விஷம் பல்லில்; துர்ச்சன ருக்கோ ஸர்வாங்கமும் விஷம். கடன்வைத்த தகப்பன் சத்துரு.

அக்கினிஹோத்திரஞ் செய்யுமிடத்துக்குப் போகும் போதும், கிருகம், புண்யக்ஷேத்திரம், கர்ப்பவதி, கிழவர், ராஜா, தெய்வம், குருவாகிய இவர்களிடம் போகும்போதும் வெறுங்கையோடு போகக்கூடாது. தரித்திரனுக்குக் கொடுக் கும் தானமும், பூஜையில்லாத கோவிலுக்குப் பூஜையுண் டாக்குதலும், அநாத ப்ரேதத்தை ஸம்ஸ்காரஞ் செய்தலும் அஸ்வமேத பலனுக்கு ஸமானமான பலனையளிக்கும்.

அழுக்கு வஸ்திரம் தரிப்பவனும், பல் தேய்க்காதவ னும், பேருண்டி சாப்பிடுபவனும், காலைமாலை தூங்குகிற வனும், குணசாலிகளா யிருந்தாலும் லக்ஷ்மி இவர்களை விட்டு விலகிப்போவாள். கொம்புள்ள பிராணிகளின் ஸமீபத்திற் போகக்கூடாது. ஒருவன் என்ன துர்க்குணமுள்ளவனாக இருந்தாலும் காஷாயதண்டங்களைத் தரிப்பவனால் பூஜ் யனாவான். துர்ப்பிக்ஷகாலத்தில் அன்னதானஞ் செய்ய வேண்டும். பிறருடைய மனைவியைத் தாயார்போலவும் பிற ருடைய திரவியத்தை ஓட்டாஞ்சல்லி போலவும் நினைக்க

விரத நியமங்கள் வேண்டியதில்லை. ஒருபோதும் கோபங் கூடாது; கோபத்தைப் பாபமென்றே சொல்லுகிறார்கள். எப்போதும் கவலை கூடாது.

கன்றுக்குட்டியின் கயிற்றைத் தாண்டக்கூடாது. மழையில் ஓடலாகாது. ஒற்றை வஸ்திரத்தோடு புஜிக்கலாகாது. ஆடையின்றி நிர்வாணியாய் ஸ்நானஞ் செய்வதுகூடாது. வெகு பேர்களுடைய கூட்டத்திற் சாப்பிடலாகாது. கோவி லில்லாத ஊரிற் குடியிருக்கக்கூடாது. கெட்ட கதைகளைச் சொல்லக்கூடாது.

**வேதாங்க ளெல்லாம் விதிப்படியே ஓதுவதை**
**ஏதங்கள் தாழறவே எய்த்தாலும்—நீதங்கோள்**
**ஆசாரந் தன்னை அகற்றிறல் அந்தணர்க்குத்**
**தூசாறும்; இல்லை சுகம்.**

## 25. ஸந்தியா வந்தனம்

இப்பாரத கண்டத்திற் பிரபஞ்ச சிருஷ்டிமுதல், பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள் ஆகிய மூன்று வர்ணத்தார்களும் அவரவர்கள் த்விஜன்மத்துக்கு அறிகுறியான உபநயன காலமுதல், வேதோக்தமாகிய ஸந்தியா வந்தனத்தை நித்ய கர்மாவாக அனுஷ்டித்து வந்திருக்கிறார்கள். நான்கு யுகங்களுள், வர்ணாஸ்ரம தர்மம் முற்றிலும் தவறியது கலியுகம். பஞ்சாக்கினி மத்தியிலிருந்து அதிகக் கடுமையாய்த் தவம் புரிந்து 10 வருஷத்தில் கிருதயுகத்தில் அடையக்கூடிய பலனைத் திரேதாயுகத்தில் ஒருவருஷத்தில் அடையலாம்; த்வாபர யுகத்தில் ஒரு மாசத்தில் அடையலாம். கலியுகத்திலோ பரிசுத்த மனதுடன், கேசவா, சங்கரா வென்று ஒரே தடவை சொன்ன மாத்திரத்திலே அடையலாம்: அதனால் இந்தக் கலியுகம் சிறந்ததென்று வியாஸர் சொல்லியிருக்கிறார்.

இந்தக்காலத்தை அனுஸரித்து, ஸகலப் பிராமணர்களும் ஸந்தியாவந்தனத்தை அர்த்தம் தெரிந்துகொண்டு திரிகாலங்களிலும் சிரத்தையுடன் செய்து வந்தால் இதுவொன்றே ஸகலத்தையும் கொடுத்து மோக்ஷத்தைப் பெறுவதற்கு ஹேதுவாகும்.

பிராம்மணர்களுக்கு ஏற்பட்ட வேத சம்பந்தமான கர்மங்களில் காலை மாலை ஸந்தியாவந்தனமென்பது முக்கியமான நித்ய கர்மமாம். மத்தியானம்செய்யப்பெறும் மாத்தியாஹ்னிகமென்பது வேதத்தில் விதிக்கப்பட்டதன்று; அது

ஸ்மிருதிப்ரோக்தமாம். ஸந்தியாவந்தனம், ஈஸ்வராராதனே. இது பிராம்மணர்களுக்கு நித்தியமாய்ச் செய்யும்படிபிரம்மா விஞல் ஏற்பட்டிருக்கும் கர்மம்.இது கடவுள் ஸ்தோத்திரமும் பிரார்த்தனையுமேயாகும். மேலும் ஸந்தியாவந்தன மந்த்ரங் கள் வேத வாக்கியங்கள். ஆனல் புராணமார்க்கமான சில ஸ்துதிகளும் அடங்கியிருக்கின்றன. அவைகள் அதிகமில்லை. மதபேதங்களால் சேர்க்கப்பட்டவை. ஆனல் ருக் யஜுஸ் ஸாம வேதங்கள் மூன்றும் ஒரே வஸ்துவைக் கொண்டாடு வதாலும் அவற்றிற்கு ஆதாரம் ஒன்ருயிருப்பதாலும் ரிக் யஜுஸ் ஸாமமென்கிற மூன்றுவித ஸந்தியாவந்தனங் களின் கருத்தும் ஒன்றேயாம்.

## ஸந்தியா வந்தனத்தின் பகுதிகள்

ஸந்தியாவந்தன கர்மத்திலும் அங்கி அங்கமென் பதும், முக்கியம் கௌணமென்பதும், உயிர்ப்பாகம் உடற் பாகமென்பதும் உண்டு. ஸந்தியா வந்தனத்தில் அர்க்கியம், அபித்தியானம், ஜபம், உபஸ்தானம் என்பவைகள் முக்கிய மானவை. ஆசமனம், ஸங்கல்பம், மார்ஜனம், தர்ப்பணம் முதலியவை கௌணமானவை. கௌணமென்ருல் உபயோக மற்றவையென்று அர்த்தமன்று; ஒன்றை உத்தேசித்து மற் றது கௌணமென்பதாம். அர்க்கியப்ரதானமென்பது,காமக் குரோத லோப மோஹ மதமாச்சர்யமென்ற அரிஷட் வர்க்கங் களாகிய மந்தேஹர்கள் தினந்தினம் ஆத்மாவாகிய ஞான சூர்யனை மறைக்கின்றனர். அவர்களைத் துரத்திப் போக்கு தற்குக் காயத்ரீ மந்திரத்தைத் தியானித்து உச்சரித்து, அம்பு எய்தலின் அறிகுறியாக ஜலத்தைக் கையிலெடுத்து எறிதல், அதாவது மார்ஜனம், ஆசமனம், பிராணுயாமம் முதலிய

கிரியைகளால் பிராணன், வாக்கு, காயங்களைப் பரிசுத்தஞ் செய்து, பின்பு காயத்ரீ மந்திரத்தால், மனத்தூய்மைபெறச் செய்து கொள்ளல். அபித்யானமென்பது, மனத்தூய்மை பெற்று மன அலைகள் ஓய்ந்த பிறகு சித்த விருத்திகள் ஓடுங்கின பிறகு சூரியன் முதலான வெளிப் பிரபஞ்சத்தில் அந்தர்யாமியாக இருக்கின்ற பரமாத்மாவும் ஸந்தியாஉபாஸிகளின் அன்னமய பிராணமய மனோமய விஞ்ஞானமய ஆனந்தமய கோசங்களுக்குள் இருக்கின்ற ஆத்மாவும் ஒருவனே யென்றும், இரண்டல்லவென்றும் உள்ளுணர்ச்சிபெறல்; இந்தக் கருத்தைக்கொண்டே "அஸாவாதித்யோப்ரம்மா" என்ற மந்திரம் தியானிக்கப்பெறுகிறது.

## ஸந்தியா வந்தனஞ் செய்யக்கூடிய காலம்

பிராதக்கால ஸந்தியாவந்தனம் நக்ஷத்திரங்கள் தோன்றும்போது செய்யின் உத்தமமும், நக்ஷத்திரங்கள் மறைந்தபோது செய்யின் மத்திமமும், சூரியன் பாதி உதிக்கும்போது செய்யின் அதமுமாம். மாத்தியாந்ஹிகம் பதினைந்தாம் நாழிகையாகிய மத்தியான்னத்திலே செய்யின் உத்தமமும், மத்தியான்னத்திலே ஒரு நாழிகைக்குமுன் செய்யின் மத்திமமும், மத்தியான்னத்துக்குப்பின் ஒரு நாழிகையிலே செய்யின் அதமமுமாம். சாயங்கால ஸந்தியாவந்தனம், சூரியன்பாதி அஸ்தமிக்கும்போது செய்யின் உத்தமமும், அஸ்தமனமானபின் ஆகாசத்திலே நக்ஷத்திரங்கள் தோன்றுமுன் செய்யின் மத்திமமும், நக்ஷத்திரங்கள் தோன்றும்போது செய்யின் அதமமுமாம்.

ஸ்நானம், ஜபம், ஹோமம், தேவபூஜை, அதிதிபூஜை, வைஸ்வதேவம் இந்த ஆறும் பிராம்மணர்கள் தினந்தோறுஞ்

செய்யவேண்டியவை. ஸந்தியாகாலம் 3¾ நாழிகை யென்பது ஸந்தியாவந்தனத்திற்கு அல்ல; மற்றக் கர்மாக்களுக்குச் சொல்லப்பட்டது. வெளியிற் சென்றே ஸந்தியாவந்தனஞ் செய்தல் அதிசிலாக்யம். காலையில் நின்றுகொண்டும், மத்தியான்ன ஸாயங்காலங்களில் உட்கார்ந்து கொண்டும் காயத்ரீயை உபாஸிக்கவேண்டும்; ஆசௌச காலத்தில் ஸந்தியாவந்தன மந்த்ரத்தை ஸ்மரிக்கவேண்டியதே தவிர, உச்சரிக்கக்கூடாது.

## அர்க்கியம்

காலையில் அர்க்கியம் விடுவதில் புருவம் வரையில் தூக்கிக் கொஞ்சம் வணங்கி நின்றுகொண்டு விடவேண்டும். மத்தியான்னத்தில் வணங்காமல் நின்றுகொண்டு அர்க்கியம் விடவேண்டும். ஸாயங்காலத்தில் உட்கார்ந்துகொண்டு அர்க்கியத்தைத தூக்கிவிடவேண்டும். ஜலத்திலேயே அர்க்கியத்தை விடவேண்டும். ஜலமில்லாத பக்ஷத்தில் ஸ்தலத்தைச் சுத்திசெய்து அதில் விடலாம். ஸாயங்காலத்தில் அர்க்கியத்தைக் கரையிலேயே விடவேண்டியது அவசியம். கட்டைவிரலும் ஆள்காட்டிவிரலும் சேர்ந்தால் அது ராக்ஷஸ முத்திரை யென்று சொல்லப்படுகிறது. அதனால் யாதொரு கர்மாவுஞ் செய்யக்கூடாது. அர்க்கியத்தைத் தூக்கிக் 5திங்கால் பூமியிற் படாமல் எழும்பி ஜலமத்தியில் விடவேண்டும். ஸந்தியா வந்தனத்தைக் கிழக்கு அல்லது வடக்கு முகமாக இருந்து செய்யவேண்டும். அர்க்கியத்தைச் சூரியனுக்கு எதிராக விடவேண்டும். அர்க்கியத்திற்குப் பிறகு ஆத்ம ப்ரதக்ஷிணம் செய்யவேண்டும். பிறகு ஆத்ம பரிஷேசனஞ் செய்து ஆசமனஞ் செய்யவேண்டும். ஸந்தியா

வந்தனஞ் செய்யும்போது தர்ப்ப பவித்திரமாவது, தர்ப்பமாவது தரிக்கவேண்டும். செவிடு, குருடு, ஊமை, பைத்தியம் முதலான காரணத்தால் தோஷங்களுடையவனாக இருந்தாலும் 7 நாள் ஸந்தியாவந்தனஞ் செய்யாவிட்டால், புனருபநயனஞ் செய்யவேண்டும். ஸங்கியையில்லாமற் செய்த ஜபமும் தீர்த்தமில்லாமற் கொடுத்த தானமும் நிஷ்பலமாகும்.

அந்தி யாரண மந்திரத் தந்தண ரெல்லாம்
சந்தி செய்வதாற் சூரியன் நல்லருள் தருவான்
உந்தி மேல்வருந் துன்புல கினிலிருந் தோடும்
சிந்தை செய்யினிச் செயலினைப் போன்றதேச் செயலே!

# 26. காயத்ரீ

ஏகீபாவமான உள்ளுணர்வு உதயமாக அவ்வுணர்வின் பொருளாகிய ஈச்வரனைத் தியானித்தலே காயத்ரீஜபமாகும். "எல்லா ஜீவர்களுக்கும் தேஜஸைக் கொடுப்பவனும், உலகத்தையெல்லாம் ஸிருஷ்டிக்கிறவனும், எல்லாராலும் பூஜிக்கப்படுகிறவனும், எங்களுடைய புத்தியைப் பிரேரணை செய்பவனும், நல்வழியில் நடத்துகிறவனும், ஞானவொளியானவனுமான அந்த ஈச்வரனைத் தியானம் பண்ணுகிறோம்" என்பது காயத்ரீயின் கருத்தாகும்.

## காயத்ரீயின் பெருமை

உலகத்திலுள்ள எல்லா வித்யைகளும் ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணமென்ற நான்கு வேதங்களுக்குள் அடக்கம். வேதங்களோ காயத்ரீ மந்திரத்துக்குள் அடக்கம். காயத்ரீ மந்திரமோ ப்ரணவத்துக்குள் அடக்கம். இவ்விதம் உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஒவ்வொரு மந்திரத்துக்கும் ஒரு தேவன், ஒரு ரிஷி, ஒரு சந்தஸ்ஸு ஆக மூன்றுண்டு. 24 அக்ஷரமுள்ள சந்தஸ், காயத்ரீ சந்தஸ் என்பதாம். ஸாவித்ரீ ஸம்பந்தமான காயத்ரீயானது ந்ருசத்காயத்ரீ சந்தஸ்ஸாம். அது 23 அக்ஷரமுள்ளது. ரிஷி விசுவாமித்திரர். அரசராகவிருந்து பின்பு பிரம்மரிஷியான விசுவாமித்திரரல்லர்; ஸப்தரிஷிகளில் அவர் ஒருவரென்பது சிலர் அபிப்பிராயம். ஸப்த ரிஷிகளோவென்றால் இந்தப் பிரம்மாண்டத்தின் ஆதியில் இதன் அதிபதியான ஈச்வரனிடமிருந்து வெளிவந்த ஸப்தரச்மிகள் உள்ளடங்கப்பெற்ற மஹா புருஷர்களாம். இம்மந்திரத்துக்குத் தேவன், ஞானஸ்வரூபியான சூரியனிடமுள்ள பரமாத்மாவேயாம்.

## காயத்ரீ உபதேசம்

உபநயன ஸம்ஸ்காரத்தில் இம்மந்திரத்தின் உண்மையை அறிந்த குருவானவர் சிஷ்யனுக்கு ஆதிகாலத்தில் குகையிலாவது, ஸ்தூல சரீரத்தைவிட்டு உயர்ந்த பிரக்ஞா பூமிகளிலாவது இரகசியமாய் உபதேசிப்பார். இதற்குப் பிரம்ம வித்யையென்று பெயர். ஆதி உபதேசத்தின் இரகசியமுறையைக் காட்டும்பொருட்டு இக்காலத்திலும் உபதேசிக்கும் சமயத்திற்பட்டு அல்லது யாதேனும் ஒரு சுத்தவஸ்திரத்தை ஆசார்யரும் சிஷ்யனும் போர்த்துக்கொண்டு ஆசார்யர், சிஷ்யனுடைய காதில் மந்த்ரத்தை உபதேசிப்பார்; அல்லது பிரம்மவித்யை (காயத்ரீயை) உபதேசித்தால் துவிஜனாக (இருபிறப்பாளனாக) ஆகின்றானென்பதைச் சூசிப்பிக்கும் பொருட்டு அந்தக் கர்ப்பப்பையை அறிவிக்கும்படி பட்டினாற் போர்வை ஏற்படுகிறதெனவும் மதிக்கலாம். இக்காலத்திலோ விருதாவான வேடிக்கைகளும் ஆடம்பரங்களும் அதிகப் பட்டுக்கொண்டிருக்கின்றன. மந்திரத்தின் உண்மையும் அதன் கௌரவமும் ஆசார்யனுக்குங்கூட இக்காலத்திலே தெரியாமற் போயின.

## காயத்ரீ உபாஸனை

இம்மந்திரத்தின் உபாஸனையை 'அந்தராதித்யவித்யா' என்றும் சொல்கிறதுண்டு. முதலில் விஞ்ஞான ஆத்மா, அதாவது போக்தாவான ஜீவன்; மத்தியில் ஆத்மா, ஸாக்ஷியாகிய ப்ரத்தியகாத்மா; கடைசியில் பரமாத்மா; இந்த ஆத்மாவை ஹ்ருதயத்தில் இருக்கிறதாகத் தியானஞ்செய்ய வேண்டும். தோன்றும் ஸ்தூல சூரியனைவிட, மஹாதேஜஸ்வி

யாகவும் வெண்மையான உறைபனியைவிட மஹா தாவள்ய முடையதாகவும், ஆகாசத்தைவிட மகா நுண்ணியதாகவும், ஊனக் கண்ணுக்கும் மனக் கண்ணுக்கும் விபரீதகரமாகவும் இருப்பதாக ஸ்வரூபப்படுத்தி ஹ்ருதயத்தில்வைத்துத் தியானிக்கவேண்டும்.

இம்மந்திரம் மந்திரங்களுக்குளெல்லாஞ் சிரேஷ்டமானது. இம்மந்திரத்தை உச்சரிக்கிறவர், தாம் நலம் பெறுவதுடன், தம் உபாஸனை நேர்மையாய் நடைபெறுமாகில் உலகம் முழுவதும் நலம்பெறச் செய்கின்றார். காயத்ரீ யென்பதற்கு ஜபிக்கின்றவனைக் காப்பாற்றுவது அல்லது பிராணன்களைக் காப்பற்றுவது அதாவது இந்திரியங்களை நல்வழியிற் செல்லும்படி செய்வதென்பது பொருள். இதனாற் குறிப்பிடப்படும் வஸ்து மனவாக்குகளுக்கு எட்டாப்பொருள். காயத்ரீயின் சுருக்கமான அர்த்தமானது, "எங்களுடைய புத்தியைப் பிரேரணைசெய்து நடத்துகின்ற பிரகாசமான அந்த ஞான சூர்யனின் திவ்யஜோதியைத் தியானிக்கிறோம்" என்பது. இதில் இரண்டு பன்மைகள் உபயோகித்திருப்பது கவனிக்கத்தக்கது. தியானிக்கிறவன் எல்லா ஜீவராசிகளுடைய நலத்தையும் பிரார்த்திக்கிறதாக அப்பன்மைகள் தெரியப்படுத்துகின்றன. "பிராம்மணன் எல்லா ஜீவராசிகளுக்கும் மித்திரன்" என்று மனுஸ்மிருதி கூறுகின்றது.

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்பது குறள்.

இம்மந்திரத்தை உச்சரிக்குமுன் மூன்றல்லது ஏழு வியாஹ்ருதிகளை உச்சரிக்கவேண்டும். இந்த வியாஹ்ருதிகள்

மந்த்ரத்தில் அடங்கியிருக்கின்ற உண்மைகளை அறிவிக்கும் திறவுகோல். மூன்று வியாஹ்ருதிகளாவன. பூ: புவ: ஸுவ: இம்மூன்று வ்யாஹ்ருதிகள் (1) மனிதனுடைய ஸ்தூல ஸூக்ஷ்ம காரண வியஷ்டி சரீரங்களையும், விராட், ஹிரண்யகர்ப்பம், அவ்யாகிருதம் என்ற மூன்று ஸமஷ்டி சரீரங்களையும் (2) ஜாக்கிரத் ஸ்வப்ன ஸுஷுப்தி யென்ற மூன்று அவஸ்தைகளையும் (3) பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் என்ற மூன்றுலோகங்களையும் குறிக்கின்றன.

ஸப்தவ்யாஹ்ருதிகளாவன: பூ: புவ: ஸுவ: மஹ: ஜன: தப: ஸத்யம் என்பவைகளாம். மேற்படி ஏழு வ்யாஹ்ருதிகள் மனிதனுடைய ஏழு அம்சங்களையும், ப்ரகிருதியின் ஏழு நிலைமைகளையும், ஏழுலோகங்களையும் குறிப்பிடுகின்றன. ஜபஞ்செய்யுங்காலத்தில் உபாஸகன் விராட்புருஷனிடம் ஒருமைப்பட்டு மூன்று லோகங்களுடன், அல்லது ஏழுலோகங்களுடன், தன்னுடைய மூன்று சரீரங்களை அல்லது ஏழு அம்சங்களை முறையே சாந்தமாகவும், நேர்மையாகவும் இருக்கும்படி செய்துகொண்டு தன் ஹ்ருதயத்தின் கண் இருக்கின்ற ஆத்மாவாகிய ஞான சூர்யனிடத்தில் நின்று எல்லா லோகங்களிலுமுள்ள ஜீவராசிகளுக்கு ஸந்துஷ்டியும் ஞானமும் சாந்தமும் உண்டாக வேண்டுமென்று சிதறுமல் ஒரே மனோ நிலையாயிருந்துகொண்டு தியானிக்க வேண்டும். இவ்விதம் பக்தியுடனே உண்மை தெரிந்து சூரியனை உபாஸித்தால் அவன் பிராம்மணனுவான். ப்ரஹ்ம தேஜஸும் சக்தியும் அவன் மூலமாய் உலக முழுவதும் பரவும். காயத்ரீயின் உபாஸனை முறையைப் பிருஹதாரண்யம், சாந்தோக்கியம், சூர்யோபநிஷத்துக்களினின்று அறிந்து கொள்க. கரன்யாஸ, அங்கன்யாஸ விதானங்களைக்.

குருவினிடமிருந்து நேரில் தெரிந்து கொள்க. காயத்ரீயைப் பற்றி ஸம்ஸ்கிருதத்தில் ஏராளமான புஸ்தகங்கள் இருக்கின்றன.

## காயத்ரீ தேவதை

காயத்ரீ என்ற சப்தம் ஸம்ஸ்கிருத பாஷையில் ஸ்திரீ லிங்கமாகிறபடியால், ஈஶ்வர ப்ரதிபாதகமான மந்திரமாக இருப்பினும், தேவியாக உபாஸிக்கப்படுகின்றது. காலையிற் சிவந்த வஸ்திரத்தையணிந்த காயத்ரீ தேவதையாக மூலாதாரத்தின்கண் லக்ஷ்யம்வைத்துத் தியானம் செய்யவேண்டும். மத்தியான்னத்தில் வெள்ளை வஸ்திரத்தை அணிந்த ஸாவித்ரீ தேவதையாகப் புருவமத்தியில் தியானம் செய்யவேண்டும். சாயங்காலத்தில் நீலவஸ்திரத்தை யணிந்த ஸரஸ்வதீ தேவியாக ஹ்ருதயத்திலே தியானம் புரியவேண்டும். காயத்ரீயை ஸ்திரீ தேவதையாக உபாஸனை புரிவதில் ஈஶ்வரனின் (ப்ரம்மத்தின்) அபின்னமான பராசக்தியாக உபாஸிக்கவேண்டும். கேனோபநிஷத்தில் பிரஸ்தாபித்துள்ள உமையே காயத்ரீ தேவதையாகும். இதுவே தேவீ காயத்ரீயென்றும், சுவேதாசுவதரோபநிஷத்திற் பிரஸ்தாபிக்கப்படுகிற தேவாத்ம சக்தியென்றும், கீதை ஏழாவது அத்தியாயம் 5-வது சுலோகத்தில் பிரஸ்தாபித்துள்ள பரப்பிரகிருதியென்றும் துணியப்படும்.

## காயத்ரீ தியானம்

காயத்ரீ உபாஸனை, ஆதியில் ஸ்தூல சூர்யனின் உபாஸனையாக இருந்தது என்னலாம். ஆனல் ஈசாவாஸ்யோபநிஷத்தில் மந்திரங்களைக் கவனிக்குமளவில், ஆதிகாலத்திற்

கூட ஸ்தூல ஸூர்யனின் உபாஸனையாகக் காயத்ரீ உபாஸனை நிகழ்ந்திருக்கமாட்டாதெனத் தெரியவரும். உலகத்தில் மகா ப்ரகாசமான வஸ்து ஸூர்யன். அந்தச் ஸூர்யனிடத்தில் அந்தர்யாமியாயுள்ள ஈச்வரனையே தியானிக்கவேண்டுமென்பது உபநிஷத்துக்களின் அபிப்பிராயமாம். சாந்தோக்கியோபநிஷத் 12, 13-பிரபாடகங்களைப் பார்த்தால் முன் பிரஸ்தாபித்த படியே அந்தர்யாமியான ஈச்வரனென்றே காயத்ரீயை உபாஸனை புரியவேண்டுமென்பது தெரியவரும். வெளிப் பிரபஞ்சத்தில் அதாவது அண்டத்திற் ஸூர்யனிடத்தில் அந்தர்யாமியான பரமாத்மா, பிண்டத்தில் உட்பிரபஞ்சமான சரீரத்தினிடத்தில் முக்யப் பிராணனான ஆத்மாவே காயத்ரீயாகத் தியானிக்கத்தக்கது. வெளியில் எல்லா வஸ்துக்களுக்கும் அதிஷ்டானமாகக் காயத்ரீ இருக்கின்றமைபோலச் சரீரத்தில் எல்லாப்பிராணன்களும் சக்திகளும் முக்யப்பிராணனை அதிஷ்டானமாகவுடையன. பிராணன்களுக்குள் உயர்வு தாழ்வு என்ற தர்க்கமேற்பட்டதனால் இந்திரியங்கள் முதலியவையெல்லாம் வெளிக்கிளம்ப, சரீரம் நிலைத்திருந்தது. முக்கியப் பிராணன் கிளம்பவே எல்லாம் நாசமடையும் நிலை வந்ததென்னும் வரலாறு பிரஹதாரண்யகோபநிஷத், பிரச்நோபநிஷத் முதலியவைகளில் அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது. காயத்ரீயைப் பற்றிய தியானங்களெல்லாம் ஸகுணப் பிரம்ம உபாஸனைகளாம். இவ்வுபாஸனைமூலமாய் முறையாக நிர்க்குண பரப்பிரஹ்மைக்கிய ஞானத்தை அடைந்து ஸத்யோமுக்தனாக விளங்கவேண்டும்.

## ஸ்வரபேதம்

ருக்வேதிகள், யஜுர்வேதிகள், ஸாமவேதிகள், எல்லோரும் ஒரே காயத்ரீயை உபாஸிக்கின்றார்கள். ஆனால்

அவைகளுள் ஸ்வரபேத மாத்திரம் உண்டு. ஸந்தியா அங்கங்கள் விஷயத்திலும் சில வேற்றுமைகளுள்ளன.

## ஜபித்தற்குரிய இடங்கள்

அக்கினிசாலை, தீர்த்தக்கரை, தேவாலயம், புண்ய தீர்த்தங்கள், பசுவின் கொட்டாரம், ஸித்த க்ஷேத்திரம், சூரியன், அக்கினி, ருத்திரன், தேவர் இவர்களின் ஸந்நிதானத்திலெ எதிர்முகமாகவிருந்து ஜபிக்கவேண்டும். அரசு, பில்வம், துளசி, வனபுஷ்பங்கள் இவை சூழ்ந்த இடத்திலும் ஜபஞ்செய்வது சிலாக்யம். வீட்டைக் காட்டிலும் மற்றவை யெல்லாம் விசேஷமே. சௌகரியப்படாவிட்டால் வீட்டிற் செய்யலாம். விஷ்ணு சந்நிதி அளவற்ற பலனைக்கொடுக்கும்.

## ஜபத்திற்குரிய ஆஸனங்கள்

தீர்ப்பை, மான்தோல், வஸ்திரம், புலித்தோல், கம்பளமாகிய ஆஸனத்திலிருந்து ஜபஞ் செய்யவேண்டும். யோகத்தை நம்புவோன் புலித்தோலையும், யதிகளும் யாகஞ் செய்தவர்களும் பிரம்மசாரிகளும் மான் தோலையும் உபயோகிக்கலாம். வஸ்திரம் ரோகத்தைப் போக்கும். கம்பளம் துக்கத்தை விலக்கும். குசாஸனத்திலாவது, குசத்திற்கு மேற்கொண்ட ஆஸனத்திலாவது, கிழக்குமுகமாகவாவது அல்லது சூரியனுக்கெதிர்முகமாகவாவது இருஸந்த்யைகளிலும் ஜபஞ் செய்யவேண்டும். காலை ஜபத்தை நின்றுகொண்டு சூரிய தர்சனமாகும் வரையிலும், மாலை ஜபத்தை உட்கார்ந்துகொண்டு நக்ஷத்திர தரிசனமாகும் வரையிலும் செய்யவேண்டும். மத்தியான்னத்திலும் உட்கார்ந்துகொண்டே ஜபத்தைச் செய்யவேண்டும்.

## ஜபிக்கும் முறை

காயத்ரீயைப் பாதம் பாதமாகப் பிரித்தே ஜபிக்க வேண்டும். ஒரேவிதமாக ஜபித்தால் பிரம்மஹத்தி தோஷம் அடையும். மந்த்ரத்தை நன்றாக உச்சரித்து ஒவ்வோர் அக்ஷரத்தையும் திருத்தமாக வாக்கினால் சொல்வது வாசிகம். இந்த அதமகாயத்ரீ ஜபமென்று சொல்லப்படும். மிகவும் மிருதுவாகக் கொஞ்சம் உதடுகள் அசையும்படியும் தன் செவிக்கு மட்டும் த்வனி கேட்கும்படியும் ஜபிப்பது உபாம்சு. இது மத்திம காயத்ரீ ஜபமென்று சொல்லப்படும். மந்த்ரத்தின் ஒவ்வோர் அக்ஷரத்தையும், ஒவ்வொரு பதத்தையும், மனத்தால் சிந்தித்துப் பூஜிப்பதே மானஸம். இது தான் உத்தம காயத்ரீஜப மென்று சொல்லப்படுகின்றது. மானஸமென்று சொல்லப்படுகின்ற உத்தமமான ஜபமே சிரேஷ்டமானது. இந்த விதியானது எல்லா மந்த்ரங்களுக்கும் ஸமானம். வாசிகம் ஒரு மடங்குப் பலனையும், உபாம்சு நூறு மடங்குப் பலனையும், மானஸம் ஆயிரமடங்குப் பலனையும் கொடுக்கின்றன. வாசிகமென்று சொல்லப்படுகிற அதம ஜபமானது, ஆபிசார கர்மங்களுக்கு ப்ரஶஸ்தமானது.

காலையில் மூக்குக்கு நேராகக் கை இருக்கவேண்டும். மத்தியான்னத்தில் மார்புக்கு நேராகக் கை இருக்கவேண்டும். ஸாயங்காலத்தில் நாபிக்கு நேராக இருக்கவேண்டும். இவ்விதமாக இருந்துகொண்டு ஜபம் செய்யவேண்டும். தொனியுடனும், கைகளை மூடிக்கொள்ளாமலும், சிரனை மூடிக்கொண்டும் ஜபத்தைச் செய்யவே கூடாது. ஜபகாலத்தில் நாபிக்குக் கீழ்ப்பட்ட அங்கங்களைத் தொடக்கூடாது. தொட்டால் இரு கைகளையும் அலம்பவேண்டும்; அல்லது வலது செவியைத் தொடவேண்டும்.

பிரதக்ஷிணம் நமஸ்காரம் தேவபூஜை ஹோமம் ஜபம் இவைகளைச் செய்யும்போதும், குரு தேவதை இவர்களைத் தரிசிக்கும்போதும், கண்டாவ்ருதமாக உத்தரீயத்தைத் தரித்துக் கொள்ளக்கூடாது. குரு, பகவத் பக்தன், பிராம்மணன், தேவாலயம், ஜலம், அரசு, சூரியன், அக்கினி, இவர்களுக்குப் பின்புறத்தைக் காட்டிக்கொண்டு ஜபஞ் செய்யக்கூடாது. ஈரவஸ்திரத்துடன் ஜபிக்கலாகாது. ஒரு கால் ஜபிக்கவேண்டியிருந்தால் ஈர வஸ்திரத்தைக் கட்டிக் கொண்டு ஜல மத்தியிலிருந்து ஜபிக்கலாமே யொழியக் கரை மேல் இருந்துகொண்டு ஜபிக்கக்கூடாது.

## ஜபத்திற்குரிய மாலைகள்

ஜபமாலை வைத்துக்கொண்டு ஜபஞ் செய்வது மெத்த சிலாக்யம். அது 108 அல்லது 54 அல்லது 27 மணிகள் கொண்டதாக இருக்கவேண்டும். 108 மணிகள் இருந்தால் உத்தமம்; 54 மணிகள் இருந்தால் மத்திமம்; 27 மணிகள் இருந்தால் அதமமாகும். புத்ரஜீவிமணி, சங்குமணி, பவழமணி, ஸ்படிகமணி, முத்துமணி, தாமரைமணி, பொன்மணி, ருத்திராக்ஷமாலை, தர்ப்பையின்முடி, துளசிக்கட்டையாற் செய்த மணி, வெள்ளிமணி, வேப்பங்கொட்டைமணி, இந்திராக்ஷமணி, இரத்தினமணி இவைகளால் ஜபஞ்செய்யலாம். இவைகளில் எது கிடைத்தாலும் சிலாக்யம். வெண்மையான கயிற்றில், மணிகளை ஒன்றன்மேலொன்று படாமற் கோத்துப் பிறகு ஒரு தனி மணியை அந்த மாலையின் முனையிற் சிகரம்போற் சேர்க்கவேண்டும். அதற்கு மேருவென்று பெயர். ஒவ்வொரு மணிக்கும் மத்தியில் முடி போடவேண்டும். கட்டைவிரலின் மத்தியில் மாலையை

வைத்துக்கொண்டு நடுவிரலின் நுனியால் தள்ளிக்கொண்டு ஜபஞ்செய்யவேண்டும். இடது கையால் மாலையைத்தொடக் கூடாது. ருத்திராக்ஷ மாலையால் ஜபஞ் செய்வதும் அதைத் தரிப்பதும் மகாபுண்யம். துளசிமணி ஜபத்திற்குச் சிலாக் யம்; தரிப்பது பக்த விஷயம்; வைதிகமல்ல.

## ரேகையால் எண்ணுதல்

கைவிரல்களின் ரேகைகளால் எண்ணிச் கொண்டு ஜபிக்கலாம். அதன் பலன் அபாரம். ஜபகாலத்தில் கைவிரல்களை நீட்டி மடக்கி எண்ணுவது கூடாது. அப்படி யெண்ணினால் அந்தப்பலன் அசுரர்களுக்கென்று சொல்லப் படுகிறது. காயத்ரீயை ஜபிக்கும்போது விரல்களின் பர்வங்க ளால் ஜபிப்பது மிகவும் உத்தமம். மறற மந்த்ரங்களுக்கு இந்த வியவஸ்தை சொல்லப்படாவிட்டாலும் இவ்விதம் செயவதே சிலாக்கியமானது.

பவித்ரவிரலின் நடுரேகை துவக்கி ஆள்காட்டிவிரலின் மூலம் வரையிலுள்ள 10 ரேகைகளிலும் எண்ணலாம். அல் லது பவித்ரவிரல் மூலம்துவக்கி, பாம்பு விரல் மூலம் வரை யிலுள்ள 10 ரேகைகளிலும் எண்ணலாம். நடுவிரல் மூல முதல் துவக்கி ஆள்காட்டி விரல் மூலம் வரையிலுள்ள 10 ரேகைகளிலும் எண்ணலாம். பவித்ர விரலின் மத்தியரேகை முதல் துவக்கிப் பவித்ர விரலின் மூலம் வரையில் எண்ணி னால் 12 எண்கள் ஆகின்றன. இவ்விதம் ஒன்பது தடவை எண்ணினால் 108 ஆகின்றன. இவ்விதம் செய்தால் சிலாக்ய மென்பது சிலர் மதம்.

ஜலத்தில் நின்றுகொண்டு ஜபம் செய்தால் உபஸ்தா னத்திற்காகக் கரையேற வேண்டியதில்லை. பிரதக்ஷிணமும்

செய்யவேண்டியதில்லை. எந்த ஜபத்திற்கும் மௌன விரதம் முக்கியமானது. ஜபத்தின் மத்தியில் குருவாவது சுரோத்தியர்களாவது வந்தால் அவர்களைப் பிரணமம், குசலப்பிரச்னம் முதலியவைகளால் உபசரித்துப் பின்பே முறைப்படி ஜபம் செய்யவேண்டும்.

காயத்ரீக்கு மூன்று பாதம் உண்டு. பாதமொன்றுக்கு எட்டக்ஷரம். ஜபகாலத்தில் வரேணியமென்றும், மற்றக் காலங்களில் வரேண்யமென்றும் அநுஸந்திக்கவேண்டும்.

'எந்த பிரம்மமானது ஜீவாத்மாவாக அனுப்பிரவேசித்து வாஸநாபலத்தாலே திடமாக பேதபுத்தியைக்கொண்ட நம்முடைய அந்தஃகரண விருத்திகளைப் பிரேரணை செய்யுமோ, வாக்கு மனங்களுக்கு விஷயமல்லாத சூர்யமண்டல மத்தியத்திலே தியானிக்கத்தக்க ஸகல ஜகதுத்பத்திஸ்திதி, லயஹேது பூதனை, ஸ்வயம்பிரகாசமான அந்தப் பரப்பிரம்மத்தினுடைய, எல்லோராலும் ஆஶ்ரயிக்கத்தக்க ஸ்வ ஸாக்ஷாத்காரத்தாலே, அவித்தையைப் போக்குவதான ஸ்வரூபத்தை ஸோஹமென்று அபேதாத்யவஸாயஞ் செய்து தியானிக்கக் கடவோம்' என்று வித்யாரண்யர் இதைவிளக்கி இருக்கின்றனர்.

"ஸோஹம் ஹம்ஸ:" "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களின் அர்த்தத்தையே காயத்ரீ மந்த்ரம் போதிக்கின்றதென்பது, அபித்தியாநத்தின் உட்கருத்தாம்.

# 27. வீர சைவம் அல்லது இலிங்க சைவம்

இலிங்க சைவம் என்னும் பதத்துக்கு லக்ஷ்யமான சிவ பெருமானை யடையும் முக்கிய சாதன சைவமென்று அர்த்தமாகும். இந்த இலிங்க சைவத்தை,விளக்கிக் காட்டி விஸ்தாரப்படுத்தியவர், சிவன், முருகன், ரிஷபராஜன், சாந்த லிங்கர், குமார தேவர், சிவப்பிரகாசர் முதலியவர்களாம். இதற்கு ஆதாரம் அநேக நூல்களுள. இச்சைவத்திற்கு முக்கிய ஆதார நூல் வீராகமமேயாம். இம்மதத்தார் முக்கியமாக, கர்னடக தேசமாகிய மைசூர்ப் பக்கங்களில் அபரிமிதமாக இருக்கின்றார்கள்.

## இலிங்கதாரணத்தின் கருத்து

சாதாரண சைவர்கள், இலிங்கத்தைப் பெட்டியிற் பத்திரப்படுத்தி வைத்து விட்டுப் பூஜைசெய்யும் ஸமயத்தில் மாத்திரம் திறந்து மனதை அதனிடஞ் செலுத்திப் பூஜை செய்கிறார்கள். இந்த இலிங்க சைவர்களோ, ஸதா இலிங்க வடிவ பரமேஶ்வரனைச் சரீரத்தில் தரித்து அதன் ஞாபகம் மனதினின்று நீங்காத வண்ணந் தாங்குகிறார்கள். இவ்விதமாக ஓர் இலிங்கத்தை மேலே வெள்ளி, தங்கம் இவைகளாற் சிறு பெட்டி செய்து அதறகுள் வைத்து மூடி இரகசியத்துடன் கழுத்தில் தரித்துக் கொள்ளுகிறார்கள். அஃது எதனைக்காட்டுகிறதென்றால், கடவுள் இரகசியமாக எங்கும் நிறைந்து இலிங்க வடிவமாக இருக்கின்றாரென்பதையும், அறியாமையுள்ள மனிதர்கட்குத் தோற்றாரென்பதையும் விளக்கிக் காட்டுகின்றது. கிறிஸ்தவர்கள்கூட ஏசுநாதர்

தமது ஞாபகத்துக்கு வந்து கொண்டிருக்கும்பொருட்டுச் சிலுவை யொன்றைக் கழுத்தில் தரித்திருக்கிறார்கள்.

நாம் பெரிய மனிதத் தன்மையில் இருக்க, இலிங்கத்தைப் பெட்டியுடன் எப்படிக் கழுத்திற் றரித்துக்கொள்வதென்ற அவமானமாயின்: கடையில் விற்கக் கூடிய சீனா தேசக் குல்லாய்களைவாங்கி வெட்கமின்றித் தலையில் தாங்குகிறோம். இன்னும் பார்யாள் ஏதாவது உத்தரவு செய்தால், எவ்வளவு தூரமாயிருந்தாலும், எங்குச் சென்றாயினும் பெரிய கனமான புடவைகளைத் தலையிலே தூக்கி வந்து கொடுத்து விடுகிறோம். பார்யாளின் கனத்த புடவைகளைத் தூக்குதல், குல்லாய்களைத் தூக்குதல் முதலிய கனம் இலிங்கத்தைத் தரித்தலில் இல்லை. அப்படி யிருந்தும் மேற் கூறிய சாமான்களைத் தூக்குவதில் வெட்கமில்லையாம்; இதில் வெட்கம் வந்து விட்டதாம். ஐயோ! இவ்வகைப் புத்திசாலித்தனமில்லாத பூர்ணைப் பிராந்தர்களைப்பற்றி என்ன கூறுவது!

ஆதியில், அநேக மஹான்கள் மேற் சொன்ன இலிங்க சைவத்தை முறைப்படி ஆசார்யர் மூலமாக, அந்தரங்க சிவ பக்தியுடன், வீராகமவிதி தவறாது அநுஷ்டித்து ஸத்யோதய முக்தியைப் பெற்றிருக்கிறார்கள்.

---

# 28. நவீன நாகரிகம்

## நவீன நாகரிக லதை

தொன்றுதொட்டு வர்ணாஸ்ரம தர்மத்திலும் கல்வியிலும் களஞ்சியமெனப் புகழ்பெற்று உயர்ந்திருந்த இந்தியா தற்காலம் க்ஷேமங் குறைந்து க்ஷாமம் நிறைந்து வருந்துகிறது. இதை யாராலும் மறுக்க முடியாது. இதற்கு முக்கியமான காரணம் நவீன நாகரிகமாகிய லதை கொஞ்சகாலமாக நம்முடைய புராதனத் தோட்டத்திலே தீவிரமாய்ப் படர்ந்து நாகரிகமாகிய நம் மதத்திற்கு அஸ்திவாரமான வர்ணாஸ்ரம விருக்ஷத்திலும் ஜீவனத்துக்கு முக்கிய ஆதாரமான செல்வ விருக்ஷத்திலும் படர்ந்து தீவிரமாய் நாசஞ் செய்து கொண்டு வருவதை அறியாதவர்கள் இல்லை. ஆகையால் இனிமேலாவது நாம தூக்கத்தினின்று விழித்துக்கொண்டு விருக்ஷங்களிற் படருங் கொடிகளையும், படர்ந்திருக்குங் கொடிகளையும் அழிக்க முயற்சி செய்ய வேண்டாமா? செய்யாமலிருப்பது விந்தையினும் விந்தையே யன்றோ? அந்தோ, பரிதாபம்! இனி நாம் தூங்கினல் கொடிகள் மிகுதியாய்ப் படரும் ரீதியில் விருக்ஷங்கள் பட்டுப் போய்விடும். பயிரிடப்பட்ட விருக்ஷங்களை வேலி முதலியவை கட்டிக் காப்பாற்ற முடியாத நாம் புதிய விருக்ஷங்களை வைத்துப் பயிரிடுவது சுலபமான காரியமென்று யாரும் ஒப்புக்கொள்ளார்.

## விழித்துக் கொள்க

படர்ந்திருக்குங் கொடிகளை நாசமாக்கும்போது விருக்ஷங்களின் கிளைகளுக்கும் சேதமில்லாமற் செய்யவேண்டுமென்று சொல்லிக்கொள்ளுகிறார்களே யன்றி முயற்சி

செய்பவர் சிலரே. சிலர் எல்லாம் கலியின் மகிமையென்று மட்டுஞ் சொல்லிக்கொண்டு எல்லாச் சாஸ்திரங்களையும் கரைகண்டவர்போல், தற்பெருமை பேசி, வருபவருடன் வீண்வாதஞ் செய்கிறார்கள். இந்திய நண்பர்களே! இனியாகி லும் விழித்துக் கொள்ளுங்கள்.

## ஸ்வதர்மம்

"நன்கு அனுஷ்டிக்கப் பட்டதான பிறருடைய தர்மத்தைக் காட்டிலும், குணமில்லாத (நன்கனுஷ்டிக்கப்படாத) தனது தர்மம் மேலானது. தனது தர்மத்திலேயே சாதல் நல்லது. பிறதர்மம் அபாயத்தை விளைவிப்பது"; (கீதை : 3-ஆம் அத்-35-ஆம் ச்லோ.)

"தனக்குரிய கர்மம் நலமில்லாததாயினும் நன்றாய் அனுஷ்டிக்கப்பட்ட பிறரது கர்மத்தினும் மிக நல்லது. ஸ்வபாவத்தால் அமைந்த கர்மத்தைச் செய்வபன் பாபத்தை அடையமாட்டான்" (கீதை 18 : 47.)

ஓதுவித்தலும், ஓதுவதும், வேள்வி செய்வித்தலும், வேள்வி செய்தலும், ஈதலும், ஏற்றலுமாகிற இந்த ஆறும் பிராம்மணனின் தொழில்களாம். இப்பொழுது ஸ்வல்ப காலமாய் இம்முறை அனுஷ்டிக்கப்படாமல் நவீன நாகரி கங்கள் அனுஷ்டிக்கப்படுகின்றன; அந்த நவீன நாகரிகக் கொடியினால் விளைந்த பலனை நாம் உபயோகிப்பதன் கஷ் டங்களை இங்கு உரைக்கின்றோம்.

நம்முடைய மதமாகிய கட்டடத்திற்கு அஸ்திவார மான வர்ணாஶ்ரம தர்மங்கள் குறைவடைவதற்கு இருப்புப் பாதைதான் முக்கியமான காரணம். இயந்திரங்களினின்று தயாரிக்கப்படும் அரிசியைச் சாப்பிடுவதால் 'பெரி பெரி' என்

னும் வியாதியும் இன்னும் அநேகம் பேரிடப்படாத வியாதிகளும் உண்டாகின்றனவென்று நம் நாட்டு வைத்ய சாஸ்திரிகளும் அந்ய நாட்டு வைத்திய சாஸ்திரிகளும் பாரபக்ஷமில்லாமற் சொல்லுகிறார்கள். இயந்திரங்களினாலும் அரைத்து ஓடும்படி செய்யும் எண்ணெய் வகைகளினாலும், பழுது பார்க்குஞ் சாமான்களினாலும், கண்ணுக்கு மட்டும் பகட்டாக உள்ளனவும் அவசிய மில்லாதனவுமாகிய செயற்கைப் பொருள்களின் இறக்குமதியாலும் நம் நாட்டுச் செல்வங்கள் விசேஷமாய் அயல் நாட்டுக்கு அனுப்பப்பட்டன. நம்முடைய செல்வ விருக்ஷத்தினின்று விளைந்தவைகளிற் பெரும்பாகம் போனது மன்றி இப்போது விருக்ஷங்களை மேலே காய்க்க விடாமலுங் கொடிகள் சூழ்ந்து கொண்டன. இனியாகிலும் இவற்றை விஷக்கொடிகளென்று உணர்வீர்களாக. இக்கொடியை அழிப்பதற்கு நமக்குக் கிடைத்திருக்கும் ஆயுதத்தைக் கொண்டு, ஏமாந்துபோகாது ஊக்கத்துடன் காரியஞ் செய்யின், எல்லாம் வல்ல இறைவன் நமது மனோரதத்தைப் பூர்த்தி செய்வானென்பது திண்ணம்.

---

# 29. எனக்குப் பிரியமுள்ள ஸாது யார்?

இந்தக் கேள்விக்குக் கண்ணபிரான் பாகவதத்திலே தக்க விடைதருகின்றார்:—

பிறர் படுகின்ற கஷ்டங்களைக் காணசகியாதவன், தான் அவர்களின் நிலையிலிருந்து அதனை நீக்க வழிதேடுவோன், எக்காலத்திலும் துவேஷங்கொள்ளாதவன் எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்வோன், அன்னியரையும், அன்னியவுயிர்களையும் ஒருவிதத்திலுந் துன்புறுத்தவேண்டுமென்ற உத்தேசமில்லாதவன், தனது பரமார்த்தத்தில் (உண்மையில்) நிலைத்த சக்தியோடு கூடியவன், பிறரிடத்தில் விளங்குகின்ற நற்குணங்களை மறந்து அவரிடத்துத் துர்க்குணங் கற்பித்து அதன் பிரதிபலனைத் தான் மனத்துன்பம் பெறுதலாகிய அசூயையில்லாதவன், இன்பதுன்பங்களில் வேற்றுமையற்றுக் காண்பவன், தனது சக்திக்குத் தகாதவண்ணம் மற்றவர்களுக்கு நன்மை செய்து பொழுது போக்குபவன், ஆசைகளுக்கு அடிமையாகாதவன், மனத்தில் யாதொன்றிலும் ஆசையற்றவன், சுகபோகம் விரும்பும் புலன்கள் முழுதையும் அடக்கியாள்பவன், மனக்கனிவு (மிருதுவான ஹ்ருதயம்) உடையவன், பரிசுத்தமாயும் தெய்விகமாயுமுள்ள வழக்கவொழுக்கமுள்ளவன், கிடைத்ததைக் கொண்டு திருப்தியோடு அனுபவிப்பவன், தனது கடமையைச் செய்வதினின்று வழுவாதவன், என்னையே அடைக்கலம் புகுந்தவன், இடைவிடாது தத்துவ ஆராய்ச்சி செய்பவன், மனத்தின் சம நிலையினின்று தவறாதவன், சலியாத உறுதியும் ஆழங் காணமுடியாத ஹ்ருதயமுமுள்ள

வன், புதியன புதியனவாக வருகின்ற ஆபத்துக்களிலும் பொறுமையின் சிலாக்கிய பதவியைச் சிறிதும் நழுவவிடாது நிலைநிறுத்திக்கொண்டு செல்பவன், பசி தாகம் விசனம் தவறு பிறப்பு மறுபிறப்பு இவைகளைக் குறித்துப் பயங்கொள்ளாதவன், பிறர் வெகுமானத்தை விரும்பாதவன், பிறரை வெகுமதிப்பவன், நல்ல உபதேச மொழிகளைக்கொண்டு மற்றுள்ளவர்க்கு அறிவு உண்டாக்குஞ் சக்தியை உபயோகிப்பவன், அதிக ஆசை சூழ்ச்சி இவையறியாதவன், உலகில் பிறருடன் நல்ல ஹ்ருதயத்தோடு ஸஞ்சரிப்பவன், உண்மையான ஞானமார்க்கத்தில் நல்ல அப்பியாசஞ் செய்பவன் ஆகிய இவர்கள் எனக்கு மிகமிகப் பிரியமான ஸாதுக்கள்.

இதுதான் கண்ணபிரானது இன்பவாக்கு. கண்ணபிரான் நட்பு உங்களுக்கு வேண்டுமா? மேலோன் நட்பு எளிதிற் கிடைக்குமோ? "உன்னை நல்ல நண்பர்கள் விரும்புகிறார்கள்" என்று ருக்வேதம் பேசுகின்றது. நாம் நல்லவர்களாக நடந்து வந்தாலன்றி நல்லோர் நட்பு நமக்கு எவ்வாறு கிடைக்கும்? நல்லது எவர்க்கும் என்றும் நல்லதே. நல்லதற்கு அடையாளம் அங்கே சாந்த இன்பம் ஜ்வலிப்பதேயாகும்.

# 30. ஞானம்

கடவுளாலே சிருஷ்டிக்கப்பட்ட எல்லா ஜீவராசிகளிலும், மனுஷ்ய சரீரத்தோடு கூடிய ஜன்மம் உயர்ந்ததென்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். இத்தகைய அருமையான மோக்ஷஸாதன வடிவ, ஷட்கோசத்வ, அன்னமய சரீரத்தைத் தாங்கியும் இனிப் பிறவாத அகண்டமயமான மோக்ஷம்பெறுமல், வீணுகக் காலங்கழிப்பது, மனிதர்களாகப் பிறந்த நமக்கு அழகல்ல. ஆதலால் துக்கமில்லாத சுகஸ்வரூப முக்தியை அடைவதற்கு நேர்ஸாதனமாக இருப்பது எதுவென்றால், மஹான்கள், பெரிய பிரபல ஞானேபநிஷத்துக்கள் முதலியன அங்கீகாரஞ் செய்துள்ள ஞானமே. அஞ்ஞானத்தை நிவர்த்தித்து ஸ்வரூப ஞானத்தைப் பெறுவதற்கு முக்கிய சாதனமாயிருப்பது மனுஷ்யசரீர மாகையால், இது நன்றாய்த் திடமாயிருக்கும்போதே உண்மை ஞானத்தை அடைதல் அவசியமாகும்.

## கர்மம்

ஸாதாரணமான கர்மகாண்ட நூல்களில், லக்ஷக்கணக்கான திரவியஞ் செலவு செய்து அதிக நாள் தேக ஶ்ரமப்பட்டு, கோமேதம், ஹயமேதம், நரமேதம், இராஜஸூயம் முதலான யாகங்கள் செய்தால், இறந்துபோன பிறகு தேவலோகஞ் சென்று ஆங்கு நெடுநாளிருந்து அழகான ரம்பை போன்ற அநேக லக்ஷண ஸ்திரீகளுடன் போகங்களை அநுபவிக்கலாமென்று கூறப்பட்டிருக்கிறது. அவற்றைப் படித்தவுடன் பலர் தேவலோக விஷயபோகங்களுக்கு ஆசைப்பட்டு ஆடு, நார், பசு, குதிரைகள் முதலியவைகளைக் கொண்டு யாகம் செய்கிறார்கள். பெரிய வேதாந்த க்ரந்தங்க

ளில், பணச்செலவு, தேகஶ்ரமம் முதலியனவில்லாமல் சுல பமாகப் பிறப்பற்ற பரமயோக நிலையைப் பெற்று பிரம்மஸ்வ ரூபத்தை அடையலாமென்று கூறியிருக்கிறது. இவையி ரண்டில், முன் கூறிய யாகத்தாலுண்டாகக்கூடிய ஸ்வர்க்க லோகங் காணப்படாதது; இறந்துபோனபின் கிடைக்கக் கூடியது; அப்படிக் கிடைத்தபோதும் மறுபடியும் அழி யக் கூடியதாகும். பின்கூறிய ஞானப்பியாசத்தால் உண் டாகக்கூடிய மோக்ஷமானது இவ்வுலகத்திலேயே, இச்சரீர மிருக்கும்போதே நாம் நேரே கண் கண்டபடி பிரத்யக்ஷ மாகக் காண்பதேயாம். கண்காணுததாயும் இறந்தபின் கிடைப்பதாயும் இருக்கப்பட்டதை நம்பி, அவர்கள் வீணுக உழைக்கிறுர்கள். இது நேரே காணக்கூடியதாயிருந் தும், பிரவர்த்திக்காமலிருப்பது என்ன புத்திசாலித்தனமோ தெரியவில்லை!

## கர்மமும் ஞானமும்

இனி ஞானமென்பது என்ன பதார்த்தமென்று சிறிது ஆராய்வாம். பொதுவாக ஞானமென்பது அறிவென்றுகும். அஃது எத்தனையோ பிரிவுகளாகப் பிரிந்திருக்கின்றது. மோ க்ஷத்தையடைவதற்கு ஸாதனமாகவுள்ளது பிரம்மஞ்ஞான மேயாம். இத்தகைய அபாரமான ஆத்மஞானத்தை யடை வதற்குக் கீழ்ச்சாதனவகைகள் பல இருக்கின்றன. பிரம்ம ஞானத்தையடைய ஆரம்பித்தவொருவன் வெளி விஷயமான கர்மானுஷ்டானங்களே முடிவானவையென்று எண்ணுமல் அவற்றில் அதிகச் சிரத்தையின்றி இருக்க வேண்டும். ஏனெ னில் ஞானப்பியாசம் செய்யக் கூடியவர்கள் மனத்தை ஆசார் யர் கூறிய லக்ஷியத்தில் வைத்துக் கொண்டிருக்கும்போது,

கீழ்க்கடையான கருமத்தையே பிரதானமாக நினைத்து நடப்பார்களானல், அன்னவர்களுக்கு முன்னிருந்த ஞானமும் குன்றிவிடும். இதற்குப் பிரமாணமாக, ஸ்ரீக்ருஷ்ணபகவான், பகவத்கீதை ஆருவதத்தியாயத்தில் கூறுவது வருமாறு: 'ஹே அர்ச்சுனு, ஞானப்பியாசம் செய்ய ஆரம்பிப்பதற்குமுன் கர்மானுஷ்டானம் செய்வது நன்மைதான். ஞானமுயற்சியாரம்பித்தபின் கர்மானுஷ்டானம் ஞானத்திற்கு விரோத' மென்றறியக் கடவாய்.'

இதைத் தவிர, புத்தர் முதலிய ஞானிகளும், ஞானியாக வேண்டி அப்பியாசம் செய்ய முயலுபவர்கள், கர்மானுஷ்டான விக்ரஹாராதனஞ் செய்வார்களேயானல் மனம் அச்சமயத்து ஆத்மானுஸந்தானத்தில் நின்றும் நழுவிவிடும்; ஆதலால் ஞானப்பியாஸிகள் விக்கிரஹாராதனம் செய்யக்கூடாதென்று கூறிக்கொண்டு வந்தனர். தேவிகாலோத்திர கிரந்தத்தில் ஞானப்பியாஸிகள், சக்கிரம் இயற்றிப் பூஜித்தல், மூலிகை ஜாலம், மை, பிராணுயாமம், மந்திரஜபம் இவைகளைச் செய்யக்கூடாதென்று கூறப்பட்டிருக்கிறது. பின்னும் அந்நூலிலேயே புஷ்பம் பறித்துக் கடவுள் சிலையில்தான் இருக்கிறு ரென்ற பேத ஞானத்துடன் ஞானப்பியாஸி பூஜித்தல் கூடாதென்று கூறியிருக்கிறது. இவ்விதமான நிபந்தனைகள் அதிகமாக உபநிஷத்துக்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. மேற்படிக்குச் சென்ற ஒருவன் கீழ்ப்படிகளை அனுஷ்டிக்க நினைப்பானுனல் முன்னிருந்த நிலைமை நழுவிவிடுமென்பதனை நாம் கூறவா வேண்டும்? கவர்னர் வேலைக்குப் போய்விட்டுப் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேலைக்கு முயற்சி செய்தால், கவர்னர்வேலை போய்விடும்' என்பதைக் கேட்கவா வேண்டும்? ஞானியின் தன்மையை அடைய விரும்பு

பவர்கள் அனுஷ்டிக்கவேண்டிய கடமைக ளென்னவென்றால், ஆசார்யர்கள் தமக்கு எவ்வகை லக்ஷியார்த்தங்களை உபதேசித்தார்களோ அவற்றில் மனத்தை நாட்டி இடைவிடாது ஸதாகாலமும் அனுஸந்தானம் செய்து கொண்டு வரவேண்டும். எப்போதும் பரமவேதாந்தத்தில் நிலைக்கவேண்டும். ஞான விரோத கார்யம் எதுவானாலும் உடனே விலக்கி விடவேண்டும். யோகம், சர்யை, கிரியை இவைகளைத் தள்ளிவிடவேண்டும். பொதுவாக அந்தர்முக பாவனையைத் தவிரப் பகிர்முகமான எவ்விடங்களிலும் பராமுகமாகவே யிருக்கவேண்டும். தேசயாத்திரை, தீர்த்தயாத்திரை, ஸ்தல யாத்திரை செய்யக் கூடாது. மனசுக்கு ஆரம்பகாலத்தில் சிரமவேலை கொடுத்தால், ஆத்மாகார பாவனையில் செல்வதைவிட்டு, வெளிமுகமாகப் புறப்பட்டுவிடும்.

## பரப்பிரம்ம பூஜை

முன்னாள் வஸிஷ்டர் பல சிஷ்யர்களுடன் இருக்கும் போது, ஓர் நாள் இரவில் கைலாஸநாதராகிய சிவபிரான் தம் சிவகணங்களுடன் உமாஸமேத ரிஷபவாஹனரூடராக எழுந்தருளினார்; அப்போது வஸிஷ்டர் விதிப்படி வணங்கி ஸ்தோத்தரித்து நிற்க, சிவபிரான் வஸிஷ்டரை நோக்கி, 'உன் மனத்திலுள்ள சந்தேகங்களைப் போக்கவந்தோ மாகையால் சந்தேகங்களைக் கேள்' என்ன, வஸிஷ்டர் ஈசனை நோக்கி, 'ஹே ஈசா, தெய்வம் எது? அதன் பூஜை செய்வதெப்படி?" என்று கேட்டார். சிவபெருமான் கூறுகின்றார்:- "நீ கேட்டதெய்வமென்பது பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், கணேசன், முருகன் முதலிய உருவங்களல்ல; எங்கும் நிறைந்ததாயும், யாரும் காணக்கூடாததாயும், ஸ்வயம்ப்ர

காசமாயும், அவாங்மனோ கோசரமாயும் இராநின்ற பரப் பிரம்மமேயாம்; அத்தெய்வத்தைப் பூஜை செய்வது மிகுந்த கடினமாம்; அத்தெய்வத்தைப் பூஜியாமல் மற்றத் தெய்வங் களைப் பூஜிப்பது கையிலுள்ள கொட்டையை எறிந்துவிட்டுப் புறங்கையை நக்குவதொக்கும்''

ஆதலால், ஞானப்பியாஸிகள் மிகுந்த ஜாக்கிரதை யுடன், தமது ஞானத்தின் நிலைமைக்கு யாதொரு குறைவும் வாராமலும், மனத்தைப் பகிர்முக விஷயங்களில் விடாமலும், திடத்துடனே, ஆத்மானுஸந்தான அப்பியாஸத்தால் ஸதா அவ்விடத்திலேயே நின்று, அதிரகஸ்யாந்தரங்க ஞான நிலையில் அங்ஙனே இருக்கவேண்டும்.

# 31. மோக்ஷ விளக்கம்

## மோக்ஷ பேதங்கள்

உலகம், கர்மம், பக்தி, யோகம், ஞானம், நிஷ்டையிவைகளும் சாஸ்திரங்களும் எட்டக்கூடாததும், வேதவேதாந்த ஸம்மதமானதும், யாராலும் காணக்கூடாததும், ஸ்வயம்ப்ரகாசமானதும், ஸத்தாமாத்திரமானதுமாய் இராநின்றது மோக்ஷம். இது பெரியோர் கூறுவதும் உபநிஷத் பிரமாணமுமாம்.

சைவ வைஷ்ணவர்கள் முக்தியைப் பலவிதமாகக் கூறுகிறார்கள். அவைகளை ஈண்டுக் கூறுகிறோம். சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யமென நான்குவித முக்திகளென்றும், அவற்றில் சாலோகமென்பது வைகுண்ட கைலாசங்களில் போயிருத்தலென்றும், சாமீபமாவது சிவவிஷ்ணுக்களது பக்கத்திலிருத்தலென்றும், சாரூப்யமாவது சிவவிஷ்ணுக்களது ரூபம் தனக்கு வந்துவிடுவதென்றும், சாயுஜ்யமாவது சிவவிஷ்ணுக்களது பூர்ண சக்தியும் தனக்கே பலிதமாகிவிடுவதென்றும் கூறுகிறார்கள். இவற்றைத்தவிர வேறு மோக்ஷகதியில்லையென்றும் ஸ்தாபிக்கிறார்கள். மேற்கூறிய நான்குவித முக்திகளுக்கும் ஆதாரமாயிருப்பது கருமமேயாகும். இவை ஒன்றுக்கொன்று தாரதம்மியமும் பேதமும் உடையனவாயிருக்கின்றன. எங்கேயாவது மோக்ஷத்திலுங்கூட நான்கு வகைகள், அதிலும் பெரிது சிறிது உண்டென்பதை யாராவது ஒப்புக்கொள்வார்களா? இவ்வாறு நான்குவகை மோக்ஷங்கிடைப்பதற்கு மகாகஷ்டமான யோகம் வேண்டியதில்லை; ஞானப்பியாசம் வேண்டாம்; கர்மானுஷ்டானங்கள் மாத்திரம் போதுமென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

*திருவருள் படைத்தார்க ளெளிதலான் மற்றத்*
*தேவர்கள் யாவர்க்கு மரிதே"*

என்றும் புராணம் புகழ்ந்து பேசும் ஒரு பெருமைக் கிருப் பிடமானதும்,

"நடுக்கமுறு முனிவரெலாம் அமரரெலாம் பயந்தவிர நாகமீது
படுக்கைபுரி திருமாலும பங்கயத்தி னுறுமயனும் பகைமைதீர
அடுக்கியிடும்புவனமெலா மடுக்கழியா திருககமனத் தருள்வதாகித்
தடுக்கரிய தழலுருவத் தொருவரையா யிருவரையுந் தடுப்ப
[தாணை"

என்று கூறியுள்ளபடி, பிரம விஷ்ணுக்களுள் ஏற்பட்ட பகைமையை நீக்கச் சிவபெருமான் தாங்கிய * தழல்மலையை நடு நாயகமாகவுடையதுமாகிய திருவண்ணுமலையை அடைந்தார்.

இந்த மலையும் மலைசசாரலும் தவம்புரிவதற்குத் தகுதியான வசதியுடையவவைகளாகையினல் ஸ்வாமிகள் இங்கே தங்கிச் சிலகாலம் தவம்புரிவாராயினர். இந்த அரிய தலத்தின் பெருமையை உணர்ந்தே, பாவான் ரமண மகரிஷியவர்களும் இங்கேயே ஆச்ரமம் ஏற்படுத்திக் கொண்டனர் போலும்!

சிவபெருமானே மலையினுருவமாக விளங்குகிறபடியாலும் அடிவாரத்தில் அமைந்துள்ள ஆலய வாயிலில் ஒரு பால் கந்தரநுபூதியும் கந்தாலங்காரமும் பாடியருளிய அருணகிரிநாதர் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருப்பதனுலும் இங்கே செல்லும் பக்தர்களுக்குத் தெய்வ

* இக்காலத்தில் கன்மலையா யிருக்கிறது.

வுணர்ச்சி தானேயுண்டாகும். அவ்வுணர்ச்சி யுண்டானவளவில் அவ்வன்பர்களின் வாய் அவர்களை யறியமாலே ஹரா ஹரவென்று கூவும். கரங்கள் சிரசில் தாமே குவியும். கண்களினின்று ஆநந்தபாஷ்பம் மலையிலிருந்து அருவி பெருகுவதுபோற் பெருகும். கால்கள் அவர்களை யறியாமலே மலையை வலஞ்சூழும்.

இந்த மலையின் உச்சியில் சிலசமயம் கருமேகந் தவழும். அதுகண்ட புலவர் சிவபெருமான் தாருகாவனத்து யானையுரிபோர்த்த மேனியை நினைப்பர். அர்த்த சந்திரன் மலையினுச்சியிற் காண்பதைக் காணின், சிவபெருமான் சந்திரசேகரனென்பதை இக்காட்சி நமக்கு நினைப்பூட்டுகிறதென்று களிப்பர். இங்கே கார்த்திகை உற்சவம் மகா வைபவமாக வருஷந்தோறும் நடைபெறும். அக்காலத்தில் எல்லோரும் ஆச்சரியப்படத் தக்கபடி ஒரு பெரிய அகண்ட தீபம் எரியும். அக்காட்சி, சிவபெருமான் அழலுருவினன் என்பதை நினைப்பூட்டும்.

இத்தகைய தனிச் சிறப்பினையுடைய அருணையம்பதியிலே அமர்ந்து நிஷ்டையிலிருக்கையில், ஸ்வாமிகளை அவர்களுடைய பூர்வாச்ரம பந்துக்களும் சிநேகர்களும் வந்து தொந்தரவு செய்யத் தலைப்பட்டமையால் உறவினர் ஊராராகியோருடைய தொந்தரவுக்கஞ்சி ஸ்ரீராமபிரான் சித்ரகூடம் விட்டுப் பெயர்ந்ததுபோல், ஸ்வாமிகளும் அம்மலையைவிட்டுப் பெயர்ந்து சேலத்தைக் கடந்து சதுரகிரியெனப் பெயர்பெற்ற கொல்லிமலைச்சாரலுக்குச் செல்வதில் நாட்டமுடையவராய் நடந்தார்.

## பாதம் 4

## சேந்தமங்கலம் அடைதல்

ஸ்வாமிகள் வெகுவேகமாய் நடப்பர். காடு மலைகளையும் காற்றுமழை வெயிலையும் கவனியாமல் யந்திரம்போல் செல்வர். சரீரத்தை மறந்த நிலையினராதலின் உலகம் தம்மை நோக்கிப் பரிகசிப்பதும் தம்மைப் புகழ்ந்து துதிப்பதும் அவர் செவியிலே படா. பசியெடுத்து அதனுணர்ச்சி காண்பாராயின் ஸ்வாமிகள் தாம் கடந்து செல்லும் ஊரில் தெருவிலே கரதலபிக்ஷையேற்றுண்டு பசியாறுவர். தோப்புகளிலே காய்கனிகளை யேற்றுண்பர்; மலைவனங்களாயின் கண்ணுலே கண்ட காய்கனிகளைச் செடிகளிலிருந்து பறித்துண்பர். ஸ்வாமிகள் மேற்கொண்ட துறவு அவதூதமாதலின், ஸ்நான முதலிய நியமங்கள் அவர்கட்கில்லை. அவைகளைச் செய்யின் அஃது அவ்வாச்ரம தருமத்துக்குக் குறைவுமாகாது. ஆதலால் ஸ்வாமிகள் வழிநடையில் தம்மீது படியும் புழுதியுடன் செல்வர். அஃது இவன் யாரோ பைத்தியக்காரன் என்று உலகம் நினைக்க இடந்தரும். அப்படி நினைப்பவர் ஸ்வாமிகளைப் பரிகசிப்பதுண்டு. ஸ்வாமிகள்மீது சிலர் கல்லை யெறிவது முண்டு. ஸ்வாமிகள் கிராமத்தருகே செல்கிறகாலத்தில் ஜனங்கள் திரள்திரளாகப் பின் செல்வர். இந்த ஆச்ரமத்தின் உண்மையுணர்ந்தவர்கள், "ஆகா! இந்த ஆச்ரமம் உயரிய நிலையினது. இதனையேற்று வகிக்கும் இவர் மகாபுருஷர். இவரைத் தரிசிப்பவர் பாவங்களினின்றும் நீங்குவர். இவருக்கு உணவிட்டு உபசரிப்பவர் இகபரசுகங்களைப் பெறுவர்" என்று கருதி, ஸ்வாமிகளைத் தொடர்ந்து ஓடி அவர் விரும்புவன உதவி அவருடைய கருணைக்குப் பாத்திர

ராவார்கள். இவ்வாறு அச்சமயம் ஸ்வாமிகளுடைய கருணைக்குப் பாத்திரரான புண்யசீலர்கள் பலர் ஸ்வாமிகளுடைய பிரபாவங்களை எடுத்துப் பேசுவதை நாம் இன்றைக்கும் கேட்கலாம்.

ஸ்வாமிகள் இவ்வாறு வழிநடந்து சங்கற்பப்படி சேலமடைந்து அங்கே தெருத்தெருவா யலைந்து திரிந்து வருகையில், "இந்த வாலிபவயதில் நீர் வஸ்திரமின்றிச் செல்வதுகூடாது. இது சட்டவிரோதமான செய்கை" என்று கூறிப் போலீஸார் ஸ்வாமிகளைப் பிடித்துச் சிறைசெய்தார்கள். அப்பால் மாஜிஸ்டிரேட்டின் முன் விசாரணை நடந்தது. அக்காலத்தில் அவ்வூரிலே மேட்டுத்தெருவில் வசித்து வந்த கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்ற 'வக்கீலொருவர் மதகிரந்தங்களிலே கூறியுள்ள ஆச்ரமவிதிகளை யெடுத்துக் கூறி ஸ்வாமிகளை விடுவித்ததுமன்றித் தமது இல்லத்திற்கு அழைத்துச்சென்று சில நாட்கள் வரையிலே வைத்திருந்து ஸ்வாமிகளைப் பூசித்துவந்தார்.

அப்பொழுது ஸ்வாமிகள் அன்பர் பலருக்கு விபூதிப் பிரசாதமளித்து அநுக்ரஹம் செய்தார். அன்பர் பலர் ஸ்வாமிகளுக்கு அபிஷேக ஆராதனைகளைச் செய்து உபசரித்து மகிழ்ந்தார்கள். அப்பால் அங்கிருந்து ஸ்வாமிகள் சேந்தமங்கலம் போகப் புறப்பட்டுச் சென்றார்.

சேலத்திலிருந்து சேந்தமங்கலம் போகும் வழியில் பல விநோதங்களைக் காணலாம். "வழியில் ஓரிடத்தில் பொய்மான்கரடு என்ற ஒரு கரடு உண்டு. இந்தக் கரடு மிக்க விநோதமா யமைந்துள்ளது. இதில் இரண்டு பெரிய பாறைப் பிளவின் நடுவே தூர இருந்து பார்த்தால் மான்

போல் ஓர் உருவம் தெரிகிறது. அருகில் சென்று பார்த்தால் அது தெரிவதில்லை. இதனால் ஜனங்கள் இந்த இடந்தான் மாரீசன் ஸீதையின்முன் மானாக வந்த இடம் என்கிறார்கள். பாதைகள் வளைந்து வளைந்து போகும். அண்ணாந்து பார்த்தால் என்ன உயரமிது என்று வியக்கத்தக்க மேடும், மேட்டிலிருந்து குனிந்து பார்த்தால் ஆகா இது என்ன பயங்கரம் என்று மெய்ந்நடுக்கமுறத்தக்க பள்ளமும் ஆங்காங்கு வழிநெடுகக் காணப்படும். இதனைக் காண்பவர் உலக வாழ்வில் இப்படித்தான் உயர்வும் தாழ்வும், வியப்பும் அச்சமும் உண்டாகும் என்பதை இந்தப் பாதை நமக்குத் தெரிவிக்கின்றது என்று கருதுவார்கள். வளைந்து வளைந்து செல்லும் பாதையைப்பற்றி நினைக்கும் விவேகி, நீர்நிலையில் அகப்பட்ட பூச்சி எப்படி வளைந்து வளைந்து நீந்தி அதிலிருந்து தப்பி உய்ய வழிதேடுமோ அது போல், ஸம்ஸாரமென்கிற சாகரத்தில் வீழ்ந்தவன் எந்தவிதமான அவஸ்தையை யடைந்தேனும் அதிலிருந்து கரையேறவே பாடுபடவேண்டுமென்பதை இப்பாதை தெரிவிக்கின்றது என்று பேசுவான். பாதையின் வடபாரிசத்தில் ஆகாயம் வரையில் ஓங்கி உயர்ந்து பரந்துள்ள சதுரகிரியின் மகா உன்னதத் தோற்றம், எல்லாம் வல்ல இறைவனுடைய பூதபௌதிக சிருஷ்டியின் விநோதத்தை விளக்குவதாயிலகும். "இதன் தோற்றமே இவ்வாறிருக்கிறதே! பரதகண்டத்தின் வடக்கெல்லையாக அமைந்திலகும் இமயமலையின் தோற்றம் ஆஹா எத்துணை உன்னத நிலையினையுடையதாயிருக்கும்!" என்று கருதி, ஆங்குப் பூர்வத்தில் நடந்ததாகப் புராணங்கூறும் பார்வதி கல்யாண வைபவத்தைப்பற்றிச் சிந்திக்கும் அவாவினையும் விளைக்குமென்பது திண்ணம்.

அம்மலையில் ஆங்காங்கு அருவிகள் உச்சியிலிருந்து பெருகிக் கீழ்நோக்கி வரும். அவைகள் வெள்ளிய நிறமுடையனவாயிலகுமாதலால், பெரிய பெரிய பாம்புகள் வளைந்து வளைந்து ஓடிவருவதுபோல் காணப்படும். அல்லாமலும் அவைகள் முன்னம் பகீரதன் அழைக்கப் பெருகிய கங்கை இமயமலையிலிருந்து கீழ்நோக்கி வரும் தோற்றத்தையும் ஞாபகப்படுத்தும். நீலநிறமான அந்த மலையின்மேல் சில சமயம் மேக ஜாலங்கள் வெண்ணிறத்துடனும் கருநிறத்துடனும் தவழும். அப்பொழுது மாலைக்காலமாயிருந்தாலும் சரி, காலை வேளையாயிருந்தாலும்சரி, அப்போது அடிக்கும்வெயில் அந்த மலையைப் பொன்மலையாக்கிவிடுமாதலால் அந்தக் காட்சி ஜோதிமயமான சரீரம் தாங்கிய சிவபெருமான் கரியநிற யானையுரி போர்த்ததை ஞாபகப்படுத்தும். அம்மேகங்களில் கரியவைகளைக் கறுப்புயானைகளாகவும் வெண்மைநிறமுடையவைகளை வெள்ளை யானைகளாகவும் கவிகள் வர்ணித்து வியப்புறுவர்.

புதிதாக அப்பக்கம் செல்பவர் இக்காட்சியைக் காண்பரேல், "என்னே விநோதமிது! இந்நாட்டிலும் ஒரு பொன் மலையா? திரிபுர ஸம்ஹாரஞ் செய்யப்புகுந்த சிவபெருமான் இதனையா எடுத்து வில்லாகக் கொண்டனர்?" என்றெண்ணிச் சிவபெருமான் திரிபுர ஸம்ஹாரம் செய்த வரலாற்றினைச் சித்திரித்து மகிழ்வர்.

இரவில் இருட்டுவேளையானல் அருவிகள் வெள்ளியை உருக்கிவிட்டதுபோல் இலகும். இந்தக் காட்சி மனோகரமாயிருக்கும். மாலையில் ஆங்காங்கே கொத்துக் கொத்தாகப் பெரும் பரப்பில் முளைத்திருக்கும் மூங்கில்கள் காற்றில் ஒன்றோடொன்று உராய்வதால் நெருப்புப் பிடித்துக்கொண்டு

எரியும் காட்சி, பலவிடங்களில் கூட்டங் கூட்டமாகவும் ஆங்காங்குத் தனித்தனியாகவும் காணப்படும். அக்காட்சி பயங்கரமாயிருக்கும். இரவில் நிலவினால் மலை, வெள்ளிமலை யெனப்படும் கைலாசமலையாய்விடும். அப்பொழுது அக்காட்சி பரமாநந்தந் தரும். பக்திமானுடைய ஹிருதயம் கைலாசமலையையும் அதன்கண் கோயில்கொண்டுள்ள பார்வதி நாதராகிய சிவபெருமானையும் எண்ணும்; எண்ணியவளவில், சிவபெருமான் ஸநகாதி நால்வருக்கு ஞானோபதேசம் செய்ய யோகத்திலமர்ந்த காட்சியையும், அப்பொழுது அங்கேவந்து சிவபெருமானுடைய அந்த யோகநிலையைக் கலைக்க மன்மதன் ரதியுடன்வந்து புஷ்பபாணம் எய்ததையும், அவனைச் சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணால் எரித்துச் சாம்பராக்கியதையும், கணவன் இறந்தமைகண்டு துயருற்ற இரதிபுலம்பியதையும், அப்பால் சிவபெருமான் மன்மதனை எழுப்பித் தருவதாக வாக்களித்ததையும் எண்ணும்; பின்பு சிவபெருமான் விருப்பு வெறுப்பில்லாதவர் என்பதும், அந்தப் பரம்பொருளை மயக்குவதாக மன்மதன் முன்வந்தது பேதைமை யென்பதும், சிவபெருமான் ஸ்வதந்திர ரென்பதும், அவரே எல்லோரையும் ஆட்டிவைப்பவரென்பதும், அவரை எவராலும் அசைக்க முடியாதென்பதும், அவர் பக்திமான்களுக்கே கட்டுப்பட்டு அருள் புரிவரென்பதும் உணர்ந்து சிவாநந்தவாரிதி படிந்து உய்வர்.

இவையன்றி இம்மலையில் ஆங்காங்கே குகைகளிலும் பாறைகளிலும் மரத்தினடியிலும் அமர்ந்தும் நின்றும் கிடந்தும் தவம்புரியும் தபோதனர் பலர் திகழ்வர். விவேகிகள், அம்மலையை அசைவற்ற நிலையினராகிய தபோதனராகவும், அம்மலையிருந்து பெருகும் அருவிகளைத் தபோதனரிட

மிருந்து பெருகும் அன்பாகவும், அருவி பெருகிச் சென்று ஆறுகளுடன் கலப்பதைத் தபோதனரின் அன்பு பெருகிச் சிவமெனும் ஆநந்தவாரிதியிலே கலப்பதாகவும் வருணித்து மகிழ்வர்.

ஸ்வாமிகள் இப்படிப்பட்ட அதியற்புதமான காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டே நடந்து சேந்தமங்கலம் என்னும் ஊர்போய்ச் சேர்ந்து அங்கே தெருவில் தம்மிச்சை வழியே திரிந்து கரதலபிக்ஷை யேற்றுண்டார். அப்பொழுது ஸ்வாமிகளைத் தரிசிக்கும் பாக்யம் பெற்ற விவேக சீலர்கள்,

நித்திய இன்ப முத்தியை நத்தலும்
பந்தமா மென்று பகரும் பழமறை, ஆதலின்
ஒன்றையும் விரும்பா உயரிய நிலையே
வன்திறற் பிறவியை மாற்றும் மருந்தாம்

என்பதை எண்ணிப் பற்றற்ற நிலையினைப் பாலிக்கப் பரமனை வேண்டிக் கொண்டனர்.

# அத்தியாயம் 3

## பாதம் 1

### குகாலயம் புகுதல்

சேந்தமங்கலத்தை ஒரு பெரிய கிராமமென்றே சொல்ல வேண்டும். இங்கே சிறிய அக்ரஹாரமொன்றுண்டு. தன வந்தர்களிற் பெரும்பான்மையோர் வியாபாரிகள். அவர்களி லும் ஆரியவைசியர் பலர். முகமதியருட்பட பல ஜாதிக் குடிகள் இங்கு வசிக்கின்றனர். முகம்மதியருக்கும் ஹிந் துக்களுக்கும் இங்கே சச்சரவு அடிக்கடி உண்டாகும். அந் தப் போராட்டம் இக்காலத்தில் அதிகமாயில்லை. ஸ்வாமி கள் இவ்வூர் சென்ற அக்காலத்தில் முகம்மதியருக்கும் ஹிந் துக்களுக்கும் சச்சரவு இருந்து வந்தது. ஸ்வாமிகள் இவ் வூரில் உலாவுகையில் ஆஸ்திக சிரோமணியாகிய ஹிந்துக்கள் பலர், இவருக்கு ஏதேனும் தீங்கு நேரிடுமோ என்று அஞ்சி னர். இவ்வூர்ச் சிவாலயத்துக்கு முகம்மதியத் தெருவைக் கடந்துதான் செல்ல வேண்டும். ஸ்வாமிகள் அவ்வாறு செல்கையில் முகம்மதியர், "கோஷாக்கள் இருக்கிற தெரு வில் இவ்வாறு நிர்வாணமாய்ச் செல்கிறவன் யாவன்?" என்று சினங்கொண்டு ஸ்வாமிகளை மடக்கிப் பிடித்துக் கொண்டு அடித்தார்கள். அத்தெருவிற் கருகே தாஸிகளி ருக்கும் தெருவிருக்கிறது. அத்தெருவிலிருந்த தாஸிகள் சிலர், அச்சச்சரவின் அரவங்கேட்டவளவில் ஓடிச் சென்று முகம்மதியர்களைத் தடுத்து ஸ்வாமிகளைத் தங்கள் இல்லத் திற்குத் தூக்கிக் கொண்டுபோய் உட்கார வைத்து, "ஸ்வாமி, இனி அந்தத் தெருவழியே போகவேண்டாம். அங்கே

துஷ்டர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் அஞ்சாநெஞ்சம் படைத்தவர்கள்'' என்று கூறினர்.

ஸ்வாமிகள், "அவர்கள் என்னை எப்படி அடிப்பார்கள்? இந்தத் தேகத்தை அடிக்கிறார்கள். தேகியை அடிப்பதெப்படி? இப்படி அவர்கள் கொடிய செய்கை செய்வதால் பாபத்தை யடைகிறார்கள். ஆதலால், நாம் அஞ்சவேண்டியதில்லை. அவர்கள், நாம் பயந்து இங்கே ஒளிந்துகொண்டதாகக் கருதுவார்கள்'' என்று கூறித் தைரியமாய் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு வெளியே வந்து அத்தெரு வழியாகவே கோயிலுக்குச் சென்றார். தம்மைப் பரம்பொருளினிடம் ஒப்புவித்த பிரஹ்லாதனும், நாவுக்கரசரும் தங்களுக்குச் சம்பவித்த ஆபத்துக் கஞ்சினார்களோ? அஞ்சவில்லையல்லவா? இது காரணமாய் அவ்வூர் முகம்மதியர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் மனஸ்தாப மேற்பட்டது.

இப்படி யிருக்கையில் ஒருநாள் ஸ்வாமிகள் அவ்வூருக்கு வெளியே ஒரு பக்கத்திலிருந்த ஒரு பெரிய ஆலமரத்தினடியில் அமர்ந்திருந்தார். அக்காட்சியைக் கண்ட விவேகிகள், சிவபெருமான் கல்லால விருட்சத்தினடியில் பரமயோகியாய் எழுந்தருளியதை நினைத்து,

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
　　றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
　　பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை
　　யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
　　நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்"

என்று பாடி மகிழ்ந்தனர்.

ஸ்வாமிகள் இவ்வாறு அமர்ந்திருக்கையில் துஷ்டர்கள் சிலர் ஸ்வாமிகள்மேல் கல்லைவிட்டெறிந்து ஸ்வாமிகளைப் பல வழியிலும் தொந்தரவு செய்தனர். அப்படி அவர்கள் எறிந்த கல்லொன்று ஸ்வாமிகளின் தொண்டையிலே பட்டுக் காயமுண்டாக்கியது. ஸ்வாமிகள் வருந்தினர். பின்பு அத்துஷ்டர்கள், ஹிந்துக்களுக்கும் அவர்களுக்கும் உண்டான கடுமையான சண்டையிலடிபட்டுத் தொண்டை யடைப்புண்டிறந்தனர்.

இவ்வளவு இடர்களுண்டான பின்பும் ஸ்வாமிகள் அவ்வூரைவிட்டுப் பெயர்ந்தாரில்லை. அவ்வூரிலேயே தைரிய மாய் உலாவிவந்தார். "நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்", "அஞ்சுவதியாதொன்றுமில்லை அஞ்ச வருவது மில்லை" என்று திருவாய் மலர்ந்த நாவுக்கரசர் கொண்ட உறுதி நம் ஸ்வாமிகளின் உள்ளத்தில் இலகியதுபோலும்!

இவ்வாறு உறுதிகொண்ட ஸ்வாமிகள் அவ்வூர் அக்ர ஹாரத்துக்குச் சென்றார். அங்கொருவரைக் கண்டு, "இதோ இந்த ஹோட்டலில் கொஞ்சம் இட்டலி வாங்கித்தாரும்; பசிக்கிறது" என அவர் இதோ என்று கூறி ஸ்வாமிகளை ஹோட்டலுக்கு அழைத்துப்போய், இரண்டணுவுக்கு இட்டலி தரும்படி ஹோட்டல்காரனுக்குச் சொல்ல, அவன் அவ்வாறே இரண்டணு இட்டலி அதாவது எட்டு இட்டலி தந்தான். ஸ்வாமிகள் இவைகளைப் புசித்தபின் இன்னும் வேண்டுமெனக் கேட்க, அப்படியே அளிக்கப்பட்டது. அதனை உண்டபின் ஸ்வாமிகள் இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும் என்று நாலைந்துமுறை கேட்டு ஹோட்டலி லிருந்த இட்டலிகளையெல்லாம் உண்டு பின்னும் வேண்டு மென்றார். ஹோட்டலில் இட்டலி இல்லாமற்போகவே,

அழைத்துச் சென்றவர் ஆச்சரியமடைந்து இனி என்செய்வதென்று விழித்ததுமல்லாமல் வெட்கமுற்றனர்.

ஸ்வாமிகள் இந்தத் திருவிளையாடலை அங்கே செய்த பின் அங்கிருந்து திரும்பினர். ஸ்வாமிகளுடன் பலபேர் தொடர்ந்து இந்த அதிசயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டே சென்றனர். இச்சமயம் ஸ்வாமிகளின் மகிமையுணர்ந்த அவ்வூர் வைத்தியர் ராமசாமி பிள்ளை யென்பவர் ஸ்வாமிகளைத் தம் வீட்டிற்கு அழைத்துச்சென்று அவருக்கு அன்னமிட்டுச் சில நாட்கள் ஆதரித்து வந்தார். அப்போது ஸ்வாமிகளுடைய மகிமையைப் பலரறிந்து ஸ்வாமிகளை அணுகி அவரிடம் உபதேசம் பெற முயன்றனர். ஸ்வாமிகள் சிலருக்குப் பஞ்சாக்ஷர உபதேசம் செய்தனர். பலருக்கு,

"கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே" (திருமந்திரம்)

என்று விபூதியின் பெருமையைக் கூறி விபூதி யளித்தனர்.

இப்படி யிருக்கையில் வரவரக் கூட்டம் பலத்தது. ஸ்வாமிகள் அங்கே தங்க மனமில்லாமல் அவ்வூருக்கு வடக்கே இரண்டுகல் தூரத்துக்கப்பாலுள்ள கொல்லிமலைக்குச் சென்று அங்கே மனம்போனபடி உலாவலாயினர்.

சேந்தமங்கலத்திற்குக் கிழக்கே ஓர் ஏரியுண்டு. அதன் நடுவே ஒருகாடு இருக்கிறது. இந்தக்காட்டிலே ஒருகுகையுண்டு. அதில் அடிக்கடி ஸந்யாஸிகள் வந்து தங்குவார்கள். அதனாலே இக்காட்டிற்கு ஸந்யாசிக் காடு என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. அதற்கு நேர் தெற்கே இரண்டுகல் தூரத்தில்

## பரம முக்தி

இந்நான்குவித முக்தியைத்தவிரப் பரம முக்தியொன்றிருப்பதாகப் பிரபல சுருதிகளான உபநிஷத்துக்களும் மஹான்களும் கூறுகிறார்கள். அந்த முக்தி எவ்விடத்திலும் இருப்பதாகவும், ஜீவன் முக்தர்களுக்கு மாத்திரம் விரிவாகத் தெரியக் கூடியதாகவும், யாதொரு உபாதியுமில்லாததாயும் இருக்கின்றது. இம் முக்தியைக் கர்மம், பக்தி, யோகம் முதலிய சாதனங்களால் அடைய முடியாது. பிரம்மஞானமொன்றினால்மாத்திரம் பெறக்கூடியது இது. சுகர், வாமதேவர், வசிஷ்டர், ஜனகர், முதலிய முதன்மைகொண்ட மஹான்கள் முற்கூறிய பேதவடிவமான வைகுண்ட கைலாசலோகமுக்தியை வெறுத்துவிட்டுப் பரமுக்தியையடைந்திருப்பதாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஆதலால், நாமெல்லோரும் என்றும் மாறாததாயும் நாமரூபமற்றதாயும் அகண்டவடிவமாயும் சாசுவதமாயும் நிராகாரமாயும் இருக்கின்ற பரவடிவ முக்தியைப்பெறும்பொருட்டுப் பரஞானத்தின் அனுக்ரஹத்தாற் பற்றற்றுப் படிப்படியான படியிலேறிக் கடைசியில் அம்முக்தியை வியாபித்து இரண்டறக்கலந்து ஒன்றாகி ஒன்றேயென்ற நினைவுங்கெட்டு அதுவுமாறி, அப்புறமுமொன்றுந் தெரியாது அகண்டவாழ்வில் அவ்விடத்தே ஆழ்ந்து அமிழ்ந்திருப்போமாக!

---

# 32. ஆனந்தம்

## நாம் எண்ணும் ஆனந்தம்

சந்தோஷம், ஆனந்தமென்ற இரண்டு சொற்களும் ஒரு பொருளை உடையவைகளே. சாதாரணமாகச் சந்தோஷத்தின் மிகுதியையே ஆனந்தமென்கிறோம். சகலப் பிராணிகளும் துக்கம் துன்பம் இவற்றைத் தவிர்த்துச் சந்தோஷத்தையும் இன்பத்தையுமே விரும்பும் ஸ்வபாவமுடையன. ஆயினும் பூர்வ புண்ணியத்தால் ஆறறிவுடைய மக்களாய்ப் பிறந்தோரே துக்கத்தை ஒழித்து ஆனந்தத்தையடைய முயற்சி செய்வர். பெரும்பாலோர் உண்மையான ஆனந்தம் எதுவென்றும், அஃது எங்குளதென்றும் அறிய முயலாமல் இவ்வுலக போகங்களிலேயே ஆனந்தத்தை அனுபவிக்கிறார்கள். உலக போகங்களில் ஆனந்தம் இருப்பதாகவும் அதைத் தாங்கள் கஷ்டப்பட்டுத் தேடி அனுபவிப்பதாகவும் நம்புகிறார்கள். இது (நன்மையும் தீமையும், பாவமும் புண்ணியமும், சுகமுந் துக்கமும் கலந்த) மிச்ர உலகமாதலாலும் நாம் நமது (பாவமும் புண்ணியமும் கலந்த) மிச்ர கர்மத்தை அனுபவித்து ஒழிக்கவே இங்கு ஜனனமெடுத்தோமாதலாலும் சுக துக்கம் இரண்டையும் கலந்தே அனுபவிக்கிறோம். இவ்வுலகில்' உள்ளவற்றாலேயே நமக்குத் துக்கங்கள் உண்டாகின்றன; அவற்றாலேயே துன்பம் அனுபவிக்கிறோமென்று கருதுகிறோம். அதுபோலவே நாம் அனுபவிக்கும் சுகமும் ஆனந்தமும் இவ்வுலகிலுள்ள வஸ்துக்களாலேயே நமக்குக் கிடைக்கின்றனவென்று கருதுகிறோம்.

## உலகவஸ்துக்களில் ஆனந்தம் உண்டா?

சுகம் அல்லது ஆனந்தமென்பது இவ்வுலக வஸ்துக்களில் இருக்கின்றதாவென்று சிந்தித்துப் பார்ப்போம். நாம் எந்த வஸ்துவில் இச்சை வைக்கிறோமோ அந்த வஸ்துவால்தான் துக்கத்தையும் ஸந்தோஷத்தையும் அனுபவிக்கிறோம். இச்சைவைக்காத வஸ்துவால் நமக்குத் துக்கமும் உண்டாவதில்லை; சுகமும் உண்டாவதில்லை.

## இச்சையால் ஆனந்தம்

ஒருவன் கணையாழியை அணிந்துகொள்ள இச்சிக்கிறான். உடனே அதை அடையப் பிரயாசைப்படுகிறான். அது கிடைத்தவுடனே சந்தோஷமடைந்து அதை அணிந்துகொண்டு பூர்ணத் திருப்தியாகிய ஆனந்தமடைகிறான். அக் கணையாழி, மூளியாகியோ தேய்ந்தோ அதற்கு ஏதாவது குறைவாவது இடையூறாவது நேர்ந்துவிட்டால் அதைச் சரிப்படுத்தும்வரையில் துன்பத்தை அனுபவிக்கிறான். அஃது அடியோடு கை சோர்ந்துவிடுமேனும் களவுபோய்விடுமேனும் அவனுக்கு உண்டாகுந் துயரம் அதிகமே. அத்துயரம் அவன் அந்த வஸ்துவின் மேல் வைத்த வாஞ்சையின் அளவாயிருக்கும்; அதாவது அதன்மேல் எவ்வளவு அதிகமாய் வாஞ்சை வைத்திருந்தானோ அவ்வளவு அதிகமாக இருக்கும் அவன் துயரம். அவன் அந்த வஸ்துவின் மேல் இச்சைவைக்காமலிருந்தானோ, அதைக் கண்டபோது சந்தோஷமும் உண்டாகாது; அது தற்செயலாய்த் தன்வசம் இருந்து பிறகு காணாமற்போனாலும் எக்கதியானாலும் எள்ளளவு விசனமும் உண்டாகாது. ஒரு பொருளில் ஒருவன் இச்சை வைக்கிறான். அது

கிடைத்து அதை அனுபவிக்கும் போதுண்டாகும் ஆனந்தம் அப்பொருளி டத்தினிலிருந்து உண்டானதென்று கருதுகிறான். இவ்வாறு ஆனந்தமுடையதென்று அவன் நம்பும் அப்பொருளை இச்சிக்கத்தொடங்கிய காலத்திலிருந்து அதனால் என்ன அனுபவிக்கிறானென்று கவனிப்போம். இச்சையுண்டானதே, அப்பொருளை எப்படி யடைவதென்ற சிந்தனையும் கவலையும் உண்டாகின்றன. சிந்திக்கும்போது அதை அடைவதற்கு வேண்டிய பொருள் முதலிய உபகரணங்களைச் சம்பாதிக்கத் தன்னால் முடியாதென்று கண்டால் விசனமும் ஏக்கமும் அடைகிறான். அதுகைக்கெட்டாததென்று தெரிந்தாலோ அதனால் அடையும் ஆனந்தம் தீராத் துயரமாகவே முடியும். அப்படிக்கின்றி அதை அடைவதற்குவேண்டிய உபகரணங்களைச் சம்பாதிக்கத் தன்னாற் கூடுமென்று கண்டாலோ அவற்றைச் சம்பாதிக்கக் கவலையும் கஷ்டமும் மேற்கொள்கிறான். அம்முயற்சியும் நீதியான வழியில் இல்லாமல் அநீதி வழியில் இருந்தாலோ, பாபமும் ராஜ தண்டனையும் அடையவேண்டும். அப்படிக்கின்றி நியாயமான வழியிலேயே அம்முயற்சியைச் செய்த பின்னும், அதை அடைவோமென்ற துணிவும் இல்லை. ஏனெனில் இடையில் அதற்கு யாவற்றிலும் நம்மைவிட அதிக பலமுடைய வேறொருவன் போட்டியாய் வந்து விடலாகும்; அல்லது இடையில் அப்பொருளுக்கே ஏதாவது குற்றமோ அழிவோ நேரிட்டுவிடலாகும். அப்போது அதற்காகப்பட்ட பெருங்கஷ்டமும்செலவிட்ட பொருளும் வீணாகித் தீராத்துயரமே பலனாக முடியும்.

இவ்வளவு வியாகுலத்தையுங் கவலையையுங் கஷ்டத்தையும் அனுபவித்துக்கொண்டு, அப்பொருளை அடைந்தால் கொஞ்சம் ஸந்தோஷமடைகிறான். ஆயினும் ஸந்தேகமும்

கவலையும் பின்னும் விட்டவையல்ல. ஏனெனில் கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை யென்பதுபோல் அதை அனுபவிப்பதற்குள், எந்த இடையூருவது நேர்ந்து தான் அதை அனுபவிக்க முடியாதபடி நேரிட்டுவிடக்கூடும். உலகில் இதற்கு அத்தாக்ஷியாக எத்தனையோ ஸம்பவங்களைக் காண்கிறோம்.

ஒருவன் மிக்க ஆவலோடு கடையிலிருந்து ஒருபொருளை வாங்கி வீட்டிற்குக்கொண்டு போய் புஜிக்க வெண்ணிச் செல்கிறான். வழியில் அதைப் பருந்து அடித்துக்கொண்டு போகிறது. அல்லது அது கை தவறிக் கீழே விழுந்து உண்ணத் தகாததாய்ப் போகிறது.

ஒருவன் ஒரு கன்னிகையின்மேல் மிக்க காதல் கொண்டு எவ்வளவோ பிரயாசையின்பேரில் அவளுடைய பெற்றோரின் சம்மதியைப்பெற்று மிக்க பணச்செலவுசெய்து அவளை மணஞ்செய்துகொள்கிறான். அவன் அவளைச் சேர்வதற்குமுன்பே இருவரில் ஒருவர்க்கு மரணம் நேர்கிறது.

## போலி ஆனந்தம்

இத்தனை கண்டங்களுக்கும் தப்பி ஒரு பொருளை அனுபவிக்கும்போது அதனால் ஆனந்தம் அனுபவிப்பதாய்க் கருதிக்கொள்கிறான். இங்கிருந்துதான், அந்த ஆனந்தத்தின் பிறப்பையும் உண்மை நிலைமையையும் ஆழ்ந்து கவனிப்பது அவசியமாகும். ஆழ்ந்து கவனித்தால் இச்சித்த வஸ்துவை அடைவதிற்பட்ட கவலையும் கஷ்டங்களும் துன்பமும் ஆவலும் நீங்கியபிறகு உண்டாகும் மனோ திருப்தியையே ஆனந்தமென்று கருதுகிறோமென்பது நன்கு விளங்கும். ஆனந்தத்தை யுடையதாய் நாம் கருதும் அப்

பொருளை அடைந்து அனுபவிப்பதில் முன்பாகமெல்லாம்பல விதத் துன்பமேயென்பதும், பின்னும் அதை வேறொருவர் அபகரித்துக்கொள்ளாதபடி காப்பாற்றுவதிலும்,அதற்கு இடையூறு நேரிடில் வருந்துவதிலும் கவலையுங் கஷ்டமும் துயரமுமே இருக்கின்றனவென்பதும் நன்கு புலப்படுகின்றன. இடையில் மிக்க அற்பகாலம் அதனால் அடைவதாய்க் கருதும் ஆனந்தமானது நிலையானதாவென்று கவனித்துப் பிறகு அஃது அப்பொருளினிடத்தில் இருக்கிறதாவென்று ஆராய்வோம்.எத்தகைய வஸ்துவின்மேலிருக்கும் இச்சையும் வரவரக் குறைவது சுபாவம். ஆகையால் அதனிடத்துள்ளதாய் நாம் கருதும் ஆனந்தமும் வரவரக் குறைந்து முடிவில் வெறுப்பாகவும் மாறிவிடுகிறது; அல்லது இடையில் வேறொரு வஸ்துவின்மேல் அதினும் அதிக இச்சையுண்டாயின், முன்னையதன் ஆனந்தங் குறைந்து அடியோடு மறந்துவிடவும்படுகிறது. இக்காரணங்களால் அற்பகாலம்தோன்றும் அந்தப் போலியானந்தமும் நிலையானதல்லவென்பது நிச்சயம்.

## ஆனந்தம் எங்கிருந்து உண்டாயிற்று

இனி ஆனந்தம் அந்தப்பொருளிலிருந்தா உண்டாயிற்றென்று பார்ப்போம். ஒரு பொருளில் ஆனந்தமிருப்பது உண்மையாயின், அந்த ஆனந்தம் எப்போதும் யாவருக்,குமே தோன்றவேண்டும். வெல்லத்தில் இனிப்பும், எலுமிச்சம்பழத்தில் புளிப்பும் இருக்கின்றன. யார் எப்போது அவற்றை உண்டாலும் அக்குணங்கள் அவற்றிலிருக்கவே இருக்கின்றன. இங்கே, ஒரு பொருளில் ஒருவனுக்கு ஆனந்தந் தோன்றுகிறது. அதே பொருளில் வேறொருவனுக்கு வெறுப்புத் தோன்றுகிறது. இன்னும் ஒருவனுக்கோ ஒரு

காலத்தில் ஆனந்தமாய்த் தோன்றுவது வேறொரு காலத்தில், அடுத்த நிமிஷமேகூட, வெறுப்பாய்த் தோன்றுகிறது.

திருஷ்டாந்தமாய், ஒரு ஸ்திரீயினிடம் ஆனந்தமிருப்பதாய்த் தோன்றுகிறது. அதே ஸ்திரீயினிடம் இன்னொருவனுக்கு அது தோன்றுவதில்லை. மனைவியிடத்திற் சுகமிருப்பதாய்க் கருதுகிறவன் புத்திரியிடம் அல்லது சகோதரியிடம் அப்படிக் கருதி இச்சிப்பதில்லை. ஒரு வேளையில் மனைவியிடம் ஆனந்தங் காண்கிறவன் வியாதியுற்றபோதும் வேறு சில காலங்களிலும் அவளிடமே வெறுப்பைக் காண்கிறான். இக்காரணங்களாலெல்லாம் அவன் அனுபவிக்கும் அந்த அற்பவானந்தமும், அவன் கருதிய பொருளில் இருந்து உண்டானதல்லவென்றும், அதில் ஆனந்தமில்லையென்றும் நன்கு விளங்குகிறது.

அப்படியாயின் ஆனந்தமென்பது எங்கிருக்கிறதென்றால்:—நாம் இச்சை வைக்கிற பொருளில் மட்டுமே ஆனந்தம் இருப்பதாய் அனுபவிக்கிறோமே யன்றி இச்சிக்காத பொருளில் அதைக் காண்பதில்லையென்று முன்னமே கூறியிருக்கிறோம். ஆகையால், நாம் கொள்ளும் பிரியத்துக்கும் ஆனந்தத்திற்கும் சம்பந்தம் இருக்கிறதேயன்றி நாம் வாஞ்சை கொள்ளும் வஸ்துவிற்கும் ஆனந்தத்திற்கும் ஒரு சம்பந்தமுமில்லையென்று நன்றாய் விளங்குகிறது. ஆகையால் நாம் உண்மையில் எல்லாவிதத்திலும், எதன்மேல் மிக்க வாஞ்சை வைத்திருக்கிறோமோ, எதன்மேல் எப்போதுங் குறையாததுஞ் சலிக்காததுமான அழியாத வாஞ்சை வைத்திருக்கிறோமோ அதிலேதான் உண்மையானதுந் துக்கக் கலப்பிலாததுந் தெவிட்டாததுமான பூர்ணானந்தம் இருக்கவேண்டும்; அதனிடத்திலேதான் அது வெளியாகவும் வேண்டும்.

## நமக்குப் பிரியமான வஸ்து எது?

இப்போது நாம் எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் எதன்மேல் அதிக வாஞ்சை உடைவர்களாயிருக்கிறோம்? எதன்மேல் அதைக் காட்டிலும் அதிக வாஞ்சையை வைப்பதற்கு ஏதுவில்லை? அந்த வஸ்து எதுவென்று பார்ப்போம். உலகபோகங்களில் ஒருவன் ஒன்றை இச்சிப்பது அந்த வஸ்துவிற்காகவே யல்ல. அதனினுந் தனக்குப் பிரியமான வேறொன்றிற்காகவே அதை இச்சிக்கிறான். இப்படி அதையும், அதனினும் பிரியமான வேறொன்றிற்காகவே இச்சிக்கிறான். உத்தரோத்தரம் இப்படியே படிப்படியாய்ச் சென்றால், கடைசியில் தன் ஆத்மாவிலேயே எல்லாவற்றிலும் அதிகப் பிரியமென்றும் அதற்காகவே மற்ற யாவற்றையும் இச்சிப்பதென்றும் ஐயமற விளங்கும்.

ஒருவனுக்கு உலகில் முன்னே தனத்தின்மேல் இச்சையுண்டாகிறது. ஏன்? அதைக் கண்டு ஆனந்தித்துக் கொண்டிருக்கவா? இல்லை. அதைக்கொண்டு தனக்குப் பிரியமான போகங்களை அனுபவிக்கவும், தார புத்திராதிகளைப் போஷிக்கவும், புண்ணியம் தேடிக்கொள்ளவுமே யன்றித் தனத்திற்காகவே அதை யிச்சிக்கவில்லை. இதனால், தனத்தின்மேலுள்ள பிரியத்தைவிட மனைவி மக்கள்மேல் அதிகப்பிரியம் வைத்திருக்கிறானென்று தெரிகிறது. அவர்களுக்கு ஆபத்துவரின் காப்பாற்றத் தனத்தை இழந்துவிடுகிறான். இப்படியே தன்தேகத்தைக் காப்பாற்ற மனைவி மக்களையும் அலட்சியஞ் செய்துவிடுகிறான். தன் தேகத்துக்குப் பலஹீனம் நேர்ந்தபோது அப்பலஹீனத்தை நீக்குவதற்காக மனைவி மக்களையும் விட்டு விட்டுத் தான் மட்டும் நல்ல ஆஹாரங்களைப் புசிக்கிறான். வீட்டிலே தீப்பற்றிக் கொள்ளல் முதலிய பெரிய ஆபத்துநேரும்போது

அவர்களை விட்டு விட்டுத் தான் தேகத்தைக் காப்பாற்றிக் கொள்ளுகிறான். தன் பாபங்கள் நீங்கித் தான் நற்கதி யடை யும்பொருட்டுப்புத்திரனைப் பெறவும், தனக்குபகாரஞ்செய்து போஷித்துத் தான் இல்லறம் நடத்த உதவியாயிருக்கவுமே மனைவியை விரும்புகிறான். தன் வயோதிகப் பருவத்தில் தன்னைக் காப்பாற்றுவதாலும், பிறகு பிதுர்க்கர்மஞ் செய்து தன் ஆன்மாவிற்கு உதவி செய்வதாலும் புத்திரன்மேல் விருப்பம் வைக்கிறான். இதனால் மற்றெல்லாரையும் விடத் தன் தேகத்தில் அதிகப் பிரியம் வைத்திருக்கிறானென்று விளங்குகிறது. தேகத்தைவிடக் கர்மேந்திரியங்களிற் பிரிய மதிகம். கையிற் சிலந்தி வந்து பிறகு கையே அடி யோடு போய்விடும்போலிருந்தால் அப்போது அதைக் காப் பாற்றிக் கொள்ளத் தேகத்தை அறுத்தாலும் துன்பத்தைச் சகித்துக் கொண்டிருக்கிறான். கர்மேந்திரியங்களைவிட ஞா னேந்திரியங்களில் அதிகப் பிரியம். எப்படியெனில், கண் பார்வையைப் போக்கடித்துக் கொள்வதைவிடக் கரத்தைப் போக்கடித்துக் கொள்வான். ஞானேந்திரியங்களைவிட அந் தக்கரணத்தில் அதிகப் பிரியம். எவ்வாறெனில், மனம் பைத்தியம் முதலியவற்றாற் கேடடையாமல் நிம்மதியாகவுஞ் சந்தோஷமாகவும் இருப்பதற்காக, சப்த ஸ்பரிச ரூபரச கந் தங்களை உணரும் ஞானேந்திரியங்களில் ஒன்றை வேண்டு மாயின் இழந்துவிட ஒப்புக்கொள்வான். ஆகையால் இதுகாறும், மற்ற யாவற்றிலும் அந்தக்கரணமாகிய மனத் தின் மேற்றான் அதிகப் பிரீதியுண்டென்று காண்கிறோம். ஆனால் தானாகிய ஆத்மாவை அறிய மனதையே யடியோடு கொன்றுவிடுகிறானாதலால், முடிவில் எவனுக்குந் தன் ஆத்மா விற்றான் அதிகப் பிரியமென்பது அனுபவமான உண்மை.

அதுவே முடிவானது. ஏனெனில் இதுவரையில் உத்த ரோத்தரமாய் ஒன்றிற்காக ஒன்றின்மேற் பிரியம் வைத் தது போல், ஆத்மாவின்மேற் பிரியம் வைக்கவில்லை. அதன் மேல் வைத்த பிரியம் அதற்காகவே. அஃது இயற்கையாகவே அமைந்துள்ளது. மற்றவஸ்துக்களின்மேல் வைத்த பிரியமோ மாறும், குறையும்; ஆத்மாவின்மேலுள்ள பிரியம் வேறெதற் காகவும் மாறாது; குறையாது. மற்ற வஸ்துக்களின்மேல் நாமே பார்த்துப் பிரியம் வைக்கிறோம். ஆத்மாவின்மேல் வைத்த பிரியம் நாமாகப் பார்த்து வைத்ததல்ல; அதை மாற் றவும் குறைக்கவும் நீக்கவும் ஒருவராலும் முடியாது.

## ஆத்மானந்தம்

ஆகையால் 'ஆனந்தம்' என்பது ஆத்மாவினிடத்திற்றான் இருக்கிறது; வேறெந்த உலக வஸ்துக்களிலும் இல்லை யென் பது ஸத்தியம். ஆத்மாவினால் ஆனந்தமுண்டாகிறதென் றும், அதை நாம் அநுபவிக்கிறோமென்றும் கருத லாகாது. அப்படியாயின் ஆனந்தத்தைத்தரும் ஆத்மாவொன்றும், அதை யநுபவிக்கும் "நாம்" என்ற ஆத்மாவொன்றும், ஆக இரண்டாத்மாக்கள் இருக்கவேண்டும். அப்படி யில்லை. இருப் பது நாமாகிய ஓர் ஆத்மாவே. ஆகையால் நம்மிடத்திலேயே ஆனந்த மிருக்கிறது. அக்கினியிடத்தில் உஷ்ணமும், ஜலத்தி னிடத்திற் குளிர்ச்சியும் எப்படி பிரிக்கக் கூடாதவிதமாய் அதனதன் ஸ்வரூபமாகவே இருக்கின்றனவோ, அப்படியே ஆத்மாவின் ஸ்வரூபமே ஆனந்தம். ஆகையால், நம் ஆனந் தத்தையே நாம் அன்னிய வஸ்துவிலிருந்து உண்டாவதாய்க் கருதி அநுபவிக்கிறோம்.

அப்படியும் மயங்கி நினைக்கக் கூடுமோவெனிற் கூடும். அதற்கொரு திருஷ்டாந்தமுண்டு: ஒரு கிணறுவெட்டப்

பூமியைத் தோண்டுகிறோம். பத்து முழத்திற்குக் கீழிருந்து சில எலும்புகள் அகப்படுகின்றன. அவை எத்தனையோ வருஷங்களாய் அங்குப் புதையுண்டு கிடக்கின்றன. அவற்றில் எள்ளளவு ஸத்தாவது கிடையாது. அப்படியிருந்தும் ஒரு நாய் அந்த எலும்பைக் கடித்து நாவினால் ருசிக்கிறது. ஏனெனில் அதைக் கடிக்கையில் அதன் எயிற்றிலிருந்து இரத்தம் வருகிறது. தன் வாயிலிருந்து வந்த இரத்தத்தையே நாய் அந்த எலும்பிலிருந்து வரும் ஸத்தென்று கருதி நக்குகிறது. அது போலவே, நாம் மாயையால் நம் நிஜவடிவை மறந்திருப்பதால் நாம் ஆனந்த ஸ்வரூபமென்பதை உணராது, அன்னிய வஸ்துக்களிலிருந்து ஆனந்தம் உண்டாவதாய்க் கருதுகிறோம். நாம் நமது நிஜவடிவை அறிந்தால் அப்போது உண்மையை உணர்வோம். அதாவது, நம்மை நாம் அறிந்தால் நமது ஸ்வரூபம் ஆனந்தமய மென்பது பிரத்யக்ஷானுபவமாய்த் தெரியும். ஆகையால் ஸத்திய மார்க்கத்தில் நடக்க விருப்பமுள்ள யாவரும் கொஞ்சம் கொஞ்சமாய் இவ்வநித்திய உலக போகங்களில் இச்சை வைப்பதையொழித்து, நமது நிஜானந்த ஸ்வரூபத்தைக் காண முயல வேண்டும். இன்றேல் நாம் ஆறறிவுடைய மனிதரென்று அழைக்கப் படுவதற்கு அருகராக மாட்டோம். நாம் மட்டும் முயற்சி செய்தாற் கருணாநிதியாகிய பரம்பொருள் நமக்கு அருள்புரிவ ரென்பது திண்ணம்.

---

# 33. கதம்ப மாலை

## பரமசிவனுடைய குணகணங்கள்

"சிறந்த ஒரு பண்டிதன் முயற்சி செய்தால் ஒரு சமயம் ஆகாசத்திலிருந்து அதிக நெருக்கமாய் விழும் ஜலத் திவலைகளை எண்ணி விடுவான்; வானத்தில் எங்கும் அதிகமாகப் பரவியிருக்கும் நக்ஷத்திரங்களையும் எண்ணிவிடுவான். நதிகளிலிருக்கும் சிறு மணல்களையும் எண்ணிவிடுவான். ஹே சிவ! ஹே பரமசிவ! மிகவும் வேகமாகக் கூட்டக் கூடிய சக்தி பொருந்திய நாவையுடைய பண்டிதக் கூட்டங்களால் கோடிக் கணக்கான ஆயுளைப் பெற்று உம்முடைய குண சமூகங்களை எவ்வளவு முயற்சி செய்தாலுங் கணக்கிட முடியாது" என்பது ஒரு ப்லோகத்தின் கருத்து.

பார்வதீபதியான ஸ்ரீ சந்திரசேகரருடைய குண கணங்கள் அனந்தம்; கணக்கிட முடியாதவை. ஆகையாலே பக்தர்கள் எவ்வளவு புத்திமான்களாக இருந்தபோதிலும், அப்பகவானுடைய குணங்கள் முழுவதையும் அறிய முடியாது. அவரவர்கள் புத்திக் கெட்டியவரையில்தான் அறிய முடியும். அவ்வளவே போதுமானதுதான். ஒரு பக்தன் பூர்ணமாக நம் குணங்களை அறிந்து பக்தி செய்யவில்லையென்று அவர் நினையார்; பக்தர்களும் இவ்விஷயத்தில் வருத்தப்பட நியாயமில்லை. அவரவர்கள் தத்தம் புத்திக்கு எட்டியவரையிற் பகவத் குணத்தை அறிந்து பக்தி செய்தாலும் பகவான் நிச்சயமாய் அநுக்கிரஹஞ் செய்வார். இவ்விஷயத்தில் சந்தேகப்பட வேண்டாம்.

## பெரியோரின் மனமகிழ்ச்சி

பெரியோர்களின் மனம் சந்தோஷமாக விளங்க நாம் என்ன செய்ய வேண்டும்! நாம் நம்முடைய சந்தியாவந்தனம் முதலிய கர்மானுஷ்டானங்களை விடாமற் செய்வதே அவர்களின் ஆத்மாவுக்குச் சந்தோஷகரமான காரியமாகும். அது தான் குருவுக்குத் திருப்தி ஹேது. குருநாதருக்குத் துக்கம் உண்டு பண்ணினோர் குருத்துரோகஞ் செய்தவராவர். ஸ்வதர்மத்தை விட்டவர்கள் தமது கர்மானுஷ்டானங்களை உதறினவர்களே. குருநாதர் எந்தச் சமயமும் பிரபஞ்சத்தின் ஸ்திதியை நினைத்து அதன் சுகத்தையே பகவானிடம் வேண்டுகிறார். அம்மஹான்களுக்கு நாம் சந்தோஷத்தை உண்டு பண்ண வேண்டாமா? குருநாதருக்குச் செய்த தோஷம் நீங்குவதற்காக ஸர்வ ஜனங்களும் ஸத்காரியஞ்செய்யவேண்டும்.

## சரீர போஷணை

மனமே! பெரும்பாலும் பக்ஷிகளுக்கும் நெருப்புக்கும் நாய்களுக்கும் சாப்பிடுவதற்கு விஷயமான ஶரீரத்துக்கு அதிகச் சுவையோடு கூடின அன்னஸாரங்களால் என்னென்ன விதமாகவோ ஊட்டிவளர்த்து அலங்கரிக்கின்றாயே! அதை எதற்காக வளர்க்கிறாய்? சரீரேந்திரியாதிகள் உபவாஸம் முதலியவற்றால மெலிந்து வாடி அடங்கியிருக்கும்படி செய்து தவம்புரிந்து ஸ்ரீ பரமேஶ்வரருடைய பிரஸாதத்திற்குப் பாத்ரமாகி அவரருளாற் சிரேயஸை அடையவேண்டியிருக்க, அடா மனமே! சரீரத்தை வளர்ப்பதே பரம புருஷார்த்தமாக நினைத்து அறுசுவை பொருந்திய அன்ன பானாதிகளால் திமிரெடுத்துக் கண்டபடியெல்லாம் திரியும்படி சொல்லிக் கொடுத்து வளர்க்கவேண்டுமென்று கருது

கின்றாயே! அஃது எங்ஙனம் முடிவில் பரிணமிக்கப் போகிற தென்று ஆலோசித்துப் பார்த்தாயா? உன்னைத் தொடர்ந்து என்றும் நிற்கப்போகின்றதா? நீ இக்கூட்டை விட்டு உனது யஜமானனாகிய ஜீவனோடு லோகாந்தரஞ் செல்லும்போது வரப்போகின்றதா? பின்னிட்டு ஒருவருங்கவனிக்கக் கதியற்ற தாயின் அது காக்கைக்கோ கழுகுக்கோ நாய்க்கோ நரிக்கோ இரையாகப்போகிறது; பின் ஸந்ததிகளிருந்து உத்தர க்ரியை செய்யப்படுமானால் அக்கினி பகவானுக்கே இரையாகப் போகிறது. இதை உணராமல் மிருந்த ருசிவாய்ந்த அன்னத் தைத் தேடிக்கொடுத்து வளர்க்கின்றாய். அது நன்றிமறவா மல் உனது நோக்கமறிந்து நடக்கப்போகிறதா? நீ தேடிக் கொடுத்ததைக் கண்டபடி தின்றுவிட்டு வியாதிகளுக்கு இட மாய் உனக்கும் ஸ்வாதீனப்படாமற் போய்விடுமென்பதை நீ நினைக்கவில்லை போலும்! இனி அவ்விதம் செய்யாதே.

## மனமே! ஏமாந்து போகாதே

மரம், புல், புழு ஆகிய இவைகளின் யோனிகளுடைய ஸமூஹத்திற் சுற்றித் திரிவதை எவ்வளவுதடவை அனு பவித்துவிட்டாய்! தெய்வாதீனத்தால் மனுஷ்ய ஜன்மத்தைப் பெற்றதனால் அக்கரையைத் தொட்டவன்போல் இருக்கின் றாய். இப்பிறவியிலாவது, ஏமாந்து விடாதே. அபூர்வ மாக, கிடைக்காதது கிடைத்துவிட்டதுபோல் எண் ணிக் கொண்டு, ஓமனமே! இவ்வூன உடலைப் பொத்திப் பொத்தி வளர்க்கின்றாயே. இப்பிறவி உனக்கு எத்தனை தட வையாய்க் கிடைத்ததோ? இப்பிறவி யொன்று மாத்திரமா திருப்பித் திருப்பி உனக்கு வந்து கொண்டிருக்கிறது? இல்லை யில்லை. ஆனால், மரம், மிருகம், புல், புழு முதலிய எண்ணி

றந்த தாழ்ந்த பிறவிகளை அனாதியான இச்சம்சாரத்தில் எவ்வளவோ தடவைகளாகச் சுற்றிச் சுற்றி அடைந்து வந்திருக்கின்றாய். அவ்வப்பொழுது அடையப்பட்ட அந்த அந்த சரீரத்தைச் சாஸ்வதமாகவே நினைத்துக்கொண்டு அதை வளர்ப்பதே பெரிய காரியமாகப் பாவித்துப் பாவத்துக்கும் அஞ்சாமல் தோன்றியபடி நடந்துபிற்பாடு தவிக்கிறாயே. இன்னும் மயங்கிக் கிடக்காதே. கிடைத்தற் கரிதான மனுஷ்ய ஜன்மம் ஏதோ ஒருபுண்ய விசேஷத்தால் தெய்வாதீனமாக உனக்குக் கிடைத்திருக்கின்றது. இதுதான் பிறவிக் கடலைக் கடந்து அக்கரையடையச் சிறந்ததோர் கருவியாம். இதனை நீ இப்போது அடைந்திருப்பதால் அக்கரையைப் பிடித்தவன் போலாய்விட்டாய். இதிலாவது ஏமாந்துவிடாதே. சொந்த ஸ்தானஞ் சேர ஸாதனம் தேடவந்தவிடத்தில் வம்பு பண்ணிக்கொண்டிருக்காதே. இப்பிறவி தப்பினால் எப்பிறவி கிடைக்குமோ! பின்னிட்டுப் பரிதபிப்பதிற் பயனில்லை. அன்னையின் கர்ப்பாசயத்தில் ஒருவிதம் தீர்மானித்தாயே, அப்படியே செய்.

## தெய்வ ஸம்பத்து

பிராணஹிம்ஸை செய்யாமல் இருக்கவேண்டும். பிறர் பொருளை இச்சிக்காமல் மனத்தை அடக்கவேண்டும். எப்போதும் உண்மையையே உரைக்கவேண்டும். புண்ணிய காலங்களில் தன் சக்திக்கு இயன்றவரையில் ஈதல் வேண்டும். பிறருடைய மனைவியின் கதையைப் பேசாமல் மௌனஞ் சாதிக்கவேண்டும். உசிதமாயிருக்க வேண்டிய அளவிற்கு மேலே பெருகும் ஆசை யென்கிற பிரவாஹத்தை விடாமல் அணைபோடவேண்டும். ஸகலப் பிராணிகளிடமும் கருணை பாராட்டவேண்டும். பெரியோர்களிடம் மரியாதை

யுடனும் வணக்கத்துடனும் இருத்தல் வேண்டும். இவ்வி தம் இருப்பதே ஸர்வசாஸ்திரங்களின் அபிப்பிராயத்திற் கும் ஒத்ததாயும் மேன்மேலும் அதிகமான சிரேயஸைப் பெறுவதற்குரியதாகவுமுள்ள சிறந்த நெறியாகும்.

கீதையிலே இவற்றைப் போன்ற பலகுணங்கள் எடுத் துக் கூறப்பட்டன. அவை யாவும் தெய்வ ஸம்பத்தென் றும் அந்த ஸம்பத்தை அடைந்திருப்பவர்கள் ஸம்ஸார துக் கத்தைச் சீக்கிரம் போக்கி மோக்ஷத்தைப் பெறத் தகுதியுள் ளவர்களாகிறார்களென்றும் ஸ்ரீ கண்ணபிரானும் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார்.

## கங்கா தீரம்

ஒரு பெரியார், "உலகத்திலுள்ள தாய்மார்கள் தங்கள் தங்கள் குழந்தைகளை எங்ஙனம் பாதுகாப்பார்களோ, அவ் விதம் ஸகலப் பிராணிகளையும் தன் குழந்தைகளாகப் பாவித்து இரக்ஷிப்பவளும் ஸ்ரீ பரமேஶ்வரனுடைய ஸம்பந்தத்தால் மிகவும் பிரகாசிக்கிறவளுமான ஹே கங்காதேவி! புனிதமான உனது தீரத்தை அடைந்து, இச்சரீரத்துக்கு முடிவேற்படுங் கால், சிரஸில் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு, ஸ்ரீ நாரா யணருடைய சரணங்களை ஸ்மரித்துக்கொண்டு ஆனந்தமா யிருக்கும் எனக்குச் சரீரத்திலிருந்து பிராணன் வெளியிற் செல்லுகிறதான உத்ஸவகாலத்தில் ஹரி ஹரரென்கிற வேற்றுமையில்லாமல் ஒரே ரூபமாக எப்பொழுதும் ஸ்திரமா யிருக்குஞ் சிறந்த பக்தியானது உன் அனுக்கிரஹத்தால், ஏற் படவேண்டும்" என்று வேண்டுகிறார்.

இதனாற் கங்காதீரம் மிகவும் பரிசுத்தமானதென்றும், அங்கே வஸிப்பவர்களுக்குச் சித்த சுத்தி ஏற்பட்டுப் பகவத் பக்தி யுண்டாகுமென்றும், அந்த பக்தியும், சிவன் விஷ்ணு

என்கிற பேத புத்தியை யடைந்து யாராவதொருவ்ருடைய அபராதத்துக்குள்ளாகாமல் இருவரிடமும் ஸமமான அத்வைதாத்மஸ்வரூப மென்கிற ஞானம் ஏற்படுமென்றும் அறிவிக்கப் படுகிறது.

## கர்ம பலன்

"ஒருவன் ஜலத்தில் வெகுகாலம் முழுகிக்கொண்டிருக்கும்படியான சக்தியைச் சம்பாதிக்கட்டும்; ஒருவராலுஞ் செல்லமுடியாத மேருவின் சிகரத்தையும் அடையட்டும்; யுத்தத்திற் பலவானுன சத்துருவையும் வெல்லட்டும்; வியாபாரத்தில் விசேஷமான பொருளைப் பெறட்டும்; சாகுபடி செய்வது, சேவகா விருத்தி செய்வது முதலிய சகலவித்தைகளிலுஞ் சிறந்த சக்தியை அடையட்டும்; அதிகமாக முயற்சிசெய்து மிகவும் விஸ்தாரமான ஆகாசத்திலும் பக்ஷியைப்போல் உயரப் பறக்கட்டும்; இங்ஙனம் பிறரால் செய்ய இயலாத் எவ்வித உத்தமமான காரியங்களைச் செய்தாலும் தன்னுல் அடையக் கூடாததை ஒருகாலும் அடையமுடியாது" என்பது ஒரு ஶ்லோகத்தின் பொருள்.

முற்பிறவியிற்செய்த கர்மவசத்தால் வரக்கூடிய சுகமோ துக்கமோ அனுபவிக்காமல் விலகாது. அவசியம் கர்ம பலத்தை அனுபவித்தே தீரவேண்டும். முன் ஜன்மங்களிற் செய்த மிஶ்ர கர்மங்களினுல் இந்த ஜன்மம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் அந்தக் கர்மங்களால் அளிக்கப்படும் சுக துக்கங்களைவிட்டு எவ்வித முயற்சியாலும் வேறு விதம் அடையமுடியாது. ஆகையால் வீண்வேலை செய்யாமல் வரும் ஜன்மத்தினுல் நற்பயனைப் பெறவேண்டி இப்பிறவியிலாவது சாஸ்திரம் கூறிய ஸ்வதர்மானுஷ்டானத்தைச் சரிவர நடத்திப் பிறவிப்பயனைப் பெறவேண்டுமென்பதே அச்சுலோகத்தினுல் அறியப்படும் நற்பொருளாகும்.

## மகான்களின் இயற்கை நலங்கள்

"பிறருக்குத் தாம் தானங் கொடுப்பதை மற்றவர்களுக்குத் தெரியாமல் இரகசியமாய்க் கொடுப்பது, தம் வீட்டுக்கு அதிதிகள் வந்தால் அநாதரவாயிராமல் விரைவிலே அவர்களுக்கு வேண்டிய காரியங்களைச் செய்வது, ஒருவருக்குப் பிரியமான காரியத்தைச் செய்வது, அதை வெளிவிடாமல் மௌனமாயிருப்பது, தமக்குப் பிறராற் செய்யப்பட்ட உபகாரத்தை ஸபைகளில் இவ்விதம் உபகரித்தா ரென்று பாராட்டுவது, அதிகமான ஐஶ்வரியம் வருங்கால், கர்வமில்லாம லிருப்பது, பிறருடைய நடத்தைகளிற் குறை கூறாம லிருப்பது முதலான சிறந்த குணங்கள் மஹான்களுக்கு யாரால் உபதேசிக்கப் பட்டன? ஒருவராலும் இல்லை. பின்னையோவெனின் கத்தி முனையிற் சஞ்சரிப்பது போல் மிகவுங்கடுமையான இந்தக் குணங்கள் அவர்களுக்கு இயற்கையிலேயே ஏற்பட்டிருக்கின்றன" என்பது ஓர் அரிய ஶ்லோகத்தின் கருத்து.

தம் சக்திக்கு இயன்ற வரையில் ஈவது, அதிதிகளைப் பிரியத்துடன் ஆதரிப்பது, பிறருக்குப் பிரியமான காரியத்தைச் செய்வது, தற்புகழ்ச்சி யில்லாமலிருப்பது பிறரிடமிருந்துபெற்ற உபகாரத்தை வெளியிடுவது, அகங்காரமில்லாமலிருப்பது, பரநிந்தையை விலக்குவது முதலிய காரியங்களை எவ்வளவு ஶ்ரமம் நேர்ந்தாலும் விடாமல் அநுஷ்டிக்க வேண்டும்; அவ்விதம் அனுஷ்டித்தால் தான் நாம் ஶ்ரேயஸைப் பெறலா மென்று இதனால் அறிவிக்கப்படுகின்றது.

## அலங்காரம் எது?

ஒருவனுக்கு மிகுந்த ஐசுவரியப் பெருக்கு இருப்பின், பலராலும் போற்றக்கூடிய நற்குணங்களோடு விளங்குவதே

அவனுக்கு அலங்காரமாகும். அதிகப் பலமிருந்தால் அடக்கமான வாக்குடன் இருப்பதே பூஷணமாகும். சிறந்த ஞானத்தை அடைந்தால் பொறுமையுடன் இருப்பதே அணியாகும். சாஸ்திரங்களில் நன்கு பயிற்சி ஏற்பட்டால், கர்வத்தை அடையாமல் வணக்கத்துடன் இருப்பதே அருங்கலமாகும். அதிகமான செல்வத்தைப் பெற்றிருந்தால், கெட்டவழிகளில் செலவிடாமல் நல்ல பாத்திரத்திற்குக் கொடுப்பதே அழகாகும். தவத்தில் விசேஷமான ஸித்தியடைந்திருந்தால், கோபமில்லாமல் சாந்த ஸ்வபாவத்துடன் இருப்பதே சிறப்பாம். எதையுஞ் செய்யக்கூடிய சக்தியையுடைய பிரபுவுக்கு க்ஷமை பூஷணமாகும். தர்மத்தை அனுஷ்டிக்க முன் வருகிறவர்களுக்குக் கபடமில்லாமல் அனுஷ்டிப்பதே பயனைக் கொடுக்கும். இவைகள் யாவற்றிற்கும் இயற்கையில் அவரவர்களுக்குள்ள நல்லஸ்வபாவமே முக்கிய காரணமாகும். ஆகையால், மனிதர்களுக்கு எப்பொழுதும் நன்னடக்கையிற் பற்றுதலுள்ள ஸ்வபாவமே சிறந்த அலங்காரமாகும். அதைப் பெறவே நாம் முயலவேண்டும்.

## திருப்தி

ஸகல ஜகத்திற்கும் பிரபுவாய் விளங்கும் பகவானால், உலகில் ஒருவனுக்கு எதை எவ்வாறு அடையும்படி நியமனமானது செய்யப்பட்டிருக்கின்றதோ, அதுதான் அவனுக்குக் கிடைக்கும்; அவ்விதம் கிடைப்பது அற்பமோ அதிகமோ அவரவர்களின் கர்மத்தை அனுஸரித்து ஏற்படுகின்றது. தனவந்தரை ஆஸ்ரயித்தால் அதிகலாபத்தைப் பெறலாமென்றும் இல்லாவிடில் அற்பமாகத்தான் கிடைக்குமென்றும் கருதுவது தவறேயாகும்.

இவ்விஷயத்தையே ஒரு திருஷ்டாந்த வாயிலாக அறியலாம்: எல்லாப் பிராணிகளுடைய விருப்பத்தையும் நன்கு

பூர்த்திசெய்யவேண்டி, மேகமானது எப்பொழுதும் பூர்ணமாக வருஷித்தாலும் சாதகமென்கிற பறவையின் முகத்தில் மிகவும் சிறியவைகளான இரண்டு மூன்றுஜலத்திவலேகளே விழுகின்றன. இதுபோல், முழுதும் ஸ்வர்ணமயமாய் விளங்கும் மகாமேரு பர்வதத்தை அடைந்தாலும், பெறுவதற்கு யோக்கியமான பொருளேத்தான் அடைய முடியுமேயன்றி அற்பங்கூட அதிகமாக அடையமுடியாது. ஆகையால் அதிக இச்சைகொண்டு, கண்டவிடங்களெல்லாஞ் சென்று, நம் பெருமைக்குச் சிறுமையைச் சம்பாதித்துக் கொண்டு அதிகக் கஷ்டங்களேயும் அனுபவித்துப் பிறரும் இகழக்கூடிய நிலைமையை அடையாமல், பகவானல் அனுக்கிரஹித்ததே போதுமென்கிற மனஸ்திருப்தியுடன் வாழ்வதே நலமாகும்.

## அந்தரங்க பக்தி

"ஸமஸ்த லோகங்களுக்கும் அதிபதியான ஸ்ரீ பரமேஶ்வரரிடத்திலாவது ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவான ஸ்ரீமந் நாராயணரிடத்திலாவது பேத எண்ணம் என்பது என்பால் இல்லே அப்படி யிருந்தபோதிலும் பால சந்திரனேச் சிரஸில் தரிக்கின்ற பரம சிவனிடத்திலேதான் எனக்குப் பக்தி உண்டாகின்றது; அவரையே என்மனம் நாடுகின்றது" என்று சிவபக்த சிரோமணியாகிய ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் அருளிச்செய்திருக்கின்றார்.

அபேதபுத்தி நம் லக்ஷ்யமாக இருந்தாலும் உபாஸனமூர்த்தியினிடத்தில் அந்தரங்கபக்தி விசித்திரம் இருக்க வேண்டும். மனம் ஒன்றிலேயே லயிக்கும்படி செய்துவிட்டால் அனுபவ நிலேயில் ஸமரஸத்தை உணரலாம். ஆதலின் ஒவ்வொருவரும் அந்தரங்க பக்தி செய்யக் கடவாராக!

---

“ श्रीकान्तद्रुहिणोपमन्युतपनस्कन्देन्द्रनन्द्यादयः
प्राचीना गुरवोऽपि यस्य करुणालेशाद्गता गौरवम् ।
तं सर्वादिगुरुं मनोज्ञवपुषं मन्दस्मिताऽलंकृतं
चिन्मुद्राकृतमुद्रपाणिनळिनं चित्ते शिवं कुर्महे ॥ ”

“ प्रचण्डपाखण्डविखण्डनोद्यतं त्रयीशिरोऽर्थप्रतिपादने रतम् ।
बुधैर्नुतं योगकलाभिरावृतं नमामि तं शङ्करदेशिकं ततम् ॥”

श्रीशङ्कराचार्यनवावतारं विश्वेश्वरं विश्वगुरुं प्रणम्य ।
वेदान्तशास्त्रश्रवणालसानां बोधाय कुर्वे कमपि प्रयत्नम्

உ

சிவமயம்

# ஸ்வயம் ப்ரகாச விஜயம்

# பிரச்னோத்தர மாலிகா

[சேந்தமங்கலம் தத்தகிரியின் அடிவாரத்தில் தத்த தீர்த்தமென்ற ஒரு தீர்த்தம் அமைந்திருக்கிறது. அதன் கரையில் அமர்ந்து ஸ்ரீமத் ஸ்வாமிகளும் ஸ்வாமிகளின் சிஷ்யராகிய ஸ்ரீ துரியானந்தரும் உல்லாஸமாக மாயா விலாஸத்தைப் பற்றி அடிக்கடி ஸம்பாஷணை செய்துகொண்டிருப்பதுண்டு. அப்போழுது ஸ்ரீ துரியானந்தர் தம் குருநாதரிடம் சில வினாக்களை விண்ணப்பித்துக் கோள்வார்; அவற்றிற்கேற்ற விடைகளை ஸ்ரீமத் ஸ்வாமிகள் அருளிச் செய்வார். அங்ஙனம் நிகழ்ந்த வினாவிடைகளுள் முக்கியமானவை சில, யாவரும் அறிந்து பயனுறும் பொருட்டுக் கீழே வெளியிடப்படுகின்றன.]

——:(*):——

1 வி: *சின் முத்திரையின் அர்த்தம் என்ன? பல காலம் வேதாந்த சாஸ்திரங்களை முறையாகக் குருமுகமாகக் ட்டும் படித்தும் பலருக்குச் சந்தேகம் நிவர்த்தியாகாமல் ருக்கும்போது ஸனக ஸநந்தநாதி யோகிகளுக்கு தக்ஷிணா ர்த்தியினது மௌன வ்யாக்கியானத்தினால் எப்படி சந்*

தேகம் நிவர்த்தியாகக் கூடும்? பிரம்ம நிஷ்டர்களும் அவதூதர்களும் யோகிகளுமாகிய அவர்களுக்கு என்ன ஸந்தேகம் உண்டாகக்கூடும்?

விடை: சின் முத்திரையானது சித்தினது முத்திரை; சித் - அறிவு; முத்திரை - அடையாளம். ஞானத்தின் அடையாளமாக இருப்பது சின்முத்திரை. கட்டை விரலின் நுனியையும் சுட்டு விரலின் நுனியையும் சேர்த்துக் காட்டுவது சின்முத்திரை யெனப்படும். சுட்டு விரல் 'அது' என்று சுட்டப்படும் பரமாத்மாவைக் குறிக்கின்றது. பெருவிரல் "அங்குஷ்ட மாத்ர: புருஷ:" என்று சுருதி சொல்லுவதனால் ஜாக்ரத் ஸ்வப்ன சுஷுப்தி யென்னும் மூன்றுக்கும் சாக்ஷியாயிருக்கும் ப்ரத்தியகாத்மாவைக் குறிப்பிடுகிறது. தனியே நின்ற மூன்று விரல்களும் சரீரத்ரயம், அவஸ்தாத்திரயம், மும்மலம் முதலியவற்றைக் குறிக்கும். எல்லாக் காரியங்களையும் செய்யும்பொழுது உடனிருந்து உதவும் பெருவிரல் பரமாத்மாவையும் 'த்வம்' பதத்தாற் சுட்டப்படும் ஆத்மாவைச் சுட்டு விரலும் குறிப்பன வென்பதும் பொருந்தும். மும்மலங்களினின்றும் விடுபட்ட ஆத்மா பரமாத்மாவோடு ஐக்ய மடைவதையே சின் முத்திரை குறிக்கிறது; அந்த நிலை அத்வைத மென்று காட்டுகின்றது. ஏக மென்பதைக் குறிக்க ஒரு விரலைக் காட்டினாற் போதுமேயெனின் இரண்டற்ற ஒன்று என்பதை விளக்கவே இங்ஙனம் ஏற்பட்டிருக்கிறது. இத்தகைய சேர்க்கையையே யோக மென்பார்கள்.

முமுக்ஷுக்கள் நிஷ்காம கர்மத்தைச் செய்து சித்த சுத்தியை அடையாமலும் ஸகுண உபாஸனை செய்து விக்ஷேப தோஷத்தை நிவர்த்தி செய்து கொள்ளாமலும் ஆயுள் முழு

வதும் வேதாந்த ச்ரவணம் செய்தாற் கூடச் சந்தேகங்கள் நிவர்த்தியாகி ஸ்வாநுபூதி வருவது மிகவும் கடினம். வேதாந்தத்திற்கு அதிகாரிகள் இரண்டு வகையானவர்கள்: (1) கிருதோபாஸ்தி (ஸகுண உபாஸனை செய்து முடிந்தவர்கள்); (2) அகிருதோ பாஸ்தி (உபாஸனை முடியாதவர்கள்.) லோகத்திலுள்ள முமுக்ஷுக்களிற் பெரும்பாலோர் அகிருதோபாஸ்திகள். ஆனதால் அவர்கள் வேதாந்த ச்ரவணத்தை முறையாகச் செய்து பிறகு மனனநிதித்தியாஸனம் செய்து அதனல் மனோநாசமும் வாஸனக்ஷயமும் பெற்றால் தான் ஸ்வாநுபூதி வரும். ஸநக ஸனந்தனதி யோகிகள் கிருதோபாஸ்திகளானதால் முன்பே அவர்களுக்கு மனோநாச வாஸனக்ஷயங்கள் உண்டாய் விட்டன; ஆதலின் அவர்களுக்குச் சிரவண மனனநிதித்தியாஸனங்கள் வேண்டியது இல்லை.

இப்படி, பிரம்ம நிஷ்டையை அடைந்த யோகிகள் இரண்டுவித மானவர்கள். (1) நிர்விகல்ப ஸமாதி அநுபவம் மாத்திரம் உள்ளவர்கள்; (2) அந்த ஸமாதி அநுபவத்தில் முதிர்ந்து ஸகஜ நிஷ்டாநுபவத்தில் இன்புறுபவர்கள். நிர்விகல்ப ஸமாதி முடிந்த ஸனகாதிகளுக்கு ஸகஜ நிஷ்டையில் ஸந்தேகம் வந்தது. நிர்விகல்ப ஸமாதியில் இன்புற்ற சுகப்பிரம்மத்துக்கு அங்ஙனம் ஸந்தேகம் வந்துதான் ஜனகரிடத்தில் வந்து ஐயம் நீங்கினர். இத்தகைய ஸந்தேகத்தைத் தான் ஸனகாதிகள் ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியின் உபதேசத்தால் போக்கிக் கொண்டனர். அந்த மூர்த்தி அவர்களுடைய பக்குவத்துக் கேற்றபடி மௌன வியாக்கியானம் செய்தார். அவர்களைப் போன்ற நிலையிலுள்ளவர்களுக்குத்தான் சின் முத்திரையின் அர்த்தம் அநுபவத்தில் தெரியும்.

அவர்களுக்கு உண்டாகும் சந்தேகம் பின்வருமாறு: ஒரு யோகி ஸமாதியில் இருக்கும்போது ப்ரம்ம மாத்திர மான ஆனந்தானுபவத்தில் இருக்கிறன். அந்தச் சமயத் தில் அவனுக்கு நாமரூபப் பிரபஞ்சங்கள் தோற்றுவதில்லை. பஹிர்முகப்பட்டால் அவை தோற்றும். 'அப்பொழுது காணப்படும் நாம ரூபங்களால் ஆத்மஸ்வரூபத்திற்கு ஏதே னும் தடை உண்டாகுமா? லோகவியவஹாரத்தோடு ப்ரம் மானந்த அநுபவமும் ஒருங்கே நிகழ்வதெப்படி? வ்யவஹா ரத்தால் ப்ரம்மாநந்தானுபவத்துக்குக் குறைவு நேருமா?' என்ற சங்கைகளெல்லாம் ஸகஜ நிஷ்டை பூர்த்தியாகாதவர் களுக்கு உண்டாகும்.

சரீரத்திரய விலக்ஷணனும், அவஸ்தாத்திரய ஸாக்ஷியு மானபிரத்தியகாத்மா எப்பொழுதும் பிரம்மத்தோடு ஐக்கிய மாகவே இருக்கிறன். பிரத்தியகாத்மாவேதான் பிரம்மம். நிர் விகல்பஸமாதியில் எந்தப் புருஷன் அநுபவத்தில் ஸாக்ஷாத் கரித்தானே அதே புருஷன் அந்த அநுபவஞானத்தோடு கூடவே பஹிர்முகத்திலும் வியவஹாரம் செய்ய முடியும்; அந்தப் பிரம்மஸ்வரூபமாகவே திருஶ்யப்பிரபஞ்சம் முழு வதையும் ஸஹஜ நிஷ்டையில் பார்த்துக்கொண்டு இருப்பத னல் ஆனந்தத்துக்குக் குறைவு உண்டாகாது. இந்த அநு பவத்துக்குப் பரபுருஷனைக் கூடிச் சுகம் அநுபவித்த நாரி யொருத்தி கிருக கிருத்தியங்களைச் செய்கையிலும் அந்தச்" சுகத்தை மறவாமல் இருத்தலைப் பெரியோர்கள் உவமை கூறுகிறர்கள்.

எல்லாம் ஆத்மாவென்பதை அநுபவத்தில் அறியும் போது பயமும் துக்கமுமில்லை என்பதை ஸஹஜ நிஷ்டையில் அநுபவித்த கசர் என்பவர் தம்முடைய ஸ்வானுபவத்தைச்

சொல்லும் சுலோகமொன்று ஞான வாசிட்டத்திற் காணப் படுகிறது: அதன் கருத்து வருமாறு:—

'பிரளய காலத்தில் எங்கும் ஜலமயமா யிருப்பதுபோல எல்லாம் என் மயமாகவே இருப்பதால் நான் செய்யவேண் டியது என்ன இருக்கிறது? எங்கே நான் போவது? எதை அடைய வேண்டும்? எதைத் தியாகம் செய்யவேண்டும்?' இந்த அர்த்தத்தைத்தான், ஸனகாதியோகிகள் சின்முத்தி ரையினால் அறிந்துகொண்டு தங்கள் ஸந்தேகங்களை நிவர்த்தி செய்துகொண்டார்கள்.

2. வினா: நாம் சுக துக்கங்களை அனுபவிக்கிறோம்; அவற்றை அனுபவிக்கும்பொழுது ஜன்மாந்தரத்திற் செய்த புண்யபாவத்தால் அனுபவிக்கிறோமென்று தெரிந்துகொள்ளு கிறோம்; இவ்வாறு மிருகங்களுக்குத் தெரியுமா?

விடை: மிருகங்களுக்கு, வேறு மிருகம் சுகமாக இருக் கும்போது தாம் கஷ்டப்பட்டால் அதைப்பார்த்து, 'அவை சுகமாக இருக்கின்றன; நாம் ஏதோ கஷ்டம் அனுபவிக்கி றோம்' என்று மாத்திரம் ஒரு ஞாபகம் தோன்றுமேயன்றி ஜன்மாந்தர புண்யபாவத்தால் கஷ்ட சுகங்களை அனுபவிக் கிறோமென்ற பகுத்தறிவு அவைகளுக்குக் கிடையாது. இது தான் மனுஷ்யனுக்கும் மிருகத்திற்கும் உள்ள முக்கிய வித் தியாசம். இந்தப் பகுத்தறிவில்லாதவர்கள் மனுஷ்யர்களாயி னும் மிருகத்திற்கு ஸமானமே; ஜன்மாந்தரம், பரலோகம் சாஸ்திரம் முதலியவை மிருகத்தின் அறிவிற்படுவதில்லை. இவற்றில் நம்பிக்கையற்ற மனுஷர்களும் மிருகப்பிராயமான வர்களே.

3. வினா: ஆடு கோழிகளைப் பலியிடுகையில் இரத்தம் பூமியிற் சிந்துகிறது; மாமிசத்தை மனுஷ்யன் சாப்பிடுகிறான்;

எந்தத் தேவதைக்கு அந்தப் பலி கொடுக்கப்படுகிறதோ அத்தேவதை எதைக் கொண்டு திருப்தி அடைகிறது? எதனை ஏற்றுக்கொண்டு மனுஷ்யனுடைய காம்யத்தைப் பூர்த்தி பண்ணுகிறது ?

விடை: ஆடு கோழிகளைப் பலியிடுகையில் மிகவும் ஸூக்ஷ்மமாகக் கவனித்தால், அவற்றிலிருந்து ஓர் ஆவி எழுவதைக் காணலாம். அந்த ஆவிதான் தேவதையினால் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. 'ஆவி பகவானுக்கு; அமுது நமக்கு' என்ற ஒரு பழமொழி வழங்குகிறது. நாம் நிவேதனம் செய்யும் மகா நைவேத்தியத்திலிருந்து எழும் உஷ்ணமான ஆவியைப் பகவான் கிரகித்துக்கொண்டு நமக்கு அருள் புரிகிறார் பலி கொடுப்பது அதமபக்ஷம். உஷ்ணத்தோடு கூடிய ஹவிஸ்ஸில்தான் தேவதைகளுக்குப் பிரியம் அதிகம். பலியிடுவது ஆறின அன்னத்தை நைவேத்தியம் செய்வதற்கே ஸமானம்.

அக்காரணத்தினால்தான் யஞ்ஞத்திலே பசுவின் வபையை யெடுத்து ஹவிர்பாகம் கொடுப்பது பகவானுக்குப் பிரீதி யென்று வேதம் கூறுகிறது. யஞ்ஞத்தில் ஆட்டை வெட்டுகிறதில்லை; பிராண பந்தம் செய்யும்படி வேதம் கட்டளையிடுகிறது. அப்போதுதான் அஃது உஷ்ணத்தோடுகூடிய ஹவிஸாகும். வபோத்தரணம் செய்யும்போது அதிலிருந்து ஓர் ஆவி யெழுவதைப் பார்க்கலாம்; எடுத்த இடத்தைக் கையால் தொட்டால் உஷ்ணமாக இருக்கும். வபையை எடுத்தபிறகு அங்கஹோமம் செய்யச் சிறிதுநேரம் ஆகிறபடியால் அதற்குள் உஷ்ணம் ஆறிவிடாமல் இருக்கும்பொருட்டு வபையை யெடுத்த துவாரத்தில் மறுக்ஷணத்தில் தர்ப்பையை அடைப்பது ஸம்பிரதாயம்.

4. வினு: 'அஹிம்ஸா பரமோதர்ம:' என்ற சுருதிப்படி ஒரு பிராணிக்கும் ஹிம்ஸை செய்யக்கூடாதென்று விதிக்கப்பட்டிருக்கும்போது யஞ்ஞத்திற் பசுவை வதம் செய்வது பாபமல்லவா ?

விடை: 'நஹிம்ஸ்யாத் ஸர்வா பூதானி' என்கிற சுருதியும் 'அக்னீஷோமீயம் பசுமாலபேத'' என்கிற சுருதியும் அபவாத சுருதிகளென்னும் பெயருடையன. அவற்றிற்கு, யஞ்ஞத்தைத்தவிர மற்றச் சமயங்களில் ஒரு பிராணியையும் ஹிம்ஸை செய்யக்கூடாது என்று பொருள்கொள்ள வேண்டும். க்ஷத்திரியனுக்கு யுத்தகாலத்தில் வதம் செய்வதால் பாபம் உண்டாவதில்லை; அஃது அவனுடைய தர்மம். அதுபோலவே பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களின் ஸ்வதர்மம் யஞ்ஞம் செய்தல். அதனுல் பாபம் உண்டாகாது. மற்ற ஸமயங்களில் ஜீவஹிம்ஸை செய்யக் கூடாது. காய்கறிகளை நறுக்கி அன்னப்சனம் செய்வதில் ஐந்துவிதமான பாபங்கள்உண்டாகின்றன. செடிகளுக்கெல்லாம் ஜீவனுண்டாகையால் இந்தப் பாபம் ஸம்பவிக்கிறது. இதனைப் போக்குவதற்கு வைசுவதேவம் அவசியம் செய்யவேண்டும். அதுசெய்யாமல் போஜனம் செய்வது பாபமென்று வேதம் சொல்லுகிறது. யஞ்ஞம் ஜீவவதமாகாது. அதற்கு 'அத்வரம்' என்றுபெயர்; அஹிம்ஸை என்பது அர்த்தம்.

5. வினு: பிராம்மணர்கள் யஞ்ஞங்களை எதற்காகச் செய்யவேண்டும் ?

விடை: பிராம்மணன் பிறக்கும்போது மூன்றுவகையான ருணங்களுடன் பிறக்கிறுன். அவை தேவருணம், பிதுர்ருணம், ருஷிருணம் என்பவை. அவற்றுள் தேவருணத்தை யாகம் செய்வதனுல் அவன் தீர்த்துக்கொள்கிறுன்; அதனுல்இஷ்ட

காமியங்களையும் சித்தசுத்தியையும் அடைகிறான். அல்லாமலும் உலகத்தில் ஸரியான காலங்களில் மழை பெய்து வளம் உண்டாவதற்கும் யாகத்தைச் செய்ய வேண்டும்.

6. வினா: யஞ்ஞங்களைச் செய்தமாத்திரத்தில் மழை எப்படி உண்டாகிறது?

விடை: பிராம்மணர்கள் வேதோக்தமாகவும் பக்தி ப்ரத்தையுடனும் அக்கினியில் ஹவிஸை ஆஹுதி செய்யும்போது அந்த ஹவிஸானது ஆதித்தியனைச் சென்று அடைகின்றது; ஆதித்தியனால் மழை உண்டாகின்றது; மழையால் பயிர் விளைந்து அன்னம் உண்டாகவே அவ்வன்னவிசேஷத்தால் மனிதர்கள் சுபிக்ஷமாக இருக்கிறார்கள். இந்தக் காலத்தில் சாஸ்திரத்திற் சொன்னபிரகாரம் கிருஹஸ்தர்களான பிராம்மணர்கள் தேவர்களுக்குரிய யஞ்ஞங்களைச் செய்யாது விட்டமையால்தான் ஸரியான காலங்களில் மழைபெய்யாமல் பூமி வளமிழந்து விளைவொழிந்தது; பலவிதமான நோய்கள் பரவி ஜனங்களைத் துன்புறுத்துகின்றன.

7. வினா: யாகம் செய்யாத மற்றத் தேசங்களில் மழை பெய்யவில்லையா?

விடை: பெய்வதுண்டு; ஆனால் காலங்களிற் பெய்வது பெரும்பாலும் இல்லை. அதிவிருஷ்டி, அநாவிருஷ்டி உண்டாகும். பயிர் அறுவடைக்காலத்தில் மழை பெய்து கெடுக்கும். அதிக வெள்ளம் வந்து நாட்டையே அழிக்கும். மழையை நம்பி வியவசாயம் செய்து வளம் பெறுவதில் நம் தேசந்தான் முதன்மையானது.

8. வினா: நம் தேசத்திற் சில இடங்களில் யஞ்ஞங்கள் அப்பொழுது அப்பொழுதாவது நடந்துவரும் இந்தக்

காலத்தில் சில சமயங்களில் மழை பெய்யாமல் இருப்பதற்குக் காரணம் என்ன?

விடை: சாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள விதி தவறாமல் பக்தி ஸ்ரத்தையோடு நிஷ்காமமாக யஞ்ஞங்களைச் செய்பவர்கள் இப்பொழுது பெரும்பாலும் இல்லை. அதனால்தான் மழையின்றிப் பஞ்சம் உண்டாகிறது. சாஸ்திரவிதி வழுவாமல் பிராம்மணர்கள் யாவரும் யஞ்ஞங்களைச் செய்து வந்தால் தவறாமல் மாசம் மூன்று மழை பெய்யும்; இதற்கு வேதமே பிரமாணம்.

9. வினா: பரமாத்மாவின் ஆஞ்ஞையால் மழை பெய்யும் போது தேவர்களுக்கு ஹவிர்ப்பாகம் ஏன் கொடுக்க வேண்டும்?

விடை: நாம் முனிஸிபாலிடியாருக்குத் தண்ணீர்வரி கொடுத்து வருகிறோம். ஈஸ்வரனுடைய கிருபையால் ஜலம் மழையாற் கிடைக்கிறபோது அவர்களுக்கு ஏன் வரி கொடுக்கிறோம்? பகவானால் உண்டாக்கப்படும் மழை நீரை ஏரிகளிலும் குளங்களிலும் தேக்கிக் குழாய்கள் மூலம் நமக்கு உபயோகமாகும்படி முனிஸிபாலிடியார் செய்கிறார்கள். அதற்காகவே நாம் அவர்களுக்கு வரிகொடுக்கிறோம். இந்தப் பரஸ்பர உபகாரத்தால் நகரத்தில் நன்மை உண்டாகிறது. அதைப் போலவே மழை ஈஸ்வரனுடைய ஆஞ்ஞையினால் உண்டாகின்றதானாலும் அதை நமக்கு அனுப்பும் அதிகாரம் பெற்றவர்கள் தேவர்கள். அவர்களுக்குப் பிரீதியுண்டாகும்படி முறைப்படி அவர்களுக்குரிய வரியாகிய ஹவிர்ப்பாகத்தை வழங்கினால் அவர்கள் காலங்களில் மழை பெய்யும்படி செய்கிறார்கள்; அதனால் நமக்கு நன்மை உண்டாகின்றது. இல்லையானால் க்ஷாமம் உண்டாகும். அதிலிருந்து

நீக்கும் பொருட்டு நாம் ஹவிர்ப்பாக மென்னும் வரியை யஞ்ஞமூலமாகத் தேவர்களுக்குச் செலுத்துகிறோம்.

10. வினு: பகவான் ஒருவரே யென்று வேதங்கள் கோஷிக்கின்றன; அப்படி யிருக்கத் தேவர்கள் என்ற ஜாதி எங்ஙனம் இருக்கும்?

விடை: புல், பூண்டு, மரம் முதலியவை மிகவும் கீழான ஜாதி; அவற்றிற்கு மேல் கிரியா சக்தியும் ஞான சக்தியும் சிறிது அதிகமாகவுள்ள பறவைகளும் மிருகங்களும் இருக்கின்றன; அவைகளுக்குமேல் ஞானசக்தி மிகுதியாக உள்ள மனுஷ்ய ஜாதியைப் பார்க்கிறோம். மனுஷ்யஜாதிக்கும் மேலான கிரியாசக்தியும் ஞானசக்தியும் உள்ள ஒரு ஜாதி இருப்பதில் என்ன ஆக்ஷேபம் இருக்கிறது? படிப்படியாகச் சக்திகள் உயர்ந்து வரும் இவற்றுள்ளே சிறந்தது தேவஜாதி. அவர்களுக்கு நம்மைக் காட்டிலும் உயர்ந்தசக்திகள் உண்டு. அநாதியான வேதத்தில் தேவர்களைப் பற்றிய விஷயங்கள் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. லோகாந்தர விஷயங்கள் காணப்படுகின்றன; அவர்களுக்கும் நமக்கு முள்ள பரிவர்த்தனைகளும் யஞ்ஞங்களும் கூறப்பட்டுள்ளன. இவற்றை நம்புவது நம் கடமை. தேவர்களால் மனிதனுடைய சக்திக்கு அடங்காத பல காரியங்கள் செய்யப்படுகின்றன.

11. வினு: சிலர் யஞ்ஞத்தை ஹிம்ஸை என்று தடுக்கிறார்களே; அவர்களுக்கு ஸமாதானம் என்ன?

விடை: யஞ்ஞத்தில் பசுவைப் பிராணபந்தம் செய்து வபோத்தரணம் செய்யும்படி வேதம் சொல்லுகிறது; இங்ஙனம் மூச்சைப் பிடித்துக் கொல்லுவது பாபமென்று அவர்கள் கூறுகிறார்கள். அந்தப் பசு இப்பொழுது கஷ்டப்

படுவது போலத் தோற்றுவதால் அப்படிச் சொல்கிறார்கள். பிறகு அப்பசுவிற்கு ஸ்வர்க்கம் கிடைக்கிறதென்பதை அவர்கள் அறிந்திருந்தும் அதில் நம்பிக்கை உண்டாவதில்லை. ஒரு ரோகிக்கு வைத்தியர் சஸ்திரசிகித்ஸை செய்கிறார். அப்பொழுது அவனுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆனால், பின்பு ஸௌக்கிய முண்டாகுமென்ற நம்பிக்கையினால் அவன் அந்தக் கஷ்டத்தை ஸகித்துக் கொண்டிருக்கிறான். அதுபோல் பசுவிற்கு இப்பொழுது கஷ்டமிருப்பதாகத் தோற்றினாலும் பிறகு சுகம் உண்டாகிறது.

ஒரு சின்ன வேலைக்காரனுக்குப் பெரிய வேலையும், சம்பள உயர்வும் கிடைக்கின்றன என்றால் அவன் துக்கப் படுவானா? ஸந்தோஷப்படுவானா? ஸந்தோஷந்தானே படுவான்? அதைப்போல அந்த அஜமானது யாகப் பசுவாக உபயோகப்பட்டதனால், மேலான நரஜன்மத்தைப் பெற்ற யஜமானன் சுவர்க்கம் போய்ச்சேருவதற்கு முன், தான் சேருகிறது என்று வேதம் சொல்லுகிறது. அதில் நம்பிக்கையில்லாதவர்கள் யாகத்தை ஹிம்ஸை என்று சொல்லுவார்கள்.

நாம் செய்யும் காரியங்களில் எவ்வளவோ ஜீவஹிம்ஸை நேர்கின்றது. முதலிற் சுகமாயிருந்து பின்பு ஹிம்ஸைக்கு ஹேதுவாகிய பல காரியங்களை நாம் செய்கின்றோம். புருஷன் கர்ப்போற்பத்தி செய்கிறது கூட அந்த ஸ்திரீக்கு ஹிம்ஸையை விளைவிக்கிறது.

முதலில் கஷ்டமாகத் தோன்றிப் பின்பு ஸுகத்தை உண்டாக்கும் காரியங்களும் உண்டு. குருகுலவாஸம் செய்யும் சிஷ்யர்களைக் குருமார் பலவிதமான கஷ்டங்களுக்கு ஆளாக்கிப் பரிசோதித்ததாகச் சரித்திரங்களால் உணர்கிறோம். அவை ஹிம்ஸையாகா.

ஆகையினால் முதலில் துன்பம் உண்டாகின்றதே யென்று சொல்லி வேதங்களால் சொல்லப்பட்டும், பலரிஷிகளாலும் பெரியோர்களாலும் செய்யப்பட்டும் வந்த யஞ்ஞங்களை ஹிம்சை யென்று எண்ணுவது ஜீவகாருண்ய புத்தியாகாது. அந்த யஞ்ஞத்தால் பல கோடி உயிர்களுக்கு ஸுகம் உண்டாவதால் அதைத் தடுப்பவன்தான் ஜீவகாருண்யம் இல்லாதவனாவான். முடிவில் ஆனந்தமாக இருப்பவை ஸத்வகுண ஆனந்தம்; முதலில் இன்பத்தைத் தந்து பின்பு துக்கத்தைத் தருபவை ரஜோகுண ஆனந்தங்கள். சிற்றின்பம் அந்த வகையைச் சேர்ந்ததே. ஸத்வகுண இன்பத்தை அடைவதற்குரிய ஸாதனங்களை வேதம் சொல்கிறது; ஆதலின் அதை நம்பவேண்டுவது அவசியம்.

12. வினா: சில மதஸ்தர்கள் ப்ரத்தியக்ஷ பசுவை யாகத்தில் உபயோகப்படுத்துவது ஹிம்சை யென்று கருதி, மாவில் அஜத்தைப் போலச் செய்து யாகம்செய்கிறார்களே; அவர்களுக்கு வேதத்தில் சொல்லிய ஸ்வர்க்கம் கிடைக்குமா ? தேவர்களுடைய ப்ரஸாதம் உண்டாகுமா ? அதன் மூலம் உலகத்திற்கு க்ஷேமம் உண்டாகுமா ?

விடை: உலகத்தில் சிறு குழந்தைகளில் ஆணும் பெண்ணும் புருஷன் மனைவி விளையாட்டு விளையாடுகிறார்கள்; சாந்தி முகூர்த்தமென்று சொல்லியும் விளையாடுகிறார்கள். அவர்களுக்கு ஆனந்த புரஸ்ஸரமாகப் புத்திரோற்பத்தி உண்டாகுமானால் பிஷ்டபசுவை வைத்து யாகம் பண்ணுபவர்களுக்கும் தேவப்ரஸாதமும் ஸ்வர்க்கானந்தமும் உண்டாகும். உண்மையில் அவர்களுக்கு உண்டாவது பாபமே. ஏனென்றால் வேதத்தை நம்பாமலிருப்பது ஒரு பாபம். மந்த்ர பூர்வமாக ஸங்கல்பபாவனை பண்ணிப் பிஷ்டபசுவைக் கொல்

னுவது ஒருபாபம். ஒரு மனிதனைப் பஞ்சபக்ஷ்ய பரமான்னத்தோடு விருந்திடுவதாக அழைத்துவிட்டுப் பரிசுத்தமில்லாத பதார்த்தத்தைத் தருவது எப்படியோ, அப்படியே வேத மந்திர பூர்வகமாகவும் அக்கினி ஸாக்ஷியாகவும் பிரத்தியக்ஷ பசுவை ஸம்ஞபனம் செய்கிறேனென்று சபதம் செய்து விட்டுப் பிஷ்ட பசுவைக்கொடுப்பதும் ஆகும். அது தேவதா ஹேளனமென்ற வேறொரு பாபத்தைத் தருகிறது. இத்தனையும் சேர்ந்து யஜமானனுக்கும் உலகத்திற்கும் க்ஷேமக் குறைவு உண்டாக்கும்.

இப்படி, பிஷ்ட பசுவை வைத்துக்கொண்டு யாகம் செய்கிறவர்களுக்கு ஸ்வர்க்கத்தில் மாத்திரம் நம்பிக்கை யிருக்கிறது; ஆனால் வபாஹோமம் பாபமல்லவா வென்ற சந்தேகமட்டும் போவதில்லை. இதை எந்த நம்பிக்கையில் சேர்க்கிறது?

13. வினா: யஞ்ஞங்கள் எத்தனை விதமானவை?

விடை: கிருகஸ்தர்கள் செய்யவேண்டியவை பஞ்ச யஞ்ஞங்கள். இவற்றிற்குத் திரவ்ய யஞ்ஞங்களென்று பெயர். ஜபம் முதலானவையும் யஞ்ஞமென்று சொல்லப் படும். ஸன்யாஸிகளான ஞானிகளுக்கும் யஞ்ஞம் உண்டு. அதற்கு ஞானயஞ்ஞம் என்று பெயர்.

14. வினா: ஞானிகளுக்குரிய ஞானயஞ்ஞம் எப் படிச் செய்வது? ஸன்யாஸிகளும் அக்னிஹோத்ரிக ளென்று சொல்கிறார்களே; எப்படிச் சொல்லலாம்?

விடை: ஞானிகள் செய்கின்ற யஞ்ஞம் அந்தர்யஞ்ஞ மேயன்றிப் பஹிர்யஞ்ஞமன்று. ஸகலதேவர்களும் அவர்கள் சரீரத்தில் இருக்கிறார்கள். ஞான யஞ்ஞத்திற்குரிய திரவ்யங் களும் உபகாரணங்களும் அவர்கள் சரீரத்திலேயே உள்ளன.

ஞானயஞ்ஞத்தில் ஆத்மாவே யஜமானன்; புத்தியே பத்தினி; வேதங்கள் மகாரித்விக்குகள்; அகங்காரம் அத்வர்யு; சித்தம் ஹோதா; ப்ராணன் பிராம்மாணுச் சம்ஸி; அபானன் ப்ரதி ப்ரஸ்தாதா; வ்யானனன் ப்ரஸ்தோதா; உதானன் உத்காதா; ஸமானன் மைத்ராவருணன்; சரீரமே வேதி; நாஸிகை அந்தர்வேதி; மூர்த்தா த்ரோண கலசம்; இடக்கையே ச்ருவம்; வலக்கையே நெய்ப்பாத்திரம்; ஓங்காரமே யூபம்; காமமே பசு; கேசங்களே தர்ப்பைகள்; இந்திரியங்களே யஞ்ஞபாத்திரங்கள்; அஹிம்ஸை இஷ்டிகள்; தியாகமே தக்ஷிணை; மரண காலமே அவபிருதம்; இவற்றால் ஞானிகள் இந்தச் சரீர வாஸம் செய்யும் வரையில் ஞான யஞ்ஞம் செய்கிறார்கள்.

கர்மகாண்டத்தில் ஆஹிதாக்கினிகளுக்கு மூன்றுவகை அக்னி உண்டு. அதுபோல் ஞானிகளுக்கும் மூன்று அக்கினிகள் உண்டு. கிருஹஸ்தர்களுக்குரிய மூன்று அக்கினிகள் கார்ஹபத்தியம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி என்பன. அக்னி ஹோத்ரிகள் சூர்யோதயத்திற்கு முன்பு கார்ஹபத்தியத்திலிருந்து தக்ஷிணாக்னிக்கும் ஆஹவநீயத்திற்கும் அக்னியைப் பிரணயநம் செய்கிறார்கள். கார்ஹபத்தியம் பிரம்மஸ்வரூபம்; ஞானிகளுக்குச் சரீரத்திலே அபானவாயு இருக்கும் ஸ்தானம் கார்ஹபத்தியம். ஆஹவநீயம் சிவஸ்ரூபம்; காலையில் தூக்கத்திலிருந்து எழுந்திருக்கும்போது பிராணனானது அபான ஸ்தானத்திலிருந்து முகத்திற்கு வருகிறது; ஆதலின் அதுவே ஆஹவநீயம். (ப்ரணய நீதி ப்ராண:) தக்ஷிணாக்னி விஷ்ணு ஸ்வரூபம்; ஞானிகளுக்குத் தக்ஷிணாக்னி வியானன்; விஷ்ணு எங்கும் வியாபித்திருப்பதுபோல இந்த வாயு ஸர்வ சரீரத்திலும் வியாபித்திருக்கிறது. இந்த மூன்று அக்கினிகளையும் ஞானிகள் ஸதா ஸர்வகாலம் உபாஸிப்ப

தால் அக்னிஹோத்ரி யென்று அவதூதர்களையும் சொல்ல லாம்.

15. வினு: அசுவமேத யாகத்திற்கு அதிகாரி யார்? ஜீவன் முக்தர்களுக்கும் அசுவமேத யாகம் உண்டு என்று சில மகாத்மாக்கள் சொல்லுகிறார்களே; அஃது எப்படி?

விடை: அசுவமேத யாகத்திற்கு அதிகாரி க்ஷத்திரியன்; நூறு அசுவமேத யாகம் செய்தால் இந்திர பட்டத்திற்குரிய யோக்யதை உண்டாகுமென்று புராணங்கள் தெரிவிக்கின்றன; நகுஷன் நூறு அசுவமேத யாகம் செய்து இந்திர பதவியை அடைந்தானென்று சொல்லுகின்றன. இந்தக் காலத்தில் க்ஷத்திரியர்கள் இல்லாததால் அசுவமேத யாகம் பஹிர்முகத்தில் செய்ய வேண்டாமென்று பாராசர ஸ்மிருதி கூறுகிறது.

ஜீவன் முக்தர்களான அவதூதர்களுக்கு அந்தர்முகத்தில் அச்வமேத யாகம் நடந்துகொண்டு வருகிறது. இந்திரியங்களே குதிரை; மனம் கடிவாளம்; புத்தி சாரதி; ஆத்மாவே ஏறிச்செல்லும் யஜமானன்; உடம்பே தேர். ஆத்மாவாகிய யஜமானன் இந்த ரதத்திலேறிச் சஞ்சரிக்கின்றான். குதிரைகள் வலிமையுள்ளனவாகிக் கடிவாளத்திற்கு அடங்காமல் மீறும்போது, புத்தியாகிய ஸாரதி அவற்றை அடக்காவிட்டால் தேர் வீணாகிவிடும். இந்தக் குதிரைகளை எவன் அடக்கி ஜயிக்கிறானோ அவன்தான் இந்திரபட்டத்தைப் பெறுந் தகுதியுடையவன். இந்திரியங்களாகிற குதிரைகள் விஷயங்களாகிற வழிகளில் ஓடும்போது மிகவும் தைர்யத்தோடு புத்தியென்னும் ஸாரதியைக்கொண்டு மனமென்னும் கடிவாளத்தால் இழுத்துத் தனது ஸ்வராஜ்யமாகிய அடைய வேண்டிய இடத்துக்குச் செலுத்தி அங்கே எந்த யோகி

கட்டிவிடுகிறுரே அந்த யோகியும் இந்திரபட்டத்துக்கு அதி காரியாகிறுன்; அதாவது பரப்ரம்மத்தை அடைந்து ஆனந் தத்தை அனுபவிக்கிறுன். இதுதான் அவதூதர்கள் செய்யும் அசுவமேத யாகம்.

16. வினு: சிலர், கர்மம் நம்மை எப்பொழுது விடுமோ அப்பொழுது ஞானம் வருமென்று சொல்லுகிறுர் கள்; மகான்களோ நாம் தைரியத்தோடு கர்மத்தை விட்டால் தான் ஞானம் வருமென்று சொல்லுகிறுர்கள்; இவைகளில் எது உண்மையானது ?

விடை: கர்மம் ஜடம். அதற்கு விடுவதற்கும் பற்று வதற்கும் உரிய சக்தி இல்லை. கர்மாவின்பயனைப் பகவான் கொடுக்கிறுர். தானே பயன்கொடுக்கும் சக்தி கர்மாவுக்கு இல்லை. நம்மைக் கர்மம் விடவில்லை என்பது, தூணை ஒரு மனிதன் கட்டிக்கொண்டு 'தூண் நம்மை விடவில்லை' என்று சொல்வதைப் போன்றது. தூண் ஜடம்; நாமே அதை விடவேண்டுமே யொழிய நம்மை அது விடவேண்டுமென் பது அஸம்பாவிதம். அதுபோல, நாம் விசாரணை பண்ணித் தைர்யத்தோடு கர்மாவைத் தியாகம் செய்தால்தான் ஞானம் உண்டாகும். பூர்வமீமாம்ஸகர்கள் இதை ஒப்புக்கொள் கிறதில்லை.

17. வினு: நிராசை, ஞானம், நிர்க்குணேபாஸனை என்பவற்றுக்குள் உள்ள வேற்றுமை என்ன?

விடை: ஒரு விஷயத்திலும் மனம் பற்றுதிருப்பது நிராசை. ஒரு விஷயமும் மனத்தில் தோன்றுமல் திரிபுடி அற்ற நிலையான ஏகத்துவ அநுபவமே ஞானம். "நாம் அகண்டஸச்சிதானந்த ப்ரம்மமாக இருக்கிறேம்; நாம் ஸர்வ வியாபி" என்பவை முதலிய ஏகத்துவபாவனை இருக்கும்

வரையில் அது நிடர்க்குணோபாஸனையென்று சொல்லப் படும்.

18. வினு: மனத்தை அடக்கி ஆள்வது மிகவும் கஷ்டமென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றனவே; ஏன்?

விடை: மனம், பைத்தியம் பிடித்த குரங்குக்கு ஒப் பாகக் கூறப்படும். ஒரு பைத்தியம்பிடித்த குரங்குக்கு ஒரு மனிதன் கள்ளைக்கொடுத்தான்; அதை ஒருதேள் கொட்டி விட்டது; அப்பொழுது ஒரு பிசாசும் அதைப் பிடித்துக் கொண்டது; அந்த ஸமயத்தில் அக்குரங்கின் நிலை எப்படி யிருக்குமோ அத்தகையதே மனிதனுடைய மனோநிலையு மென்று ஒரு கவி சொல்லுகிறார். மனிதனுடைய மனம் குரங்கைப்போல இயற்கையிலேயே சலன ஸ்வபாவமுள் ளது. ஆசையென்னும் கள்ளைக் குடிப்பதால் அதனுடைய கலக்கம் அதிகரிக்கிறது. பிறருக்கு உள்ள அனுகூலங்களைக் கண்டு உண்டாகும் பெருமையாகிய தேள் கடிக்கிறது; முடி வில் தற்பெருமையென்னும் பிசாசும் பிடித்துக் கொள்வ தால் எல்லா அதிகாரமும் தனக்கே தான் உண்டு என்று எண்ணுகின்றது. இப்படிப்பட்ட மனதை அடக்குவது கஷ் டந்தான்.

கஷ்டமென்று சும்மா இருக்கலாமா? இவ்வளவு விசித் ரமான மனதை எப்படித்தான் அடக்குவது? சோம்பேறி யாக இருந்தால் அடக்க முடியாது.

சிட்டுக்குருவிகள் தங்கள் முட்டைகளைக் கொண்டு போன ஸமுத்திரஜலத்தை வற்றச் செய்யவேண்டுமென் றெண்ணித் தர்ப்பையின் நுனியை மூக்கில் கௌவிக்கொண்டு விடாமுயற்சியாக முயன்றன; அதைக் கண்ட பகவான் கருணைகூர்ந்து நாரதரை அனுப்பி முட்டைகளை ஸமுத்திர

ராஜனிடமிருந்து வாங்கிக் கொடுத்தார். அதைப்போல, நாமும் மனோநிரோத விஷயத்தில் எவ்வளவு கஷ்டம் வந்தாலும் துக்கப்படாமல் விடாமுயற்சியோடு சாஸ்திரங்களில் சொல்லியபடி முறையான அப்பியாஸங்களை நம்பிச் செய்து வந்தால் பகவானுடைய திருவருளால் விரைவில் மனோநாசம் ஏற்படும்.

19. வினு: நல்ல மனமென்றும் கெட்ட மனமென்றும் இரண்டு உண்டா?

விடை: மனம் ஒன்றுதான்; ஆனால் அது வியவஹார பேதத்தால் இரண்டாகிறது. வாஸனை ஸத்வாஸனையென்றும் அஸத்வாஸனை யென்றும் இரண்டுவிதமாகும். "வாஸனைப் பழக்கத்தினுல் மனம்'' ஆதலின் ஸத்வாஸனைவசத்தில் வரும்போது நல்ல மனமென்றும் அஸத்வாஸனை வசத்தில் வியவஹரிக்கும்போது கெட்ட மனமென்றும் பிரம்மவித்துக்கள் சொல்லுவார்கள்.

20. வினு: மூன்று வகைக் கர்மத்திற்கும் புறம்பேயுள்ளவர்கள் ஜீவன் முக்தர்களென்கிறார்களே; அவர்களுக்குப் பிராரப்தானுபவம் மாத்திரம் எப்படி இருக்கும்?

விடை: மூன்று மனைவிகளை மணந்து கொண்ட ஒரு மனிதன் இறந்து போனால் மூன்று மனைவிகளும் அமங்கலிகளென்றுதான் சொல்வார்களே தவிர, இரண்டுபேர்கள் அமங்கலிகள், ஒருத்தி சுமங்கலி யென்று சொல்லமாட்டார்கள். அதுபோல ஜீவன்முக்தர்கள் மூவகைக் கர்மத்துக்கும் புறம்பானவர்களென்று சொல்வது வாஸ்தவந்தான். அவர்கள் திருஷ்டியில் பிராரப்தமும் இல்லை. ஆனால் அஞ்ஞானிகளுக்குச் சரீர திருஷ்டியிருப்பதால் பிராரப்தம் இருப்பதுபோலத்

தோற்றுகிறது. இஃது ஆரோபமே தவிர ஞானியினுடைய திருஷ்டிக்கு இல்லாததுதான். ஞானிகள் எல்லாவற்றையும் ஆத்மாகாரமாகப் பார்க்கிறவர்கள். அவர்கள் எதைச் செய் தாலும் அதைச் செய்தவர்களாக மாட்டார்கள்; அவர்கள் கர்மாவில் அகர்மாவைப் பார்க்கிறவர்கள்; அகர்த்தா அபோக்தாவாக இருப்பவர்களாதலின் கர்மபந்தம் அவர் களை ஒட்டுகிறதில்லை.

21. வினா: ஞானிகளுக்கு மூன்று கர்மாவும் இல் லாதிருக்கும்போது அவர்களைத் துவேஷிப்பவர்கள் பாபத் தைக் கொள்வார்களென்றும், புகழ்ந்து உபசரிப்பவர்கள் புண்ணியத்தைக் கொள்வார்களென்றும் சொல்லும் சுருதி யின் தாத்பர்யம் என்ன?

விடை: ஞானிகளுக்குக் கர்மா இருப்பதாகமனோபாவம் இல்லை; ஆயினும் அஞ்ஞானிகளுக்கு அவர்களிடம் ஈஸ்வர பாவனை வந்து அவர்களைப் பூஜிப்பதற்காகவும் ஞானத்திற் குள்ள பெருமையைப் புலப்படுத்துவதற்காகவும் சுருதி அவ் வாறு சொல்கிறது. கர்மத்தைச் செய்வதாக மனோபாவம் உள்ளவரையில் அவனுக்குக் கர்மா உண்டு; அதன் பலன் அவனைப் பந்தப்படுத்தும். ஞானிகளுக்கு அந்த மனோபாவ மில்லை. அஞ்ஞானியோ ஒருவனுக்கு ஹிம்ஸை செய்து விட்டால், தான் ஒரு பாப காரியம் செய்து விட்டதாகப் பச்சாத்தாபப்படுகிறான்; அப்படியே ஒரு புண்ணியம் செய்து விட்டோமென்று திருப்தி யடைகிறான். இவற்றால் தனக் கும் கர்மத்துக்கும் ஸம்பந்தம் இருக்கின்றதென்ற மனோ பாவம் அவனிடம் நிலைத்திருப்பதை அறியலாம். ஆதலின் அக்கர்மங்களின் பயன்களும் அவனைப் பந்தப்படுத்துவன வே. ஞானிகளுக்கு இத்தகைய மனோபாவம் அடியோடு

ஒழிந்துவிடுவதனால், அவர்களுக்குக் கர்மாவும் இல்லை; கர்ம பலனும் இல்லை.

22. வினா: விதியின் பயனை அனுபவித்தே தீரவேண்டுமென்று சில சாஸ்திரங்கள் கூறுகின்றன; மதியினால் விதியை வெல்லலாமென்று வேறு சில கூறுகின்றன; இவை ஒன்றுக் கொன்று முரண்பாடல்லவா?

விடை: விதி யென்பதற்குப் பிராரப்தமென்றும் வாஸனை யென்றும் இரண்டு அர்த்தம் உண்டு. விதியின் பயனை அனுபவித்தே தீர வேண்டுமென்று சொல்லும்போது அங்கே விதியென்பதற்குப் பிராரப்தமென்று பொருள் கொள்ளவேண்டும். ஜன்மாந்தரங்களில் செய்த கர்மாக்களின் குவியல்களுக்கு ஸஞ்சிதமென்று பெயர். அந்தக் குவியலில் இந்த ஜன்மத்தில் அநுபவிக்க ஏற்பட்ட பகுதியே பிராரப்தமாகும். அதனை யாவரும் அனுபவித்தே தீர்க்க வேண்டும். ஞானிகளும் அதை ஸந்தோஷமாக அனுபவிக்கிறார்கள். அவர்கள் மனோநாசம் வந்தவர்களாதலால் அந்தப் பிராரப்தத்தால் உண்டாகும் அநுபவம் அவர்களை ஒன்றும் செய்வதில்லை. குளோரபாரம் கொடுத்தவனுக்குத் தேகஸ்மரணை போய்விடுவதும், அப்பொழுது என்ன செய்தாலும் அவன் உணராமல் இருப்பதும் போல ஞானிகள் ப்ரம்ம ஞானத்தால் லௌகிக திருஷ்டி நீங்கி ஸாக்ஷாத்காரமாக இருப்பதால் பிராரப்தம் அவர்களுடைய சரீரத்தை மட்டும் பாதித்து நீங்குவதையன்றி அவர்களுக்கு அதன் அநுபவம் தெரியாது.

மற்றவர்கள் ஒரு புண்ணிய கர்மாவைச் செய்துவரும் இடையில் பல துன்பங்களை அநுபவிக்கிறார்கள்; நியாயமாக நற்காரியங்களைச் செய்கிறவர்கள் இன்பத்தை யல்லவா அனு

பவிக்க வேண்டும்? அப்படி யில்லாமல் புண்ணியம் செய்பவர்கள் துன்பத்தை அடைவதும், பாப காரியம் செய்து கொண்டிருப்பவர்கள் சுகத்தை அடைவதும் விரோதமல்லவா? ஆதலால் அவர்கள் அடையும் இன்ப துன்பங்கள் இப்பொழுது செய்யும் கர்மாவின் பலன் அல்ல; அவை பிராரப்தத்தின் பலன்கள். இதை அறியாத சிலர், "நாம் நல்ல காரியங்களே செய்து வருகிறோம்; ஆனால் மேலும்மேலும் கஷ்டந்தான் வருகிறது. ஈஸ்வரனுக்குக் கண் இல்லை" என்று பகவான் மேல் தோஷாரோபணம் செய்கிறார்கள்; வேறு சிலர், "நான் அக்ரமம் செய்வதாகச் சொல்கிறீர்களே; எனக்கு எவ்வளவு சௌக்கியங்கள் உண்டாயிருக்கின்றன; பாபமாவது, புண்யமாவது! எல்லாம் பொய்" என்று சொல்லி ஆஸ்திகர்களையும் கெடுக்கிறார்கள். இவர்கள், தாங்கள் அனுபவிக்கும் துன்பமும் இன்பமும் ஜன்மாந்தர கர்மபலனென்றும் இப்பொழுது செய்யும் கர்மாக்களுக்குரிய பலன்களைப் பின் வரும் ஜன்மங்களில் அநுபவிக்க நேருமென்றும் எண்ணுவதில்லை.

வாஸனை யென்பது இத்தகையதல்ல. பல ஜன்மாக்களில் உண்டான பழக்கத்தால் ஏற்படும் ஒருவகை உணர்ச்சியே வாஸனையாகும். அந்த வாஸனையால் மனிதன் ஒரு கர்மாவைச் செய்யத் தூண்டப்படுகிறான். ஆனால் அவன் தன்னுடைய விசாரணையினால் அதன் பாப புண்ணியத்தை ஆராய்ந்து பாபமாக இருந்தால் அதைச்செய்யாமல் இருக்கலாம். அப்பொழுது அவன், வாஸனையாகிற விதியை மதியால் ஜயித்து விடுகிறான். பொடிபோட எண்ணுபவன் ஒரு முறை போட்டால் அது பழகிவிடாது. பல முறை போட்டபிறகு அதன்பால் வாஸனை ஏற்படுகிறது; அவனை

அறியாமல் அடிக்கடி போடுகிறான். ஆனால் அவன் தீவிர முயற்சியால் அந்தப் பழக்கத்தை நிறுத்திவிடலாமல்லவா? இந்த மாதிரி அனந்தந்தடவை பழகிய கெட்டவாஸனைகளில் மனம் செல்லும்பொழுது அதனைச் சாஸ்திர விசாரணையாலும் ஸத்ஸங்க விசேஷத்தாலும்உண்டான புத்தியின் வன்மையால் தடுத்து ஜயித்துவிடலாம்; இதைத்தான் விதியை மதி வெல்லுமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

நாம் ஜபம் பண்ணிக்கொண்டிருக்கும்போது அழகான ஸ்திரீ ஒருத்தி வந்து நம் தபஸைக் கெடுத்து நம்மைத் தன்பால் ஈடுபடும்படி வற்புறுத்துவாளாயின் அப்பொழுது சாஸ்திரங்களிலுள்ள அறிவினால் அந்த ஸ்திரீயை மாதாவாக நினைத்துக் கெட்ட வாஸனையை ஜயித்துவிடலாம். இப்படியே ஆஸுரவாஸனைகளையெல்லாம் மைத்திரி முதலிய ஸத்வாஸனைகளால் ஜயித்து விடலாம். ஜாதகப்பிரகாரம் ஆயுர்பாவம் கொஞ்சமாக இருந்தாலும் தபஸினாலும் யோகாப்பியாஸத்தினாலும் ஆயுளை விருத்தி செய்துகொள்ளலாம். அதனால்தான் ஞானிகளுக்கும் ப்ராம்மணனுக்கும் ஜோஸ்யம் உபயோகப்படாது என்று பெரியோர்கள் சொல்கிறார்கள்.

23. வினா: கர்மபலத்தைத் தருபவர் பகவானானால் ஒருமனிதனைக் கஷ்டத்துக் குள்ளாக்குவதும் மற்றொருவனைச் சுகம்பெறச் செய்வதும் பக்ஷபாதமாகாதா?

விடை: கர்மபலத்தைத் தருவதில் பகவானுக்கு ஸ்வதந்திரம் இருந்து இப்படிச் செய்தால் பக்ஷபாதம் இருப்பதாகச் சொல்லலாம். ஜீவர்களுடைய கர்மத்துக்கு ஏற்றவாறே பலனை வினியோகம் செய்வதுதான் அவர் செய்வது. அதில் உண்டாகும் ஏற்றத்தாழ்வு நாம் செய்யும் கர்மாக்களை

யே பொறுத்திருக்கின்றன. அதைக் குறைப்பதும் அதிக மாக்குவதும் பகவான் வேலையல்ல. நமக்குச் சுகமும் துக்க மும் நாம் விரும்பியபடியே அமையவேண்டுமானால் அவை களுக்கேற்ற கர்மாக்களை நாமே செய்யவேண்டும். நாம் செய் கிற கர்மபேதந்தான் ஈச்வரனுக்குப் பக்ஷபாதம் இருப்பது போலத் தோன்றச்செய்கிறது.

24. வினா: நம்மைக்கெட்ட கர்மாச் செய்யவும் நல்ல கர்மாச்செய்யவும் தூண்டுபவர் பகவான்தானே?

விடை: பகவான் நிர்விகாரி; ஸாக்ஷிமாத்திரமாய் இருக்கிறார். அவர் செய்வதும் செய்யச் செய்வதும் இல்லை. காந்தத்தினுடைய முன்னிலையில் இரும்புகள் சேஷ்டிக்கிறது போலவும், ஸூர்ய ஸந்நிதியில் தாமரைகள் மலர்வதும் நீலோற்பலம் குவிவதும் ஆகிய செயல்கள் நடப்பதுபோல வும் பகவானுடைய ஸந்நிதியில் ஜீவகோடிகள் சேஷ்டிக்கின் றன. பகவான் ப்ரேரணை செய்வதாக இருந்தால் வேதத் தின் மூலமாக, 'நல்லதைச் செய்; கெட்டதைச் செய்யாதே; சத்தியம் சொல்' என்பவற்றைப்போன்ற அரிய உபதேசங் களை நமக்காக வெளிப்படுத்தியிருக்க மாட்டார். கெட்ட வையும் நல்லவையும் பூர்வவாஸனையை அநுஸரித்து மனோ ஸங்கற்பத்தால் உண்டாகின்றன.

பகவான் கற்பகவிருக்ஷத்திற்கு ஸமானம். அந்த விரு க்ஷம் யார் எதைக் கேட்டாலும் கொடுக்கும் இயல்புடையது. பணத்தைக் கேட்டால் அது கொடுக்கும்; நல்ல ஆபரணங்க ளைக் கேட்டால் அவற்றைக் கொடுக்கும்; பொடியைக் கேட் டால் அதையும் கொடுக்கும்; கள்ளைக் கேட்டால் அதையும் கொடுக்கும். அதுவாக நமக்கு வேண்டியதை அறிந்து தராது. நாம் எதைக் கேட்கிறோமோ, அதைத் தரும். ஆகையால்,

நல்லது இது, கெட்டது இது என்று நாமே விசாரணை செய்து பிறகு அதைக் கேட்கவேண்டும். பகவான் நமக்குப் பகுத்தறிவைக் கொடுத்திருக்கிறார். அதோடு நல்லது இது, கெட்டது இது என்று தெரிந்து கொள்வதற்கு வேத சாஸ்திரங்களையும் வெளிப்படுத்தியிருக்கிறார். நாம் மோக்ஷபதவியை அடைவதற்கு வேண்டிய அனுகூலங்களைப் பரம கருணையினால் அவர் செய்திருக்கிறார். இன்னும் அவர் வேறு என்ன செய்ய முடியும்? அவரைப் பக்ஷபாதியென்று சொல்வது பாபமல்லவா?

25. வினா: *பகவானை ஸதா பஜித்துக் கொண்டுவந்தால் போதாதா? எதற்காகக் கர்மாவைச் செய்யவேண்டும்?*

விடை: நாம் ஒரு யஜமானரிடத்தில் ஸேவகாவிருத்தி செய்கிறோமென்று வைத்துக் கொள்வோம். அவரை எப்பொழுதும் ஸ்தோத்திரம் செய்து கொண்டு அவர் மனத்தை ஸந்தோஷப்படுத்தவேண்டும்; அவருக்கு வந்தனம் செய்யவேண்டும்; அவருக்குப் பிரியமான வஸ்துக்களை வாங்கிக் கொடுக்கவேண்டும். இத்தனையும் செய்தால் கூடப் போதாது. அவர் எந்த எந்த ஸமயத்தில் எதை எதைச் செய்யும்படி கட்டளையிடுகிறாரோ, அவற்றைச்செய்தால்தான் அவருக்குப் பூர்ண திருப்தி உண்டாகும். அதைப்போல ஸர்வ ஜகத்துக்கும் யஜமானராகிய பகவானுக்கு நாமெல்லாம் தாஸர்கள். கர்த்திருத்துவ போக்திருத்துவ அபிமானமிருப்பதால் நாம் அவர் நியமித்திருக்கும் விதிகளுக்கு அடங்கி நடக்கவேண்டும். அகர்த்தாவாகவும் அபோக்தாவாகவும் ஆகும்போது நாமும் அவருக்கு ஸமமாக ஆய்விடுவோம். அப்பொழுது நாம் ஞானுபவம் அடைகின்றோம். அதுவரையில் நாம் பகவானை ஸ்தோத்திரம் செய்து பக்தி பண்ணுவதோடு

அவர் ஶ்ருதி ஸ்மிருதிகளில் யார் யாருக்கு எந்த எந்த விதமாகக் கட்டளையிட்டிருக்கின்றனரோ, அந்த அந்தவிதம் கர்மாக்களைச் செய்யவேண்டும். அவற்றைச் சிரத்தையாகச் செய்து அவருக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். இவ்வளவும் செய்தால்தான் சீக்கிரம் அவருடைய அனுக்ரகத்திற்குப் பாத்திரர்களாக முடியும்.

பரமாத்மா பிதாவுக்கு ஸமானம்; ஈஶ்வரன் அவருக்கு ஸமானமான ஜேஷ்டப்ராதா; நாம் கனிஷ்டர்கள்; ஜேஷ்ட ப்ராதாவால் விதிக்கப்பட்டவற்றை நாம் செய்து ஸந்தோஷ முண்டாக்கினுல் நாமும் பெரியவர்களாகி மேஜர் ஸ்தான மடைந்து பிதாவாகிய பரமாத்மாவின் ஸ்வராஜ்யத்தை ஆள் வதற்குரிய பாத்தியம் பெறுவோம்.

26. வினு: காம்ய கர்மாவைச் செய்வதைக் காட்டி லும் நிஷ்காம கர்மாவைச் செய்வதில் என்ன விசேஷம்?

விடை: நாம் முதலில் ஒரு யஜமானனிடத்தில் வேலைக்குப் போகும்போது அப்பொழுதே 'இவ்வளவு ரூபாய் கொடுத்தால்தான் உம்மிடத்தில் இருக்க முடியும்' என்று சொன்னுல் அந்த யஜமானன் நாம் கேட்ட தொகையை மட்டும் தருவான்; அவனுக்கு நம்மேல் அன்பு உண்டாகாது. அவ்வாறு முதலிலே கூலியை வரையறுத்துப் பேசாமல், 'நீங்கள் ஸந்தோஷமாக எவ்வளவு கொடுத்தாலும் கொடுங்கள்' என்று அவன்மேற் பாரத்தைப் போட்டுவிட்டால் 'இவன் மிகவும் நல்லவன்' என்ற ஓர் அன்பு அவனுக்கு உண்டாகிறது; அதோடுகூட நம் வேலையைப் பார்த்து ஸந்தோஷித்து அவனுகக் கொடுக்கிறதாக இருந்தால் நாம் எண்ணுவதைவிட அதிகமாகவும் கொடுப்பான். இதைப் போல ஸகல ஜகத்துக்கும் ஈஶ்வரன் யஜமானனுகையால்

நாம் கேவலம் அற்பவிஷயங்களுக்கு ஆசைப்பட்டுக் கர்மாக் களைச் செய்தால் நமக்கு அந்தப்பலன்றான் கிடைக்கும். அப் படியில்லாமல், 'பகவானுக்கு எது திருவுள்ளமோ அது நமக்குக் கிடைக்கும்; இதைச் செய்யவேண்டியது நம் கடமை; மற்றவற்றை நாம் கவனிக்க வேண்டாம்' என்று எண்ணிச் செய்து எல்லாவற்றையும் பகவானுக்கு அர்ப் பணம் செய்து விட்டால் நமக்குச் சித்தசுத்தி உண்டாகி ஞானநிலை ஏற்படும்; அதனால் எல்லாவற்றிலும் பெரிய பிரயோஜனமாகிய மோக்ஷம் கிடைக்கும்.

ஆகையால் தர்மமாகிய ஒரு விருக்ஷத்திற்கு மூன்று கிளைகளாகிய யஞ்ஞம், தானம், தபஸ் இவைகளை நிஷ்காம்ய மாகச் செய்தால்தான் ஞானம் உண்டாகி முக்தி பெறலாம். பரமாத்மாவை அடைவதற்குக் கர்மா நேரான ஸாதன மன்று; பரம்பரா ஸாதனமே. அதனைச்செய்வதால் மட்டும் பிரம்மத்தை அடைய முடியாது; விசாரணையினால் நிஷ்காம கர்மங்களைச் செய்து அவற்றின் பலனை ஈச்வரார்ப்பணம் செய்து ஞானம் அடைந்தால்தான் மோக்ஷம் பெறலாம்.

27. வினா: ஜீவன் முக்தர்களான ஸன்யாஸிகளுக்கு ஸந்தியாவந்தனம் உண்டா?

விடை: ஜீவன் முக்தர்களின் ஹ்ருதயாகாசத்தில் சித் என்னும் ஆதித்தியன் உதயாஸ்தமனம் இல்லாமல் எப் பொழுதும் ப்ரகாசித்துக் கொண்டிருப்பதால் ஸந்தியாகாலம் கிடையாது. ஸந்தியாகாலம் இல்லாததால் ஸந்தியாவந்தன மும் அவர்களுக்கு இல்லை. மேலும் இவ்வளவு காலமாக மோஹத்தைச் செய்துவந்த மாயையென்னும் ஸ்திரீ இறந்து போனதால் ஒரு ஸூதகம் ஏற்படுகிறது; ஞானமென்னும் குழந்தை ஒன்று பிறந்திருப்பதால் அந்த ஆசௌசம் ஒன்

றும் உண்டாகிறது. இந்த இரண்டும் இருக்கும்போது ஸந்தியாவந்தனம் அவர்களுக்குக் கிடையாது. கிருஹஸ்தர்களுக்கு ஓர் ஆசௌசம் வந்தாலே கர்மா குறைகிறது; ஸன்யாஸிகளுக்கு இரண்டு ஆசௌசம் வந்ததால் கர்மா முழுவதும் போய்விடுகிறது. கிருகஸ்தர்களில் ஞானிகள் இருந்தால் அவர்களுக்கும் இத்தகைய நிலை இருந்தாலும் உலகத்தின் பொருட்டு ஸந்தியாவந்தனம் முதலிய கர்மாக்களைச் செய்தே தீரவேண்டும். அவர்கள் உலகத்தோடு ஒட்டி நடக்கவேண்டும். மற்றப் பாமரர்கள் தங்களைப் பார்த்துக் கெட்டுப்போகாமல் இருக்கவேண்டுமென்னும் கருணையினால் அவர்கள் பாமரரைப் போலவே கர்மாக்களைச் செய்து காட்டுவார்கள்.

28. வினா: அவதூதாஶ்ரமம் இந்த யுகத்திற்குக் கிடையாதென்றும், சரீரம் மறந்து எல்லாம் நழுவிப்போகும் காலத்திலேதான் இந்த ஆஶ்ரமம் ஏற்றுக்கொள்ளத்தக்கதென்றும் சிலர் சொல்லுகிறார்களே; ஸ்வாமிகள் அபிப்பிராயம் என்ன?

விடை: வைராக்கியமும் ஞானமும் யாருக்கு அதிகமாக இருக்குமோ அவர்கள் எந்தயுகத்திலும் இந்த ஆஶ்ரமத்திற்கு அதிகாரியே. சரீராபிமானம் முற்றும் ஒழித்தவன் தான் இந்தஆஶ்ரமத்தில் இருக்கமுடியும்; ஸாமான்யர்களால் இயலாது. மற்ற ஆஶ்ரமங்களில் உள்ளவருக்கு உலகத்தாருடைய பூஜைமட்டும் கிடைக்கும். இந்தஆஶ்ரமத்திலோ பூஜையோடு பலவிதமான ஸகிக்தற்கரிய ஹிம்ஸைகளும் சரீரத்திற்கு உண்டாகும். இரண்டையும் ஸமமாக யாரால் சகிக்கமுடியுமோ அவரே இந்த ஆஶ்ரமத்தில் நிலைத்திருக்கமுடியும்.

ஸுஷுப்தியில் ஒவ்வொரு மனிதனும் தூங்கும்போது சரீரத்தை மறந்துபோகிறான். பலஸமயங்களில் வஸ்திர

கௌபீனாதிகள் நழுவிப்போகின்றன. அப்படி அவைதாமாக நழுவுவதை எண்ணி உடனே அவதூத ஆச்ரமத்திற்குவந்து விடலாமா? அஞ்ஞான காலத்தில் அவை நழுவுவதனாற் பிரயோஜனம் இல்லை. புத்தி பூர்வமாய் வைராக்கிய மடைந்து ஸன்யாஸம் செய்துகொண்டால்தான் பிரயோஜனம் உண்டு.

29. வினா: மற்ற ஆச்ரமங்களிலும் ப்ரம்மானந்தானுபவம் அனுபவித்தற்குரிய வழிகள் இருக்கும்பொழுது இவ்வளவு கடுமையான ஆச்ரமத்தை எதற்காக மேற்கொள்ள வேண்டும்?

விடை: எல்லா ஆச்ரமங்களிலும் எல்லாருக்கும் ஆனந்தானுபவம் அவ்வளவு ஸுலபமாக வந்துவிடாது. ஸனகாதிகளைப்போன்ற சில அபூர்வமான யோகப்ரஷ்டர்களுக்கு ஸுலபமாக வந்துவிடலாமே தவிர ஸாமான்ய ஜனங்களுக்கு இவ்வளவு கஷ்டங்கள் வந்தால்தான் மனம் நாசத்தை அடையும். அந்த யோகப்ரஷ்டர்களும் அநேக ஜன்மாக்களில் இந்த மாதிரி கஷ்டங்களை ஸஹித்துத்தான் கடைசி ஜன்மாவில் ஸுலபமாக அநுபவம் அடைகிறார்கள்.

கிருகஸ்தாச்ரமத்தில் எவ்வளவு ஞானியாக இருந்தாலும் திருஷ்டதுக்கம் விடாது; ஆதலின் சித்தவிச்ராந்தி ஏற்படாது. சித்தவிச்ராந்தியை உத்தேசித்தும் ஜீவன்முக்தருக்குரிய விலக்ஷணமான ஆனந்தத்தை நிரந்தரமாய் அனுபவிப்பதற்குந்தான் இந்த அவதூதாச்ரமத்திற்கு வருவது.

மேலும், உலகத்தில் கேவலம் சிற்றின்ப ஸுகத்தை அனுபவிப்பதன்பொருட்டு வியபிசாரியான ஒரு ஸ்திரீயும் காமமுள்ளவனை ஒரு புருஷனும் குலம் கோத்திரம் மானம் அவமானம் ஜாதி வெட்கம் ஆகிய எல்லாவற்றையும் பரித்

தியாகம் செய்துவிட்டு ஏகாந்தமான இடத்தில் போய் எப்படித் தம் இச்சையைப் பூர்த்தி செய்துகொள்ளுகிறார்களோ அதுபோலப் பேரின்பத்தை அடையும் பொருட்டு அவதூதன் அவ்யபிசாரனாக இருந்துகொண்டு குலம், கோத்ரம், ஜாதி முதலிய எல்லாவற்றையும் ஸந்யாஸத்தால் தியாகம் செய்துவிட்டு அவ்யபிசாரியான முக்திகாந்தையினிடத்தில் ஆத்மாராமனாக ஏகாந்த இடத்தில் நிஷ்டை செய்து ப்ரம்மானந்தத்தை அநுபவிக்கிறான்.

30. வினா: தம்முடைய ப்ரம்மானந்த ஸுகத்தைக் கூட அதிகம் நாடாமல் லோகத்திற்காகச் சில ஸன்யாஸிகள் உபகாரம் செய்கிறார்களே; எதற்காக?

விடை: ஸமுத்திரத்தில் எவ்வளவு ஜலம் இருந்தாலும் அஃது உப்பாக இருப்பதால் ஜனங்களுக்கு உபயோகப்படுவதில்லை. ஆனால் சூர்ய உஷ்ணத்தால் அந்த ஜலம் ஆவியாக மாற, அதை மேகம் ஏற்றுக்கொண்டு நல்ல ஜலமாகப் பொழிந்து உலகத்துக்கு நன்மையை உண்டாக்குகிறது. மகாத்மாக்கள் மேகத்தைப்போல ஸஞ்சாரம் செய்கிறார்கள். கர்மிகள் கையில் எவ்வளவு பணம் இருந்தாலும் அது நல்ல தர்மங்களுக்கு உபயோகப்படுகிறதில்லை. அதை இந்த ஞானிகள் வாங்கிக் கர்மிகளைப் புனிதப்படுத்தி உலகத்திற்கும் நன்மை செய்கிறார்கள். அந்தப் பணத்தை நல்ல விஷயத்திற் செலவு செய்யும்படி அவர்களை வற்புறுத்துகிறார்கள்; தாங்களும் வாங்கி நல்ல விஷயத்திற்குச் செலவு செய்கிறார்கள். அப்பொழுது கர்மிகளின் பாபம் நிவர்த்தியாகிறது. ஜீவகோடிகள்பாலுள்ள கருணையால் தங்களுடைய ஆனந்தானுபவத்தைக்கூட அத்தகைய ஞானிகள் கவனிக்கிறதில்லை.

31. வினா: தனக்குரிய ஆத்மார்த்தமான காரியங்களைச் செய்வதைக் காட்டிலும் லோகோபகாரம் செய்வது மேல் என்று இக்காலத்திற் சிலர் சொல்லுகிறார்களே; அது ஸரியா?

விடை: உலகத்திலுள்ள ஸாமான்யமான வித்தைகளின் விஷயத்தில் அந்த அபிப்பிராயம் ஸரியாயிருந்தாலும் பிரம்மவித்தையின் திறத்தில் அவர்கள் சொல்வது ஸரியாகாது. தன் ஆத்மார்த்தமான காரியங்களில் எவனுக்கு உண்மையாக ஶ்ரத்தையில்லையோ அவன் பரோபகாரம் செய்கிறேனென்று சொல்வது பொருந்தாது. தன்னையே கவனியாதவன் பிறரை எப்படிக் கவனிக்கப்போகிறான்? தனக்கு ஞானத்தில் ஸ்வாநுபூதியிருந்தால்தான் ஒருவன் பிறருக்கு அதைப் போதிக்கமுடியும்; தனது ஞான விசேஷத்தால்தான் அஞ்ஞானிகளது அந்தஃகரணத்தைச் சுத்தப்படுத்த முடியும். இல்லாவிட்டால் ஒரு குருடன் வேறொரு குருடனை வழிகேட்டால் இரண்டு குருடர்களும் எப்படி வழிதப்பிவிடுகிறார்களோ அப்படியே இரண்டு பேர்களும் ஞானத்தை அடையாமல் இருப்பதோடு முன்பே இருந்த அஞ்ஞானம் பின்னும் அதிகமாவதால் உலகத்தைக் கெடுத்துவிடுவார்கள். குருமுகமாக வேதாந்த சாஸ்திரங்களைச் சந்தேகமற அப்யஸித்து ஸ்வாநுபூதி வந்தவன்தான் உபதேசம் செய்ய அருகனாவான்.

32. வினா: குருமுகமாக வேதாந்தபாடம் அப்யாஸம் செய்யாமல் தாமே வேதாந்த சாஸ்திரங்களைப் படிப்பவர்கள் குருஸ்தானத்திற்குத் தகுதியுள்ளவர்களா?

விடை: அநுபூதிமான்களான குருமுகமாக வல்லாமல் தாமே வேதாந்த சாஸ்திரங்களைப் படித்த அஞ்ஞானிகள்

உலகிலுள்ள ஸபைகளில் பெரிய விருதுகளை அடையலாம்; ஆனால் அவர்கள் குருஸ்தானத்திற்கும், சிஷ்யர்களுடைய அவித்தையைப் போக்கி ஞானத்தைக் கொடுத்துக் கிருதார்த்தர்களாகச் செய்வதற்கும் சக்தர்களாக மாட்டார்கள்; அனுபூதிமான்களான மகான்களுடைய ஸபையில் சோபிக்கமாட்டார்கள். ஒரு ஜார புருஷனுடைய ஸம்பந்தத்தால் கர்ப்பவதியான ஒரு ஸ்திரீ தான் பெற்ற குழந்தையை எப்படி ஸபையில் தன் குழந்தையென்று சொல்வதற்கு முடியாதோ அது போலவே ஞானிகளுடைய ஸபையில் அஞ்ஞானிகளுக்குச் சோபையிராது. ஞானிகளே குருவாக இருக்கத்தக்கவர்கள். அஞ்ஞானிகளாகிய குருமார்களை அடைந்த சிஷ்யன் தானும் கெட்டு உலகத்தையும் கெடுக்கிறான்.

33. வினா: குருகுலவாஸம் முதலான ஸாதனங்களை முறையாக அனுஷ்டித்தே ஆகவேண்டுமென்று சாஸ்திரங்கள் சொல்லும்போது அர்ஜுனனைப் போலச் சில மகான்கள் குருகுலவாஸமோ சமதமாதி ஸாதனானுஷ்டானமோ இல்லாமல் உபதேசத்திற்கு எப்படிப் பாத்திரரானார்கள்?

விடை: ஜன்மாந்தரங்களில் ஸாதனங்களை அனுஷ்டித்து முடித்துவிட்டுத் தனுமானஸி என்ற மூன்றாவது பூமி வரையில் அப்யாஸம் செய்து யார் மரித்துவிடுவார்களோ அவர்கள் மறு ஜன்மத்தில் யோகப்ரஷ்டர்களாக ஜனிக்கிறார்கள். அதனால் யோகப்ரஷ்டர்களுக்குக் குருகுலவாஸம் முதலிய ஸாதனானுஷ்டானம் வேண்டியதில்லை யென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. அர்ஜுனன் அந்த யோகப்ரஷ்டர்களிற் சேர்ந்தவன்; ஆதலால் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவையில்லாமலே அவனுக்கு உபதேசம் செய்தார்.

34. வினா: யோகப்ரஷ்டர்கள் எடுக்கும் ஜன்மம் எத்தனைவிதம்?

விடை: ஜன்மாந்தரத்தில் போகவாஸனை அதிகமாகவும் வைராக்கியம் குறைவாகவும் இருந்து இறந்து போனால் அத்தகைய யோகப்ரஷ்டர்கள் ஜனகரைப்போல் ராஜவம்சத்தில் ஜனிக்கிறார்கள். அப்படி வந்தவன் அர்ஜுனன். வைராக்கியம் மிகுதியாக இருந்து போக வாஸனை குறைந்து அப்யாசம் செய்திருந்தால் அத்தகையவர்கள் பரம ஏழையான பிராம்மண குடும்பத்தில் வந்து ஜனனம் செய்து அவதூதர்களாகப் போகிறார்கள். அப்படி வந்தவர்களே ஸதாசிவ ப்ரம்மம் முதலியவர்கள்.

35. வினா: திருப்பதி ஏழுமலையானென்பதன் தத்வம் என்ன?

விடை: ஸப்தாவஸ்தைகளையும் கடந்து நிற்கும் பரப்பிரம்மம் என்பது உட்குறிப்பு. அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம், பரோக்ஷம், அபரோக்ஷம், துக்க நிவர்த்தி, ஆனந்த ப்ராப்தி இவைகளே ஸப்தாவஸ்தைகள். சுபேச்சை, விசாரணை, தநுமானஸி, ஸத்வாபத்தி, அஸம்ஸக்தி, பதார்த்தாபாவனை, துரியம் என்னும் ஏழு பூமியையும் கடந்து செல்லும் யோகி பிரம்மஸாக்ஷாத்காரம் அடைகிறான். அதைப்போல் ஏழுமலைகளை ஏறினால் வேங்கடேச ப்ரம்மத்தைப் பார்க்கலாம். ஆனால் முதல் பூமியாகிய சுபேச்சை வந்துவிட்டால் மற்றப் பூமிகள் எல்லாம் வருவது ப்ரமமில்லையென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. அதுபோல முதலில் காலி கோபுரம் வரையில் மலைப்படி ஏறுவது நிரம்பவும் கஷ்டம்; பிறகு மற்ற எல்லாம் ஏறுவது ஸுலபம். உலகத்தில் உள்ள எல்லாவற்றையும் விசாரணை செய்து பார்க்கும்போது இது போலத் தத்துவார்த்தமாகவே காணப்படும்.

36. வினு: தேவர்களும் அஸுரர்களும் பாற்கடலைக் கடையும்போது அஸுரர்களுக்கு விஷமும் தேவர்களுக்கு அம்ருதமும் வந்ததாகச் சொல்லுவதன் தாத்பர்யம் என்ன?

விடை: பால்சமுத்திர மென்பது வேதம். மத்தே புத்தி. கயிறாகிய ஸர்ப்பம் அஞ்ஞானம். நானே பிரம்ம மென்று மைத்திரியாதி ஸத்வாஸனையோடுகூட யார் இருக்கிறார்களோ அவர்களே தேவர்கள்; அவர்கள் தெய்வ ஸம்பத்துள்ளவர்கள். நான் ஸர்வசக்திமான், எனக்கு ஸமமானவன் யார் என்பதைப் போல அநாத்மாவை ஆஸ்ரயித்துக் கொண்டு வ்யவஹரிக்கிறவர்கள் ஆஸுர வாஸனையுள்ள அஸுரர்கள். இந்த இருவகையினரும் சேர்ந்து வேதமென்னும் ஸமுத்திரத்தைப் புத்தி யென்னும் மந்தர பர்வதத்தால் கடையும் போது வேதத்திற்கு விபரீத அர்த்தமாகிற விஷத்தைக் கற்பித்துக்கொண்டு அஸுரர்கள் கெட்டுப்போகிறார்கள். தேவ ஸம்பத்துள்ள தேவர்கள் நல்ல அர்த்தமாகிற ஞானம்ருதத்தினுல் பேரின்ப சுகத்தை அனுபவித்து ஜனன மரணமற்றிருப்பார்கள். அந்த அம்ருத மதன காலத்தில் சந்திரன், லக்ஷ்மி முதலியவர்கள் வந்ததைப் போல வேதமாகிய பாலாழியிலிருந்து ப்ரபோத சந்திரன், மோக்ஷ லக்ஷ்மி முதலியன அனுபவத்திற்கு வருகின்றன. இப்படி எல்லாப் புராண கதைகளும் தத்துவார்த்தமாகவே முடிவு செய்யப்பட்டிருக்கின்றன.

37. வினு: மகாத்மாக்களுக்கும் அவதார புருஷர்களுக்கும் வித்தியாஸமென்ன?

விடை: மகாத்மாக்கள் ப்ராகிருத சரீரத்தோடு கர்ப்ப வாசம் முதலிய துக்கங்களை அனுபவித்துக் குருகுல வாசம்

முதலியவற்றைச் செய்து ஞானத்தைக் கிரமமாக அடைந்து ஜனன மரண ஸம்ஸாரத்தை இல்லாமற் செய்து கொண்டவர்கள். அவதார புருஷர்களோ அப்ராகிருத சரீரத்தோடு, ஜனித்தது போல் ஜனங்களுககுக் காட்டிக்கொண்டு அமானுஷ்யமான செய்கைகளோடு பிறக்கும்போதே ஞானத்தோடு ஜனிக்கிறவர்கள். ராமர், கிருஷ்ணர், சங்கரர் முதலியவர்கள் அவதார புருஷர்கள். அவர்கள் சிறுவயதிலேயே செய்த ஒவ்வொரு செயலால் தாங்கள் அவதார புருஷர்களென்பதை உலகத்திற்குக் காட்டியிருக்கிறார்கள். அவர்களுக்கு அணிமாதி ஸித்திகள் ப்ரயத்னமில்லாமல் ஸித்தித்திருக்கும். அவர்கள் அதிகாரி புருஷர்கள்; அவ்வக் காலத்தில் அவதரிப்பார்கள்.

38. வினா: கிருபணன் என்பவன் யார்?

விடை: கேவலம் உபாஸனையை ஆஶ்ரயித்த ஜீவனொருவன், "பிரம்மத்திலிருந்து நான் உண்டானேன்; பிரம்மத்தில் இருந்தேன்; ஜகத் உற்பத்திக்குமுன் எல்லாம் பிரம்மமாகவே இருந்தன. மறுபடியும் பிரளயம் வரும் காலத்தில் பிரம்மத்தை அடையப் போகிறேன்' என்று அற்பமாக அறிந்தால் அவன் கிருபணனென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

39. வினா: பொய்யான இந்த ஜகத் சிருஷ்டியைப் பலவிதமான ப்ரகார பேதங்களாக ஒவ்வொரு வேதசாகையும் வர்ணிப்பதன் கருத்து என்ன?

விடை: ஸ்ருஷ்டி ஸத்தியமாக இருக்குமானால் எல்லாச் சாஸ்திரங்களும் ஒரேவிதமாக வர்ணிக்கும். பலவிதமாகச் சொல்லுகிறபடியாலேதான் அது பொய்யென்று வேதமே சொல்லுகிறது. ஸ்ருஷ்டியே உண்டாகவில்லையென்பது

வேதத்தின் துணிபு. ஆனால் உண்டானது போலச் சுருதி எதற்காகச் சொல்லுகிறது என்றால் அது முமுக்ஷுக்களுக்குப் பிரம்மத்தை அறியும் பொருட்டமைத்த ஓர் உபாயமே தவிர வேறு உத்தேசம் ஒன்றும் இல்லை. ஸ்ருஷ்டி ஸத்திய மென்று ஸ்தாபனம் செய்வது அந்தச் சுருதிகளின் தாத்பர்யம் அல்ல.

40. வினா: ஆத்மாவிலிருந்து ஆகாசம் முதலியவை உண்டானதாகக் கிரம ஸ்ருஷ்டி சொல்கிறதே; அதனால் ஆத்மாவுக்கு விகாரித்துவம் வாராதா?

விடை: ஆத்மாவிலிருந்து என்றால் ஆத்மாவின் மாயையிலிருந்து என்றுதான் அந்தச் சுருதியின் அர்த்தம். சுத்தப பிரம்மத்திலிருந்து ஸ்ருஷ்டி சொன்னால் நிர்விகாரத்துவம் போய் விகாரத்தை அடையும். ஆனதால் மாயா சபளித ப்ரம்மத்திலிருந்துதான் ஸ்ருஷ்டி உண்டாயிற் றென்று சொல்ல வேண்டும்.

41. வினா: தேவாஸுர யுத்தம் முதலான கதைகளை ஒவ்வொரு சாகையும் வெவ்வேறு விதமாக வர்ணிப்பதன் கருத்தென்ன?

விடை: இந்திரியங்கள் அஸுரர்கள்; ப்ராணன்கள் தேவதைகள்; ப்ராணனுக்கும் இந்திரியங்களுக்கும் உள்ள ஸம்வாதத்தில் ப்ராணனுடைய சிரேஷ்டத்தன்மையை ஸ்தாபனம் செய்வதற்காகத் தேவாஸுர யுத்தம் முதலான கதைகளை அர்த்தவாத ரூபமாகச் சுருதி கற்பனை செய்திருக்கிறது.

42. வினா: சாஸ்திரங்களெல்லாம் கற்பனையாக இருந்துவிட்டால் உண்மையான பிரம்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிப்பது எப்படி?

விடை: கடிகாரங்களை வியாபாரம் செய்யும் கம்பெனியார் கேட்லாக் வெளியிட்டிருக்கிறார்கள். அந்தக் கேட்லாக் கற்பனைதான். இருந்தாலும் அதை நம்பி எந்த எண்ணுள்ள கடிகாரம் நமக்கு வேண்டுமோ, அதைக் குறிப்பிட்டு எழுதி அனுப்பினால் உண்மையான கடிகாரம் நமக்கு வந்து விடுகிறது. உண்மையான கடிகாரத்தை அடைய இந்தக் கற்பனையான கேட்லாக் எப்படி ஸாதகமாக இருக்கிறதோ, அதுபோல ஸத்தியமான பிரம்மத்தை ஸாக்ஷாத்கரிப்பதற்கு இந்தக் கற்பனையான சாஸ்திரங்களும் உபகரிக்கின்றன. உண்மையை அறிந்துவிட்டால் சாஸ்திரங்கள் வேண்டியதில்லை. அதுவரையில் சாஸ்திரங்களை நம்பித்தான் ஆக வேண்டும்.

43. வினா: ஸமதரிசனம் என்பது என்ன? அதற்கும் ராஜயோகத்திற்கும் உள்ள வித்தியாஸம் என்ன?

விடை: ஸமதரிசனமே ராஜயோகம்; இரண்டிற்கும் வித்தியாஸமில்லை. ஸமமென்பது ஏகமென்றும் தரிசனமென்பது ஸாக்ஷாத்கார மென்றும் பொருள்படும். ஏகமாயும் அகண்டமாயுமுள்ள பிரம்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிப்பதற்குத்தான் ஸமதரிசனம் என்றுபேர். எல்லோரும் ஒரேமாதிரி கர்மத்தைச் செய்வதும் ஒன்றாகக் கலந்து வியவஹாரம் செய்வதும் ஸமதரிசனமல்ல.

44. வினா: ஜீவன் முக்தர்கள் கள்ளைக் குடித்தாலும் மாதர் இன்பத்தை நுகர்ந்தாலும் அவற்றில் பற்றுக் கொள்ளாரென்று சொல்கிற வாக்கியத்தைக் கொண்டு அவர்கள் எதுவும் செய்யலாமென்று சில போலி ஞானிகள் சொல்கிறார்களே; அஃது எந்தமட்டிலும் உண்மை?

விடை: 'தாயோடு ஸம்ஸர்க்கம் செய்தாலும் தேவ தாஸியோடு சேராதே' என்றால் தாஸிகளோடு ஸம்ஸர்க்கம் செய்வது முன்னதைக் காட்டிலும் மிக இழிந்ததென்பதே கருத்தாகக் கொள்ளவேண்டும்; அவ்வாக்கியத்தில் தாயோடு புணர்வது செய்யத்தக்கது என்பது பெறப்படாது. தாயுடன் ஸம்ஸர்க்கம் செய்வதும் தாஸிகளோடு ஸம்ஸர்க்கம் செய்வதும் ஆகிய இரண்டும் தள்ளற்குரியனவே. அதைப் போல ஞானிகள் எதுசெய்தாலும் அதன்பால் மோஹம் அடைய மாட்டார்களென்றால் அவர்கள் அத்தகைய இழிந்த செயலைச் செய்யலாமென்பது கருத்தன்று; அவர்களுடைய ஞானத்தின் சிறப்பை அவ்வாக்கியம் விளக்குவதற்காக எழுந்ததேயன்றி அவர்கள் சிற்றின்பத்தை நுகரலாம் என்பதை விதிப்பதற்கு வந்ததல்ல. உண்மையான பேரின்பத்தை அனுபவித்து அதன்கண்ணே மூழ்கிக் கிடக்கின்றவனுக்கு மிக இழிவான சிற்றின்பத்தில் முயற்சி செல்லுமென்பது பொருத்தமாகத் தோன்றுகிறதா? தேன் சுவை கண்டு அதை எப்பொழுதும் உண்டுகொண்டிருப்பவன் பிரண்டைச் சாற்றைக் குடிக்க முயல்வானா?

45. வினா: ஸாமான்யஞானிகள் (பிரம்மவித்துக்கள்) பேரின்பத்தை இவ்வுலகத்திலேயே நுகர்கின்றன ரென்றும் அவர்கள் அத்தகைய அனுபவத்தை அடைந்த பின்னர், எவ்வளவு வியவஹாரம் செய்தாலும் அவை அவர்களைப் பற்றா வென்றும் நூல்கள் கூறுகின்றனவே; அங்ஙனம் இருக்கப் பரதர் மான்பிறப்பை அடைந்தாரென்ற வரலாற்றின் உட்கருத்து என்ன?

விடை: இந்த வரலாறு ஸர்வஸங்க பரித்தியாகம் செய்யவேண்டியதன் அவசியத்தை வற்புறுத்துகின்றது.

ஸாமான்ய ஞானியான பரதரே மான்குட்டியின் ஸங்கத்தை மேற்கொண்ட தோஷத்தால் பிறவித்துன்பத்துக்கு ஆளானார் என்றால் ஸாதாரண முமுக்ஷுக்கள் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்து ஸங்கநிக்ரகம் செய்ய வேண்டும்? ஸங்கதோஷமானது ஆரூடனையும் பிறவித்துன்பத்துக்கு ஆளாக்குகிறது என்று சொன்னால்தான் யாவருக்கும் ஸங்கதோஷத்தால் வரும் கேடு மனத்திற் பதியும்; ஸங்கபரித்தியாகத்தின் அவசியம் புலப்படும். ஆதலின் இந்த இதிகாசம் ஜடபரதரைப் பற்றி இழிகூறவு வந்ததல்ல; அர்த்தவாதமாக, ஸங்கதோஷத்தால் விளையும் துன்பத்தையே கூற வந்தது.

46. வினா: பிரத்தியக்ஷமாகக் காணும் ஜகத்தை எப்படிப் பொய்யென்று சொல்லலாம்?

விடை: பொய்யென்றால் அத்தியந்தாஸத்து என்று அர்த்தம். ஜகத்து அப்படிப்பட்டதல்ல. அது மித்யை; அதாவது ஸத்துமில்லை; அஸத்துமில்லை; அநிர்வசனீயமானது. கண்ணுக்குத் தோற்றுபவையாகிற நாமரூபத்தையுடைய பொருள்கள் சில காலத்தில் அழிந்து மாறுபடுகின்றன; அவை க்ஷணத்துக்கு க்ஷணம் மாறிக்கொண்டே இருக்கின்றன. அதனால் பொய்யென்று அவற்றை நினைத்து அவற்றின்பாற் பற்று அறுவதற்காக இங்ஙனம் சொல்லப்படுகிறது.

47. வினா: ஜகம் பொய்யாக இருந்தால் வியவஹாரங்கள் மாத்திரம் ஸத்தியமாக இருக்குமா?

விடை: கயிற்றில் பாம்பு பொய்யாகத் தோற்றினாலும் பயமும் நடுக்கமும் உண்மையாகவே உண்டாகின்றன. சிப்பி வெயிலில் மின்னும்போது அதன்பால் வெள்ளி பொய்யாகத்தான் தோற்றுகிறது; ஆனால் அந்தத் தோற்றத்தினால்

உண்மை வெள்ளியென்றே ஸந்தோஷம் உண்டாகிறது. காண்பது பொய்யாக இருந்தாலும் அந்தத் தோற்ற மாத்திரத்தால் விளையும் பயன் உண்மையாக இருக்கிறது. அதைப் போல ஜகம் பொய்யாக இருந்தாலும் விபவஹாரங்கள் உண்மையாக நடக்கலாம்.

48. வினு: பரிணும வாதத்திற்கும் விவர்த்தவாதத்திற்கும் உள்ள வித்தியாசம் என்ன?

விடை: பால் தயிராக மாறுவது பரிணுமம். தயிர் மீண்டும் பால் ஆகாது; இரண்டின் குணமும் வேறு. ஆனுல் ஜகத்தானது பிரம்மத்திலிருந்து உண்டாகவில்லை. இந்த இரண்டிக்கும் வித்தியாஸமான குணம் இருப்பதாயின் அத்வைதம் ஸித்திக்காது. பிரம்மமே ஜகமாகத் தோற்றுகிறது. கயிற்றில் பாம்பு தோற்றுவதைப்போலப் பிரம்மத்தில் ஜகம் தோற்றுகிறது. அது வெறும் தோற்ற மாத்திரமேயாகும். எப்படி கயிறு பாம்பாக மாருமல் வெறுந்தோற்றத்தில் பாம்பாகக் காணப்பட்டதோ அப்படியே பிரம்மமே அதிஷ்டான அஞ்ஞானத்தால் ஜீவேச்வர ஜகத்தாகப் பிராந்தியினுல் தோற்றுகிறது. இதுதான் விவர்த்தவாதம்.

49. வினு: கயிற்றிலே ஸர்ப்பப் பிராந்தி உண்டானுல் அந்தப் பிராந்தி போனபிறகு பாம்பு தோற்றுவதில்லையே; ஆனுல் ஞானிகளுக்குப் பிரம்மஞானம் வந்த பிறகும் பஹிர் முகத்தில் ஜகமானது தோன்றுகின்றதே; ஏன்?

விடை: பிராந்தி நாசத்தின் பின்பு ஸர்ப்பம் தோற்றுமல் இருப்பது நிருபாதிகாத்தியாசம் என்று பேர். இதையல்லாமல் ஸோபாதிக அத்தியாச மென்று ஒன்று உண்டு. அஃது உண்மை தெரிந்தபின்பும் பொய் தோற்றிக்கொண்டே யிருப்பது. கானலில் நீர் இல்லை யென்பதை அறிந்த

பிறகும் அதில் நீரைப்போன்ற தோற்றம் தோற்றிக்கொண்டு தான் இருக்கும்; இதுவே ஸோபாதிக அத்யாச மென்பது. அதில் நீர் தோற்றுகின்றதென்று நீரைப் பிடிக்க ஒருவரும் போகார். அதைப்போல ஜகம் பொய்யென்று தெரிந்தாலும் தோற்றிக்கொண்டுதான் இருக்கும். அதனால் ஞானிகள் அஞ்ஞானிகளைப்போலச் சோக மோகங்களை அடைவதில்லை.

50. வினா: த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைத மென்னும் மூன்றுக்கும் உள்ள வேறுபாடுகள் எவை?

விடை: த்வைத மென்பது பாரமார்த்திகத்திலும் வ்யவஹாரத்திலும் 'ஜீவன் வேறு, ப்ரம்மம் வேறு, இரண்டுக்கும் ஐக்கியம் இல்லை' என்று சொல்வது. விசிஷ்டாத்வைத மென்பது, 'ஒரு மனிதனுக்குப் பால்யம், யௌவனம் முதலான அவஸ்தைகள் மாறி மாறி வந்தாலும் இந்த அவஸ்தைகளோடு கூடியிருக்கும் மனிதன் ஒருவன்தான் என்பதுபோலச் சரீர ஸ்தானத்தில் இருக்கும் ஜீவஜடப் பிரபஞ்சங்களுக்குப் பலவிதமான அவஸ்தைகள் மாறிமாறி வந்தாலும் இவைகளோடு கூடியிருக்கும் பரமாத்மா ஒருவரே' என்பது. 'பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் சரீரிக்கும் சரீரத்துக்கும் உள்ளதைப் போன்ற ஸம்பந்தம் உண்டு' என்பது விசிஷ்டாத்வைதக் கொள்கை. அத்வைத மென்பது 'ஜீவனுக்கு ஜீவபாவமே கற்பிதம்; உண்மையல்ல; இந்தக் கற்பிதமான ஜீவபாவம் பரமாத்ம ஸ்வரூப விசாரணையால் நாசத்தை அடைந்தபொழுது பரப்பிரம்மமாயிருப்பது' என்பது.

51. வினா: மனத்திற்கும் வாக்கிற்கும் அகோசரமான பரமாத்மாவை மனத்தினாலும் வாக்கினாலும் அடைய வேண்டும் என்று சொல்லும் சுருதியின் தாத்பர்யம் யாது?

விடை: ரஜஸ்தமோ குணாத்மகமான மனத்திற்குப் பிரம்மம் விஷயமாகாது; சுத்த ஸத்வகுணமான அந்தக்கரணத்திற்கே விஷயமாகும். வாச்ய விருத்தியான வாக்கிற்குப் பிரம்மம் விஷயமாகாது; லக்ஷண விருத்தியான வாக்கிற்குத் தான் விஷயமாகும்.

52. வினு: எல்லாவற்றையும் அறியும் அறிவாகவே பிரம்மம் இருக்கும்போது பிரம்மத்தை அறிய வேண்டுமென்று சொல்வதன் கருத்து என்ன?

விடை: பர்வதம் ஸ்வபாவத்திலேயே சலிக்காமல் அசலமாக இருக்கும்போது, "பர்வதம் அசலமாக இருக்கிறது; பார்த்தாயா?" என்று வேறு மனிதனை உத்தேசித்து எப்படிச் சொல்கிறோமோ, அப்படியே பிரம்மம் அறிவுஸ்வரூப மென்று தெரிந்து கொள்ளாத அஞ்ஞான ஜனங்களை உத்தேசித்துப் பிரம்மம் அறியத்தக்கதென்று சுருதிசொல்லுகிறது. 'எல்லாவற்றையும் அறிந்து கொண்டிருக்கும் பிரம்ம ஸ்வரூபத்தை எதனால் எவன் அறிவான்?' என்று சுருதிகள் முறையிடுகின்றன.

53. வினு: ஞான திருஷ்டியென்பது என்ன?

விடை: ஸர்வம் பிரம்ம மயமாகவும் தன்னையும் பரப் பிரம்ம ஸ்வரூபமாகவும் பார்ப்பதுவே உண்மையான ஞான திருஷ்டி. முக்காலத்தையும் உணர்தல், வேறொருவன் மனத்திலுள்ளவற்றை அறிதல் முதலியவை உண்மையான ஞான திருஷ்டி ஆகா.

54. வினு: வேதாந்த ஸித்தாந்தம் ஸமரஸமாவது எப்படி?

விடை: ஜலத்திலுள்ள அழுக்கைத் தேற்றாங் கொட்டைப்பொடி எப்படிச் சுத்திசெய்து தானும் ஜலத்தில் கலந்து

விடுகிறதோ அப்படி அநாத்ம அகங்காரத்தை, 'அகம் பிரம்மம்' என்னும் ஆத்ம அகங்காரத்தால் தொலைத்து முடிவில் தானும் தாகாரமாகி அகம்பாவம் முற்றுமொழிந்து பிறகு மமதை அறுவது வேதாந்த வழி. ஸித்தாந்த வழியில், 'எல்லாம் உன் செயல்' என்று நல்லதையும் கெட்டதையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வதால் 'எனது' என்னும் மமதை ஆதியில் போகப் பிறகு அகம்பாவம் நீங்குகிறது. மமதையும் அகங்காரமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. ஒன்று நசித்தால் மற்றொன்றும் நசிப்பதால் வேதாந்த ஸித்தாந்தங்கள் முடிவில் ஸமரஸமாகி ஒன்று கூடி ஜீவர்களுடைய சித்ததோஷத்தை நிவர்த்தி செய்து ஸ்வரூப சாக்ஷாத்காரத்தைக் கொடுக்கின்றன.

55. வினு: 'ப்ரதிமாஸ்வல்வ புத்தீநாம்' என்கிற சாஸ்திரத்திற்குப் பிரதிமையை உபாஸிக்கிறவர்கள் சிற்றறிவுடைய அஞ்ஞானிகள் என்றும், க்ஷேத்திர தரிசனம் விக்கிரக ஆராதனை முதலியவற்றைச் செய்பவர்கள் ஞானிகளாக இருந்தாலும் உண்மையில் அவரிடம் ஞானமில்லையென்றும் சில கூட்டத்தார் சொல்கிறார்களே; அப்படியானல் பிரஹ்லாதன் முதலியவர்களும், இன்னும் பாஹ்யமான விக்ரகபூஜை செய்து கொண்டுவரும் ஸ்ரீ சங்கராசார்யர் முதலான ஜகத்குருக்களும் அஞ்ஞானிகளா?

விடை: அந்தச் சாஸ்திரத்திற்கு அவர் கூறும் பொருள் ஏற்றதல்ல. கேவலம் பிரதிமைகளில் மாத்திரம் தெய்வமிருக்கிறதென்றும் மற்ற இடங்களில் இல்லையென்றும் யார் நினைக்கிறார்களோ, அவர்களே அஞ்ஞானிகளென்பதே அதன் பொருள். அகண்ட ஸச்சிதானந்த பிரம்மம் எங்கும் வியாபித்திருக்கும்போது பிரதிமைகளிலும் அந்தச் சைதன்

யம் வ்யாபித்திருப்பதாகக் கொள்வதில் குறை என்ன இருக்கிறது? ஞானிகள் திருஷ்டியில் எல்லாம் பிரம்மமயமாக இருக்குமே ஒழியக் கல்லாகவும் லோஹமாகவும் தோற்றாது. ஆகையால் பாஹ்யமாகவோ ஆந்தரமாகவோ எந்தப் பூஜையையும் செய்யலாம். உண்மை உணர்ந்த ஞானிகள் எந்த ஆராதனத்தையும் தூஷிக்கமாட்டார்கள். பிரஹ்லாதனுக்கு ஸ்தம்பமானது ஈச்வரன் அவதரிக்கும் ஸ்தானமாக இருக்கவில்லையா?

56. வின: சத்தியம் எத்தனை விதம்? அவைகளின் லக்ஷணம் யாது?

விடை: சத்தியம் மூன்று விதம். (க) பாரமார்த்திக சத்தியம் (உ) அபாரமார்த்திக சத்தியம் (வ்யாவகாரிக சத்தியம்) (ங) ப்ராதிபாஸிக சத்தியம்.

(க) திரிகாலத்திலும் நாசமில்லாமல்இருக்கும் அகண்ட சச்சிதானந்த நிர்க்குணப் பிரம்மமே பாரமார்த்திக சத்தியம்.

(உ) ஜகம் வியாவகாரிக சத்தியம். பார்வைக்கு அது சத்தியமாகத் தோற்றுகிறதே தவிர ஆத்ம ஞானத்தினால் அறியும்பொழுது அதுவே பொய்யாகிறது. இதில் பல பேதங்கள் உண்டு. ஒன்றை நோக்கி ஒன்று சத்தியமாக நிற்கும் நிலைமைகள் பல உள. சிப்பியில் வெள்ளியானது முயற்கொம்பைப் பார்க்கிலும் சத்தியம். கடத்தைப் பார்க்கையில் அதைக்காட்டிலும் சிப்பி வெள்ளி அசத்தியம். அதைக்காட்டிலும் கடம் சத்தியம். ஜாக்கிரத்தைக் காட்டிலும் ஸ்வப்னம் அசத்தியம்; அதைக்காட்டிலும் ஜாக்ரம் சத்தியம். ஈச சைதன்யத்தைக் காட்டிலும் ஜீவ சைதன்யம்

அசத்தியம்; ஈசசைதன்யம் சத்தியம். நிருபாதிக சைதன் யத்தைக் காட்டிலும் சர்வமும் அசத்தியம். நிருபாதிக சைதன்யமே சத்தியம். இப்படியே யோசித்து வியாவகாரிக சத்தியம் பலவிதம் என்று அறிந்துகொள்ளல் வேண்டும்.

(௩) ஸ்வப்னம் ப்ராதிபாஸிக சத்தியம். அந்தக் காலத் தில் மட்டும் சத்தியம்போலத் தோன்றி ஜாக்கிரத் காலத்தில் பொய்யாகிறது. உதாரணமாக ஸ்வப்னத்தில் ஸ்திரீ சங்கம் செய்த ஒரு புருஷனுக்கு ஜாக்கிரத்தில் ரேதஸ் வெளியா கிறது. ஸ்வப்னத்தில் கண்ட ஸ்திரீயும் புணர்ச்சியும் அந்தக் காலத்தில்மட்டும் சத்தியமாக இருந்தனவே தவிர ஜாக்ரத் தில் ஸ்திரீ காணப்படுவதில்லை. இதுவே ப்ராதிபாஸிக சத்தி யம் எனப்படும்.

ஸ்வப்னம் காணுவதற்கு முன்னும் பின்னும் காணும் சமயத்திலும் புருஷன் சத்தியமாக இருப்பதால் அவன் திரிகால சத்தியமான பாரமார்த்திக சத்தியம்; ரேதஸ் மட்டும் வியவகாரத்தில் சத்தியமாயிருப்பதால் வியாவகாரிக சத்தியமென்று சொல்லப்படும்.

இதுபோலவே பிரம்மம் என்னும் மஹா புருஷன் திரிகாலத்திலும் சத்தியமானதால் பாரமார்த்திக சத்தியம். பிரம்மமும் மாயையும் கூடின என்பதும், மாயை என் னும் ஸ்திரீயும் ப்ராதிபாஸிக சத்தியம். இவர்களிடமிருந்து உற்பத்தியான ஜகம் வியவகாரத்தில் சத்தியமாகக் காணுவ தால் வியாவகாரிக சத்தியமாகும்.

57. வினா: ச்ராத்தாதிகளில் மாம்ஸம் சேர்க்கக் கூடாதென்றும், மாம்ஸம் சேர்க்கலாமென்றும் ஒன்றுக் கொன்று மாறுபாடாகச் சொல்லும் ச்ருதிகள் முதலியவற் றிற்கு எப்படி அர்த்த நிர்ணயம் செய்வது?

விடை: வேதத்துக்கு நான்கு வழிகளில் அர்த்த நிர்ணயம் செய்யலாம். அவை (1) காலபேதம், (2) அதிகாரி பேதம், (3) அவஸ்தாபேதம், (4) விஷயபேதம் என்பனவாம்.

பண்டைக் காலத்தில் பிராம்மணர்களுக்குத் தபஸ் அதிகமாக இருந்ததால் மாம்ஸாதிகளை ஶ்ராத்தத்தில் உண்டுவந்தார்கள்; இந்த யுகத்தில் விலக்கி யிருக்கிறார்கள். இது காலபேதத்தால் அர்த்தநிச்சயம் செய்யத்தக்கது.

இதைப்போலவே, ஸூர்யோதயத்திற்கு முன் அக்னிஹோத்திரம் செய்ய வேண்டுமென்றும் உதயத்திற்குப் பின்பு செய்ய வேண்டுமென்றும் சொல்லும் சுருதிகளுக்கு அதிகாரி பேதத்தால் சுக்ல யஜுர்வேதிகள் உதயத்திற்கு முன்பும் கிருஷ்ண யஜுர்வேதி முதலியவர்கள் உதயத்திற்குப் பின்பும் அக்னிஹோத்திரம் செய்யவேண்டுமென்று அர்த்த நிச்சயம் செய்யவேண்டும்.

பரமாத்மா சிரஸில் வசிக்கிறாரென்றும் ஹ்ருதயத்தில் வசிக்கிறாரென்றும் சொல்லுமிடங்களில் அவஸ்தா பேதத்தைக் கொண்டு, ஜாக்கிராவஸ்தையில் சிரஸில் வசிப்பதாகவும் ஸுஷுப்தியில் ஹ்ருதயத்தில் ஒடுங்குவதாகவும் தெளியவேண்டும்.

விதியை அனுபவித்தே தீரவேண்டுமென்றும் மதியால் விதியை வெல்லலாமென்றும் காணப்படும் இடங்களில் விஷய பேதத்தால் பொருள் துணியவேண்டும்; ஜன்மாந்தரங்களில் செய்த புண்ணிய பாபத்தின் பயனை இந்தச் சரீரத்தில் அனுபவத்துக்கு வரும் இன்பதுன்பங்களைப் பற்றிய இடங்களில், அவற்றை அனுபவித்தே தீரவேண்டுமென்றும், வாஸனை விஷயமானால், மதியால் விதியை வெல்லலாமென்றும் பொருள் தெளிந்துகொள்ள வேண்டும்.

இந்த மாதிரி உள்ள இடங்களிலெல்லாம் ஒன்றுக் கொன்று முரணாக இருப்பதுபோலத் தோற்றினாலும் மேற் சொன்ன நான்குவித பேதங்களைக்கொண்டு பார்த்தால் அந்த முரண்பாடு நீங்கித் துணிவு ஏற்படும்.

58. வினா: எல்லாம் பிரம்ம மயமாக இருப்பதால் எல்லாவற்றையும் பூஜை செய்யவேண்டுமென்று சொல்லாமல் பிராம்மணன், அக்னி, பசு, அரசமரம், கங்காநதி முதலிய சில குறிப்பிட்டவற்றைப் பூஜை செய்தால்தான் பகவானுக்குப் பிரீதியென்று சொல்லும் சுருதியின் கருத்து என்ன ?

விடை : எல்லாவிடத்திலும் சைதன்யம் வ்யாபித்து இருந்தாலும் சில சுத்தமான பொருள்களில்தான் சைதன்யத்தின் சக்தி அதிகமாகக் காணப்படும். அவைகளை உபாஸித்தால் ஜீவகோடிகளுக்கு அனுக்கிரகம் சீக்கிரம் உண்டாகும். அதனால் சாஸ்திரங்கள் அப்படிச் சொல்கின்றன.

நாம் தபால் எழுதி நம்முடைய வீட்டிற்கருகில் இருக்கும் தபாற்பெட்டியிற் போடுகிறோம். அது நாம் குறித்த இடத்திற்குத் தவறுமற் போய்ச் சேருகிறது. அந்தப் பெட்டி அழகில்லாமலிருந்தாலும் அதிலேதான் போடுகிறோம். நம்முடைய வீட்டில் நல்ல வர்ணங்கள் அடித்து அழகாக வைக்கப்பட்டிருக்கிற பெட்டியிற் போட்டால் அஃது எங்கும் போகாமல் அங்கேயே பத்திரமாக இருக்க வேண்டியது தான்; நமக்கு வீண் நஷ்டமே ஏற்படும். அதுபோல வேதத்திலே குறிக்கப்பட்டவைகள் மூலமாகப் பகவானை உபாஸித்தால் அது பகவானால் விரைவில் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அவைகள் எவ்வளவு இழிவுடையவைகளாகத் தோற்றினாலும்

அவைகளுடைய அதிகாரம் குறையாது; ஆதலின் அவைகள மூலம் செய்வதே பகவானுக்குப் பிரீதியாகும்.

59. வினு: இந்த ஜீவன் வேறு சரீரத்தைப் பற்றிக் கொண்டுதான் இந்தச் சரீரத்தை விடுகிறதென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றனவே; ஒரு மனிதன் இறந்துபோனுல் அவனை உத்தேசித்து ப்ராத்தம் செய்கிறேரும்; வேறு ஜன்மம் அவன் எடுத்திருந்தால் எப்படி நாம் அனுப்புகிற பிண்டம் உதகம் முதலியன அவனைச் சேரும்? அவற்றைச் சேர்ப்பிக்கிறது யார்? அது நமக்கு எப்படித் தெரியும்?

விடை: தபால் ஆபீஸில் நாம் நெடுந்தூரத்தில் இருக்கும் ஒரு மனிதனுக்கு மணியார்டர் செய்கிறேரும். இதே பணம் அவனிடம் போய்ச்சேருவதில்லை. ஆனுல் அந்த ஊர்த் தபால்காரன் அந்த மனிதன் விலாசத்துக்குச் சென்று அந்த ஆபீஸ் பணத்தைத் தருகிறுன். பணம் பெற்றுக் கொண்டதற்கு அடையாளமாக நமக்கு ரசீது வருகிறது.

இதைப்போல நாம் கொடுக்கும் பிண்டம் முதலியன வஸுக்கள், ஆதித்தியர்கள், ருத்ரர்கள் முதலான பிதுர்த் தேவதைகள் மூலம் நம்முடைய பிதுர்க்களை அடைகின்றன.

நாம் பிண்டமாகவும் திலோதகமாகவும் கொடுத்தாலும் அவற்றை ஏற்றுக்கொள்ளும் அதிகாரியாகிய பிதுர்த் தேவதைகள் நாம் யாரை உத்தேசித்து அந்தக் கிரியைகளைச் செய்கிறேமோ அந்த ஜீவன் எங்கே எப்படிப் பிறந்திருந்தாலும் அங்கே அந்த நிலைக்கேற்றபடியான உணவாகத் தருவார்கள். மாடாகப் பிறந்திருந்தால் புல்லாகப் போடுவார்கள்; மனிதனுனுல் அந்தப் பிறப்புக்கேற்றபடி செய்வார்கள். நாம் இந்தியாவிலிருந்து வெளிநாட்டுக்கு ரூபாய்களை மணியார்டர் செய்தால் அந்நாட்டிலுள்ள அதிகாரிகள் அந்த

ரூபாய்களை அந்த நாட்டுக்கு ஏற்ற நாணயமாக மாற்றிப் பணத்தைச் சேர்ப்பிப்பார்கள் அல்லவா? அப்படித்தான் பிதுர்த் தேவதைகளும் செய்கிறார்கள்.

நம்முடைய பிதுர்க்கள் எவ்விடத்தில் இருக்கிறார்களென்று நம் போன்றவர்களுக்குத் தெரியாது. அந்தத் தேவதைகளுக்குத்தான் தெரியும். அவர்களை உத்தேசித்து ஶ்ரத்தையுடன் ஶ்ராத்தம் செய்தால் அத்தேவதைகள் அவர்கள் இருக்குமிடந் தேடிக் கொடுக்கிறார்கள். நமக்கு நம்பிக்கை முக்கியம். இப்படி நாம் செய்வதால் குடும்பத்தில் பிதுர்க்களின் ஆசீர்வாதம் நிறைந்து கஷ்டங்கள் இல்லாமல் இருக்கும். இதுதான் அவர்கள் திருப்தியடைவதற்கு அடையாளமாக நாம் காணுவது. இப்படிப் பிண்டோதகங்களைத் தராவிட்டால் குடும்பத்தில் குழந்தைகள் ஜீவதசையோடு இராமல் அகாலமிருத்யு, பீடை முதலியவற்றை அடையும். ஆதலின் பிதுர்த் தேவதைகளை உத்தேசித்து ஶ்ரத்தையோடு செய்யும் கர்மாவிற்கே ஶ்ராத்தம் என்ற பெயர் உண்டாயிற்று.

60. வினா: அர்ச்சிராதி மார்க்கம், தூமாதி மார்க்கம் என்னும் இந்த இரண்டு மார்க்கங்களில் எந்த மார்க்கத்திற் போனால் மறுபிறப்பு இல்லாமல் ஞானத்தை யடையலாம்? இந்த இரண்டு மார்க்கங்களிலும் போகும் உபாஸகர்கள் யார்?

விடை: அர்ச்சிராதி மார்க்கமென்பது உத்தராயண மார்க்கம். நைஷ்டிகப் பிரம்மசாரிகள், சிரௌத ஸ்மார்த்த கர்மாக்களை நிஷ்காமமாகச் செய்துகொண்டுவரும் கர்மயோகிகளான கிருகஸ்தாஶ்ரமிகள், கர்ம ஸந்யாஸிகள் என்

னும் இவர்கள் அர்ச்சிராதி மார்க்கமாக ஸூர்யலோகம் போய்ப் பின்பு பிரம்மலோகம் போய் மறுபிறப்பில்லாமல் அவ்விடத்தில் வேதாந்த ஶ்ரவணம் செய்து முத்தியடைவார்கள்.

கேவலம் காம்யமாக யஞ்ஞம் முதலியவற்றைச் செய்யும் காம்ய கர்மிகள் தூமாதிமார்க்கமாக ஸ்வர்க்கத்திற் போய் ஸ்வர்க்க இன்பத்தை அனுபவித்துத் தாம் *செய்த புண்ணிய பலன் தீர்ந்தவுடன் மறுபடியும் இவ்வுலகிற் பிறந்து பாபபுண்ணியங்களைச் செய்து மீண்டும் மீண்டும் இறந்தும் பிறந்தும் வருகிறார்கள்.

61. வினு: முக்தர்கள் எத்தனைவகைப் படுவார்கள்? அவர்களுடைய லக்ஷணம் என்ன?

விடை: அவர்கள் நான்கு விதமானவர்கள். அவர்கள் பிரம்மவித்து, வரன், வர்யான், வரிஷ்டன் என்னும் நால்வர். ப்ரம்மவித்திற்கு ஸமாதிகாலத்தில் மாத்திரம் ஸ்வானுபவம் இருக்கும். மற்றக் காலங்களில் ஜகத்தின் விருத்தியால் பாதிக்கப்பட்டும் வித்தியாவிருத்தியால் துக்கஸுகங்கள்நமக்கில்லையென்று நீங்குவார்கள். இவர்கள் ஜகவாழ்வை ஸ்வப்னம்போலக் கழிக்கிறார்கள். இவர்களுக்குத் திருஷ்டதுக்கம் உண்டு. இவர்கள் பிரம்மலோகம் போய்க் கிரமமுக்தியை அடைவார்கள்.

வரன்: ஸ்வப்னத்திற் கண்ட ஜகத்தை ஜாக்ராவஸ்தையில் பொய்யென்று அனுபவிப்பதுபோல வ்யவஹாரத்தில் தோன்றிய ஜகத்தை ஸாதனபலத்தால் ஸமாதிகாலத்தில் பொய்யென்று அநுபவிப்பார்கள். இவர்களுக்குப் பிக்ஷாவிருத்தியைத் தவிர மற்ற வியவகாரம் தோன்றாது. பஞ்

சானது ஜலத்தில் அமிழும்; பிறகு தானுகவே ஜலத்திற்கு மேலும் வரும். இதைப்போல் ஸமாதி நிஷ்டை கலைந்து தாமாகவே இவர்கள் பஹிர்முகத்திற்கு வருவார்கள்.

வர்யான்: ஸச்சிதானந்த மயமாகிய தம்மிடத்திலே தோற்றிய பிரபஞ்சத்தைக் குரு சொன்ன சுருதி யுக்தி அனுபவங்களால் பிரம்மமாகிய தாமே என்றறிந்த பின்பு ஒரு காலத்திலும் அதைப் பிரபஞ்சமென்றறிய மாட்டார்கள். வ்யவஹார காலத்திலும் இவர்கள் பிரம்மமாகவே அனுபவிப்பார்கள். எப்பொழுதும் தம்மைத் தவிர ஜகம் வேறில்லையென்று அனுபவிப்பார்கள். தாமாக இவர்கள் ஸமாதியைவிட்டுக் கலையமாட்டார்கள். பிறர் வலிவிற் சென்று தொந்தரவு செய்தால் ஸமாதிகலைந்து பசியைநிவர்த்தித்துக்கொள்வார்கள். மீண்டும் ஸமாதியில் இருப்பார்கள். அதிகமான வ்யவஹாரமே இவர்களுக்கு இல்லை. கல்லை ஜலத்திற்போட்டால் மிதக்காது; அமிழ்ந்துபோகும்; வேறொருவர் எடுத்தால் வரும். அதைப்போல் இவர்கள் பிறரால் ஸமாதி கலைந்து பஹிர்முகப்படுவார்கள்; தாமாக வரமாட்டார்கள்.

வரிஷ்டன்: நினைவோடும் அறிந்து கழுத்தில் மாலையாக அலங்கரித்துக் கொண்ட ரஜ்ஜுவை ஸர்ப்பமென்றுவது ஸர்ப்பமன்றென்றுவது ரஜ்ஜுவென்றுவது எண்ணுமல் எப்படி ஸ்வபாவமாக ஸஞ்சரிப்பார்களோ, அப்படியே ஏகமாகவும் நிஷ்களமாகவும் நிர்மலமாகவும் ஸ்வயம் ஜோதியாகவும் ஸச்சிதானந்த கனமாகவு முள்ள தம்மிடத்தில் பிரஞ்ச முண்டென்றுவது பிரபஞ்சமில்லையென்றுவது எண்ணுமல் யாதொருவிருத்தியுமற்றுத் தாமாகவேனும் பிறராலேனும் ஸமாதிவிட்டுக் கலையாமல் ஸஞ்சரிப்

பார்கள். ஜலத்தில் உப்பைப் போட்டதைப்போல அவர்கள் இருப்பார்கள்.

வித்து, வரன், வரியான் என்னும் மூவருக்கும் அகண்டாகார விருத்தி யென்னும் ஸாதனமுண்டு. ஆரூடனுக்கு அந்த விருத்திகூடக் கிடையாது.

62. வினு: ஜீவன் முக்தி விதேக முக்தி என்பவற்றின் இடையே உள்ள பேதம் என்ன?

விடை: ஞானிகளுக்கு ஜீவன் தேகத்தோடு இருக்கும்போது ஜீவன்முக்தியென்றும், தேகம் நீங்கின காலத்தில் விதேகமுக்தி யென்றும் சொல்லப்படும்.

ஜீவன்முக்தர்களுக்கு ப்ராரப்தமான உடல் உள்ளமட்டுந்தான் முக்தனென்கிற வ்யவஹாரம் தமக்குள்ளே தோற்றுமானதால் இவர்களுக்குப் பிராரப்தம் சொல்லப்படும். அதிகாரி பேதத்தால் தேகமுள்ள போதே விதேகமுக்தியும் ஏற்படலாம். இப்படிப்பட்டவர்களுக்குச் சரீரம் இருக்கிற போதே பிராரப்தம் கிடையாது. ஏனென்றால் இவர்கள் தானென்றாவது பிறரென்றாவது பத்தனென்றாவது முக்தனென்றாவது பிரம்மமென்றாவது யாதொரு விருத்தியும் இல்லாமல் ஸஞ்சரிக்கிறார்கள். இவர்கள் ஸ்வயம் அகண்டைகரஸமாயிருக்கிறார்கள். ஆதலின் பிராரப்தம் இவர்களுக்கு இல்லை. இப்படிப்பட்டவர்களுக்கு விதி நிஷேதம் வேதத்திற் சொல்லவில்லை. எந்தத் தொழிலை இவர்கள் செய்தாலும் செய்வித்தலும் செய்தலும் அற்றிருப்பார்கள். சதாசிவப்ரம்மம் முதலிய அவதூதர்களும் ஜனகர் முதலானவர்களும் சரீரம் இருக்கும்போதே விதேஹர்களானவர்கள்; அவர்களை அதிவர்ணாசிரமியென்று கூறுகிறார்கள்.

63. வினா: எவ்வளவோ ஞானிகள் உலகத்தில் இருக்கும்போது ஜனகரைப் பற்றிச் சாஸ்திரங்கள் நிரம்பவும் புகழ்ந்து கூறுகின்றனவே; ஏன்? அவர் எப்படி ராஜ்யாதிகாரம் செய்தார்?

விடை: அவர் உபதேசம்பெற்ற காலத்திற்கு முன்பிருந்தே மூன்று வாஸனைகளும் அற்றவராயும், அதிதீரராயும், ராஜ்யாதிகாரம் செய்தும் ஸத்தான ஆத்மஸ்வரூபத்தைத் தவிர அன்னியம்இருக்கிறதென்றேனும் இல்லை யென்றேனும் எண்ணுகிற விருத்தியாகிற சரீரம் கூட இல்லாதவராயும் இருந்தார். சுருதியில் யாக்ஞவல்கியர்கூட, 'இவன் அதிக மேதாவியாக இருக்கிறான். நாம் எப்படி இவனுக்கு உபதேசித்து வெளிவருவோமோ' என்று அவரைப்பற்றி நினைத்ததாக ஸூக்ஷ்மமாகக் காணப்படுகிறது. அத்தகைய பெருமையை உடையவர் அவர். குருவே கண்டுவியக்கும் நிலையிருந்தால் அவருக்குப் பெருமை உண்டாவதற்குத் தடையென்ன?

ஒரு வேடன் இராமுழுதும் விழித்து உதயத்தில் பசியோடும் வெகு நேரம் அலைந்து ஒரு பக்ஷியின்மேல் அம்பை எய்துவிட்டு உடனே தூக்கத்தால் மயங்கி அம்பின் வ்யாபாரமே தெரியாமல் பூமியில் கிடக்கிறான். அந்த அம்பு முன்பு ஏறிய விசையால் எப்படி வெகுதூரம் கோணாமற் போய் அந்த லக்ஷ்யத்தைப் பேதிக்கிறதோ, அப்படியே அகர்த்தரும் விதேக முக்தருமான ஜனகருடைய ராஜ்ய பாரம் நடைபெற்றது.

64. வினா: பஞ்சகோச விலக்ஷணனை ஆத்மாவைச் சாஸ்திர ஆராய்ச்சியால் அறிந்து கொள்ளலாமா?

விடை: சாஸ்திரங்கள் பஞ்ச கோசத்திற்கும் வெளியிலுள்ளவை. ஆத்மாவோ பஞ்சகோசத்திற்கும் உள்ளே இருக்

கிறது. ஒவ்வொரு கோசமாக 'இது நான் அல்லன்' என்று விசாரித்து 'நேதி' செய்து, நிஷ்டையிருந்து அனுபவித்தால் அதை அறியலாமேயன்றிப் பஞ்சகோசத்திற்கும் வெளியி லுள்ள சாஸ்திரங்களை ஆயுள் பரியந்தம் பார்த்தாலும் ஸ்வாநுபவம் வராது.

65. வி௵: ஜன்ம ஜன்மமாய் வந்த வாஸனைகளை ஜயிப்பது எப்படி?

விடை: வாஸனைகள் அஸத்வாஸனை யென்றும் ஸத்வாஸனை யென்றும் இரண்டுவிதம். அவ்விரண்டில் மைத்திரி முதலிய ஸத்வாஸனைகளை வளர்த்து அஸத்வாஸனைகளை நீக்கவேண்டும். முடிவில் நல்ல வாஸனையும் போய்விடும். இவ் விதக் கெட்ட வாஸனைகள் முளைக்க முளைக்க ஊகத்தால் நிர்க்குணனை தன்னிடத்தில் ஒன்றுமில்லை என்று விசாரித்துத் தள்ளி நிர்விகாரியாகத் தான் நிற்பின், கற்பூர தீபமானது தானே ஒடுங்கிவிடுவதுபோல அகங்காராதி வாஸனைகளும் தாமே நீங்கும்.

66. வி௵: ஞானிகளுக்கும் ஞான ஸமுச்சய யோகிகளுக்கும் உள்ள அனுபவங்களில் என்ன வித்தியாஸம் இருக்கிறது?

விடை: ஞானிகள் தம்மைப் ப்ரஞ்ஞானகன அகண்ட பிரம்மமாக அறிந்து அனுபவிக்கிறார்கள்; அவர்களுக்கு இரண்டாவது வஸ்து இல்லை; தம்மைத் தவிர அன்னிய விஷயங்களான மனம், பந்தம், முக்தி, ஞானம் முதலியவை எந்தக் காலத்திலும் இல்லையென்று அந்தஃகரணத்தில் பூர்ணமான வன்மையை அடைந்திருப்பார்கள்; ஆதலின் அவர்கள் வியவகாரங்கள் செய்பவர்களாகத் தோற்றினாலும் ஜனன மரணங்களைக் கடந்திருப்பார்கள்.

ஞான ஸமுச்சய யோகிகள் ஓரே தன்மையாகக் கற்பாந்த காலம் காஷ்ட ஸமாதி செய்யினும் மனம் பஹிர் முகப்பட்டு அக்காலத்தில் தேகம் நீங்கினால் பிரம்ம லோகத்தை அடைந்தாவது மனிதராக ஜனித்தாவது முக்தியை யடைவார்கள். மனிதராக ஜனித்தால் பல சித்துக்களை உடையவராக இருந்து பின்பு குருமுகமாகச் சமுச்சயமில்லாத கேவல ஞானத்தை அடைந்து முக்தராவார்கள். கேவல ஞானத்தால் பிரதிபந்தமில்லாத முக்தியை அடையலாம். ஞானயோக ஸமுச்சயத்தால் முக்திக்குப் பிரதிபந்தம் ஏற்படும். அது மத்தியமாதிகாரிகளுக்கு உபயோகப்படும்.

67. வினு: பிரணவ ஜபம், மூர்த்தித் தியானம், யோகாப்பியாசம், பிராணுயாமம் முதலியவற்றால் மனம் நாசத்தை அடையுமா?

விடை: பிரணவ ஜபம் முதலியவற்றால் மனம் லயமடைந்து பிறகு பஹிர்முகப்படும்போது பூர்வ வாஸனை வசத்தால் அலையும். ஸுஷுப்தியில் மனம் லயம் அடைந்திருப்பதால் ஜாக்கிரத்தில் பூர்வ வாஸனை போகிறதில்லை. இதைப்போல்தான் யோகாப்பியாசம் முதலியவற்றால் மனம் லயத்தை அடையுமேயன்றி நாசமாகாது. வேதாந்த விசாரணையால்தான் மனோநாசமுண்டாகும். மனோநாசம் உண்டானால் வாஸனு க்ஷயமுண்டாகும். இவை கைவந்தவர்களே ஜீவன் முக்தர்கள்.

68. வினு: சுகரைப் போலச் சில மகான்கள் ஞானோதயமானவுடன் தேகம் காணுமல் நீங்கியிருக்கிறார்கள்; அது ஞான மகிமையினுல் வந்ததா? யோக மகிமையால் வந்ததா?

விடை: அது யோகமகிமையே யன்றி ஞான மகிமையல்லவென்று வேதாந்தங்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

வராகோபநிஷத்தில் ரிபு மகாமுனிவர் ஞானோதயம் தமக்கு வந்த பின்பு இந்தச் சரீரம் ஆசந்திரார்க்கம் இருந்தாலும் இருக்கட்டும், இப்பொழுதே போனாலும் போகட்டுமென்று சொல்லியிருக்கிறார். உடலானது பிறர் காணாமலே போக வேண்டுமென்று சிலர் சொல்லுகிறார்கள். அது ரஜ்ஜு ஞானம் வந்த பின்பு ஸர்ப்பமும் நசிக்க வேண்டுமென்ற வியவகாரம் மாதிரியாகும். ரஜ்ஜுவில் அஞ்ஞான ரூபமான ஸர்ப்பப் பிராந்தி மாத்திரம் நசிக்குமேயன்றி ஸர்ப்பம் நசிப்பதென்பது இல்லை; ஏனெனின், ஸர்ப்பம் உண்மையில் இருந்தாலன்றோ நசிப்பதும் உண்டாகும். ரஜ்ஜு ஸர்ப்பமாகப் பரிணமித்திருந்தால் ஸர்ப்பம் நசிப்பதாகச் சொல்லலாம். ஆகையால் ஆத்ம விவர்த்த ரூபமான தேகம் நசித்திட வேண்டுமென்பதும் ஸர்ப்பம் நசிக்குமென்று சொல்வது போன்றதே.

ஞானிகள் சித் ஸ்வரூபானந்தத்தால் தம் திருஷ்டியில் இந்த உடலையும் சித்தாகவே பார்ப்பார்களல்லாமல் வேறாகக் காணமாட்டார்கள். ஆகையால் ஞானோதயமான பின்பு ஞானிகளுக்கு உடம்பு வேறாகப் போக வேண்டுமென்பதில்லை. இதுவே, சுருதி யுக்தி அனுபவத்தோடு கூடிய ஆசார்யரது அபிப்பிராயம். இதுவே, சுருதியின் ஸித்தாந்தம்.

69. வினா: ஸாலோக ஸாமீப ஸாரூப்ய ஸாயுஜ்யமான ஸகுணப் பிரம்மலோகம் போகும் கிரமமுக்திகளை ஞானிகள் எப்படி எண்ணுவார்கள் ?

விடை: மனத்தின் அதிஷ்டான சைதன்யத்தின் அருளினாலே உண்மையில் அந்த முக்திகளைச் சொப்பன

மென்று கூறல் அரிதல்ல. இகபரமிரண்டும் ஞானிகளுக்குத் தம்மைத்தவிர வேறில்லாததனால் அவற்றைப் பொய்யென்று நிஷேதிக்கவும் மாட்டார்கள்; மெய்யெனக் கொள்ளவும் மாட்டார்கள்.

70. வினு: கர்மகாண்டபரமான சில சாஸ்திரங்கள் பிராம்மணனைத் தவிர மற்ற ஜாதிகளுக்கு ஞானம் கூடாதென்று சொல்லுகின்றனவே? அது ஸரியா?

விடை: ஸாதனங்களின் பயனுக ஞானத்தை அடைபவர்களை உத்தேசித்துச் சொன்னதல்ல அது. விதுரர் சூத்ரரென்பதனுல் அவருக்கு ஞானம் விலக்கப்படவில்லை. அவர் முந்தின ஜன்மத்தில் தர்மராஜாவாக இருந்து சாபத்தால் சூத்திரரானவர். சூத்ரராக இருந்து எவர்களுக்கு ஞானம் உண்டாயிற்ரே அவர்கள் முந்திய ஜன்மத்தில் பிராம்மணராக இருந்திருப்பார்கள். சூத்திரருக்கு வேதமோதவும் அக்னிஹோத்ராதி கர்மங்கள் புரியவும் உபநிஷத் மார்க்கமான வேதாந்த விசாரணை செய்யவும் மாத்திரம் அதிகாரமில்லையேயன்றி, பக்தியோக ஞானமார்க்கங்களில் அதிகாரம் உண்டென்பதற்கு ஸம்சயமில்லை. அவர்கள் திராவிட கிரந்தங்கள் மூலம் ஞானத்தை யடையலாம். சங்கராசார்யர் அபிப்பிராயமும் இதுவே.

71. வினு: பரமார்த்த வியவகார பேதத்தால் ஹிம்ஸை அஹிம்ஸைகளின் நிர்ணயம் எத்தனை விதம்?

விடை: (1) பரமார்த்தத்தில் த்ருஶ்யா திருஶ்யமற்ற ஸ்வரூபமே அஹிம்ஸை.

(2) திருஶ்யா திருஶ்யமற்ற ஸ்வரூபமான நம்மைத் தவிர வேறில்லையெனச் சேஷித்து அகண்ட போதானுபூதி

யான நிர்விகற்ப தாதாத்மிய அனுபவமானது வியவகாரத்தில் ஹிம்ஸை; பரமார்த்தத்தில் அஹிம்ஸை.

(3) பிரம்மமான தன்னை அஸம்ஸாரியென்று அறியாமல் ஸம்ஸாரியெனக் கொள்கை ஹிம்ஸை; உள்ளபடி அஸம்ஸாரி யென்று கொள்கை அஹிம்ஸை.

(4) வேதங்களால் விதிக்கப்பட்ட யாகவிஷய பசுபந்தம் புண்யரூபம் என்றெண்ணி நடத்தல் அஹிம்ஸை; வேதத்தால் சொல்லப்படினும் பாபந்தானென்று எண்ணி நடத்தல் ஹிம்ஸை.

(5) அரசர்களுக்குத் துஷ்டர்களைச் சேதிக்கின்றது அஹிம்ஸை; சந்தோஷத்தை உண்டுபண்ணுகின்றது ஹிம்ஸை.

(6) பிறருக்குத் துக்கத்தை உண்டுபண்ணுகிறது ஹிம்ஸை; சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறது அஹிம்ஸை.

ஹிம்ஸை அஹிம்ஸைகளெல்லாம் • ஈசனது சக்தி விலாஸமகிமை யென்றறிந்து ஜீவ ஸ்வாதந்திரியத்தைப் பாராமல் இருக்கவேண்டும்.

72. வினா: ஸ்துதி, நிந்தை என்பவற்றின் நிர்ணயமென்ன?

விடை: வஸ்துஸ்வபாவ ஸ்திதியே ஸ்துதி; வஸ்து ஸ்வபாவ அவஸ்தையே நிந்தை. பிறருடையனவும் தன்னுடையனவுமாகிய அந்தக்கரண தேகேந்திரியாதி ஜடஸ்வபாவங்களையிட்டுவந்த ஸ்துதி நிந்தையாகிய இரண்டும் நிந்தையேயாகும். எல்லாம் அதனதன் ஸ்வபாவம் என்று அறிவது ஸ்துதி யெனப்படும்.

73. வினா: சிவ சக்திகளின் ஸமரஸம் எப்படி அறியப்படும்?

விடை: எந்த வஸ்துவும் செயலால் விளங்கவேண்டு வதால் அந்த வஸ்துக்களை விளக்குகின்ற செயலே சக்தி. அந்தச செயலையும் செயலின் விஷயங்களையும் ஜீவேப்வர ரூபமாக மேவாமல் மேவிய சைதன்யம் சிவம். செயலாகிய விருத்தி நீங்கிடின் ஜீவேபுரபேதம் நீங்கிவிடும். ஜீவேபுரபேதம் நீங்கிடின் எல்லாம் நீங்கிவிடும். எல்லாம் நீங்கினவிடம் சிவம். அச்சிவமும் தன்னைத்தான் இயக்கினல் அது சக்தியெனப் படும். சத்துசிவம்; சித்து சக்தி; சத்துச சித்தென்ற உபாதி கள் மித்யையாம். ராகு சிரஸின் உபாதிபோலச் சிவத் தைத் தவிரச சக்தி வேறில்லை. சக்தியைத் தவிரச் சிவமும் வேறில்லை; சிவசக்திபேதம் கற்பிதம்; இந்த பேதம் உண்மை யில் இல்லை. இதுவே சிவசக்தியினுடைய ஸமரஸம்; ஸமர ஸமே ஆனந்தம். அவ்வானந்தம் முக்காலத்திலும் தன்னி னும் வேறில்லாத உண்மை. இவ்வுண்மையை யார் அநு பவத்தில் அறிந்திருக்கிறார்களோ அவர்கள் பரமசிவமென்று கூறப்படுகின்றார்கள்.

74. வினு: பந்தமோக்ஷங்களின் ஸ்வரூபம் என்ன? சுருதி யுக்தி அனுபவங்களால் வந்த பந்தமோக்ஷங்கள் கூடஸ்தனைச் சார்ந்தனவா? சிதாப்ாஸனைச் சார்ந்தனவா?

விடை: ஸுஷுப்தியில், அறியுந்தன்மை அறியாத் தன்மையென்னும் இரண்டுமல்லாத ஸ்வபாவமான நிலையை விட்டு விழித்தால் சிதாபாஸன் வியவகாரத்தால் நான் தூங் கினேனென்று காணப்படுவதில் ஒன்றுந் தெரியாமையான ஸுஷுப்தியில் கண்ட அறியாமையான ஆவரணமே பந்தம். அவ்வித அஞ்ஞானமான பந்தத்தை வியவகரிக்கின்ற சிதா பாஸனிடத்திற்கண்ட வியவகார அநுபவத்தைச் சோதிப்

பதனால் மேற்கூறிய அஞ்ஞானமான பந்தம் இல்லையென்று உள்ளபடி தெளிவதே முக்தி.

ஒரு குழியில் மதயானை விழுந்தால் ஒரு கொசுவால் அதை விடுவிக்கமுடியாது. அதுபோல ஸ்வப்ரகாசமான கூடஸ்தனைப் பந்தமாகிற குழியிலிருந்து அப்பிரகாசனான சிதாபாஸன் நீக்க இயலாது. சிதாபாஸனைச் சார்ந்ததெனின் சிதாபாஸனானவன் ப்ரதிபிம்பனாயினமையின் ப்ரதிபிம்போபாதி நீங்கினவிடமே பிம்பம்; அந்தப் பிம்பமான இருப்பே முக்தி; ஆதலின் அவ்விதமான முக்திநிலையில் சிதாபாஸன் இல்லாமற்போகிறான். ஒருவன் புண்ணியஞ்செய்ய அந்தப் புண்ணிய பலனை அதனைச் செய்யாதவனாகிய அன்னியன் அனுபவிப்பான் என்பது போலவே சிதாபாஸனைச் சாருமென்பதும் கருதப்படும்; ஒருவன் சிறைப்பட அன்னியன் விடுதலையாய் விட்டான் என்பது போலாகும். ஆதலின் பந்தம் எவனுக்கோ அவனுக்கே முக்தியென்று ஓர் ஆக்ஷேபம் உண்டாகும். அதற்கு ஸமாதானம் வருமாறு:—

பந்தமானது கூடஸ்தனையும் சார்ந்ததல்ல; சிதாபாஸனையும் சார்ந்ததல்ல. ஆனால் வியவகார நிலையில் சொல்லும்போது, சாஸ்திரங்களில் சிதாபாஸனிடத்தில் உதிக்கும் அஞ்ஞானமாம் பந்தவிருத்தியை நீக்க ஞானமெனும் முத்திவிருத்தியை ஆரோபஞ்செய்து கூறுவது வழக்கம். இந்த அபிப்பிராயத்தைக் கைவல்லிய நவநீதம், 'ஸ்வரூபஞானம் அஞ்ஞானத்தைச் சுடாது' என்று கூறுகிறது; விருத்திஞானந்தான் அஞ்ஞானத்தைச் சுடுமென்பது அதிலிருந்து நமக்குப் புலப்படுகிறது. ஏனெனின், ஸ்வரூபத்தில் அஞ்ஞானமில்லை; விழித்த பிறகு விருத்தியுண்டாகுங் காலத்தில் சிதாபாஸனிடத்தில் அஞ்ஞானம் தோன்றும். அந்த

அஞ்ஞானத்தைச் சுட விருத்தியிடமான சிதாபாஸனுக்கு ஸ்வரூபஞானம் வேண்டுமென்று கூறப்படுகிறது.

75. வினா: சித்ஜடக்ரந்தி என்றால் என்ன?

விடை: அதிஷ்டானத்தின் உண்மையாகிய ஸ்வரூப ஞானமும், அந்தஃகரணத்தின் மலமாகிய ஜடமான அஞ்ஞானமும், விழித்த பின்பு சிதாபாஸனுக்கு ஏகாக்ரமாகத் தோன்றும் தோற்றமும் முறையே சித்ஜடக்ரந்தியாகும்.

76. வினா: சிவனது லிங்கம் சிவலிங்கமா? அல்லது சிவனே லிங்கமா?

விடை: சிவமென்பது சச்சிதானந்தம். லிங்கமென்பது விளக்கும் வன்மை அல்லது அடையாளம். ஆதலின் ஸச்சிதானந்தமாகிய சிவம் வேறோர் குறியால் விளக்கப்படுமாயின் ஜடமாய்விடும். மேலும் இது கடம், இது படம் என்று பரமசிவமே விளக்கிவைக்கிறவராக இருக்கிறார். ஆதலினால் சிவனது லிங்கமென்பது பொருந்தாது;சிவனே லிங்கமென்றே கூறவேண்டும்.

77. வினா: சாஸ்திரங்கள் 'ஸாதுக்கள்' என்று கூறுகின்றனவே, அவர்களுக்குள்ள லக்ஷணங்கள் என்ன?

விடை: எப்பொருட்கும் அப்பொருளாய் விளங்கும் கருணைக்கடலாகிய பரமசிவ சைதன்யம்போலச் சகல ஜீவர்களுக்கும் அபயமாக விளங்கும் ஸ்வபாவ முடையவர்களே ஸாதுக்கள். அவர்கள் ஆபதகாமர்கள்; உத்தமாதிகாரிகளுக்குத் தரிசனமாத்திரத்தில் அகண்ட பரமசிவானுபூதியை விளங்கச் செய்கிறார்கள்; தங்களை வழிபடுபவர்களை அவரவர்களுடைய சித்தபரிபாகத்துக்கேற்ற ஸாதனங்களை அருளிச்செய்து பரமசிவானந்த ஸமுத்திரத்தில் குளிக்கச்செய்கிறவல்லமையுள்ளவர்கள்; எவருக்கும் ஸல்லாப மாத்திரத்

தில் பரமசிவ ப்ரேமை உண்டாக்குபவர்கள். அவர்கள் பேசும் வார்த்தைகளெல்லாம் துவைதவாஸனு பீஜமான அகங்கார க்ரந்தி யென்னும் இருளைச் சிதையச்செய்யும். அவர்கள் சிவஞானமாகிய சூரிய தேஜஸை வீசுகிறவர்கள்; பிராணிக ளிடத்தில் நிராபேட்சையாய் வீட்டையடையக் கிருபை புரி வார்கள்; மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை முதலிய சின்மாத்திர வாஸனையுள்ளவர்கள்; துவந்துவ விநிர்முக்தர் கள்; எப்பொழுதும் ஸ்வாநுபூதியில் இரண்டற லயித்திருப் பவர்கள். இவ்வளவு லக்ஷணங்களும் உடையவர்களே ஸாதுக்கள். இவர்களுடைய சங்கந்தான் ஸாது சங்கம். இவர்களுடைய சங்கமே ஜீவர்கள் மோக்ஷ மடைவதற்குச் சிறந்தவழி. வேறு வழி வேண்டியதில்லையென்பது வேதாக மங்களின் நிர்ணயம்.

78. வினு: சிரவண மனன நிதித்தியாஸநங்களால் ஞானம் பெறுமல் காசியில் மரணமடைவுதால் மாத்திரம் எப்படி மோக்ஷம் உண்டாகும்?

விடை: காசியில் மரிப்பவர்கள் எறும்பு முதலிய பிராணிகளில் யாராக இருந்தாலும் அவர்களுடைய மரண காலத்தில் ஸத்திய ஸங்கற்பனுகவுள்ள பரமசிவன் அவர் களுடைய வலது காதில் ஞானுபதேசம் செய்வதாகச் சாஸ் திரங்கள் சொல்லுகின்றன. ஈபரமேன தன்னுல் கற்பிக்கப்பட்ட ஜகத்தில் பிராணிகளுடைய உள்ளத்தில் ஜீவனுகவும் கூடஸ் தனுகவும் அநுப்ரவேசித்திருக்கிறுன். ஆகையால் பரம சிவன் தனது ஸத்யப்பிரதிஞ்ஞையாகிய அருளினுல், அந்தக் கரணததில் சேஷித்து நின்ற ஜீவனைக் கூடஸ்தனுகப் புலப் படுத்தித் தன்னைத்தவிர வேறில்லாதவனுக்கி மோக்ஷபதவியை அருளிச்செய்கிறுன். பிரம்ம நிஷ்டர்களே தமது பார்வை

மாத்திரத்தில் சிரவணாதி ஸாதனமில்லாமலே வேறொரு ஜீவனுக்கு மோக்ஷ பதவியை அருளிச்செய்யலாமாயின் ஸர்வ வல்லமையுள்ள ஈஸ்வரன் சிரவணாதிகளின்றிக் காசி மரணத்தால் மோக்ஷ பதவியை அருளிச்செய்ய முடியாதா?

79. வினா: விருக்ஷாதிகளுக்கு ஞானமில்லாததனால் தன்னைத்தான் அறியும் அறிவு அவைகளிடம் எப்படி உண்டாகும்? ஈஸ்வரன் எப்படி அவற்றிற்கும் காசிமரணத்தால் ஞானப்ரகாசத்தை உண்டாக்குவான்?

விடை: பிரம்ம நிஷ்டர்கள் தங்கள் ஸ்வப்னத்தில் விருக்ஷாதிகளைக் கண்டு தங்களால் அவ்வித விருக்ஷங்களாக விளங்கிய உபாதியில் பிரதிபிம்பித்த சிதாபாஸனைக் கூடஸ்தன் மாத்திரமாகச் செய்து கூடஸ்தனை தானாக ஸாதன பலத்தால் விளங்கச் செய்கிறார்கள். அவர்கள் அப்படிச் செய்கிறபோது ஈஸ்வரனது ஸத்திய சங்கற்பத்தால் தோன்றிய விராட்டு, சிதாபாஸர்களுள் அடங்கிய விருக்ஷாதி சிதாபாஸனை அதிஷ்டானமான தானாக அறியும்படி பகவான் அருளிச் செய்வதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? பகவானது கிருபையால் ஸித்தியாகாதது ஒன்று உண்டா? உமாபதி சிவாசாரியாரென்ற பெரியோர், முள்ளுச் செடிக்கு முக்தி கொடுத்ததை யாவரும் அறிவாரல்லவா? ஆதலின் காசி மரணத்தில் சிவனுடைய அனுக்கிரக விசேஷத்தால் விருக்ஷாதி முதலிய ஸகல ப்ராணிகளும் முக்தர்கள் ஆகின்றனர். என்பது சுருதியின் அபிப்பிராயம். ஸர்வத்தையும் பிரகாசிக்கச் செய்து தானும் பிரகாசிக்கிறது எதுவோ, அது தான் உண்மையான காசி. அந்தக் காசியை எவன் அறிகிறானோ, அவன்தான் உண்மையாகக் காசி தரிசனம் செய்தவன்.

80. வினா: ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பொதுவாக இருக்கிற விஷயம் ஒருவருக்கு ப்ராந்தியைக் கொடுப்பானேன்? வேறொருவருக்குப் போகத்தைக் கொடுப்பானேன்?

விடை: தனக்கு ப்ராப்தி இல்லாததை அடைய வேண்டுமென்று சங்கற்பித்த ப்ராந்தனுக்குத் துக்கத்தைக் கொடுக்கும்; உள்ளபடி முடியுமென்ற ஞானிக்கு ஸங்கற்பத்தையே உண்டாக்க மாட்டாது; அப்படியாயின் துக்கத்தை எப்படிக் கொடுக்கும்?

81. வினா: சரீரத்திற்குப் புறம்பே விஷய ஞானம் வரும்போது கூடஸ்தனையும் சிதாபாஸனையும் பகுத்தறியும் வழி எது?

விடை: சிதாபாஸனாக இருக்கிற தனக்குக் கடவ்ருத்தி ஞானம் வருகிறது. கூடஸ்தனாயிருக்கிற தனக்குக் கடமென்று அறிந்தவுடனே அணைந்தவன் சிதாபாஸன்; அதனைக் கண்டவன் கூடஸ்தன்.

82. வினா: பிரம்மஞானிதான் பிராம்மணனென்ற சுருதி வசனத்தின் தாத்பர்ய மென்ன? குணகர்மங்களினால்தான் ஜாதியைக் குறிப்பிட முடியுமென்று சொல்லும் கீதா வாக்கியத்தின் கருத்தென்ன? பிறவியினால் பிராம்மணத்வம் ஸித்திக்காது என்று சொல்லும் வாதிகளின் கக்ஷி ஸரியா?

விடை: பிரம்ம ஞானிதான் பிராம்மணன் என்ற வசனத்தினால் ஜாதியில் பிராம்மணன் இல்லையென்பது அர்த்தமல்ல. ஜாதி மாத்திரம் இருந்தால் போதாது; யோக்கியதையே முக்கிய மென்பதுவே தாத்பர்யம். நன்றாய் ஓடுகிற குதிரையைப் பார்த்து, 'இதுதான் குதிரை' என்றால் ஓடாத குதிரைகள் வேறு வகையான மிருகங்களென்று அர்த்த

மாகுமா? புத்தியுள்ள மனிதனைப் பார்த்து, 'இவன்தான் மனிதன்' என்று சொல்லிப் பிறகு புத்தியில்லாதவனைப் பார்த்து, 'இவன் மனிதனா?' என்று கேட்கிறோம்; அதனால், பின் சொல்லப்பட்டவனை ஜாதியில் மாடு என்று சொல்ல லாமா? யோக்கியதையில் மாடு மாதிரி யிருக்கிறான் என்று தான் அர்த்தமாகும். அதுபோலப் பிரம்ம ஞானிதான் பிராம்மணன் என்றால், அவனே உத்தம பிராம்மணன்; மற்றவர்கள் பிராம்மண யோக்யதையே இல்லாத மத்திம மான அல்லது அதமமான பிராம்மணர்களென்பதே அதன் அர்த்தமாகும். வேத சாஸ்திரங்களுக்கு அர்த்தம் செய்யும் பொழுது, எங்ஙனம் பொருள் கொள்ள வேண்டுமென்னும் முறையைத் தெரிவிக்கும் சாஸ்திரங்கள் உள்ளன; அவற் றைக்கொண்டு கருத்தை உணரவேண்டுமேயன்றி விபரீதமாக அர்த்தம் செய்தல் கூடாது.

'பிரம்மஞானிதான் பிராம்மணனென்று அர்த்தம் செய் தால் அநேகம் சுருதிகளுக்கு விருத்தம் வரும். ஒரு பிராம் மண மாதாவுக்கும் ஒரு பிராம்மண பிதாவுக்கும் பிறந்த வன் பிராம்மணனென்பதற்கு, ஒரு பிரம்ம ஞானியாகிய பிதாவுக்கும் பிரம்மஞானியாகிய மாதாவுக்கும் பிறந்த பிரம்மஞானி பிராம்மணனென்றல்லவா அர்த்தம் செய்ய வேண்டும்? பிரம்ம ஞானிகளான புருஷனும் மனைவியும் சிற்றின்பத்தை இச்சிப்பார்களா? பிறந்தபோதே பிராம் மணனாகிற குழந்தை பிரம்ம ஞானியாயின் பிறப்பு வருவ தற்கு நியாயம் ஏது?

பிராம்மண சரீரத்துக்குக் கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. பிறந்த குழந்தை பிரம்மஞானியானால் இந்த ஸம்ஸ்காரங்கள் எதற்கு? உப

நயனம் எதற்கு? பிறப்பதற்கு முன்பே குழந்தை பிரம்ம ஞானிதானு இல்லையா என்பதை அறிந்துகொண்டு இவற்றைச் செய்வதா? பிறந்த தினத்தில், பிராம்மணனுக்கு விதிக்கப்பட்ட ஜாதகர்மாவைப் பிரம்மஞானி பிராம்மணன் என்பதைக்கொண்டு பார்த்தால், பிறந்தவுடனே பிரம்மஞானிதானென்பதை அறிந்துகொள்ள முடியுமா? பிரம்மஞானி அத்யயனம் பண்ணவேண்டுமா? பிரம்மஞானியாகிய குழந்தைக்கு அஞ்ஞானம் ஏற்பட்டுப் பிறகு ஸன்யாஸியாகி ஞானத்தையடைய வேண்டுமென்பது சுருதியின் கருத்தா? பிரம்மஞானி பிராம்மணனுக இருந்தால் கோத்ரஸூத்ரங்கள் எப்படி ஏற்படும்? கோத்திர விஷயமான சாஸ்திர விதிகளுக்குப் போக்கென்ன? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடை கூறவேண்டி வரும். ஆதலால் பிராம்மண ஜாதி ஒன்று இருப்பதாக அங்கீகாரம் பண்ணுவது அவசியம்.

குணகர்மாக்களுக் கேற்றபடிதான் ஜாதி சொல்ல வேண்டுமென்று கூறுகிறார்கள். இதுவும் சாஸ்திர விருத்தமே. ஒரு கர்மாவுக்கு ஒரு ஜாதியை வேறொரு ஜாதியாக மாற்றுவதற்குச் சக்தி கிடையாது. புருஷன் சமையல் செய்வதென்னும் கர்மாவைச் செய்தால் ஸ்திரீயென்று யாரும் சொல்வதில்லை. இந்தக்காலத்தில ஸ்திரீகள் உத்யோகம் செய்கிருர்கள். அவர்களைப் புருஷர்கள் என்று யாரும் சொல்வதில்லை. ஒவ்வொரு ஜாதிக்கும் ஸ்வதர்மம் இன்னதென்று வேதம் சொல்கிறது. ஜாதியில்லாவிட்டால் ஸ்வதர்மம் ஏற்படவேண்டிய அவசியமில்லை. பிறவி முதல் மரணம் வரையில் குணமும் செய்கையும் ஒரே மாதிரி ஒரு மனிதனுக்கு இருக்கமாட்டா. ஒரே தினத்தில் ஒரே மனிதனுக்குக் குணமும் செயலும் அடிக்கடி மாறிக்கொண்டே

இருக்கின்றன. எந்தக் குணத்தை அல்லது செய்கையை உத்தேசித்து அவனுடைய ஜாதியைத் தீர்மானிப்பது. ஒவ்வொரு தினத்திலும் ஒவ்வொரு ஜாதியாக அடிக்கடி மாறுகின்றனென்று சொல்வதா? ஜாதி மாறும்போது ஸ்வதர்மங்களும் மாறிக்கொண்டேயிருக்கும். ஒரே மனிதன் ஒரே தினத்தில் நான்கு ஜாதிகளிலும் பலதடவை மாறிமாறி வரலாம். இப்படிப்பட்டவனை இன்ன ஜாதியிற்சேர்ந்தவனென்றுவது, அவனுடைய ஸ்வதர்மம் இன்னதென்றுவது கண்டுபிடிப்பது எப்படி? 'ஸ்வதர்மத்தைச் செய்; பரதர்மத்தைச் செய்யாதே' என்று சொல்லும் சுருதிக்கு அர்த்தம் எப்படிக் கொள்வது? மனிதனுடைய குணம் முதலியவை கொஞ்சம் வயது சென்ற பிறகுதான் வெளியில் தெரியக்கூடியது. அதுவரையில் அவன் விஷயத்தில் நடத்தவேண்டிய தர்மகாரியங்கள் இன்னவையென்று குறிப்பிடமுடியாமற் போய்விடும்.

கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்கள் பிராம்மணனென்று தெரியாமல் எப்படி நடத்துவது? இந்தச் சாஸ்திரங்களெல்லாம் வியர்த்தமாய்விடும்.

குணகர்ம விபாகத்தினால் நான்கு வர்ணங்களும் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருப்பதாகச் சொன்ன கீதா வாக்கியத்தின் அர்த்தமென்னவென்றால்:—

பாடசாலைகளில் இன்ன இன்ன யோக்கியதை உள்ள மாணுக்கர் இந்த இந்த வகுப்பிற் சேரத்தக்கவரென்று விதியிருப்பதுபோல் முன் ஜன்மங்களின் பயனாக இன்ன குணம் தலையெடுத்திருக்கிறதென்பதையும் முன் ஜன்மங்களில் இன்ன செய்கைகள் செய்யப்பட்டிருக்கின்றனவென்பதையும் நன்கு அறிந்துள்ள ஸர்வஞ்ஞரான பகவான், அவனவனுடைய குணகர்மாவுக்குத் தகுந்தபடி அந்த அந்த

## பிறப்பினால் ஜாதி

ஜாதி வகுப்பில் ஜன்மத்தை உண்டாக்கி வைக்கிறார். ஒரு வகுப்பில் ஒரு பையனைப் பரீக்ஷித்துச் சேர்த்துக் கொண்டுவிட்டால், அந்த வகுப்பிலிருந்துகொண்டு தன்னுடைய யோக்கியதையை அதிகமாக்கிக் கொள்ளவோ, குறைத்துக்கொள்ளவோ அவனுக்குக் கொஞ்சம் ஸ்வதந்திரம் இருப்பதுபோல், ஒரு ஜாதியிற் பிறவி ஏற்பட்டிருக்கிற மனிதனும் தன்னுடைய குணத்தையும் நடத்தையையும் அதிகமாகச் சுத்தப்படுத்திக் கொள்ளவும் கூடும்; அசுத்தப்படுத்திக் கொள்ளவும் கூடும். பகவான் கீதையில் சொன்னது நடப்பு ஜன்மத்திலுள்ள குணகர்மாவல்ல ஒரு வகுப்பிலுள்ள பையன் தன் யோக்கியதையை எவ்வளவு விருத்தி செய்துகொண்டாலும் கெடுத்துக் கொண்டாலும் வருஷ முடிவில் பரீக்ஷை செய்து மேல்வகுப்புக்கோ கீழ்வகுப்புக்கோ தலைமை உபாத்தியாயரால் அனுப்பப்படும் வரையில் அவன் தற்காலம் இருக்கிற வகுப்பையே சேர்ந்தவனாக இருக்கிறான். அதைப்போல, ஒரு ஜாதியிற் பிறந்தவன் தன் ஜாதிக்குரிய தர்மங்களை அனுஷ்டித்தாலும் அனுஷ்டியாவிட்டாலும் அல்லது அனுஷ்டிக்காமலே கெட்டுப்போனாலும் அவனுடைய நிகழ்காலப் பிறவி முடியும்வரையில் அவன் அந்த ஜாதியைச் சேர்ந்தவன்தான்.

இப்படி, பிறவியிலேயே இன்ன ஜாதியென்று தெரிந்தால்தான் ஸ்வதர்மம் இன்னதென்று குறிப்பிட முடியும். நாலாவது வகுப்பில் சேர்ந்திருக்கும் மாணாக்கன் படித்தாலும் படிக்காவிட்டாலும் தான் படிக்கவேண்டிய பாடம் இன்னதென்று குறிப்பிடப்பட்டிருப்பதை அறிவான். தனக்கு ஏற்பட்டிருக்கும் பாடத்தைப் படிக்காமல் ஆறாவது வகுப்பிற்குரிய பாடத்தைப் படித்தால் அவனுக்குக் கெடு

தியே பலனாகும். தன் வகுப்புப் பாடத்தை நன்றாகப் படிக்கிறவன் தான் மெச்சப்படுவான். நான்காவது வகுப்பில் இருந்தும் ஸரியாய்ப் படிக்காமல் திரிந்துகொண்டிருக்கும் பையனைக் காட்டிலும் தன் பாடத்தை நன்றாகப் படிக்கிற இரண்டாவது வகுப்பு மாணாக்கன் உயர்ந்தவனென்றே சொல்லவேண்டும். நான்காவது வகுப்புப் பையன் எல்லோராலும் தூஷிக்கப்படுவான்; இரண்டாவது வகுப்புப் பையன் மெச்சப்படுவான். மரியாதையும் மரியாதைக் குறைவும் வகுப்புக்களின் உயர்வு தாழ்வைக் குறித்தனவல்ல. இப்படியே ஜாதி எதுவாக இருந்தாலும் ஸ்வதர்மத்தை ஸரியாக அனுஷ்டிப்பவர்களே மெச்சப்படுவார்கள். தர்மங்களுக்குள் உயர்வுதாழ்வு பாராட்டக் கூடாது. எதுவாக இருந்தாலும் ஸ்வதர்மந்தான் சிலாக்கியம். நன்றாக ஆசரித்து வந்தாலும் அன்னியதர்மம் விலக்கப்படவேண்டியதே.

இப்போதுள்ள ஜன்மத்திலுள்ள குணகர்மாக்களை அநுஸரித்து ஜாதி விபாகம் செய்வதாக இருந்தால் அர்ஜுனன் பிராம்மணனாகலாம்; அவனுக்குப் பிராம்மணனுக்குரிய ஜீவகாருண்ய முதலிய குணங்களெல்லாம் இருந்தன; அப்படியிருந்தும் ஜன்மத்தினால் க்ஷத்திரியனைக் கருதி ஸ்ரீகிருஷ்ணபகவான் யுத்தம் செய்யச் சொன்னாரே யன்றி பிராம்மண தர்மமான ஸந்யாஸத்திற்கும் பிக்ஷாடனத்துக்கும் போகச் சொல்லவில்லை. கீதையை ஸம்ஸ்கிருத ஞானமில்லாமல் வாசித்தால் கலிபுருஷன் ஏவுதலால் விபரீத அர்த்தந்தான் புத்தியிற்படும். துஷ்டப் பிராணிகளுக்காக இரவினை உண்டாக்கியிருப்பதுபோலக் கருணாமூர்த்தியான பகவான் துஷ்டர்களுக்காக இந்த யுகத்தை உண்டாக்கியிருக்கிறாரென்று தோற்றுகிறது.

83. வினு: கலியுகத்தில் இவ்வளவு பாபங்களும் வேதசாஸ்திர விருத்தமான செய்கைகளும் அதிகமாக இருக்கும்போது ஸாதுக்களான முமுக்ஷுக்கள் எப்படித் தர்மத்தைச் செய்து முக்தியை அடைய முடியும்?

விடை: கலியுகமென்று பயப்படக்கூடாது. நான்கு யுகங்களுக்குள் இந்தயுகம் இருட்டுயுகமென்று சொல்லப் படும். இருட்டுக்காலத்தில் எங்கும் இருட்டு இருந்து கொண்டுதான் இருக்கும் புத்திசாலி தூங்கமாட்டன். தீபத்தை வைத்துக் கொண்டாவது தான் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்து கொண்டேயிருப்பான். அதுபோல இந்த யுகத்தில் அஞ்ஞானுந்தகாரமான மௌட்டியங்களும் பித்தலாட்டங்களும் இருந்து கொண்டுதான் இருக்கும். புத்திசாலிகள் தூங்காமல் வேதசாஸ்திர ப்ரகாசத்தை முன் னிட்டுக் கொண்டுபோனுல்தான் தர்மத்தைசசெய்து மோக்ஷ மார்க்கத்தை அடையலாம். தீபம் உள்ளவனுக்கு இருட்டு எப்படித் தடைசெய்யாதோ அப்படி வேத சாஸ்திரங்களில் தீவிரமான நம்பிக்கை உள்ளவர்களுக்குக் கலிதோஷம் பாதிக் காது. இந்த யுகம் ஸாதுயுகமென்று மகான்கள் எல்லாம் அபிப்பிராயப்பட்டு இருக்கிறார்கள். ஆகையால் கலிகாலமே என்று அஞ்சவேண்டியதில்லை. மற்றயுகங்களில் எவ்வளவு தபஸ் செய்து பகவானைப் பார்க்கலாமோ அத்தனை கஷ்ட மில்லாமல் பகவானுடைய நாம ஸ்மரணமாத்திரத்தில் இந்த யுகத்தில் முத்தியைஅடையலாம்.

84. வினு: ஞானிகளுக்கு ஜாக்கிர ஜீவனும் திருச்யப் பிரபஞ்சமும் எப்படி ஸ்வப்ன ஜீவனையும் ஸ்வப்ன ப்ரபஞ் சத்தையும் போல மித்யையாகும்?

விடை: ஒரு மனிதனுக்கு நித்திரை கலைந்து விழித்த பின்பு முன்பு ஸ்வப்னத்திலே கண்ட காட்சிகளெல்லாம் எப்படிப் பொய்யாகின்றனவோ, அப்படியே ஞானிகள் பிரபஞ்சத்தோற்றங்கள் யாவும் மித்தை யென்று அத்தோற்ற காலத்திலேயே அறிந்து கொண்டிருக்கிறார்கள். விழிப்பதற்கு முன் நித்திரா காலத்தில் ஸ்வப்னத் தோற்றங்கள் உண்மையாகவே எப்படித் தோன்றினவோ அவ்விதமே ஞானம் ஏற்படுவதற்கு முன்பாக அவித்யையென்ற அஞ்ஞான காலத்தில் திருஶ்யப்ரபஞ்சத் தோற்றங்களும் வாஸ்தவ மென்றே எண்ணப்படுகின்றன. அதாவது நித்ரா மோஹத்தினால் ஸ்வப்னப்பிரபஞ்சம் ஸத்யமாகவே தோன்றுவது போல் அவித்யாமோஹத்தினால் ஜாக்கிரத் பிரபஞ்சமும் ஸத்யமாகவே தோற்றுகின்றது. ஜாக்ரத் காலத்திலுள்ள ஜீவனென்ற சிதாபாஸனே ஸ்வப்ன காலத்தில் இருவகைப்பட்டு ஸ்வப்ன ஜீவனாகவும் ஸ்வப்னப் பிரபஞ்சமாகவும் பிரிந்திருப்பது போலக் காணப்படுகின்றான். ஆதலால் ஸ்வப்னம் போல் ஜாக்கிரமும் மித்யை.

இது மாத்திரமல்ல. ஜாக்கிரத்வாஸனாஜன்யம் ஸ்வப்னம். இப்படி இருக்கும்போது ஜாக்கிரத்தில் உள்ளவை ஸ்வப்னத்தில் விருத்தப்படுகின்றன. அதாவது ஜாக்கிரத்தில் வயிறு நிறையச் சாப்பிட்ட ஒருவன் பட்டினி கிடக்கிறதாக ஸ்வப்னம் காண்கிறான். இதுபோல் ஸ்வப்னத்தில் வயிறு நிரம்பச் சாப்பிட்ட மனிதன் விழித்த பின்பு பசியென்று சொல்லுகிறான். இப்படி ஒன்றுக்கொன்று மாறுபடுவதால் இவை இரண்டும் மித்யையே. ஆதியிலும் அந்தத்திலும் எது பொய்யோ அது மத்தியகாலத்திலும் பொய். ரஜ்ஜு மூன்று காலத்திலும் ரஜ்ஜுவாகவே இருக்கும்போது மத்திய காலத்

தில் மாத்திரம் தோற்றும் பாம்பு எவ்வளவு வாஸ்தவமோ, அவ்வளவு வாஸ்தவந்தான் ஆதியந்தத்தில் இல்லாத ஜகத்து மத்திய காலத்தில் காண்பதுமாகும். அதனால் மித்யை யென்றே சொல்லவேண்டும். ஜாக்ரத்தில் காணாத வஸ்துக் களையெல்லாம் சில சமயங்களில் ஸ்வப்னத்தில் பார்க்கிறான். ஆனதால் ஸ்வப்னம் ஜாக்ரத்வாஸனா ஜன்யம் என்று மாத் திரம் சொல்வதற்கும் இல்லை. ஆகையால் ஸ்வப்னஜீவன் தானே கற்பிப்பதுவே ஸ்வப்னமென்று கொள்ளவேண்டும்; அதனால்தான் அவனுக்கு ஸ்வப்ன கற்பிதன் என்று பேர்.

85. வினா: ஸ்வப்ன திருஷ்டாந்தம் வாஸ்தவமாய் இருக்கும்பக்ஷத்தில் ஒரு ஜீவனுக்கு மோக்ஷம் ஏற்பட்டால் எல்லா ஜீவர்களுக்கும் மோக்ஷமும் திருஶ்யப்ரபஞ்ச நஷ்ட மும் ஏற்படவேண்டுமே; அப்படி ஏன் ஏற்படவில்லை?

விடை: உண்மையில் ஜாக்ரத்திலுள்ள அனுபவங்கள் ஸ்வப்ன அனுபவங்களைப் போல் மித்யைதான். ஆனாலும் ஒரு ஜீவனுக்கு முக்தி ஸித்தித்தால் அவனுக்கு மட்டுமே ப்ரபஞ்சமும் ஜீவர்களும் மறைவடைவார்களே அல்லாமல் மற்ற ஜீவர்களின் பார்வையில் இம்மறைவு உண்டாகாது. எந்த மனிதனுடைய நித்ரையில் ஸ்வப்னப்ரபஞ்சம் சிருஷ் டிக்கப்பட்டிருந்ததோ அவனை விட்டு நித்ரைவிலகினால் ஸ்வப்னத்தில் காணப்பட்ட சகலமும் மறைந்துவிடும். இப்படி இல்லாமல் அவனுடைய ஸ்வப்னமும் நித்திரையும் தொடர்ந்தே நிகழும்போது அந்த ஸ்வப்னத்தில் காணப் பட்ட மற்றொரு ஜீவன் அந்த ஸ்வப்னப்பிரபஞ்சத்திலிருந்து தான் தப்பித்துக் கொள்ளும்படியான காரியங்களைச் செய்வ தாகச் சொல்லி முயற்சி செய்து மறைந்து போய்விடக் கூடு மானால் அதனால் அந்த ஸ்வப்னத்தில் காணப்பட்ட மற்ற ஜீவர்களாவது பிரபஞ்சமாவது மறைந்துவிடக்கூடியனவல்ல.

அவித்யையின் வயத்தனுயுள்ள ஜீவனுகிய மனிதனுடைய ஸ்வப்னக் காட்சிபோல ஜாக்ரத்காட்சி முழுதும் ஒரே ஜீவனுடைய வாஸனு காரியமல்ல. இது, மாயாபதியும் ஸமஷ்டி ரூபியுமான ஈச்வரனுடைய ஸங்கற்பத்தினுல் ஏற்பட்டுள்ளது. எதுவரையில் ஜகத்துத் தோன்றிக் கொண்டிருக்கவேண்டுமென்று ஈச்வர சங்கற்பம் இருக்கிறதோ அதுவரையில் அது தோன்றிக்கொண்டுதான் இருக்கும். இதைத்தான் கற்பம் என்று சொல்வது. ஜீவனுடைய நித்திரை நீங்கிவிட்டால் ஸ்வப்னக் காட்சி முழுவதும் நீங்கி விடுவதுபோல ஈச்வரன் தன் ஸ்வாதீனத்தில் உள்ள மாயையை உபஸம்ஹாரம் செய்துவிட்டால் திருச்யப் பிரபஞ்சம் முழுவதும் லயமடைந்து பிரளயம் ஏற்படுகிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

86. வினு: ஸாமான்ய தர்மத்தோடு சேராத விசேஷ தர்மம் ஏன் மோக்ஷத்தை அளிக்காது?

விடை: ஸாமான்ய தர்மம் இருந்தால் மனுஷ்யத்வம் ஸித்திக்கும்; இல்லாவிட்டால் அஸுரன் என்ற பேர் வரும். விசேஷ தர்மம் சித்த சுத்திமூலம் ஞானத்தைக் கொடுக்கிறது. ஸாமான்யதர்மத்தினுல் மனுஷ்யனுகி, விசேஷ தர்மத்தினுல் சித்த சுத்தி வழியாக முமுக்ஷுத்துவத்தை அடைந்து மகாபுருஷனுன பரமாத்மாவை ஸாக்ஷாத்கரித்தால்தான் ஜீவன்முக்தி ஸுகத்தை அனுபவிக்கலாமென்று விவேக சூடாமணி சொல்லுகிறது. ஒரு நதியில் ஸாமான்யமாக நீந்தத்தெரிந்தால் மிதக்கலாம். பிரவாகம் வந்துவிட்டால் விசேஷ முயற்சி செய்து நீந்தித்தான் அக்கரை சேரமுடியும். அதுபோல ஸம்ஸாரமென்னும் வைதரணி நதியில் ஸாமான்ய தர்மத்தோடுகூட இருக்கும் மனித

னுல்தான் மிதக்கமுடியும்; விசேஷ தர்மமும் கூட இருந் தால்தான் எதிர்த்து நீந்தி மோக்ஷ ஸ்வராஜ்யமாகிய அக் கரையை அடைந்து ஆனந்தத்தை அனுபவிக்க முடியுமென் பது சாஸ்திரங்களின் அபிப்பிராயம். அதற்காகவே இரண்டு தர்மங்களையும் சேர்த்து அனுஷ்டிக்க வேண்டுமென்று சாஸ் திரங்கள் சொல்லுகின்றன.

இராவணுதிகளுக்கு ஸாமான்ய தர்மமில்லாமல் விசேஷ தர்மம்மாத்திரம் இருந்ததால் ராக்ஷஸர்களாகிப் பகவானு டைய கோபத்திற்கு ஆளானுர்கள்.

87. வினு: அரூபியான பரமாத்மாவை உபாஸிப்ப தற்கு உருவத்தைக் கற்பித்துக்கொள்ளல் அவசியமா?

விடை.: உண்மையில் நிர்க்குணமாகவும் ஏகமாக வும் அகண்டமாகவும் அரூபமாகவும் அவாங்மனுேகோசர மாகவும் சுத்த ஸச்சிதானந்த ஸ்வரூபமாகவுமுள்ள பிரம்மப் பொருளின் ஸமீபத்திலிருப்பதென்பது உபாஸனமென்பதன் பொருள்களுள் ஒன்று. இந்த உபாஸனத்திற்குரியவராக வேண்டுமானுல் உபாஸகனுடைய கீழான சிற்றறிவிற்கு ஏற்றபடி பரமாத்மாவிடத்தில் ஸர்வஞ்ஞத்துவாதி குணங் களைக் கற்பித்து அவனுடைய மனததுக்குப் புலப்படக்கூடிய விதமாகக் கீழ்நிலைக்குக் கொண்டுவருவது அவசியமாக இருக் கிறது. அப்பொழுதுதான் அவருடைய ஸமீபத்தில்இருப்ப தான பாவனையுடன் அவரை உபாஸித்து வரமுடியும். ஸமீ பத்தில் இருப்பது என்றுல் உபாஸகன் ஸகல இந்திரியங்க ளுடனும் கூடின தன் மனத்துக்கு அவரையே குறியாகச் செய்துகொள்வதென்பது அர்த்தம். உபாஸனமென்பது மனத்தின் காரியம். மனத்தால் பாவிக்கப்படும் விஷயங்க ளிற் பெரும்பாலானவை இந்திரியத்தால் அறிவனவாக

இருப்பதால், கண் காது முதலான ஞானேந்திரியங்களைப் பரமாத்மாவின் விக்கிரக தரிசனம், கல்யாணகுண ஸ்ரவணம் முதலானவைகளைச் செய்வதிலும், வாக்கு கைகால் முதலிய கர்மேந்திரியங்களை அவருடைய ஸ்தோத்திரஸங்கீர்த்தன அர்ச்சனப்ரதக்ஷிணாதி காரியங்களைச் செய்வதிலும் நியமித்துக்கொண்டு மனத்தை அவருடைய ஸ்வரூபத்தியானாதிகளில் இருக்கும்படி செய்யவேண்டும். இந்திரியங்களின் ஸ்வபாவத்துக்குத் தக்கபடி நல்வழிகளில் அவற்றைப் போக்கிக் கொண்டே இராவிட்டால் கெட்ட காரியங்களில் அவை செல்லும்; மனமும் உபாஸனதத்திலே ஸ்திரப்படாது. அநேகருடைய மனங்கள் இந்திரியங்களுக்கு வசப்பட்டுத் தியான காலத்தில் ஊர் சுற்றிக்கொண்டிருப்பதை அனுபவத்திலே பார்க்கலாம். மனத்தை ஸாமான்யமாய் அப்யாசகாலத்தில் அடக்கமுடியாமல் இருப்பதால்தான் பாஹ்யபூஜை அவசியமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரியங்களின் செயல்களுக்கும் கொஞ்சம் போக்கு விட்டுக் கொடுத்து அவை முழுவதும் பகவத் கைங்கரியாதிகளில் ஈடுபடும்படி செய்துவிட்டு அப்பால் மனத்தை ஸ்வரூபத்தியானத்தில் லயிக்கும்படி செய்வதே கிரமமான மார்க்கம். ஆதலின் இவைகளுக்காகப் பகவானுக்கு ஒரு ஸ்தூல ரூபத்தைக் கற்பிப்பதும் அவசியந்தான்.

உண்மையில் அரூபியான பரமாத்மாவுக்கு ஸ்தூல ரூபத்தைக் கற்பிக்கலாமா வென்று ஒரு ஸம்சயம் உண்டாகலாம். ஒரு ரூபமும் இல்லாதவருக்கு எல்லா ரூபமும் பொருந்தக் கூடியவையே. எந்த ரூபத்தைக் கற்பித்தாலும் பகவானுக்குக் குறைவு வந்து விடாது. உபாஸகரின் கீழான தன்மைக்குத் தக்கபடி பரமாத்மா தணிந்து வந்து பக்தியால்

செய்யப்பட்ட அற்பமான கைங்கர்யங்களை ஏற்றுக் கொள்வதால் அவருடைய மேன்மைக்கு ஹானியில்லை. பெரிய உத்தியோகத்தில் இருப்பவர் தம் முன்னால் ஒரு குழந்தை வந்து பழத்தைக் கொடுத்தால் குனிந்து வாங்கும்படியாக நேரிடும். அதனால் அவருடைய உயர்ந்த ஸ்தானத்திற்குக் குறைவு வந்து விடாது. அவரைத் தணிந்து வரும்படி செய்வதனால் குழந்தைக்குப் பாபமும் வந்து விடாது. குழந்தையின் தாழ்ந்த நிலைமையை உத்தேசித்து அவர் குனியும்படி நேர்கிறது; குழந்தையின் சந்தோஷத்திற்காக அவர் குனிகின்றார். அவருக்கு அதனால் நஷ்டம் இல்லை. இது மாதிரிதான் பகவானும் ஜீவர்களின்பொருட்டுக் கருணையால் ரூபம் எடுத்துக்கொண்டு வருகிறார். மின்சார சக்திக்கு ஒரு வித ரூபமும் இல்லை. ஒரு வளைந்த கம்பியில் ஸம்பந்தப்பட்டுப் பிரகாசிக்கும் பொழுது கம்பியின் வளைவுத் தன்மை மின்சாரத்தில் ஆரோபிக்கப்பட்டு மின்சாரமே வளைந்திருப்பதாகப் பாவிக்கலாம். அதாவது ரூபமுள்ள பதார்த்த ஸம்பந்தத்தினால் அரூபமான ஒன்றில் உருவத்தன்மை கற்பிக்கப்படும். அரூபமான மின்சாரத்தில் உருவமுள்ள கம்பி இருப்பதாகச் சொல்ல முடியாது. இப்படியே அரூபியான பரமாத்மாவினிடத்தில் ஸ்தூல விக்ரஹமிருப்பதாகச் சொல்ல முடியாவிட்டாலும் ரூபமுள்ள ஸ்தூல விக்கிரகத்தில் அரூபியான பரமாத்ம சைதன்யம் இருக்கக்கூடுமென்றே சொல்ல வேண்டும். ஆகையால் ஸர்வ வியாபியான பகவானது ஸம்பந்தம் ஸ்தூல விக்ரஹாதிகளில் இருப்பது அவருடைய இயற்கை ஸ்வரூபத்திற்கு விரோதமன்று. கம்பியின் வளைவுத் தன்மை கம்பியிலுள்ள மின்சாரத்திற்கே ஆரோபிக்கப்படுவதுபோல் விக்கிரகத்திலுள்ள பரமாத்மாவை

யும் விக்கிரக ரூபியாகவே இருப்பதாகப் பாவிக்கலாம். ஸ்தூலாதி ஸகல ரூபங்களும் பகவானுக்குப் பொருந்தக் கூடியவைகளே என்பது சாஸ்திரங்களின் ஸித்தாந்தம்.

88. வினு: விக்கிரக ஆராதனத்தினுல் திருப்யலயம் எப்படி உண்டாகும்?

விடை: பூதத்வ பரிசோதகர் எப்படி ஒரு பதார்த் தத்தைச் சோதித்துப் பார்த்து அதைப்போல மற்ற ஸகல பதார்த்தங்களின் தத்துவங்களேயும் தெரிந்து கொள்ளுகிருரோ, அப்படியே ஜிஞ்ஞாஸுவும் பிரம்மத்தை ஸாக்ஷாத் கரிக்கும் பொருட்டுத் திருப்ய பதார்த்தங்களில் ஒன்றை மாதிரிக்காக, விக்கிரக ரூபமாகத் தன் எதிரிலே வைத்துக் கொண்டு அதில் முன்பே ஏற்றப்பட்டிருக்கிற ஆரோபணங் களே மனத்தினுல் ஒதுக்கித் தள்ளிவிட்டு அதிலுள்ள ஸர்வ வியாபியும் உண்மைப்பொருளுமாகிய பிரம்மத்தை ஸாக்ஷாத் கரிக்க யத்தனம் செய்யவேண்டும். பிரம்ம தரிசனம் ஆனுல் திருப்யலயம் வந்து விடுகிறது.

89. வினு: விக்கிரகாதிகளிலுள்ள ஆரோபணங்களேத் தள்ளுவதற்கு ஸ்தூல வஸ்து எதிரிலிருந்தால் போதாதா? அதைப் பூஜை பண்ணுவது எதற்காக?

விடை: உபாஸனத்தின் முடிவான உத்தேசம் வெறும் மனோபாவனை மாத்திரம் அல்ல. விக்கிரகத்திலுள்ள பிம்பப் பொருளான பிரம்மத்தை ஸாக்ஷாத்கரிக்கிறதாகிய அனுபவ ஸித்தியே உத்தேசம். விக்கிரகத்தை எதிரில் வைத் துக்கொண்டு அதில் பிரம்மபுத்தியைச் செலுத்தித் தியானம் செய்தல்மட்டும் போதாது. ஓர் ரஸாயன சாஸ்திரியின் கையில் ஒரு கலப்புப் பொருளேக் கொடுத்து அதில் என்ன

வஸ்துக்கள் அடங்கியிருக்கின்றன வென்று கேட்டால் அந்தப் பொருளை எதிரில் வைத்துக்கொண்டு வஸ்துக்களைத் தியானம் செய்துகொண்டிருந்தால் பிரித்தெடுக்க முடியாது. அவைகளை வெளிப்படுத்துவதற்குரிய காரியங்களைச் செய்ய வேண்டும். அதுபோல விக்கிரகத்தின் முன்னே இருந்து தியானித்தால் மட்டிலும் போதாது.

பிரம்ம லக்ஷணம் சச்சிதானந்தம்; விக்கிரகத்தில் விபரீத லக்ஷணங்கள் காணப்படுகின்றன. அஃது அழிவுள்ளதாகையால் ஸத்துமில்லை; ஜடமானதாகையால் சித்துமில்லை. சித்தே இல்லாதவிடத்து ஆனந்தம் எப்படி இருக்கக்கூடும்? இவ்வித விக்கிரகத்தில் ஸச்சிதானந்த ஸ்வரூபியான பிரம்மத்தின் அனுபவரூபதர்சனம் ஏற்படவேண்டுமானால், அதில் அதிகமாக வேலை செய்யவேண்டும்.

முதலில் அதில் ஸச்சிதானந்த பிரம்மம் இருக்கிறதாக உபாஸகன் மனோபாவனை செய்து அதை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். ஸ்தூலரூபத்தோடுகூட ஸூக்ஷ்மரூபமும் அதில் இருப்பதாக நிச்சயித்துக் கொள்ளலாம். ஸ்தூலரூபத்திற்கு ஸூக்ஷ்மரூபம் ஆதாரமும் அனுகுணமும் ஆகும். இந்த ஸ்தூலம் ஸூக்ஷ்மம் இரண்டும் சேர்ந்து பிரம்மத்திற்குக் குணரூபத்தை ஏற்படுத்தியிருப்பதாக எண்ணிக் கொள்ளவேண்டும். இவ்விதமாகப் பாவிக்கப்பட்ட ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்னும் இந்த இரண்டு ரூபங்களும் ஜீவரூபங்களல்ல வென்பதும் ஞாபகத்தில் இருக்கவேண்டும். விக்கிரகத்தின் ஸ்தூலரூபம் அண்டஜம் சுவேதஜம் உத்பீஜம் ஜராயுஜம் என்னும் இந்த நான்கு வகையான ஜீவர்களின் ஸ்தூல சரீரங்களிலே சேர்ந்தது அல்ல; ஜீவசரீரங்களுக்கு வேறுபட்டது. ஆனால் உலகத்

தில் அடங்கியது ஸ்தூலரூபம். உலகம் முழுவதும் ஸகுணப் பிரம்மத்திற்கு ஸ்தூல சரீரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் விக்கிரகம் ஜீவசரீரங்களிலே சேராமலும் பரமாத்மாவின் சரீரத்தில் அடங்கியும் இருக்கிறது. இக் காரணத்தினால், அதைப் பரமாத்மாவின் சரீரமாகவே பாவிக்கலாம்.

ஸ்தூலஜகத்து முழுவதும் பரமாத்மாவின் சரீரமாக இருக்கையில் அதில் லேச பாகமான விக்கிரகத்தை அந்தச் சரீரமாக எப்படி பாவிக்கலாமென்ற ஸந்தேகம் உண்டாகும். உபாஸகன் ஜகத்திற்குள் அடங்கியிருப்பதால் ஸ்தூல ஜகத்து முழுவதையும் அவன் பார்க்கிறதில்லை. ஜகத்திற்கு வெளியிலிருந்து பார்த்தால்தான் முழுவதும் பார்க்கலாம். முழுஜகத்தையும் பார்த்தகற்குப் பிறகுதான் ஸகுணப் பிரம்மத்தை உபாஸிக்கலாமென்று சொல்லவுங்கூடாது. எப்படி ஒரு மனிதன் தன் யஜமானரை உபாஸித்து ஸ்தோத்ரம் செய்யும்போது அவருடைய ஏதேனும் ஓர் இந்திரியத்தை மாத்திரம் பார்த்துக்கொண்டு செய்தாலும் அந்தஸ்தோத்ரம் அந்த யஜமானருக்கே ஸம்பந்தப்படுகிறதோ, அப்படியே ஜகத்தில் ஓர் அற்பபாகமாகிய விக்ரகத்தை நோக்கி உபாஸகனால் செய்யப்படுங்காரியம் யாவும் பரமாத்மாவோடு ஸம்பந்தப்படுவனவே யாகும்.

அற்ப பாகமாகிய விக்கிரகத்தில் அகண்டமான பரமாத்மா பூர்ணராயிருக்கிறார் என்பது முன் சொல்லப்பட்டது. இதுபோல் ஸூக்ஷ்மரூபத்திலும் பரமாத்வுக்குப் பூர்ணத்தன்மை குறைந்துபோகாது. இந்த விக்கிரகமே, உபாஸகர்களுக்கு ஸமஷ்டி ஸ்தூலதேகப் பிரதிநிதியாகப் பரமாத்மா இருக்கும் இடமாகும். ஸமஷ்டி ஸூக்ஷ்ம

தேகப் பிரதிநிதியாகவும், இரண்டுக்கும் காரணமாக இருக்கிற மாயைக்கு அதிபதியாகவும், அதீதராகவும் இருப்பவரே ஸகுண ப்ரம்மம். அவர் ஸன்னிதியில் தன்னுடைய ஜீவத்துவ நிலையை விட்டொழித்துத் தான் பரமாத்மாவுடன் ஒன்றாகி விடுவதான ஸாயுஜ்யமோக்ஷ ஸித்தியின் பொருட்டுத் தான் எப்படி நடந்துகொள்ள வேண்டுமோ அந்தப்படி உபாஸகன் பூஜைகள்செய்து வருகிறான். முதலில் பரமாத்மா விக்கிரகம் என்பதைச் சில கிரியைகளால் ஸ்திரப்படுத்திக் கொள்ளுகிறான். பரமாத்மா தன் ஹ்ருதயத்திலும் விக்கிரகத்திலும் ஒருபடியாய் இருக்கிறார் என்பதை, பகவானை ஹ்ருதயத்தில் தியானம்செய்துகொண்டும் ஆவாஹனக் கிரியைகளால் பகவானுடைய ஸான்னித்தியத்தை ஸ்தாபித்துக்கொண்டும் அறிகிறான். உண்மையில் தான் பரமாத்மாவாக இருந்தாலும் எப்படி வியஷ்டி சரீர ப்ராணபுத்தியாதிகளால் தனக்கு ஜீவத்வம் உண்டாகியிருக்கிறதோ அப்படியே பகவானுக்கும் ஸமஷ்டி சரீரப்ராணபுத்தியாதிகளால் ஸகுணத்வம் உண்டாகியிருக்கும் விஷயத்தை ப்ராணப்ரதிஷ்டை முதலிய காரியங்களால் வியக்தப்படுத்திக் கொள்கிறான்.

எவ்விதம் ஒரு கிருஹஸ்தன் தன் சொந்த நன்மையை உத்தேசித்துத் தன் இருப்பிடத்திற்குத் தேசமகாராஜா வந்தால் அவர் வந்தவுடன் பல உபசாரங்களை அவருக்குத் தேவையில்லாமலிருந்தாலும் மரியாதையின் பொருட்டுச் செய்துவருவானோ, அவ்விதமாகவே தன் முன்னிலையில் ஸாக்ஷாத் ஸகுணப்பிரம்மமாகிய பகவானுடைய ஸான்னியத்தியம் லபித்துவிட்டதாக நிச்சயப்படுத்திக்கொண்டு உபாஸகன், பகவானுக்குத் தேவையில்லையென்பதைத்

தெரிந்துகொண்டவனானாலும் மரியாதைக்காக அர்க்கியபாத்திய ஆசமனாதிகளை விதிப்படி ஈந்து உபசரிக்கின்றான். இந்த உபசாரங்களால் உபாஸகன் தன்னுடைய மமதா பரித்தியாகத்தைக் காலக்கிரமத்தில் செய்துகொள்ளுகிறான். ஆத்மநிவேதனத்தினால் சரீரப்ராண புத்தியாதிகளிலிருந்த அகந்தையும் காலக்ரமத்திலே போய்விடுகிறது. இந்த இரண்டு விதத் தியாகந்தான் ஆராதனையின் முக்கிய கருத்து. இந்தத் தியாகத்தை ஸம்பூர்ணமாகச் செய்துவிட்டால் சிதாபாஸத்துவம் காலக்கிரமத்தில் போய்விடும். இந்த ஸம்பூர்ணத்தியாகம் நிவர்த்தி மார்க்கத்தினால்தான் ஸித்திக்கக் கூடுமானாலும், விக்கிரகாராதனத்தினால் வெகுதூரம் ஸாதித்துக் கொள்ளலாகும்.

நானென்ற புத்தியிருக்கும் வரையில் அன்னியம் என்கிற புத்தியும் இருக்கும். நானென்பது மலினப்பட்டால் அன்னியமும் போய்விடும். விக்கிரகத்தை ஸ்தூல புத்தியாக நினையாமல் பரமாத்மாவென்று எண்ணிப் பூஜையைச் செய்துவந்தால் விக்கிரகத்தின் ரூபத்துவமும் பார்வையிலிருந்து மறைந்துபோகும். இந்தப் பிரகாரம் கொஞ்சகாலம் செய்துவந்தால் விரோதிகளான தன் ஜீவத்வமும் விக்கிரகத்தின் ரூபத்வமும் நாசமடைந்து விக்கிரகாராதனத்தின் முடிவான உத்தேசமாகிய பிரம்மஸாக்ஷாத்காரம் ஸித்தித்துவிடும்.

90. வினா: எப்பொழுதும் ஆனந்த ரூபியாக இருக்கும் நமக்கு ஆனந்தம் நம்மைவிட்டு விலகியதுபோல் காண்பதற்கு என்ன காரணம்?

விடை: ஆனந்தமே பிரம்மஸ்வரூபம். ஆனந்தத்திலேயே பிரம்மத்தின் ஸத்சித் ரூபங்கள் விளங்குகின்றன. காணப்

பட்டனவும் காணப்படாதனவுமான ஸகல வஸ்துக்களுள் ஒவ்வொரு ஜீவனிடத்திலும் எக்காலத்திலும் மாறுதலின்றி ஸ்திரமாய் இருக்கிறபொருள் ஆனந்த ரூபியான பிரம்மந்தான். உண்மையில் நாம் பிரம்மமாயிருந்தும் அதைவிட்டு விலகியதுபோல் நாம் இருப்பதால் ஆனந்தமும் நம்மைவிட்டு விலகியதுபோல் தோன்றுகிறது. உண்மையில் விலகவில்லை. எப்பொழுது இந்தத் தோற்றத்திற்குக் காரணமாகிய அவித்யை நம்மைவிட்டு நீங்குமோ, அப்பொழுது நம்முடைய ஆனந்தஸ்வரூபமும் நன்கு விளங்கும். 'பிரம்மம் ஒன்றுதான் சத்தியம்; ஜகத்து ஸத்தியமல்ல. ஜீவர்களாகிய நாம் பிரம்மத்தைத் தவிர வேறல்ல' என்ற விஷயங்கள் தெளிவாக உபநிஷத்துக்களின் மூலமாக ஸர்வேஶ்வரனால் வெளிப்படுத்தப்பட்டும் நம் ஆசார்யர்களால் அற்புதமான பாஷ்யக்கிரந்தங்கள் மூலமாக விசதமாகத் துலக்கி ஸ்தாபிக்கப்பட்டும் இருப்பதைக் குருமுகமாகப் படித்து ஸ்வானுபூதி அடைந்தால் ஆனந்தம் நம்மைவிட்டு விலகாமல் ஆனந்த ரூபியாகவே இருந்து மோக்ஷத்தை அடையலாம்.

91. வினா: வித்தியாஸங்களுக்கு அதீதமாக இருக்கும் ஏகமான வஸ்துவை ஸாக்ஷாத்கரிக்க, வித்தியாஸத்தையுடைய ஸாதனங்கள் எவ்வாறு உதவும்?

விடை: வித்தியாஸப் பார்வையாகிய கெடுதலை நீக்கும் பொருட்டு வித்தியாஸ சகிதமான ஸாதனங்களைக் கைக்கொள்ள வேண்டும். பாத்திரம் அழுக்காக இருக்கிறது; நாம் அந்த அழுக்கைப் போக்க எண்ணுகிறோம்; அதற்காக மண்ணையோ சாம்பலையோ சாணியையோ போட்டுத் தேய்க்கிறோம். அந்த மண் முதலியவைகளும் அழுக்குத்தானே? அழுக்கைப் போக்கும் பொருட்டு வேறோர் அழுக்கைத்

தேடி உபயோகிக்கிறோம். ஆனால் பாத்திரத்தில் இருந்த அழுக்கு விபரீதமானது. அதை ஓர் அநுகூலமான அழுக்கினால் போக்கிக்கொள்கிறோம். இரண்டு அழுக்கையும் நாம் கடைசியிலே கழுவிவிடுகிறோம். கலங்கின ஜலத்திலுள்ள அழுக்கைப் போக்கிக் கொள்ள விரும்பினால் தேற்றாங் கொட்டையைப் பொடிபண்ணி ஜலத்திற் போடுகிறோம். அதுவும் மற்றோர் அழுக்குத்தானே? ஆனாலும் ஜலத்தில் போட்டவுடன் அந்தப் பொடி ஜலத்தைச் சுத்தம் செய்து தானும் மறைந்து விடுகிறது. இவைகளைப் போன்றவைகளே ஸாதனங்களும். அத்வைத தத்துவமானது அநுபவத்திற்கு வருவதற்குரிய சாஸ்திரஸித்தமான அப்யாஸங்களில், ஸம்பந்தப்பட்ட பல வகையான அப்பியாஸங்களை ஆக்ஷேபிப்பது அறியாமையேயாகும்.

உஷ்ண வியாதி வந்த காலத்தில் உஷ்ணமான மருந்தையே உண்கிறோம். அதனால் வியாதி நீங்குகிறது. அதுபோல வித்தியாஸப் பார்வையை வித்தியாஸத்தினாலேயே களைந் தெறியவேண்டும். ஒருவன் எண்ணெய் தேய்த்துக் கொள்கிறான். அதைத் தேய்த்துக்கொண்டு பிறகு அரைப்புத் தேய்த்துக் கழுவி விடுகிறான். எப்பொழுதும் எண்ணெயைத் தலையிலேயே வைத்துக்கொண்டிருக்க மாட்டான். அதைப்போல வித்தியாஸங்களையுடைய ஸாதனங்கள் சித்த சுத்தியை அடைவதற்கு அநுகூலமாக இருப்பதனால் அவற்றை உயர்ந்த நிலை அடையும் வரையில் கைப்பற்றவேண்டும்; பின்பு வேண்டியதில்லை.

பையனொருவன் பள்ளிக்கூடக் கட்டுப் பாட்டுக்கு அடங்கி நடந்து படித்து வந்தால் பிறகு ஸ்வதந்திரமடைந்து பெரும்புகழை அடைகிறான். பள்ளிக்கூடத்திலேயே அவன்

ஸ்வதந்திர புத்தியுடன் இருந்தால் படிப்பு வாயில் மண்தான். ஒரு லக்ஷியத்தை அடைய விரும்புபவன் செய்கிற முயற்சிகள் கட்டுப்பாட்டில் அடங்கி ஒழுங்குபட்டால்தான், முடிவில் கட்டுப்பாடு நீங்கிய லக்ஷியத்தைப் பெற முடியும். கட்டுப்பாடுகளும் வித்தியாஸங்களும் அநுபவ தசையில் ஒழிந்துவிடும். ஆனால் அப்யாஸ காலத்தில் அவை அவசியமானவைகளே. அப்யாஸ காலத்தில் தம்மைத் தாமே பரம ஞானிகளாக எண்ணிக்கொண்டு விதிநிஷேதங்களைக் கடந்து ஒழுகுபவர்கள் எக்காலத்திலும் மௌனானந்தத்தை அடைய முடியாது. ஆதலினால்தான் பெரியோர்கள் நமக்குப் பலவகையான கட்டுப்பாடுகளையுடைய ஸாதனங்களை அமைத்திருக்கிறார்கள். வர்ணாஸ்ரம தர்மங்களின் மூலமாகவே வர்ணாஸ்ரமங்களைக் கடந்த நிலையில் இருக்கும் அநுபவம் உண்டாகும்.

ஒரு நதியைக் கடக்க விரும்பியவன் இக்கரையிலேயே இருந்து பிரயோஜனமில்லை; நதியில்லாத அக்கரைக்குச் செல்ல வேண்டுமானால் அந்த நதியின் வழியாகப் பிரயாணம் செய்தே ஆகவேண்டும். ஓடத்திலேறியோ, நீந்தியோ வேறு எவ்விதமாகவோ அதைக் கடந்து விட்டால் அப்புறம் ஜலத்தால் தடுக்கப்படாத இடத்தை அடைகிறான். ஜலமில்லாத அக்கரைக்குப் போக ஜலத்தில் ஏன் இறங்கவேண்டுமென்று சொல்லலாமா? ஜலத்தைத் தாண்டிய பிறகல்லவோ அக்கரையிருக்கிறது. கட்டுப்பாடுகளின் போக்கிலே போய் யாவற்றையும் கடந்தாலொழிய நாம் உண்மையான ஞான நிலையை அடைய முடியாது.

92. வினா: மாண்டூக்யோபநிஷத் என்றபெயர் அவ்வுபநிஷத்துக்கு வந்த காரணம் என்ன?

விடை: அந்த உபநிஷத்தின் ரிஷி மாண்டூகர்; ஆத லின் அப்பெயர் உண்டாயிற்று. அன்றியும் மண்டூகம் என் ருல் தவளைக்குப் பெயர். தவளையானது மூன்று முறை நிலத் தில் தாவி நான்காவது முறை ஜலத்தில் விழுந்துவிடும். அது போல ஜீவன் ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தியாகிய மூன்றை யும் தாண்டித் துரியத்தை அடைந்து பிரம்மபாவத்தை அடை கிறான்; அந்த நான்காவதாகிய துரியத்தைப்பற்றி இவ்வுப நிஷத்தில் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அத னுலும் இப்பெயர் வந்தது என்னலாம்.

93. வினு: பிரம்மம் மாயாவியானுல் நிகிருஷ்டமாகு மல்லவா?

விடை: அஃது உத்கிருஷ்டமாகவே இருக்கிறது. மாயை மூலமாக மாயையின் சம்பந்தம் உண்டானுலும் ஸ்வ ரூபத்தில் ஸம்பந்தம் இல்லையாதலால் நிகிருஷ்டமன்று.

94. வினு: ஓங்கார ஞானத்தால் ஆத்மாவை எப் படி அறியலாம்?

விடை: ஓங்காரம் ஆத்மாவின் காரியமன்று. ஆத் மாவைப்போல அது ஸர்வவியாபி. அப்படியிருந்தும் யமன் நசிகேதுவுக்கு ஓங்காரமே பிரம்மமென்று உபதேசம் செய் திருக்கிறான். ஒருவன் சித்த நிரோதம் செய்து ஓங்கா ரத்தை உச்சரிப்பதால் எந்தச் சைதன்யம் விளங்குகிற தோ, அஃது ஓங்காரத்திற்கு ஸமீபத்தில் இருக்கிறது. அப்படி இருப்பதனுல்தான் சாகா சந்திர நியாயப்படி ஓங் காரத்தால் அது குறிக்கப்படுகிறது. பிரம்மபுத்தி உண்டா வதற்கு ஸமீபகாரணம் ஓங்காரந்தான். ஓங்காரமே பிரம்ம மென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. விஷ்ணு புத்தியுடன் உபாஸிக்கப்பட்ட பிரதிமையானது எப்படி விஷ்ணுவின்

கிருபையைப்பெற உபாயமாகிறதோ, அப்படி பிரம்ம புத்தியுடன் உபாஸிக்கப்பட்ட ஓங்காரம் பிரம்மத்தை அடைவதற்கு உபாயமாயிருக்கிறது. பர அபரப் பிரம்ம திருஷ்டியுடன் ஓங்காரத்தை உபாஸித்தால் அவைகளின் ஞானம் உண்டாகும்.

ஸமாதி நிஷ்டன் ஓங்காரத்தை அநுஸந்தானம் செய்துகொண்டு ஸ்தூலமான அகாரத்தை ஸூக்ஷ்மமான உகாரத்திலும், அதைக் காரணமான மகாரத்திலும், அதைக் காரிய காரணாதீதமான ப்ரத்தியகாத்மாவிடத்தி லும் உபஸம்ஹாரம் செய்து ப்ரத்தியகாத்மாவாகவே இருந்துவிடுகிறான். ஆகையால் ஓங்காரமானது அத்தகைய உயர்நிலையை அடைய உபகாரமாக இருக்கிறது. 'இந்தக் கட்டையே புருஷன்' என்ற சமானாதிகரண்யத்தினால் இந்த ஓங்காரமே பிரம்மம் என்று சுருதி சொல்கிறது. ஓங்காரம் ஸர்வத்திற்கும் ஆதாரம். பிரம்மமும் ஸர்வத்திற்கு ஆதா ரம்; ஓங்காரப்ராப்தியே பிரம்மப்ராதி. ஓங்காரத்திலிருந்து தான் ஸமஸ்த வசனங்களும் உண்டாகின்றன. ஆகையால் தான் அஃது எல்லாவற்றிற்கும் ஆதாரமென்று சொல்லப்படு கிறது.

95. வினா: பாதங்களே இல்லாத ஆத்மாவுக்கு நான்கு பாதங்கள் இருப்பதாகச் சொல்லும் சுருதியின் தாத்பர்ய மென்ன?

விடை: அந்தப் பாதங்கள் தனித் தனியானவை அல்ல; ஒன்றே அவஸ்தையின் பேதத்தால் நான்கு நிலை களில் நான்கு வேறுபாடுடன் இருக்கின்றது. ஸாத்திய ஸாதன முறையில் அவை கற்பிக்கப்பட்டன. நிரவயவமா யிருக்கும் ஆத்மாவுக்கு மிருகங்களின் பாதங்களைப்போலத்

தனித்தனியாக இருப்பதாகக் கருதக்கூடாது. வஸ்துக் களைத் தனித்தனியே எண்ணும்போது, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று எண்ணுகின்றோம். இரண்டு என்று எண்ணப்படும் வஸ்து ஒன்றுதான்; இரண்டு தனி வஸ்துக்க ளல்ல; இரண்டாவதாக உள்ளது அது. ஒரே வஸ்துவை நான்கு விதமாக்கித் தனித்தனியே ஒன்று இரண்டு மூன்று நான்கென்று குறிப்பிடுகின்றோமென்று வைத்துக்கொள் வோம். அப்பொழுது ஒன்று என்று குறிப்பிட்ட அதே வஸ்துவானது ஒரு வஸ்துவாகவே இருந்து இரண்டு என் றும் எண்ணப்படுகிறது. அந்த ஒரே வஸ்துவை மூன்றென் றும் நான்கென்றும் எண்ணுகிறோம். அதைப்போலவே ஆத் மாவானது ஒருநிலையில் விஸ்வனென்றும் இரண்டாம்நிலையில் தைஜஸனென்றும் மூன்றாவது அவஸ்தையில் பிராக்ஞனென் றும் நான்காம் நிலையில் துரியனென்றும் சொல்லப்படும். இந்த நான்கு நிலையிலும் இருக்கும் வஸ்து ஒன்றே. நான் காவதாகிய துரியநிலையே நிச்சயம் செய்யப்படுகிறது. மற்றவை அந்நிலையை அடைய ஸாதகமான கருவிகளாக உள்ளன. ஆத லின் அவற்றைப் பாதங்களாகக் கற்பித்துக் கூறியிருக்கின்ற னர் பாதமென்பது ஸாதகமென்னும் தாத்பர்யத்தில் உப யோகப்படுத்தப்பட்டதாகக் கொள்ளவேண்டும். ஆதலால் விஸ்வனே தைஜஸன், தைஜஸனே பிராஞ்ஞன், ப்ராஞ்ஞனே துரியனென்று ஏகமாக அறிந்து கொள்ளவேண்டும்.

96. வினா: ஸர்வம் பிரம்மமயமாக இருக்கும்போது ப்ரஞ்ஞையானது பாஹ்ய விஷயங்களில் இருக்கிறது என்பது எப்படி பொருந்தும்?

விடை: ப்ரஞ்ஞை யென்பது புத்தி. அது சரீரத்திற் குள்ளே இருப்பதுதான் எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

சைதன்யரூபமான ப்ரஞ்ஞை வெளி விஷயத்தில் விளங்குகிற தில்லை. ஏனெனில் அது விஷயத்தை அபேக்ஷிக்கிறதில்லை. ஆனால் புத்திரூபமான ப்ரஞ்ஞை பாஹ்யவிஷயத்தில் விளங்குகிறது. வாஸ்தவத்தில் பிரம்மத்திற்கு அன்யமாகப் பாஹ்ய விஷயாதிகள் இல்லையாதலால் புத்தி விருத்தி ரூபமான ப்ரஞ்ஞையானது அஞ்ஞானத்தால் பாஹ்ய விஷயத்தை விஷயமாக்குகிறதுபோலத் தோற்றுகிறது. உண்மையிலே பாரமார்த்திகமாகப் பார்க்கும்போது புத்தி விருத்தியும் வாஸ்தவத்தில் பாஹ்ய விஷயத்தை விஷயமாக்கவில்லையென்பது முடிவிலே புலப்படும். ஏனென்றால் தானும் இல்லை; விஷயமும் கற்பிதம்; ஆதலின் புத்தி விருத்தியானது பாஹ்ய விஷயத்தை விளக்குவதாகச் சொல்வதும் கற்பனைதான் என்றே சொல்லவேண்டும்.

97. வினா: ஸுஷுப்தி அவஸ்தையில் வாக்காதி இந்திரியங்களும் ப்ராண ரூபமாகவே இருப்பதால் ப்ராணனை வியாகிருதன் (ஸ்பஷ்டன்) என்று சொல்லவேண்டியிருக்க அவ்யாக்ருதனென்று எப்படிச் சொல்லலாம்?

விடை: அவ்யாக்ருதமும் பிராணனும் ஒரு லக்ஷணத்துடன் கூடி யிருப்பதால் ஒன்று என்று சொல்லலாம். அவ்யாக்ருதம் தேசகால வஸ்து பரிச்சேத மற்றது. ஸுஷுப்தியில் திருஷ்டாவான ப்ராஞ்ஞனுடைய ப்ராணனும் அத்தகையதே. ஏனெனில், ப்ராஞ்ஞனுடைய திருஷ்டிக்கு அக்காலத்திலுள்ள ப்ராணன் தேசகால வஸ்து பரிச்சேத மடைந்திருப்பதாகக் காணப்படுகிறதில்லை. ஆகவே இருவருக்கும் லக்ஷணம் ஒன்றானதால் ஸமர்தான்.

அதிதைவமான அவ்யாக்ருதம் ஜகத்சிருஷ்டிக்குக் காரணமாக இருப்பதுபோல் ப்ராணனென்கிற ப்ராஞ்ஞனும் ஜாக்

ரத் ஸ்வப்னங்களின் உற்பத்திக்குக் காரணனாயிருக்கிறான். ஆகவே காரியத்தை உத்தேசித்துக் காரணமாயிருக்கும் தன்மை இருவர்களுக்கும் ஸமமாக இருப்பதால் இருவர் களும் ஒருவரே. உபாதியை உத்தேசித்து ஒன்று என்று சொன்னதுபோல் உபாதியுடன் கூடியதையும் உத்தேசித்து ஒன்றே யென்று கொள்க. எப்படியெனில் அவ்யாக்ருதத் துடன் கூடினவன் ஈச்வரன். ஸுஷுப்தியில் ப்ராணனுடன் கூடினவன் ஜீவன். இந்த இருவர்களுக்கும் அதிஷ்டாதா சித்ஸ்வரூபம். ஆகையால் இரண்டு பேர்களும் ஒருவரே. இதைப் போல் ஸமஷ்டியான விராட்டும் ஹிரண்ய கர்ப்ப னும் வியஷ்டியான விச்வனும் தைஜஸனும் எப்படி ஒரு வர் என்றால் இவர்களுள்ளே கற்பிக்கப்பட்ட பேதம் இருந் தாலும் வாஸ்தவத்தில் பேதம் இல்லை. ப்ரகாச ஸ்வரூபமான ஒன்றே எல்லாவற்றிலும் இருப்பதாகச் சுருதி சொல்லு கிறது; விச்வனும் விராட்டும் ஸ்தூல ப்ரபஞ்சாபிமானி களாகையால் ஒருவரே; தைஜஸனும் ஹிரண்யகர்ப்ப னும் ஸூக்ஷ்ம பிரபஞ்சாபிமானிகளாதலால் ஒருவரே; பிராஞ்ஞன் ஸுஷுப்தியில் தன்னிடத்தில் ஸகலத்தையும் லயப்படுத்தித் தான் நிர்விசேஷமாக இருப்பதாலும், ப்ரளய காலத்தில் சகலத்தையும் தன்னிடத்தில் லயப்படுத்தி அவ்யா கிருதன், தானும் நிர்விசேஷனாக இருப்பதாலும் ப்ராஞ்ஞ னும் அவ்யாகிருதனும் ஒருவரே என்று அறியவேண்டும்.

98. வினா: சைதன்யம் வியாபகமானால், இறந்த பிறகு புண்ணிய பாபங்களின் காரணத்தால் பரலோகத்தை அடை வது எப்படி? புனர்ஜன்மம் அடைவது எப்படி?

விடை: ஜாக்ரத்தில் நாம் உணர்கிற ஸ்தூல சரீர உணர்வைத் தூக்கத்தில் ஜீவன் விட்டு நீங்கினாலும் சூக்ஷ்ம

சரீரியான ஜீவனுக்கு எப்படி ஸ்வப்ன சரீரம் ஏற்படுகிறதோ, அதுபோலவே நீண்ட தூக்கமாகிய சாவின்கண்ணும் ஜீவனுக்கு ஸ்வப்ன சரீரம் போன்ற ஒரு சரீரமும் ஒருவகை ஸ்வப்னமும் உண்டென்னலாம். ஜாக்கிரத்திலுள்ள ஜீவன் ஸுஷுப்திக்குப் போகும்பொழுது மத்தியில் ஸ்வப்னத்தில் அநேகம் பேரைக் காணுவதும் அவர்களோடு ஸல்லாபம் செய்வதும் அநேக தேசங்களுக்குப் போவதும் வருவதும் எப்படி நிகழ்கின்றனவோ, அப்படியே மரணம் ஏற்பட்டவுடன் யாதனு சரீரத்துடன் போகும் ஜீவன் மத்தியில் புண்ய பாபங்களுக்கு அநுசரணையான ஸ்வர்க்க நரகங்களில் சுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டு கொஞ்ச காலத்திற்குப் பிறகு புண்ணியம் குறையவே மனித ஜன்மாவை அடைகிறான் என்பது சாஸ்திரங்களுடைய அபிப்பிராயம்.

ஒரு காரணம் இல்லாமல் காரியம் உண்டாகாது. இங்கே ஜன்மம் வருவதற்குக் காரணம் தர்மாதர்மங்கள்; புண்ணிய பாபங்கள். புண்ணிய பாபங்களை உத்தமம், மத்திமம், அதமம் என்று மூன்றாகப் பிரித்திருக்கிறார்கள். உத்தமமான புண்ணியங்களால் ஸ்வர்க்கம் முதலான போகங்கள் ஜீவனுக்குக் கிடைக்கும்; புண்ணிய பாபக் கலப்பான மத்திமதர்மத்தால் மனித சரீரம் கிடைக்கும்; அதமமான பாபச் செய்கைகளால் மிருகம் போன்ற ஜன்மங்கள் கிடைக்கின்றன.

சிலர் 'வினை முந்தியதா? சரீரம் முந்தியதா?' என்று கேட்பார்கள். 'விதை முந்தியதா முளை முந்தியதா?' என்ற கேள்விக்குப் பதில் சொல்லச் சாமர்த்தியம் உடையவர்கள் யாரோ அவர்களே இந்தக் கேள்விக்கும் பதில் சொல்ல வேண்டும்.

இந்த மாதிரியான கேள்வியைப் புத்திசாலி கேட்கமாட்டான். மலடி மகன் என்றால் அந்த மகனுடைய தன்மைகளைப் பற்றி விசாரிப்பது எப்படி வீணோ, அது போலவே பொய்யான ஜகத்தைப்பற்றி விசாரிப்பதும் வீணேயாகும். வியாதி ஒன்று வந்து விட்டால் அந்த வியாதிக்குப் பரிகாரம் தேடுவதுதான் புத்திசாலியின் லக்ஷணம். வியாதி வந்த காரணத்தைப்பற்றி அப்பொழுது ஆராய்ந்து கொண்டிருப்பதில் பயனில்லை. அப்படியே சம்சார வியாதி பிடித்த ஜீவனானவன் இந்த வியாதி நீங்குவதற்கான உபாயத்தைக் குருவினிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு அடக்கமாய் அதை அனுசரித்துக் கிருதார்த்தனாக வேண்டுமே ஒழிய வியாதியின் காரணத்தைக் கேட்டுத் தர்க்கம் செய்வதால் இந்தச் சம்சார வியாதியைப் போக்கிக் கொண்டு முக்தியை அடைய இயலாது என்பது நிச்சயம். இதே விஷயத்தை ஞான வாசிஷ்டம்; வைராக்ய ப்ரகாரணத்தில் வசிஷ்டர் ஸ்ரீராமனுக்கு, "முடிவில்லாத இந்த மாயையின் காரணத்தைப்பற்றி விசாரிப்பதால் உபயோகம் இல்லை. அதை மறந்தாயானால் சுகம் பெறுவாய்" என்று உபதேசித்திருக்கிறார்.

"ஜனித்தால் மரணம் உண்டென்பது எப்படி நிச்சயமோ அப்படியோ மரித்தால் ஜனனம் உண்டு என்பதும் நிச்சயம்" என்ற கீதா வாக்கியப் பிரகாரம் இப்பொழுது ஜன்மாவை அடைந்திருப்பதால் முன்பே இறந்திருக்க வேண்டும். முன்பு இறந்திராமற் போனால் இப்பொழுது ஜன்மம் வந்திராது. ஆகையால் இப்பொழுது ஜனித்ததால் மறுபடியும் மரண முண்டென்பது நிச்சயம். முன்பு மரித்ததால் இப்பொழுது ஜன்மாவை அடைந்திருப்பதை நாம் காணுவது போல இப்பொழுது மரித்தாலும் மறுபடியும் ஜன்மம் உண்டென்பதை நிச்சயிக்கலாம்.

புண்ணிய பாப சம்பந்தம் இல்லாதபடியாலும், ஆத்மாவிலேயே பிராணுதிகள் ஒடுங்குவதனுலேயும் ஞானிகளுக்கு ஜன்மம் இல்லை. மற்றவர்களுக்குப் புண்ணிய பாப சம்பந்தம் இருப்பதாலும் பிராணுதிகள் அஞ்ஞானத்தில் ஒடுங்குவதாலும் அவர்களுக்கு மறுஜன்மம் உண்டாகிறது.

99. வினு: சாஸ்திரங்களால் துரிய வஸ்துவை அறிய முடியுமா? அல்லது தியான யோகாதிகளால் உண்மையான ஞானத்தை அடையலாமா?

விடை: விசிஷ்டமான ஆத்மாவை ஒப்புக் கொண்டு அதிலுள்ள விசேஷணங்களைத் தள்ளி மிச்சப்படுவதே துரியம் என்று சாஸ்திரம் உபதேசிக்கிறது. இரண்டுக்கும் பேதம் இருக்குமானுல் உபதேசம் வியர்த்தமாகும். சாஸ்திரத்தால் அதை அறிய முடியாமல் போகும். விசிஷ்டந்தான் அறியப் பட்டிருக்கின்றது. துரியமோ அறியப்படவில்லை.

விச்வாதிகள் தள்ளப்பட்டுப் போய் விட்டபடியாலும் வேறு ஒன்றும் அறியப்படாதபடியாலும் ஆத்மா இல்லை என்னும் ஞானமே உண்டாகும். பரோக்ஷ ஞானத்துக்கு, சப்தம் அதாவது சாஸ்திரம் ஹேதுதான். நித்ய துரியனுடைய அபரோக்ஷ ஞானம் கற்றுப்பெறுவதன்றுதலால் அதைக் கொடுக்க நூல்கள் ஹேது ஆகா. இங்ஙனம் சொன்னுல் சப்தத்தைத் தவிர வேறு பிரமாணம் சாத்தியப்படாது. ஏனெனில் துரியமோ சிருஷ்டிக்கப்படாததாயும் ஸ்வப்பிரகாசம் அல்லது நித்திய அபரோக்ஷமாயும் இருக்கிறது. ஆகையால் சப்தத்தைத் தவிர வேறு பிரமாணம் வேண்டியதில்லை.

தியானம் முதலியவைகள் மனத்திலுள்ள விக்ஷேபத்தை நிவர்த்திசெய்து மனேலயத்தைக் கொடுக்குமே ஒழிய மன

காசத்துக்குக் காரணமான உண்மையான ஞானத்தைக் கொடா.

100. வின: வேதாந்தப் பிரமாணங்களின் பிரயோஜனமாவது விஷயத்தைத் தெளிவாக்குமே ஒழிய அதே சமயத்தில் ஆத்மாவின் அத்யாசமாகிய (ஆரோபம்) அனர்த்தத்தை நிவர்த்தி செய்யுமா?

விடை: வேதாந்தப் பிரமாணங்கள் அத்யாசமாகிய அனர்த்தத்தை (ஆத்மாவின் அஞ்ஞானத்தை) நீக்காது என்பது கோடரியினல் கட்டை பிளவுபடும்போது பிளவுபட்ட பாகங்களுக்குச் சிறப்புத்தன்மை ஏற்பட்டதேயன்றி பாகங்களின் சேர்க்கை விலகவில்லை என்று சொல்வதற்குச் சமமாகும்.

பிரமாணங்களின் பிரயோஜனம் அஞ்ஞான நிவர்த்திதான் என்றால் விஷயஞானம் உண்டாகாமல் போய்விடும். ஒரு கடமானது இருட்டால் மூடப்பட்டதாய் வியவகாரத்துக்கு யோக்கியமின்றி இருக்கிறது. பிரத்யக்ஷாதிப் பிரமாணம், தீபம் இருட்டை விலக்கிக் கடத்தை வியவகாரத்திற்கு உபயோகமாகச் செய்கிறது. பிரமாணத்தின் பலன் இருட்டைமட்டும் விலக்குவதென்றால் கடஞானம் (பாத்திரம் இருக்கிறது என்ற அறிவு) பலமாகாது. கட்டையைப் பிளக்கும் கிரியையானது பாகங்களின் சேர்மானத்தை விலக்குவதில் பிரவர்த்திப்பதுபோல இவ்விடத்திலும் இருட்டைப் போக்குவதில் பிரமாணம் பிரவர்த்திக்கிறது. ஆதலால் கடஞானம் உண்டாகமாட்டாது. பிரமாணத்தின் பலன் அந்தகார நிவர்த்திதான். அந்தகார நிவர்த்தியால் கடஞானம் தானகவே சித்திக்கிறது. அதற்கு வேறு ஸாதகம் வேண்டியதில்லை என்று சிலர் கூறுவர்.

இது பிரமாணத்தின் பலன் அன்று. மேலும் கடாதிகள் ஜடமாகையால் பிரகாசிக்கிற விஷயத்தில் வேறு ஞானத்தை அபேக்ஷிக்கின்றன. பிரகிருதத்தில் துரியமான ஆத்மாவோ கேவலம் ஞானஸ்வரூபம். அது பிரகாசிக்கிற விஷயத்தில் வேறு ஞானம் வேண்டியதில்லை. ஆகவே அதில் சம்பந்தப்பட்ட அந்தப் பிராஞ்ஞத்வாதி (தைஜஸாதி) அஞ்ஞான நிவர்த்தியே பிரமாணத்தின் பலன். அந்த ப்ராஞ்ஞன், (தைஜசன்) முதலானவர்கள் நிவர்த்தியாகும் காலத்திலேயே பிரமாதா முதலிய பேதங்கள் நிவர்த்தியாய் விடுகின்றன. அதாவது பிரம்மத்தை அறிந்த நிமிஷத்தில் த்வைதம் இல்லாமற் போய்விடுகிறது என்று சாஸ்திரம் சொல்லுகிறது.

எந்த க்ஷணத்தில் ஞானம் உண்டாகி த்வைதம் நிவர்த்தியாகிறதோ அந்த க்ஷணத்தைத் தவிர மறு க்ஷணத்தில் ஞானம் இருப்பதில்லை. அப்படி ஞானம் இருந்தால் அதற்கு விஷயமான பிரம்மம் (ஞேயம்) ஒன்றிருக்க மறுபடியும் த்வைதம் ஏற்படும். அதை நிவர்த்திக்க ஒரு ஞானம் வேண்டி வரும். அப்பொழுதும் த்வைதம் ஏற்பட்டு அநவஸ்தா தோஷம் (சுழலுதல் என்ற குற்றம்) சித்திக்கும்; த்வைதமே நிவர்த்தியாகாது. ஆகையால் நிஷேதிக்கிறதால் என்ன ஞானம் உண்டாகிறதோ, அந்த ஞானம் உண்டாகிற க்ஷணத்திலேயே ஆத்மாவின்மேல் ஆரோபிக்கப்பட்டுள்ள அந்த ப்ராஞ்ஞன் முதலிய அனந்த நிவர்த்தி ஏற்பட்டு விடுகிறது.

101. வி௵: பிராஞ்ஞனுக்குக் காரணபந்தம் மாத்திரம் சித்திக்கிறதென்றும், துரியத்துக்குத் தத்வத்தை அறி

யாமை, தத்வத்தை விபரீதமாக அறியும் தன்மை ஆகிய பந்தங்கள் சித்திக்கிறதில்லை என்றும் எப்படிச் சொல்லலாம்?

விடை: இந்த உலகம் ஆத்மாவைவிட வேறானது. மாயையிடமாகப் பிறந்தது; இரண்டு என்ற உணர்ச்சியைத் தருவது. இந்தப் பிரபஞ்சத்தை இப்படி விபரீதமாக அறிபவர்கள் விஸ்வனும், தைஜசனும் ஆவர். ப்ராஞ்ஞனோ பிரபஞ்சத்தை இப்படி அறிவதில்லை. தத்வ அஞ்ஞானமாகிய இருட்டால் இவன் கட்டப்பட்டிருக்கிறான். இந்த இருட்டே விபரீத ஞானத்துக்குக் காரணம். ஆனால் விஸ்வன், தைஜஸன் இவர்களுக்கு அஞ்ஞானமாகிய காரணமும், விபரீத உணர்வாகிய காரியமும் இருக்கின்றன. ஆனால் பிராஞ்ஞனுக்கோ காரணமாகிய தத்வ அஞ்ஞானமொன்றே இருக்கிறது. காரியமாகிய விபரீத உணர்வு அவனிடம் இல்லை.

துரியமானது எல்லாமாய் இருப்பதாலும் எப்பொழுதும் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பதாலும் அதைவிட வேறொன்றும் இல்லாமையாலும் தத்வத்தை அறியாமை என்னும் காரணமும் அதற்கு ஏற்படவில்லை. காரணமில்லை எனவே காரியமாகிய விபரீத உணர்வும் துரியத்துக்கு இல்லை.

(உ-ம்) எப்போதும் பிரகாச ஸ்வரூபமாயிருக்கும் சூரியனிடத்துப் பிரகாசியாமல் இருக்கும் தன்மையாவது வேறுவிதமாகப் பிரகாசிக்கும் தன்மையாவது உண்டாவதில்லை. ஆனதால் துரியன் சர்வ திருக்கு (எல்லாவற்றையும் பார்ப்பவன்) எனப்படுகிறான்.

சூரியனும் இருட்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்படாதனவாக இருப்பது போலத் துரியனும் காரண காரியங்களும்

வைரிகளாகி ஒன்ருெடொன்று சேர்வதில்லை. எனவே துரியன் காரணகாரியங்களால் கட்டுப்பட்டவன் அல்ல.

102. வினு: பிரபஞ்ச நிவர்த்தியால் அத்வைதம் அறியப்படுமேயாளுல் பிரபஞ்ச நிவர்த்தி ஆகாத வரையில் துரியத்துக்கு அத்வைதம் எப்படிச் சித்திக்கும் ?

விடை: பிரபஞ்சம் உண்மையாளுல் இரண்டற்ற நிலை என்றுமே ஏற்படாது. ஆனால் பழுதையில் பாம்பு கண்டான் நியாயப்படி கற்பிக்கப் பட்டதே இவ்வுலகம் ; ஆகையால் உண்மையில் இஃது இல்லை. அதனுல் இரண்டற்ற நிலை ஏற்படுகிறது.

பிரபஞ்சம் இருக்குமேயாளுல் அது நிவர்த்தியாகக் கூடும். பழுதையில் மயக்கத்தால் தோற்றிய பாம்பு இருந் தாலும் அறிவினுல் அந்தத் தோற்றம் நீங்கும். ஆகையால் வாஸ்தவத்தில் பிரபஞ்சம் இல்லை; பாம்புபோல வெறுந் தோற்றமே.

இந்திர ஜாலக்காரர் செய்யும் வேடிக்கை அல்லது மாயை அழியாது இருந்தாலும் பார்க்கும் ஜனங்களின் கண் கட்டு நீங்கியவுடன் அது நீங்கிவிடுகிறது. எனவே அம் மாயை உண்மையில் இல்லை. இதுபோலவே த்வைத நிலை யும் மாயா மாத்திரமாய்த் தோற்றுகிறது. கயிறும், இந்திர ஜாலக்காரனும் எப்படி உண்மை வஸ்துக்களோ அப்படியே அத்வைதந்தான் உள்ளதாய் முடிகிறது. ஆகையால் கஷ் டப்பட்டு விலக்கிக்கொள்ளவேண்டிய பந்தமே (பிரபஞ்சமே) ஒன்றும் இல்லையாம்.

103. வினு: எல்லாம் இரண்டற்ற ஆத்ம ஸ்வரூப மாய் இருக்கும்போது குரு சிஷ்ய சாஸ்திரங்கள் என்ற விகற்பங்கள் எப்படி இருக்கக் கூடும் ?

விடை: ஞானம் உண்டாவதற்குமுன் எப்படி இப் பிரபஞ்சம் கயிற்றிற் பாம்பு போலும், மாயை போலும் இருந்ததோ அப்படியே சிஷ்யன் முதலான விகற்பங்களும் ஞானத்திற்குமுன் ஞானம் உண்டாகும் உபதேசத்தின் பொருட்டு ஏற்படுகின்றன. உபதேசத்தின் பயனான ஞானம் அனுபவத்தில் வந்தவுடன் உண்மை புலப்பட்டு விடுகிறபடி யால் இரண்டென்ற உணர்ச்சியே தோற்றுவதில்லை.

104. வின: ஆத்மாவின் விசேஷ ஞானம் இருக்கும் பொழுது சாஸ்திரத்தினால் என்ன பிரயோஜனம்?

விடை: ஸித்திக்காததை ஸித்திக்கச் செய்வதே சாஸ் திரத்தின் நோக்கம். ஸித்தித்ததையே சொல்லும்பக்ஷத்தில் அது உபயோகம் அற்றதாகும். மாயா காரணமான சுகம் முதலிய கற்பனைகளால் உண்டான பந்தங்களால் ஆத்மா வின் உண்மை உருவம் தெரியவில்லை. ஆத்மாவின் உண்மை உருவாய் ஆவதே (ஸ்வரூபாவஸ்தானம்) மோக்ஷம் ஆகும். இரண்டென்னும் உணர்வைச் சாஸ்திரம் போக்குகிறது; ஆத் மாவின் ஸ்வரூபத்தை அறியும் அறிவைக் கொடுக்கிறது. சுகம் முதலிய இயல்புகள் ஆத்மாவில் எப்படி இல்லையோ அப் படியே அசுகம் முதலிய தர்மங்களும் ஆத்மாவில் இல்லை என்று சாஸ்திரங்கள் போதிக்கின்றன.

உஷ்ண ஸ்வரூபமான அக்னியில் குளிர்ச்சி என்னும் தன்மை எப்படிச் சேர்ந்திராதோ அப்படியே குணமேதும் இல்லாத ஆத்மாவிற்குச் சுகம் முதலியவைகள் சேர்ந்திரா; அவை கற்பிதங்களே. ஆத்மா அசுகி என்பதாகப் போதிக் கும் சாஸ்திரம் ஆத்மா சுகி என்ற உணர்வை நீக்குவதையே கருத்தாகக் கொண்டதாம்.

105. வினா: *உற்பத்தி சுருதியாலும், பிரளய சுருதியாலும் அத்வைதத்திற்கு ஹானியுண்டா?*

விடை: *கடாதிகளின் உற்பத்தியால் கட ஆகாசாதிகளின் உற்பத்தியும், கடாதிகளின் நாசத்தால் கட ஆகாசாதிகளின் நாசமும் உண்டாவது போலத் தேகாதிகளின் உற்பத்தியால் ஜீவ உற்பத்தியும் அவைகளின் நாசத்தால் ஜீவலயமும் உண்டாகின்றன. ஜீவனுடைய உற்பத்தி நாசங்கள் உபாதியைப் பொறுத்து இருக்கின்றன. இயற்கையில் இரண்டும் இல்லை. ஆகையால் உற்பத்தி சுருதியாலும், பிரளய சுருதியாலும் அத்வைதத்திற்கு விரோத மில்லை.*

106. வினா: *சகல தேகங்களிலும் ஒரே ஆத்மா இருந்தால் ஒரு ஜீவனுடைய ஜன்ம மரண சுக துக்காதிகள் எல்லா ஜீவர்களுக்கும் இருக்க வேண்டுமே? ஒருவன் கர்த்தா போக்தாவாக இருந்தால் எல்லோரும் அப்படி இருக்கவேண்டுமே? அப்படி இல்லாத காரணம் என்ன?*

விடை: *புகை, புழுதி முதலியவைகளால் ஒரு கட ஆகாசம் சம்பந்தப்படுங் காலத்தில் எல்லாக்கட ஆகாசங்களும் சம்பந்தப்படாததுபோல், ஒரு ஜீவன் சுகதுக்கங்களை அடைந்ததனால் எல்லா ஜீவர்களும் அந்தச் சுகதுக்கங்களையே அடைவதில்லை.*

*பிரகிருதியால் உண்டுபண்ணப்பட்ட பந்தம், வீடுகள் புருஷனிடத்தில் (பரமாத்மாவிடத்தில்) சம்பந்தப்படுகிறதில்லை. பரமாத்மாவினுடைய சத்தாமாத்திரத்தை நிமித்தமாக வைத்துக்கொண்டு பிரகிருதியானது தானே கட்டுப்படுகிறது; விடுபடுகிறது.*

107. வினா: *ஸுஷுப்திக்கும் நிர்விகற்ப ஸமாதிக்கும் என்ன வித்தியாசம்?*

விடை: ஸுஷுப்தி ஸமாதிகளில் திரிபுடி இல்லாமலும் நாமரூபப் பிரபஞ்சம் தோற்றாமலும் இருக்கும்; ஆனால் ஸுஷுப்தியில் துக்க பலத்துக்குப் பீஜமான அவித்தையும் அநேக துக்க வாஸனா பீஜங்களும் லயமடைந்திருந்தாலும் நாசமாகாமல் இருக்கின்றன. ஞான அவஸ்தையிலோ எல்லா துக்க பீஜங்களும் நாசமடையப்பெற்று ஞான ஸ்வரூபத்திலேயே மனம் லயம் அடைகிறது. ஸுஷுப்தியில் அஞ்ஞானத்தில் லயிக்கிறது. ஞான ஸமாதியில் ஸ்வரூபம் மாத்திரமாய் இருந்து த்வைதம் தோற்றுகிறதில்லை.

ஆகையால் ஞானாவஸ்தையிலும் ஸுஷுப்தியிலும் மனத்தின் செயல் வெவ்வேறாய் இருக்கிறது. இரண்டும் சமமல்ல.

108. வினா: காரிய காரணங்கள் எத்தனை விதம்? வியவஹாரத்தில் காரிய காரணங்களை ஒப்புக்கொண்டாலும் பாரமார்த்திகத்தில் இல்லையென்று சொல்வது எப்படி?

விடை: (1) வஸ்துவை அறியாமையாகிய அஞ்ஞானத்திலிருந்து அவஸ்து உண்டாகிறது என்பது தப்பு. முயற் கொம்பிலிருந்து ஆகாயப்பூ உண்டாகாது.

(2) அசத்திலிருந்து சத்து உண்டாவதாகச் சொல்லும் சூன்யவாதி கூற்றும் சரியல்ல; முயற் கொம்பிலிருந்து கடம் உண்டாகமாட்டாது.

(3) சாங்கியர் முதலியோர் காரிய காரணங்கள் இரண்டும் சத்து என்பர். இதுவும் சரியல்ல; கடத்திலிருந்து படம் உண்டாகாது.

சத்தை ஜனிப்பதாகக் கூறினால் சத்தின் தன்மையே கெட்டுவிடும். ஏனெனில் எக்காலத்திலும் உள்ளதே சத்து.

(4) சத்தான பிரம்மத்திலிருந்து அசத்தான பிரபஞ்சம் உண்டாயிற்று என்பதும் சரியன்று; கடத்திலிருந்து ஆகாச புஷ்பம் உண்டாகாது.

காரண காரிய பாவங்கள் மேற்சொல்லிய நான்கைத் தவிர வேறுவிதமாக இருக்கமுடியாது; கற்பிக்கவும் முடியாது. ஆகையால் விவேகியானவன் காரண காரியபாவத்தை எதற்கும் எவ்விதத்திலும் ஏற்றுக்கொள்ளமாட்டான்.

109. வினா: வேதாந்தத்தின் தாத்பர்யத்தை நிச்சயம் செய்வது எப்படி?

விடை: (1) உபக்ரமோபஸம்ஹாரம், (2) அப்யாஸம், (3) அபூர்வதை, (4) பலம், (5) அர்த்த வாதம், (6) உபபத்தி (யுக்தி) என்ற இந்த ஆறும் ஷட்வித லிங்கங்களென்று சொல்லப்படும். இவற்றின் உதவியால்தான் வேதாந்தத்துக்கு அர்த்த நிச்சயம் செய்ய வேண்டும். திருஷ்டாந்தம்:—

(1) 'ஓமித்யே ததக்ஷர மிதம் ஸர்வம்'—இதுஎல்லாம் 'ஓம்' என்கிற அக்ஷரம்—இது மாண்டூக்யோபநிஷத்தின் முதல் வாக்யமாகும். இது உபக்ரமலிங்கம் எனப்படும். 'அமாத்ராஸ் சதுர்த்த:'—அமாத்ரம் நான்காவது பாதம்—இது இந்த உபநிஷத்தின் கடைசி மந்திரம். இது உபஸம்ஹாரலிங்கமெனப்படும்.

(2) 'ப்ரபஞ்சோபசமம் சாந்தம் நிஷ்ப்ரபஞ்சம் சாந்தம்' என்பதும், இது போலவே சாந்தோக்யோபநிஷத்தில், 'தத்வமஸி சுவேத கேதோ' என்று ஒன்பது தடவை உத்தாலகர் சுவேத கேதுவுக்கு உபதேசித்த மஹா வாக்யமும் அப்யாஸ லிங்கமாம்.

(3) 'அத்ருஷ்ட மவ்யவஹார்யம்'—பார்க்கப் படாதது; வியவஹரிக்கக் கூடாதது—இந்த மந்திரத்தில், இதர ப்ரமாணங்களுக்கு விஷயமாகாதது என்னும் அபூர்வதை லிங்கம் காணப்படுகிறது.

(4) 'ஸம் விசத்யாத் மநா ஆத்மாநம்ய ஏவம் வேத'—ஆத்மாவை எவன் இப்படி அறிகிறானோ அவன் ஆத்மாவிலேயே பிரவேசிக்கிறான்—இது பலம் என்னும் லிங்கமாகும்.

(5) 'ஆப்நோதி ஹவை ஸர்வாந் காமாந்'—சகல இச்சைப் பொருள்களையும் அடைகிறான்—இது முதலான அவாந்தரபலன்களைக் கூறும் வாக்கியங்கள் அர்த்தவாத லிங்கமெனப்படும்.

(6) அத்வைத பிரம்மத்தை அடையும் பொருட்டு மாண்டூக்ய உபநிஷத்தில் பன்னிரண்டு வாக்யங்களிலும் செய்யப்பட்டுள்ள நான்கு பாதங்களின் கற்பனையானது உபபத்தி லிங்கமாம். இவ்வாறே எல்லா உபநிஷத்துக்களுக்கும் அர்த்த நிச்சயம் செய்யவேண்டும்.

110. வினா: அர்த்தவாதம் என்ற லிங்கத்தின் லக்ஷணமென்ன? அஃது எத்தனை வகைப்படும்?

விடை: விதி நிஷேத வாக்யங்களோடு ஒற்றுமைப் பட்டு அவைகளை விசேஷிக்க வந்தவைகளே அர்த்தவாதமாம். இதனை, 'விதியோடு ஏகவாக்யப்பட்டு அவ்வர்த்தத்தையே விசேஷமாய்ப் போதிக்கும் இயல்புள்ளது' என்னும் கருத்துள்ள ஜைமினி சூத்ர முதலியவைகளால் அறியலாம். உதாரணமாக: யாகத்தில் வெள்ளிதக்ஷிணை தருவதை நிந்தித்து ஒரு கதை வழங்குகிறது. அது வருமாறு:—முன்னொருகால் தேவர் அஸுரரோடு யுத்தத்துக்குப் புறப்படும் போது, தம் அரிய பொருள்களை அக்கினி பகவானிடம்

அடைக்கலமாக வைத்துப்போயினர். யுத்தம் முடிந்து திரும்பி வந்தபின் தேவர்கள் அக்கினிபகவானை, தாங்கள் தந்த பொருள்களைத் தரும்படி கேட்டனர். அக்கினிபகவான் அப்பொருள்களை யெல்லாம் புசித்துவிட்டதால் அவற்றைத் திருப்பித் தரக்கூடவில்லை. தேவர்கள் அவனை ஹிம்ஸித்தனர். அவனது கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. அக்கண்ணீரே வெள்ளியாம். அதனால் அந்த வெள்ளியை யாகத்தில் தக்ஷிணையாகத் தரக்கூடாது.

இந்தக்கதை அர்த்தவாதமாம். இதனால் அக்கினியை இழிவானவனுகவோ, மற்றத் தேவர்கள் அவனிடம் மரியாதைக் குறைவாக நடந்ததாகவோ கருத்துக் கொள்ளக் கூடாது. வெள்ளிதக்ஷிணை நிந்தையை மட்டும் கொள்ள வேண்டும். பொன் முதலிய சிறந்த பொருள்களை மிகுதியாகத் தக்ஷிணையாய்த் தரவேண்டுமென்ற கருத்து இதனுற் புலப்படும். இவ்வாறு அர்த்தவாதத்தின் உண்மை தெரிந்துவிட்டால், நம் இதிஹாஸ புராணங்களில் முரண்பட்டனவாகத் தோன்றும் பல கதைகளின் உண்மைப் பொருள் நன்ருக விளங்கும்.

ஸந்த்யா காலங்களில் அர்க்கியப்ரதானம் செய்யவேண்டிய அவசியத்தைப் போதிக்க ஒருகதை உண்டு: ஸூர்யனை ஹிம்ஸிக்கவரும் மந்தேஹாருணர்கள் என்ற அரக்கர்களை, காயத்ரியை உச்சரித்து விடும் அர்க்கியஜலமானது வஜ்ராயுத ரூபமாகி அழித்துவிடுகிறது என்று சொல்லப்படுகிறது. இந்தக்கதையை மட்டும் வைத்துக்கொண்டு, "எத்தனையோ ரிஷிகள், முனிவர்களெல்லாம் விடும் அர்க்கிய தீர்த்தமானது அந்த அரக்கர்களை அழித்திருக்குமே; நாம் விடவேண்டிய அவசியமில்லையே" என வாதிக்கக்கூடாது. ஏனென்ருல்

அர்த்தவாதத்துக்குக் கதையில் முக்கியகருத்தில்லை. விதிவாக்யத்தை விசேஷிப்பதே கருத்து தவிர, சரியானகாலத்தில் அர்க்கியப்ரதானம் செய்வதால், அற்பமான விஷயகாமனைகளான அஸுரர்கள் நாசத்தையடைந்து சித்தசுத்தி யுண்டாகும்; ப்ரத்யகாத்மாவான ஞானசூர்யன் பிரகாசத்தையடைவான் என்ற தத்வார்த்தமுள்ளதாகவும் இக்கதையைக்கூறக்கூடும். துஷ்டர்களுக்கு உபகாரம் செய்யக்கூடாது என்ற உண்மையைச் சிறுவர் மனத்திலும் நன்கு பதியச் செய்யும் 'ஓநாயும் கொக்கும்' என்ற கதையை உண்மையாக நடந்ததாக எண்ணுகிறோமா? இதைப் போன்றவையெல்லாம் அர்த்தவாதங்களே.

நம் புராணாதிகளில் உள்ளவையெல்லாம் நடவாத கதைகளே யென, இதுவரை சொன்னவற்றிலிருந்து எண்ணிவிடக்கூடாது. அர்த்தவாதத்தில் மூன்றுவகை யுண்டு. அவை (1) பூதார்த்தவாதம், (2) குணார்த்தவாதம், (3) அநுவாதம் என்பவையாம்.

ஒருகாலத்தில் உண்மையாக நடந்ததும், முரண்பாடு, யுக்தி, விரோதம் முதலியவை இல்லாததுமாகிய சரித்திரம் பூதார்த்தவாதம் எனப்படும். இவ்வாறு நம் புராண இதிகாசங்களில் பல பூதார்த்த வாதங்கள் உண்டு. மற்ற அர்த்தவாதங்களை இந்தப் பூதார்த்தவாதக் கதைகளினின்று ஆராய்ந்து பிரித்துப் பார்ப்பதே விவேகியின் காரியமாம். இவற்றை அறியாத சிலரே நமது மத நூல்களிலுள்ள சரித்திரங்களை ஆக்ஷேபிப்பர்.

**111. வினா:** பிராம்மணர் தங்களுடைய ஸௌகர்யார்த்தமாய் எழுதி வைத்துக்கொண்டனவே மத நூல்கள் எனக் கூறுவோருக்கு என்ன ஸமாதானம் சொல்வது?

விடை : சாஸ்திரங்களை ஒருவன் எழுதினனென்ருல், அவ்வாறு எழுதினவன், உலகத்தில் தனக்கு எதெது ஸுகமோ அவற்றையே தனக்கு உரியனவாக எழுதிவைத்திருக்கவேண்டும். பிறருக்குக் கஷ்டமானவற்றையே ஒதுக்கிவைத்திருக்கவேண்டும். ஆனல், நம் சாஸ்திரங்களை ஆராயும்போது இம்முறை மாறியிருக்கிறதைக் காணலாம். உலகத்தில், நாம் ஸுகமென்றுநினைப்பது தனஸம்பாதனை, ராஜீய அதிகாரம், இந்திரியாதிகளில் இச்சாபூர்த்தி ஆகியவைகளையே. பிராம்மணர்கள் சாஸ்திரங்களை எழுதிவைத்திருந்தால், மேறசொன்னவைகளைத் தங்களுக்கே சொந்தமாக வைத்து எழுதியிருக்கவேண்டும். ஆனல் அப்படியில்லாமல் சாஸ்திரங்களில் தன ஸம்பாதனை வைசியர்களுக்கும், ராஜீய அதிகாரங்கள் க்ஷத்திரியர்களுக்கும், இந்திரியாதி விஷய ஸுகங்கள் சூத்ரர்களுக்கும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பிறவி முதல் மரணபர்யந்தம் கஷ்டஜீவனமும், மஹா கஷ்டத்துடன் செய்யக்கூடிய கர்மாநுஷ்டானம் தபஸ் முதலியனவும் பிராம்மணனுக்கு உரியனவாகக் கூறப்படுகின்றன. இவ்வாறு தன் தலையில் தானே மண்ணைப் போட்டுக்கொள்வதுபோல் பிராம்மணன் எழுதிகொண்டிருப்பான? எனவே இவை ஈசுனின் கட்டளை வாக்காகிய வேதத்தின் ஆஞ்ஞை; யாரும் தங்களுக்குக் கென்று எழுதிக்கொண்டனவல்ல.

தவிர, சாஸ்திரங்களில், பிராம்மணனேடு, பசு, அக்னி, அரசமரம், கங்காஜலம் முதலியவற்றைச் சிறப்பித்துக் கூறியிருப்பதால், பசு முதலானவைகள் தங்களை உயர்த்தி எழுதிவைத்துக் கொண்டதாகச் சொல்வதா ? ரிஷபயோகி, அம்பரீஷன் முதலான ராஜாக்கள் பிராம்மணர்களை உயர்வாகக் கூறியிருக்கிருர்களே. பிராம்மணர்கள் சிறுவர்களுக்கு எட்டு

வயதிலேயே உபநயனம் செய்வித்து, தாய்தகப்பன் முதலான பந்துக்களையும் விட்டு, க்ஷௌரம், அப்யங்கனம், இஷ்டப் படி புசித்தல் முதலியவைகளைத் துறந்து, எங்கேயோ முன்பின் அறியாதவர்களிடம் சென்று, பிக்ஷைவாங்கி யுண்டு, பல நிர்ப்பந்தங்களோடு சிறைச்சாலையி லிருப்பது போல இருந்துகொண்டு, குருகுல வாசம் செய்து வித்யாப் யாஸம் செய்யவேண்டுமென நியமித்திருக்கிறார்கள். மற்றும், அதிகாலையில் எழுந்து ஸ்நானம் செய்து மத்தியான்னம் வரையில் யாதும் உணவின்றிக் காயக்லேசம் செய்து கர்மா நுஷ்டானங்களைச்செய்யவேண்டும்; பகலில் நித்திரை செய்யக் கூடாது; இன்னும் இவைபோன்ற கடினமான கட்டுப்பாடு கள் எத்தனை! வானப்ரஸ்த ஸந்யாஸ ஆச்ரமங்களில் ஜனங் கள் மத்தியில் வசிக்கக்கூடாது. ஒருநாள் இருந்தவூரில் மறு நாள் இருக்கக் கூடாது. நாவுக்கு இனிய உணவைப் புசிக்கக் கூடாது. மடம், ஆலயம், நதிதீரம், காடு முதலியவற்றில் மனிதரில்லாத இடங்களில் மிருகங்களுக்கு ஒப்பாக ஸகல ஸுகங்களையும் இழந்து காலங்கழிக்கவேண்டும். இத்தகைய விதிகளை—தமக்குக் கஷ்டமானவைகளை, பிராம்மணர்கள் சாஸ்திரங்களை எழுதிக் கொண்டார்களானால், தங்களுக்கு உரியனவாக எழுதிக் கொள்வார்களா? எனவே, ஈச்வர னின் ஆஞ்ஞையான வேத சாஸ்திரங்களை யாரும் தமக் கென்று எழுதிவைத்துக் கொண்டனவாகக் கருதாமல், கடவுளின் கட்டளை யென்றுணர்ந்து, அவற்றின்படி நடந் தால் சகல நன்மையும் பெறலாம்.

112. வினா: ஈச்வர பக்தியின் ஸ்வரூப மென்ன?

விடை: ஈச்வரனிடம் மனம் சென்று, பரமப்ரேம மாயிருப்பதே பக்தி எனப்படும். ஸ்திரீமுதலான பொருள்

களில் உண்டாகும் ப்ரீதி ராகமெனவும், கிடைத்திராத பொருள்களிற் ப்ரீதி கொள்வது இச்சையெனவும், ஸ்நாந ஜப தபஹோமாதிகளில் ஏற்படும் ப்ரேமை சிரத்தையெனவும் கூறப்படுகின்றன; ஈஸ்வரனிடம் ஏற்படும் ப்ரீதியே பக்தியாகும். புத்திரனிடம் ப்ரீதியுள்ளவர்கள் எப்படி அவனைச் சிலாகித்துப் பிறர் பேசுவதைக்கேட்டு மகிழ்வதும்,தாமும் சிலாகித்துப் பேசுவதும், எப்போதும் அவனையே நினைப்பதும், அவன் நன்மையின் பொருட்டு அவனுக்குப் பணிந்துகொடுத்தாவது நல்வார்த்தை சொல்வதும், அவனுக்கு யாதொரு சிரமும் தராமல் தொண்டுசெய்வதும், சில காலத்துக்குப் பின் நேசனைப்போல எல்லா விஷயங்களிலும் அவன் யோசனையைக் கேட்பதும், தமக்குக் கேடுவந்தாலும் அவனுக்கு ஒன்றும் தீதுவரக் கூடாதென எண்ணுவதும், அவனுக்காகவே தம் வாழ்நாள் முழுவதையும் செலவிடுவதுமாயிருக்கிறார்களோ அப்படியே, ஈஸ்வரனிடம் ப்ரீதியுள்ளவர்கள் ஒன்பது விதங்களான பக்தியையும் செய்வார்கள். அவை சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்மநிவேதனம் என்பவையாம்.

இவற்றில் சிரவணம் முதல் தாஸத்தன்மை யீறாகவுள்ள ஏழும் பக்தியின் முதல்படி; ஸக்யம் அதாவது நேசப்பான்மையில் இருப்பது இரண்டாவதுபடி; ஆத்மநிவேதனம் பக்தியின் முடிவுநிலையாம். பக்தியோகத்தில் (1) மர்க்கடகிசோரநியாயம், (2) மார்ஜார கிசோரநியாயம் என்று இரண்டு மார்க்கங்கள் உண்டு. தாய்க்குரங்கு, எங்குத் தாண்டினுலும் ஓடினுலும் முள்ளடர்ந்த செடி புதர்களில் சஞ்சரித்தாலும் அதன் தேகத்தை விடாமல் பற்றிக்கொண்டிருக்

கும் குரங்குக் குட்டியைப்போல, என்ன இடையூறு நேர்ந் தாலும் ஸஹித்துக்கொண்டு, சித்தத்தைப் பகவானிடத்தில் நிலைநிறுத்தவேண்டும். இதுதான் முதற்படி. இந்த நிலையில் பக்தனுக்கு 'ஈஸ்வரனைச் சேர்ந்தவன் நான்' என்ற எண்ணம் ஏற்படும். இந்தவிதமான பக்தி முதிர முதிர, ஈஸ்வரனுடைய அநுக்ரஹம் மேலும் மேலும் ஏற்படும். அவ்வாறு ஏற்பட ஆரம்பித்ததும், பக்தியின் இரண்டாவது படியை அடைய லாம். அப்போது, பூனைக்குட்டி தன் தாயைப்பற்றிக் கொள்ளாமல் தான் இருந்த இடத்திலேயே இருந்தாலும், தாய்ப்பூனையானது, அதற்கு யாதொரு துன்பமும் வரா மற் பாதுகாத்தும், அதற்குத்தக்க இடத்துக்குக் கொண்டு போய்விட்டும், ஆகாராதிகளைக் கிரமமாகக் கொண்டுவந்து தந்தும் உதவுவதுபோல, ஈஸ்வரன் தானே யாவற்றையும் செய்து காப்பாற்றுவான்.

இந்த நிலையை அடைந்தால், 'நம்மைச் சேர்ந்தவன் ஈஸ் வரன்' என்ற எண்ணம் உண்டாகும். இந்த நிலையில் தான், ஈஸ்வரன் பக்தனுக்கு அதீனன் ஆகிறான். அர்ஜுன னுக்குப் பகவான் பராதீனனாகி ஸாரத்யம் செய்த நிலையே இது. இதன் முடிவில் பகவானுடைய பரம அநுக்ரஹத் திற்குப் பாத்ரனாகி 'அவனே யான்' என்னும் அபேத நிலை யாகிய மூன்றாம்படியை அடையலாம். பேத நிலையிலிருந்து பக்தி செய்வது அபராபக்தி யென்றும் அபேத நிலையி லிருந்து செய்வது பராபக்தி யென்றும் கூறப்படும். பரா பக்தியின் முதிர்ச்சியால் ஞானம் ஏற்படும். இந்த ஞானத் தோடு, சித்தமானது லயம், விக்ஷேபம் யாதொன்றுமின்றி ஈஸ்வர சொரூபத்தில் ஈடுபட்டால் அணிமாதி ஸித்திகள் கைகூடலாம். அந்த ஸித்திகளில் மயங்காமல் திட வைராக்

கியத்தோடு உபாஸிப்பவர்களுக்குக் கைவல்ய மோக்ஷமே எளிதில் ஸித்திக்கும். இவ்விதம் தீவ்ரமாக மூன்றும் படியில் ஈடுபடாத ஸாதாரண பக்தர்கள் மரித்ததும், அர்ச்சிராதி மார்க்கமாய்ப் பிரம்மலோகம் சென்று பிரம்ம விசாரணை செய்து முக்தியடைவர். இந்த மூன்றுவது நிலையான பக்தியே ஸகுணோபாஸநம் என்று உபநிஷத்துக்களில் கூறப்படுகிறது.

ஆத்ம நிவேதனம், அதாவது, ஈச்வரனிடம் தன்னை நிவேதித்தல்-ஈச்வரன், தான் என்ற பேத உணர்ச்சியில்லாமல் செய்யும் பக்தியே—பக்தியின் முடிவான நிலையாம். இந்நிலைகளை,

'தஸ்யைவாஹம், மமைவாஸௌ, ஸஏவாஹமிதி த்ருதா |
பகவச் சரணத்வம்ஸ்யாத் ஸாதனாப்யாஸ பாகத: ||

(அவனுடையவன் நான்; என்னுடையவனே அவன்; அவனே யான்: என மூன்று விதமாய்ப் பகவத் பக்தியானது ஸாதனாப்யாஸ பாகத்தினால் ஏற்படுவதாகும்)' என்பதால் அறியலாம்.

'அழிஞ்சில் மரத்தை அதன் விதைகளும், காந்தக்கல்லை இரும்பும், கணவனைப் பதிவிருதையும், மரத்தைக் கொடிகளும், ஸமுத்திரத்தை நதியும் சென்று அடைவதுபோல, ஈச்வரனுடைய பாதாரவிந்தத்தில் சித்த விருத்தியானது சென்று ஈடுபடுதலே பக்தியென்று சொல்லப்படும்' என்று சிவானந்த லகரியிலுள்ள ஒரு ச்லோகத்திற் கூறப்பட்டுள்ளது. இங்கே ஐந்து திருஷ்டாந்தங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

அவற்றுள் முதலாவது அழிஞ்சில் வித்து. அதன் தன்மையாவது, பழம் முதிர்ந்து வெடித்து விதை கீழே விழுந்ததும், அது மறுபடியும் அம்மரத்திலேயே போய் ஒட்

டிக்கொள்ளும். இதுபோலவே பக்தியாரம்பத்தில் யாதேனும் ஒரு காரணத்தினால் சித்தமானது ஈஸ்வரனைவிட்டு ஒதுங்கிப் போனாலும் உடனே நினைவு வந்து அந்தச் சித்தத்தை ஈஸ்வரன்பால் ஒன்றுபடுத்தும் முயற்சி ஏற்படும். இது பக்தியின் முதற்படியான மர்க்கட கிசோர நியாயம் போன்றதென்றே கருதப்படும்.

இனி பக்தியின் இரண்டாவது படியில், ஈஸ்வரன் பக்த பராதீனனாய், பக்தனுக்குப் பிரதானத்வம் கொடுப்பதில் மூன்று வகையுண்டு. அவை:—(1) பக்தனது சித்தத்தைத் தன்னிடமே ஆகர்ஷித்துக்கொள்வது; (2) பக்தனுடைய க்ஷேமத்தை உத்தேசித்துத் தான் சிரமப்படுவது; (3) தனக்கு எவ்வளவு அகௌரவம் ஏற்பட்டாலும் அதைப் பொருட்படுத்தாமல் பக்தனுக்குக் கௌரவத்தைத் தருதல். இவற்றில் முதலாவது வகைக்கு, காந்தம் இரும்பைத் தன்னிடத்தே இழுப்பது உதாஹரிக்கப்பட்டது. இரும்புக்குக் காந்தத்தை யடையும் ஸ்வபாவமும், காந்தத்திற்கு இரும்பை இழுக்குப் சக்தியும் உண்டு. பக்தனின் மனம் பரமனை நாடும் ஸ்வபாவமுடையது. அப்பரமன் தன்சக்தியால், அப்பக்தனது மனம் தன்னிடமே இருக்கும்படி கடாக்ஷிக்கும் (மார்ஜார கிசோர நியாயம்) நிலை இதனால் விளங்குகிறது.

இரண்டாவது வகைக்கு உதாரணம் பதிவ்ருதை கணவனை அடைவது என்பதாம். கணவன் கஷ்டப்பட்டு அடைந்த புண்ணியத்தில் பாதி பதிவ்ருதைக்குச் சுலபமாகக் கிடைத்துவிடுகிறது. கணவன் தன் குடும்ப வியவகாரங்களிளெல்லாம் பதிவ்ருதையான மனைவியின் ஆலோசனையை அநுசரித்து அவளுக்குப் பெருமை தருகிறான். அதுபோலவே ஜகத் ஸம்பந்தமான காரியங்களில் ஈஸ்வரன் பக்தனு

டன் யோசனைசெய்தல் முதலியவைகளால் பக்தனைக் கௌரவித்தல் இதிஹாஸபுராணாதிகளில் தெளிவாகக்காணப்படும்.

மூன்றாவதாக, கொடியானது மரத்தையடைவது கூறப்பட்டது. மரத்தைத் தான் பற்றிப் படர்வதற்கு உதவியாகக் கொண்ட கொடியானது, சில நாட்களில் அம்மரம் முழுதும் வியாபித்து மறைத்துவிட்டுத் தான் மட்டும் எப்படிப் பிரகாசிக்கிறதோ அதுபோலவே, பக்தன் ஈச்வரனைப் பற்றுக்கோடாகக்கொண்டு முன்னேற ஏற, ஈச்வரனைக்காட்டிலும் அதிகக் கௌரவம் பெற்றுப் பிரகாசிப்பதும், அக்காலையில் ஈச்வரன் தனக்கு—தன் சொல்லுக்கு–இழுக்கு வந்தாலும் அதைக் கவனியாமல் பக்தனுக்கு அகௌரவம் வராமல் பார்த்துக்கொள்ளும் பெருங்கருணையும் தெளிவாகும். "போரில் ஆயுதம் தோடேன்" என்ற பிரதிஜ்ஞையை மீறி, "ஆயனை ஆயுதம் எடுக்கச் செய்வேன்" என்ற அன்பன் சொல்லை மெய்யாக்கிய ஸந்தர்ப்பத்தை இதற்கு உதாஹரிக்கலாம். இவ்வாறு மூன்று திருஷ்டாந்தங்களால் பக்தியின் இரண்டாவது படியான மார்ஜார கிசோர நியாயத்தை விளக்குகிறார்.

இனி, கடைசி திருஷ்டாந்தம் 'நதியானது சமுத்திரத்தை அடைவதுபோல' என்பது. இதுதான் பக்தியின் முடிவான நிலைக்கு—ஆத்ம நிவேதனத்துக்கு—எடுத்துக் காட்டு. ஒரு நதியானது ஸமுத்திரத்தை அடைந்ததானால், அதன் பிறகு இது நதி ஜலம், இது ஸமுத்ர ஜலம் என்ற பேதம் இல்லாதபடி எல்லாம் ஒன்றாகவே, ஸமுத்ர ஜலமாகவே, ஆகிறது. அதுபோலவே பக்தனும் பரமனும் ஒன்றாகி, வேறு வேறு பிரித்துணரமுடியாத ஐக்ய நிலையை எய்தியிருப்பதை இது தெளிவுறுத்துகிறது. இவ்வாறு பக்தியின் மூன்றுபடி

களையும் ஸ்ரீ சங்கரர் சுருங்கச்சொல்லி விளக்கியுள்ளார். இதே கருத்துப்பட ஸ்ரீமதுஸூதன ஸரஸ்வதி ஸ்வாமிகளும்,

"ஸதயபி பேதாஅபகமே நாததவாஹம் நமாமகீ நஸ்த்வம்
ஸாமுத்ரோஹி தரங்க: த்வச நஸமுத்ரோ நதாரங்க:"

(என்னிலும் நீ வேறு என்னும் பேதஞானம் நீங்கப் பெற்றேனாயினும், ஓ ஈசனே, 'உன்னைச் சேர்ந்தவன் யான்' என்பதன்றி, என்னைச்சேர்ந்தவன் நீ என்பது பொருந்தாது. அலை சமுத்திரத்தினுடையதன்றி ஸமுத்திரம் அலையினுடையது ஆகாதன்றோ?) என்று கூறியுள்ளார். இத்தகைய பக்தி மார்க்கமே வீடு பேற்றுக்குத் தற்காலத்துக்கு ஏற்ற ஸுலபமான வழியாகும்.

113. வினா: மனத்தின் ஸ்வரூபமென்ன? அம் மனம் எங்கே இருக்கிறது?

விடை: மனத்தை யாவராலும் காணமுடியாது. இது, நம் சரீரத்திற்குள் இருந்துகொண்டு ஸங்கற்ப விகற்பங்களோடு சகல வ்யவஹாரங்களையும் நடத்தும் ஓர் ஆச்சரியமான வஸ்து. பந்தமோக்ஷங்களுக்குக் காரணமாயிருப்பது இம்மனமே. விஷயாதிகளில் ஆசையுண்டாவதற்கும் இதுவே காரணமாயிருக்கிறது. இதனிடத்திலேயே மூன்று லோகங்களும் இருக்கின்றன. இது க்ஷீணமடைந்தால் இந்த ஜகம் தோன்றாது. அதனால் இந்த மனோவ்யாதியை யாவரும் போக்க முயலவேண்டும்.

நாஸ்திகர்கள், 'மனம் என்பது ஸ்தூல சரீரத்தைச் சேர்ந்த பொருளே' என்கிறார்கள். ஓர் இந்திரியத்துக்கும் கோசரமாகாததால் இது ஸூக்ஷ்மவஸ்து என ஆஸ்திகர் கூறுகின்றனர். 'மூளையே மனம்' என்று சிலர் கூறுகின்றனர். மனத்தின் தொழிலாகிய எண்ணம் உணர்ச்சி இவைகள்

ஏற்படும்போது மூளை சலிப்பதனல் இவ்வாறு மூளையும் மனமும் ஒன்றென்று கூறக்கூடும். ஆனல் அது சரியல்ல. சைகிள் சவாரி செய்யும் ஒருவனது கால்கள் சலிக்கும்போது சைகிள் ஓடுகிறது; எனவே அவன் காலும் சைகிளும் ஒன்றே என்று கூறலாமோ? ஒரு நியாயாதிபதியும் அவர் உட்கார்ந்து விசாரணை செய்யும் ஆஸனமும் போலவே மனமும் மூளையும் இருக்கின்றன என்னலாம். நியாயஸ்தலத்தில் ஆஸனம் எப்போதும்இருந்தாலும் நியாயாதிபதி அதில் உட்கார்ந்தபோதுதான் விசாரணை நடக்கிறது; அதுபோல மூளை எப்போதும் உள்ளதேயாலும் அதனிடத்தே மனம் நின்று தொழில்பண்ணுவிடில் எண்ணம் உணர்ச்சி முதலியன் உண்டாகமாட்டா. ஆதலால் மூளையினும் மனம் அந்யமே.

சிலர், "மனம் எந்த இந்திரியத்தோடு சம்பந்தப்படுகிறதோ அந்த இந்திரியம் மட்டும் அப்போது வேலை செய்கிறது. அதனல் மனம் அணுத்தான். விபுவாயிருந்தால் ஸமகாலத்தில் ஐந்து இந்திரியங்களும் வேலைசெய்ய வேண்டியது அவசியமாம். ஆனல் அஃது அநுபவ விரோதமாயிருக்கிறது. அதனல் மனம் விபுவல்ல" என்கிறர்கள். இதுவும் சரியன்று. "லோகாநுபவத்தில், ஒரே காலத்தில் ஐந்து இந்திரியங்களும் வேலை செய்வதைப் பார்க்கிறோம். உதாரணமாக, ஒரு முறுக்கைத் தின்னும்போது, ஒரே காலத்தில், அதன் ரூபம், ஸ்பர்சம், அது நொறுங்கும்போதுண்டாகும் சப்தம், அதன் ருசி, வாஸனை முதலியவற்றை அறிகிறோம். அஷ்டாவதானம் செய்பவர்களுக்கு எல்லா இந்திரியங்களும் ஸமகாலத்தில் வேலை செய்வதைப் பார்க்கிறோம். ஆகவே, மனம் விபுவென்றே சொல்லவேண்டும்" என்கின்றனர் வேறு சிலர். பின்னெரு சாரார் மனத்தைச் சீக்கிரயாய் ஓவ்வோர்

இந்திரியத்துடனும் ஸம்பந்திக்கச் செய்யும் அப்யாஸமே அஷ்டாவதானமாகையால், மனத்தை விபுவென்னல் தகாது என்பர்.

இவ்வளவு அபிப்பிராய பேதங்கள் இருந்தாலும், மனத்தின் ஸ்வரூபம், அதன் கிரியைகளாகிய விருத்திகள், அதன் பரிணாமம், அதனை அடக்கும் உபாயம், அதனைப் பரம்பொருளிடத்தே நிலைநிறுத்துதல், அதனிடம் ஒரு சிந்தனையும் நிகழாமல் நிரோதம் செய்தல், முதலிய விஷயங்களைத் தெளிவாக யோகநூல் கூறுகிறது. மனம் ஸர்வஸங்க தோஷத்தால் ஏற்பட்ட ரஜஸ்தமோ குணங்களால் வ்யாபகத்வம் நீங்கி அணுத்தன்மையை அடைந்தது போல காணப்படுகிறது. ஆதலால் அது இயற்கையில் வியாபகத்தன்மையும், செயற்கையால் அணுவின் பரிமாணமும் உடையது. இவ்வாறு யோக நூல் கூறும். வேதாந்த நூலிலோ, ("அணவஶ்ச" என்ற சூத்திரத்தால்) மனத்தை அணுவெனச் சொல்லி, 'இந்திரியப் பிராண மனங்களை அணுக்களென்றனர், அவை பரமாணுவைப் போன்றவையல்ல; இந்திரியங்களால் அறியமுடியாத நுட்பமான வடிவமென்பதே இதன் தாத்பர்யம்' என்று அணுத்வத்தை நேரில் கொள்ளாமல் ஸூக்ஷ்மம் என்று பொருளில் கொண்டு பரிச்சின்ன பரிமாணமே மனத்திற்குள்ளதென நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது.

எவ்வெம் மதத்தோர் எவ்வெவ்வாறு கூறினும், மனம் இயற்கையில் வ்யாபகமும், செயற்கையால் அணுத்வமும் உடையது என்று கூறுவது முரணாகாது. மனம் எப்போது எந்த வஸ்துவோடு கூடுகிறதோ அப்போது அந்த வஸ்துவின் பரிமாணம் உடையதாகும். ஆதலால் அதனைப் பரிச்சின்ன பரிமாணமுள்ள பொருளென நம் நூல்கள் கூறுகின்

றன. பலர் கூடிச் செய்யக்கூடிய அத்யாச்சர்யமான காரியங்களையும் இம்மனமானது தனியாக இருந்து செய்யும் வல்லமையுள்ளது. பைத்தியம் பிடித்த ஒருவனுடைய தேகம் மிக மெலிந்திருந்தாலும் மனோபலத்தால், அவன் தன்னைக் கட்டியுள்ள சங்கிலிகளையும் அறுத்துவிடுவதையும், பூதாவேசம் கொண்ட மனோசக்தியாலே பலர் சேர்ந்தும் தூக்கமுடியாத பெருங்கல் முதலியவற்றைத் தனிமையாக ஒருவன் தூக்கிவிடுவதையும் காண்கிறோம். மற்றும் நெருப்பைக் கையிலேந்துவதும், நெருப்பின்மேல் சரீர வருத்தம் பாராட்டாமல் நடப்பதும் இம் மனோபலத்தின் செயலே. மனநிலை தளர்ந்துவிடின் நிகழும் விபரீதச செயலகளும் எண்ணிறந்தனவே. துஷ்ட மிருகங்களை அடக்குவதும், மலைகளைத் தூளாக்குவதும், சமுத்திரத்தை அணைகோலித் தடுப்பதும் பல்வேறு இயந்திரங்களைக் கண்டுபிடித்து ஆச்சர்யகரமான செயல்களைச் செய்து முடிப்பதும் இம்மனச் சக்தியே. அணிமாதி ஸித்திகளைப் பெறவும், கோரமிருத்யுவையும் ஒதுக்கி வைக்கவும், அறிதற்கரிய பரம்பொருளை உள்ளபடி அறியவும் வல்லது மனம். இம்மாதிரியாக உள்ளம் வசமானால் உலகமே வசமாகும். இத்தகைய மனத்துக்குச் சரியான வழியில் பயிற்சி தரவும் அம்மனத்தினை செயல்களால் வரும் ரஜஸ்தமோகுணப் பிரதிபந்தங்களை நிவர்த்திக்கவுமே கர்மயோகம் ஏற்பட்டுள்ளது.

இந்திரியங்களைப் புறக்கரணமெனவும் மனத்தை அந்தக்கரணமெனவும் கூறுவர் பெரியோர். இந்த மனத்தின் இருப்பிடம் ஹ்ருதயகமலமென நம்மவரும், மூளையென மேனாட்டவரும் சொல்லுவர். இதனை ஆராய்வோம்: மின்சாரத்தின் சக்தியானது கம்பிவழியாகச் சென்று வெகுதூரத்திலும்

பிரகாசத்தை உண்டுபண்ணுதல், வண்டிகளை இயக்குவித்தல் முதலிய கிரியைகளைச் செய்கிறது. அப்போது கம்பியானது கிரியாஸ்தானமாக இருக்கிறது. ஆனால் மின்சாரத்தின் நிஜஸ்தானம், உண்மையாக நிலைபெற்றிருக்குமிடம், கம்பியல்ல; வேறொன்றுதான். இவ்வாறே உலகத்திலுள்ள எந்த வஸ்துவுக்கும் நிஜஸ்தானம் ஒன்றும் கிரியாஸ்தானம் வேறொன்றுமாக இருப்பது பிரத்தியக்ஷம். இஃது எப்போதும் மாறாது. எனவே மனத்திற்கு வேலை செய்யுமிடம்—கிரியாஸ்தானம்—மூளையும், நிலையாகத் தங்குமிடம்—நிஜஸ்தானம்—ஹ்ருதயமுமாம்.

மனம் செய்யும் வேலை இரண்டு விதமாம்: சரியாய்ச் செய்யும் வேலை யொன்று; தாறு மாறாகச் செய்வதொன்று. முதலிற் சொன்னது உண்மைத் தோற்றமாகவும், பின்னது பொய்த்தோற்றமாகவும் முடியும். அப்படி மனமானது சரியாய் வேலைசெய்வதை ஜாக்ரதாவஸ்தை யென்றும், தாறு மாறாகச் செய்வதை ஸ்வப்னாவஸ்தை யென்றும் சொல்லுவர். ஸ்வப்னத்தில் இந்திரியங்கள் இல்லாவிட்டாலும் மனம் அடங்கவில்லை. அது தாறுமாறாகத் தன் இஷ்டம்போல் வேலை செய்கிறது. அந்த வேளையில் அம்மனத்தின் கிரியாஸ்தானம் மூளையல்ல; கழுத்துக்குப் பின்பாகத்திலுள்ள சிறு மூளையேயாம் (Cerebellum.)

மனத்துக்கு விருத்திநிலை, விருத்தியபாவ நிலையென இரண்டு நிலைமைகள் உண்டு. ஜாக்ரத் ஸ்வப்னங்களானவை, காமம், ஸங்கல்பம், ஸந்தேகம் முதலிய தோற்றமுள்ள விருத்தி நிலை யெனப்படும். ஒரு ஸங்கல்பமு மில்லாமல் உபசாந்தமாய்த் தூங்குவதாகிய ஸுஷுப்தியே விருத்தியபாவ நிலையெனப்படும். மனமானது விருத்தியில்லாத சமயத்தில்

தன் இருப்பிடத்தில் லயத்தை அடையும். அதனால் அதன் நிஜஸ்தானத்துக்கு லய ஸ்தானம் என்றும் பெயருண்டு. ஸுஷுப்தியில் மனமானது ஹ்ருதய கமலத்தில் ஸூக்ஷ்ம மாக லயித்து நிற்கும். விதையில் மரமும், ரேதஸ்ஸில் புருஷ னும், கட்டையில் அக்கினியும் அடங்கியிருப்பது வெளியே தெரியாவிட்டாலும், அவைகளின் உண்மையை நாம் ஸ்வ பாவமென்று ஒப்புக்கொள்ளுகிறோம். அவ்வாறே ஹ்ருதய கமலத்திலும் மனம் ஒடுங்கிநிற்பது அதன் ஸ்வபாவமாம்.

114. வினா: ஸ்வர்க்க நரகங்கள் எங்குள்ளன? அங்குள் ளவர்களது சரீரம் எப்படிப்பட்டவை? அவர்கள் செய்யும் கார்யம்யாது? அங்கிருந்துஇவ்வுலகத்துக்கு வருவதுஎப்படி?

விடை: இப் பூவுலகத்திலிருந்து வெகு தூரத்தில் எண்ணிறந்த பல உலகங்கள் இருக்கின்றன. அவை பாப லோகங்களென்றும் புண்ய லோகங்களென்றும் இருவகைப் படும். இந்த உலகில் ஜீவர்கள் பார்த்திவ சரீரம் பெற்று வசிப்பதுபோல அவ்வவ்விடங்களிலுள்ளவர்களும் அவ்வவ் விடத்துக்கேற்ற ஸ்தூலசரீரங்களைப் பெற்றிருக்கின்றனர். இவ்வுலகத்தில் ஜீவர்கள் கர்மத்தைச் செய்கின்றனர். அந்த உலகங்களில் அவரவர் செய்த கர்மாக்களுக்கு ஏற்றபடி சுக துக்கங்களை அனுபவித்துக்கொண்டிருக்கின்றனர். இப்பிறவி யில் புண்ய கர்மாவைச் செய்தால் ஸ்வர்க்காதி புண்யலோகங் களை அடைந்து ஸுகத்தை அனுபவிக்கலாம், பாபகர்மா வைச் செய்தால் நரகங்களையடைந்து துக்கம் அனுபவிக்க வேண்டும்.

ஸ்தூல சரீரம் நான்குவிதப்படும். அவை (1) பார்த்திவ சரீரம், (2) ஜலீய சரீரம், (3) ஆக்நேய சரீரம், (4) வாயவீய சரீரம் என்பன.

பார்த்திவ சரீரம்:— இதில் பஞ்சபூதங்களின் அம்சம் இருந்தாலும் பிருதிவி அம்சம் அதிகமாயிருப்பதால் கண்ணுக்குப் புலப்படுகிறது. இது பிருதிவியினுலேயே உண்டாகிப் பிருதிவியினுலேயே வளர்ந்து பிருதிவியிலேயே ஒடுங்கும். இந்தச் சரீரம் ஜீவிப்பதற்குப் பிருதிவி சம்பந்தமுள்ள ஜலம், தீ, வாயு இவைகள் வேண்டும். இந்தச் சரீரமுள்ள ஜீவர்கள் அதிக உயரம் சென்றால், அங்குள்ள காற்றில் பிருதுவியின் இயல்பாகிய கனம் குறைந்துள்ளமையால் அங்கே இருந்துகொண்டு ஜீவிக்கமுடியாது.

ஜலீய சரீரம்:—இந்தச் சரீரத்தில் ஜலாம்ஸம் அதிகம். மீன் முதலானவை ஜலீய சரீரங்களைச் சேர்ந்தவை. அவைகள் ஜீவிப்பதற்கு ஜலமும் காற்றும் மிருதியாக வேண்டும். சுத்தமான ஜலமும், காற்றும் உள்ள விடங்களில் அதிக ரோகங்கள் வருவதில்லை; இஃது அநுபவஸித்தம்; சந்திரமண்டலத்தில் இப்படிப்பட்ட சுத்த ஜலாம்சம் வெகு அதிகம். அங்குள்ள தீர்த்தத்துக்கு நிகரானதொன்று வேறெங்குமில்லை. அந்தத் தீர்த்தமே அமிருதம் என்று கூறலாம். அவ்விடத்தில் காற்றும் சுத்தமாயிருப்பதால் அங்குள்ள ஜீவர்கள் அபார ஸுகத்துடன் வாழ்கிறார்கள். அதுதான் புண்ணியம் செய்தவர்கள் சென்று ஸுகம் அனுபவிக்குமிடம். அதுவே ஸ்வர்க்கம் என்றும் கூறலாம். அங்கே புண்ணியத்தினுல் சென்ற தேவர்களும் பிதுர்க்களும் இருக்கின்றனர். பார்த்திவ சரீரத்தில் பல பேதங்கள் இருப்பதுபோல இந்த ஜலீய சரீரத்திலும் உண்டு. ஜலீய சரீரத்துக்கு ஜல சம்பந்தமான உணவுகளே வேண்டுமாதலால், அங்குள்ள பிதுரர்களுடைய திருப்திக்காக ஜலதர்ப்பணாதிகள் செய்ய வேண்டுமென்பது விதிக்கப்பட்டது.

ஆக்னேய சரீரம்:—அழகு அக்கினியின் தர்மம்; காந்தி என்பது அக்கினிக்கே உரியது. மஹாபரிசுத்தமானது அக்கினியே. ஆகவே, இந்தச் சரீரம் பரிசுத்தமானதாய்,அழகுடன் ஜ்வலிக்கும். இதில் மற்றப் பூதங்களின் அம்சம் குறைவாயும், அக்னியின் அம்சம் மிகுந்தும் காணப்படும். நம் சரீரத்தில் உஷ்ணம் அதிகமானால் நித்திரையிராது. அவ்வாறே இவ்வாக்னேய சரீரிகளுக்கு நித்திரையே இல்லை. கூர்ந்து ஆலோசித்து ஒவ்வொரு காரியத்தையும் செய்பவர்களுக்கு உஷ்ணம் அதிகரிப்பதைக் காண்கிறோம். எனவே இச்சரீரம் உள்ளவர்கள் தீக்ஷண்யமான புத்தியுடன் கூடியிருப்பர். காமம் அதிகரிப்பதற்கு உஷ்ணமே காரணம். ஆதலால் இவ்வாக்னேய சரீரிகள் அதிக காமமுள்ளவர்களாயிருப்பர். மற்றும் இவர்கள்சுத்தராவே இருப்பதோடு நம்மையும் சுத்தப்படுத்துகிறார்கள். ஆதித்யலோகம், பிருஹஸ்பதிலோகம் முதலிய ஸ்வர்க்கலோகங்களில் இருக்கும் தேவர்கள் இந்த ஆக்னேய சரீரத்தையுடையவர்களாதலால் திவ்ய சரீரிகளென்றும், மிக்க அழகுடையவரென்றும், கண்களைக் கூட இமையாதவரென்றும் (நித்திரை செய்யாதவர்), புத்தியில் சிறந்தவரென்றும், சிற்றின்பபோகம் அனுபவிப்பவரென்றும் நம் நூல்களிற் கூறப்படுகிறார்கள். இவர்களுக்குஅக்கினிஸம்பந்தமான உணவுகளே வேண்டுமாதலால் இவர்கள் பொருட்டு அக்கினியில் ஹோமம் செய்தலாகிய யாகயஞ்ஞங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. சிரத்தையோடு, மந்த்ர பூர்வமாய் அக்கினியில் நாம் கொடுக்கும் ஹவிஸ்ஸுக்கள் இவர்களை அடையும்.

வாயவீய சரீரம்:—இதில் வாயு வம்சம் அதிகம். வாயுவின் அம்சமே ப்ராணனாதலால் இந்தச் சரீரத்துக்கு ப்ராண பலம் அதிகம். இச்சரீரிகளுக்கு மரணம் நேர்வது அரிது.

இவர்கள் நம் கண்ணுக்குப் புலப்படார். ஆதித்ய உபாஸனை, யோகம் முதலியவற்றால் ஸித்திகளைப் பெற்று நேத்ரேந்திரிய சக்தி விசேஷமாக ஏற்பட்டால் இந்தச் சரீரங்களைப் பார்க்கலாம். இந்தச் சரீரம் பெற்றவை பூதப்ரேதபிசாசங்களென்றவைகளே. இவ்வுலகில் பாபம் செய்தவர்கள் இந்தச் சரீரங்களைப் பெற்று நரகாதிகளில் சென்று யாதனைகளை (துன்பங்களை) அநுபவிப்பதால் இவற்றிற்கு யாதனாசரீரங்கள் என்றும் பெயருண்டு. இவர்களுக்குப் பிராணபலம் மிகுதியாயிருப்பதால் நரகத்தில் எவ்வளவு கஷ்டங்களை அநுபவித்தாலும், இவர்கள் பிராணன் போவதில்லை. பசு, நாய், பூனை முதலிய ஜந்துக்களுக்கு நேத்ரேந்திரிய சக்தி அதிகம். இருட்டிலுள்ள வஸ்துக்களும் அவைகளின் கண்ணுக்குப் புலனும். அந்த ஜந்துக்களுக்கு வாயவீய சரீரங்கள் தென்படும் என்று சொல்லுகிறார்கள். இதனாலேயே, பசுக்கள் கதறினாலும், பூனை, நாய்கள் அழுதாலும் யாருக்காவது மரணம் நேர்ந்திருக்கும் அல்லது நேரிடும் எனக் கிராமாந்தரங்களில் இன்றும் நம்பிக்கை இருக்கிறது. யாதனா சரீரங்களைப் பார்ப்பதால் அவை கதறுகின்றன.

இத்தகைய சரீரங்களில் எல்லாம் உத்தமம், மத்யமம், அதமம் என்ற தாரதம்ய முண்டு. நரகயாதனை அநுபவிப்பவர் அதம வாயவீய சரீரமுள்ளவராவர். புண்ய பாப கர்மவசத்தால் ஸ்வர்க்காதி திவ்ய லோகங்களையும் நரகலோகங்களையும் முறையே அடைந்தவர்கள், தத்தம் கர்மபலன்களில் அதிகமானவற்றை அநுபவித்து முடித்தபின்னர், மிகுதியாயுள்ள கர்மபலன்களை நுகர்வதற்குத் தகுந்தபடி இந்த உலகில் மறுபடி ஜனனம் அடைகிறார்கள்.

**115. வினா: உபவாஸம் என்பதன் அர்த்தம் யாது?**

விடை: ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஐக்கியத்தை அறிந்துகொண்டு வஸிப்பதே உபவாஸம் எனப்படும். எவன் பிரம்மமே தானுகி வஸிக்கிருனே அவனே உபவாஸம் இருப்பவனும். சரீரத்தை வாட்டிப் பட்டினி யிருப்பது உண்மையான உபவாஸமாகாது.

116. வினு: ஜனனமரண ஸம்பந்தமே ஒரு காலத்தும் இல்லாத பரமாத்மா லோகரக்ஷணர்த்தம் அநேக ரூபத்தைக் கொண்டு ஜனிக்கிருர் என்று சுருதிகள் கூறுவது எவ்வாறு பொருந்தும்?

விடை: வாஸ்தவத்தில் அத்வைதப்பிரம்மம் ஒன்றே ஸத்யமாயினும், பரமாத்மா மாயையால் பல ரூபங்களைத் தரிக்கிருர் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. உண்மையில் பரமாத்மாவுக்கு ஜன்மம் ஏற்படவில்லை. மாயையால் ஜன்மம் ஏற்பட்டதுபோல் தோன்றுகிறது; அவ்வளவே. ஏனென்ருல், அக்கினியினிடத்தில் உஷ்ணமும் சீதலமும் ஒருங்கே பொருந்தாதது போல, ஒரே பரமாத்மாவிடத்தில் ஜன்மமில்லாமையும் ஜன்மமும் பொருந்தா. ஒரு வித்தைக்காரன் ஒரு கயிற்றைஆகாயத்தில எறிந்து விடுகிருன். பிறகு அதன் மூலமாக, ஆயுதங்களுடன் மேலேறி யுத்தம் செய்வதாகவும், அதில் அவன் வெட்டுண்டு வீழ்ந்ததாகவும் காட்டுகிருன். பிறகு அவன் மறுபடியும் பிழைத்து எழுகிருன். இவற்றைப் பார்ப்போர் இவ்வித்தை வாஸ்தவமாவென்று விசாரிப்பதில்லை. மாயையால் மறைபட்டு நிற்கும் வித்தைக்காரன் வேறு; அவனுல் எறியப்பட்ட கயிற்றில் ஏறினவன் வேறு. அப்படி ஏறினதாகத் தோன்றிய உருவம் மாயையால் ஏற்பட்டதே; உண்மையல்ல. இதுபோலவே தான் பரமாத்வாவுக்கும் ஜன்மம் ஏற்பட்டதாக மாயையால்

தோன்றுகிறது; உண்மையில் அவ்வாறு ஒன்றும் நேர்வ தில்லை. ஆகையால், மோக்ஷ இச்சையுள்ளவர்களுக்குப் பரமாத்ம தத்வத்தை விசாரிப்பதில்தான் இஷ்டம். வீணை சிருஷ்டியாதிகளைப்பற்றி விசாரிப்பதில் இஷ்டமேயில்லை.

117. வினு: ஜாக்ரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி என்ற அவஸ்தாத்ரயத்திற்கும் அபிமானிகளான விசுவ தைஜஸ பிராஞ்ஞர்களுக்கும், அகார உகார மகாரம் என்ற மாத்திரைகளுக்கும் ஏகத்வம் எப்படிப் பொருந்தும்?

விடை: ஜாக்ராவஸ்தையின் ஸ்தூலாபிமானியான வைஶ்வாநரன் (விஶ்வன்) ஓங்காரத்தின் முதல் மாத்திரையாகிய அகாரமாகிறுன். ஏனென்ருல் லோகத்திலுள்ள ஸமஸ்த சப்தங்களிலும் அகாரம் வ்யாபித்திருப்பது போல, வைஶ்வாநரன் ஜகத்முழுதும் வ்யாபித்திருக்கிறுன். இவ்வாறு வ்யாபிக்கும் தன்மை இருவருக்கும் சமமாயிருப்பதாலும், அக்ஷரங்களுக்கெல்லாம் முதலாவதாக அகாரம் இருப்பதுபோல ஆத்மாவின் பாதங்களில் வைஶ்வாநரன் முதல் பாதமாக இருப்பதாலும், வைஶ்வாநரனே அகாரமாம். இவ்வாற இவ்விருவரு மொருவரே யென்று அறிந்தவன் மஹான்களுக்குள் முதல்வனுகவும் ஸகல போகங்களையும் அனுபவிப்பவனுகவும் ஆகிறுன்.

ஸ்வப்னத்தின் அபிமானியான ஸூக்ஷ்ம உபாதியுடன் கூடின தைஜஸன் ஸ்தூல உபாதியுடன் கூடின விஶ்வனைவிடச் சிரேஷ்டனுயிருக்கிறுன். அதுபோலவேபாடக் கிரமத்தில் அகாரத்திற்கு மேலான நிலையில் உகாரம் இருக்கிறது. மேலும் விஶ்வனுக்கும், ப்ராஞ்ஞனுக்கும் இடையே தைஜஸன் இருப்பது போல, அகார மகாரங்களுக்கு நடுவே உகாரம் இருக்கிறது. ஆதலால் தைஜஸனும் உகாரமும்

ஒருவரே. இவ்வாறு இவைகளின் ஏகபாவத்தைக் குருமுக மாக அறிந்தவன் மேன்மேலும் ஞானத்தை அடைகிருன்; சத்துருவாலும் த்வேஷிக்கப்படாமல் ஸமபாவத்தை அடை கிருன் ; இவனுடைய குலத்தில் பிரம்மத்தை அறியாத அஞ் ஞானி ஜனிப்பதில்லை.

ஸுஷுப்தியை ஸ்தானமாகவுடைய ப்ராஞ்ஞனும், மகார மும் பரிமாணத்தால் ஒருவரே. எப்படியென்றல், ஒரு படியி ஞல் தானியம் அளவிடப்படுவதுபோல, பிரளயத்திலும் உற் பத்தியிலும் பிரவேசித்து வெளிப்படுவதால் விஶ்சுவதைஜஸர் கள் பிராஞ்ஞனல் அளவிடப்படுகிருர்கள். அவ்வாறே ஓங்கா ரத்தை அடுத்தடுத்து உச்சரிக்கும்போது, அகார உகாரங்கள் மகாரத்தில் பிரவேசித்து வெளிப்படுவது போலிருக்கும்; ஆகவே இவை மகாரத்தால் அளவிடப்படுவது போலிருக்கும். ஆகையால் ப்ராஞ்ஞனும் மகாரமும் ஒருவரே. தவிர, ஓங்கா ரத்தை உச்சரிக்கும்போது மகாரமாகிற கடைசி அக்ஷரத்தில் அகார உகாரங்கள் லயப்படுவதுபோல, விஶ்வனும் தைஜஸ னும் ஸுஷுப்தி காலத்தில் ப்ராஞ்ஞனுடன் ஒன்ருய் விடு கிருர்கள். இதனுலும் மகாரமும் ப்ராஞ்ஞனும் ஒருவர் என் னலாம். இப்படி, இந்த ஏகத்வத்தை அறிந்தவனுக்கு சகல ஜகத்தையும் உள்ளபடி அறியும் சக்தியுண்டாகிறது; அவன் ஜகத்துக்குக் காரணனுகவும் ஆகிருன்.

118. வின: வேதாந்த சாஸ்திரங்களின் உண்மை யான அர்த்தங்களை யாரால் அறிய முடியும்? பயகாரண மானது யாது? கற்பனுவஸ்தைகளிலும் நாசமில்லாமல் மங் களமாய் மிஞ்சுகிற வஸ்து எது?

விடை: 'தெய்வமே குரு; குருவே தெய்வம்' என்று அபேதமாக யார் உபாஸிக்கிருர்களோ அவர்களே குரு

கிருபையால் வேதாந்தத்திற்கு அர்த்த நிச்சயம் செய்கி ருர்கள்.

ரஜ்ஜு ஸர்ப்பாதிகளைப் போலக் கற்பனைகளே பய காரணமாகின்றன; அத்வைதத்திற்கு எதனுலும் பயமில்லை. அதுவே ஸுகரூபமாம்.

ரஜ்ஜுவில் கற்பிக்கப்பட்ட ஸர்ப்பம் பொய்யாவது போல ஆத்மாவில் கற்பிக்கப்பட்ட சகலமும் மித்யையே. ஸர்வகற்பனைக்கும் அதிஷ்டானமாயும், தான் ஸ்வயமாயும், எப்போதும் ஒன்ருயும், அவ்யபிசாரியாயும் இருப்பதால், ஆத்மாவே கற்பனுவஸ்தையிலும் கல்யாண ஸ்வரூபமாக இருக்கிறது

119. வினு: அவதூதன் யார்?

விடை: நாசமில்லாத பொருளை அடைந்தவனும், ஸந் யாஸிகளுக்குள் சிரேஷ்டனும், ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவனும், தத்வமஸி யென்னும் மகா வாக்கியத்தின் லக்ஷ்யப் பொருளான பிரம்மத்தை ஸாக்ஷாத்கரித்தவனும் எவனே, அவன்ருன் அவதூதன்.

120. வினு: அதிவர்ணுஸ்ரமிகளின் லக்ஷணம் என்ன?

விடை: அதிவர்ணுஸ்ரமிகள், ஜாதி வ்யவஸ்தையை யும், ஆஸ்ரமதர்மத்தையும் அதிக்ரமித்து மேற்சென்றவர்கள். இவர்களை ஸந்யாஸிகளின் கூட்டமாகிய பெரிய விருக்ஷத்தின் கொம்பில் நன்கு பழுத்து உதிர்ந்த கனியென்று ஞானிகள் கூறுவர். சாஸ்திர விதிப்படி கிரம ஸந்யாஸம் மேற்கொண்டு, அதற்குரிய தர்மங்களை நன்ருக ஆசரித்துச் சிரவணமனன நிதித்யாஸனங்களின் பூர்த்தியின் மேல் நிர்விகற்ப ஸமாதி நிலைக்கப்பெற்று ஸாக்ஷாத் அப ரோக்ஷ ஆத்மஞானத்தை யடைந்து அப்பாலும் எஞ்சி

யிருக்கிற மனே வாஸனையையும் அடியோடு தொலைத்து, ஸர்வோத்தமமான ஜீவன் முக்த ஸ்தானத்தை அடைந்திருப்பவரே அதிவர்ணாஸ்ரமி எனப்படுவார். இவர் யாரையும், எதையும், தன் சரீரத்தையும் கூட, பிரம்மமாகவே பார்ப்பர். வாஸ்தவமான அதிவர்ணாஸ்ரமியானவர் தாம் விதிநிஷேதம் கடந்த அதிவர்ணாஸ்ரமி யென்று சொல்லிக் கொள்ளார். வர்ணாஸ்ரம விதிகளை மீறி நடக்கிறதாகப் பாவனையும் அவருக்கிராது. எதுவரையில் ஒருவருக்குத் தம்மிடத்திலும் பிறரிடத்திலும் பேதபுத்தியும், தாம் அதிவர்ணாஸ்ரமி யென்ற எண்ணமும் இருக்கிறதோ அதுவரை அவர் அதிவர்ணாஸ்ரமியல்ல என்பது நிச்சயம் இப்படிப்பட்ட போலி அதிவர்ணாஸ்ரமிகள் இக்கலியுகத்தில் பலர் தோன்றித் தங்களையும் கெடுத்துக்கொண்டு, லோகத்தையும் கெடுத்துவருகிறார்கள்.

ஸ்ரீ ஸதாசிவப்ரம்மேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கு ஒப்பான வாஸ்தவ அதிவர்ணாஸ்ரமிகளைப் பார்ப்பது மிகவும் துர்லபம். போலி அதிவர்ணாஸ்ரமிகளை எல்லா இடத்தும் இக்கலிகாலத்தில் பார்க்கலாம்.

சிலர், ஜீவன்முக்தர்களுக்கு வ்யுத்தான தசை உண்டென்றும், அதனல் அவர்கள் பஹிர்முகப்படும்போது வர்ணாஸ்ரமங்கள் மனத்தில் தோன்றலாமென்றும் கூறுவார்கள். அபரோக்ஷ ஞானம் மாத்திரம் ஏற்பட்டிருப்பவரை ஸாமான்ய ஞானி (அல்லது ப்ரம்மவித்து) என்று சொல்வதுண்டு. இவருக்குத்தான் பஹிர்முகப்படும்போது த்ருஸ்யப்ரதீதி அதிகமாக இருக்கும். இவருக்கு ஸமாதி காலத்தில் மாத்திரம் ஆத்மாநுபவம் இருக்கும்; ஸமாதி நீங்கிய வ்யுத்தானகாலத்தில் ஸமாதி அனுபவத்தின்

ஞாபகம் மாத்திரம் இருக்கும். ஜீவன் முக்தர்களான விசேஷ ஞானிகளுக்கோ இப்படியல்ல. அவர்களுக்கு ஆத்மாநுபவம் தொடர்ந்தேயிருக்கும். அவர்களுக்கும் ஸமாதி காலம் வ்யுத்தான காலமென்று இரண்டு உண்டு. அவர்களுக்கு வ்யுத்தானகாலத்தில் பாஹ்யப்ரதீதியுடன் கூடவே ஆத்மாநுபவமும் இருக்கும். அவர்களுக்குப் பிராரப்த சேஷத்தால் உண்டான பாஹ்யத்தோற்றம் உயிரில்லாத ப்ரதீதிகளென்றே சொல்லவேண்டும். அவைகளுக்கு ஆத்மாநுபவத்தைக் கெடுக்கக்கூடிய ஆற்றல் இல்லை. இந்தப் பிரதீதிகளும், வரன் வரீயான் என்னும் இவர்களுக்கு இருப்பது போல் வரிஷ்டனுக்கு இரா. இவர் ஸமாதி கலைந்து வெளியிலே வரமாட்டார். இவருக்குப் பிராரப்தம் கிடையாதென்றே சொல்லவேண்டும். தூங்குகின்ற குழந்தைக்குப் பாலைப் புகட்டினால் அஃது எப்படி அறியாமலே பாலை உட்கொள்ளுகிறதோ, அப்படியே வரிஷ்டனுடைய பிராரப்தாநுபவம் நிகழ்ந்து வரும். வரன் வரீயான் ஆகிய இருவருக்கும் பிராரப்தாநுபவம் இருந்தபோதிலும் அவருடைய ஆத்மாநுபவத்தால் அமுழ்த்தப்பட்டதாகப் போய்விடுகிறபடியால் பிராரப்தாநுபவ காலத்திலேகூடத் த்ருஶ்ய ப்ரதீதி பூர்ணமாய் இல்லாமல் அவர்கள் ஆனந்தமுடையவர்களாகவே ஸஞ்சரிப்பார்கள். பிரம்மவித்தாகிய ஞானிகளே தம்முடைய அநுபவத்தில் ஜகத்தை ஸ்வப்னமாக எண்ணி அலக்ஷ்யம் செய்யும்போது, உத்தமோத்தம ஞானிகளும் ஜீவன்முக்தர்களுமாகிய அதிவர்ணாஶ்ரமிகளின் புத்தியில் வர்ணாஶ்ரம பேதப்பார்வை கொஞ்சமேனும் இருக்கமாட்டாதென்பது திண்ணம்.

உ

பொங்கியவஞ் ஞானமெனும் திமிரம் போகப்
பூரணமெய்ஞ் ஞானமெனுஞ் சுடரே வீச
எங்களையே சேயாக வுள்ளத் தெண்ணி
இணையில்லா வருள்புரியும் அனையாய் நிற்கும்
பங்கமிலாச் சுயம்பிரகா சப்போர் ஞான
பானுவுக்கே அருள்புரிந்த பரமன் வீறும்
துங்கம்விரா வுறுஸதா சிவப்ரம் மத்தின்
தூமலர்ச்சே வடிசென்னி சூட்டி நிற்பாம்.

உ

சிவமயம்

# ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திர ஸரஸ்வதி

ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திர ஸரஸ்வதி என்ற பெயருடன் விளங்கிய இம்மகான் ஆந்த்ர தேசத் தெலுங்கு பிராம் மண வம்சத்தில் அவதாரம் செய்தவர். ஜனன காலமுதல் சீமான் குமாரரெனச் சீராட்டப்பட்டு மிகச் செல்வமாக வளர்ந்தவர். இவர் கல்வியிலும் கேள்வியிலும் தேர்ச்சி யடைந்ததல்லாமல் சட்ட ஞானத்திலும் நிபுணராய் விளங் கியபடியால், பிராசீன ஹிந்து ராஜ்யமான திருவநந்தபுரத் தில் நியாயாதிபதியானார்.

உத்தம மானிடனொருவனுக்கு அமைய வேண்டிய சகல சற்குணங்களுக்கும் ஓர் ஆலயமாக இவர் விளங்கினார். அந்த நல்லகுணங்களுள் தயாளத்வம் என்னும் உயரிய குணம் இவ ரிடம் தலைசிறந்து நின்றது. கண்டனைக்கும் தண்டனைக்கும் தகுதியான கடினசித்தம் இவரிடமில்லாததாலும் எங்கும் நிறைந்துள்ள சராசரங்களையெல்லாம் கடவுளிருப்பிடமாக எண்ணி ஆனந்தங்கொள்ளும் இயல்பினராயிருந்ததாலும் இவர், குற்றவாளிகளைத் தண்டனை செய்ய நேரும்பொழு தெல்லாம் பெருந் துக்கங்கொண்டு தமது உத்தியோகத்தை வெறுப்பர்.

இவ்வாறு பிரம்மேந்திரர் நீதிபதி உத்தியோகம் வகித்து வருங்காலத்தில் ஒருநாள் ஒரு குற்றவாளிக்கு மரணதண்டனை விதிக்க நேர்ந்தது. தம்முடைய வாழ்நாட்களை நல்ல வழியிலே கழிக்க விருப்பங்கொண்டு எப்பொழுதும் பரப்பிரம்மத்தினிடத்தே நாட்டங் கொண்டிருந்தமையால் பிரம்மேந்திரருக்கு அந்தக் கொடிய்தண்டனை விதிப்பதில் மனத்துணிவு ஏற்படவில்லை. தர்ம நியாயப்படி அப்படிப்பட்ட தண்டனை விதிப்பதில் குற்றமொன்றும் இல்லையாயினும் எப்பொருளிடத்திலும் மெய்ப்பொருள் காண அவாவுற்றுக் கருணாகரமூர்த்தியா யிருந்தமையால், அந்தத் தண்டனையைக் குற்றவாளிக்குத் தம் கையால் விதியாமல் நியாய ஸ்தலத்தினின்று எல்லோரும் வியப்படையும்படி திடீரென்று வெளிப்பட்டுப் பித்தனைப்போல் நடந்தார்; தம் இல்லத்திற்குச் சென்றாரில்லை; சற்குருநாதனைத் தேடியடையத் தம் மனம்போன போக்கில் அலையத் தலைப்பட்டார்.

அவ்வாறு அலைந்து திரிந்த பிரம்மேந்திரர், காளத்தி மலையை அடைந்தார். அங்கே இவருடைய பக்குவ காலத்தை எதிர்பார்த்தவராய்க் கருணையுடன் வீற்றிருந்ததே போல் பாரத்வாஜ தீர்த்தக் கரையில் ஒரு குகையில் நிஷ்டை புரிந்துகொண்டிருந்த ஸ்ரீராம கிருஷ்ணேந்திர ஸரஸ்வதி என்பவரைக் கண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணேந்திரரின் குகையின் முன்புறம் ஒரு சுரைக் குடுக்கை கட்டிவிடப்பட்டிருக்கும். மகானானதால் அவரைத் தரிசிக்கப் பலர் வருவர். தரிசனார்த்தமாக வரும் அன்பர்கள், அந்தச் சுரைக் குடுக்கையில் நீராகாரத்தை ஊற்றிவிட்டுச் செல்வது வழக்கம். அந்த நீராகாரத்தை

அவர் தாம் என்று நிஷ்டை கலைந்து எழுந்திருப்பாரோ அன்று யாரேனும் நினைப்பூட்டினால் அருந்துவாராம்.

பிரம்மேந்திரர் அவரைக் கண்டவளவில், "இவரே நமக்கு உபதேச குரு" எனத் திடங்கொண்டு சரண் புகுந்து, அவர் நிஷ்டைகலைந்து எழுந்து தம்மீது அவருக்குக் கருணை பிறக்கும் வரையிலே காத்திருந்து உபதேசமும் விவிதிஷா ஸந்யாஸமும் பெற்றார்.

அப்பால் காஞ்சிபுரம் சென்று ஸார்வதீர்த்தக் கரையிலுள்ள உபநிஷத் பிரம்மேந்திரர் மடத்திற் சிலகாலம் இருந்தனர். பிறகு அங்கிருந்து புறப்பட்டு ஸஞ்சாரம் செய்கையில் நெரூர் வந்து சேர்ந்தார். அங்கேயுள்ள ஆதி ஸதாசிவ பிரம்மேந்திரருடைய அதிஷ்டானத்திலே அந்த அத்வைதஞானப் பிரம்மத்தை மானஸீக குருவாக வரித்து வித்வத் ஸந்யாஸமாகிய அவதூதாஶ்ரமத்தை மேற்கொண்டனர்.

அப்பால் ஸதாசிவ பிரம்மேந்திரர் அவதூதராகவே நாடு நகரங்களிலும் காடுகளிலும் மலைகளிலும் அலைந்து சஞ்சாரம் புரிந்துவந்தார்; பொதியில் மலையில் சிலகாலம் இருந்தார். அக்காலத்திலே நம் ஸ்வாமிகள் இவரைத் தரிசித்து வழிபட்டனர். பிறகு இருவரும் மதுரைமாநகரையடைந்து அங்கே தங்கினர். அங்கேதான் நம் ஸ்வாமிகள் ஆஶ்ரமம் பெற்றுக்கொண்டனர். ஸ்வாமிகள் தம் குருவைக் கண்டு அவரிடம் சம்பாஷணை செய்ததும் ஆஶ்ரமம் ஏற்றதும் சில நாழிகைக்கணக்கில் ஏற்பட்டபடியால் ஸ்வாமிகளுக்குத் தம் குருநாதருடைய சரித்திரம் அதிகமாய்த் தெரியவராமற் போயிற்று.

நெரூரிலே சமாதி கொண்டுள்ள ஸதாசிவ பிரம்மேந்திரர் வேறு; இவர் வேறு. அவர் காலம் இவருடைய காலத்துக்கு

இரு நூற்றாண்டுகளுக்கு முந்தியது. இவர் புதுக்கோட்டையில் தம்மால் முன்பே குறிப்பிடப்பட்ட இடத்திற்குச் சீடர்கள் பலரும் பிரமுகர்கள் பலரும் புடைசூழ வேதகோஷமும் மேளவாத்யமும் முழங்கச் சென்று, அங்கே தம்மை வலஞ்சூழ்ந்து வணங்கிய அன்பர்களனைவர்க்கும் ஆசிகூறிப் பரமானந்தபரிதராய்ப் பரிபூர்ண பிரஞ்ஞையுடன் பத்மாசனத்தில் அமர்ந்து ஜோதிப்பிழம்பிலே கலந்தனர். ஆகா, இம்மகானின் மகிமையை என்னவென்று கூறுவது!

---

## ॥ अथ मन्त्रगर्भं गणपतिस्तोत्रम् ॥



वा रणास्यो द रन्नोर्थ्य ए कदं त रिशिवात्मजः ।

सु शर्मकृ त्ता रणोर्च्यः क विस्त त्पु रुषप्रियः ॥१॥

दे वः पवि त्रे क्षणोर्घो दं तीचा रु त्रिलोचनः ।

वा ग्मीशोमा या तीतात्मा ता पशो षा ल्यआखुगः २

नं दीवंद्यो य मीशानो य शस्वी य शआस्पदः ।

दं र्शनीयो वि घ्नराजो वि घ्नहा वि घ्नकृद्विराट् ॥३॥

स भ्योहृत्प द्म निलयो द्म रस द्म विहापकः ।

र क्ताङ्गोऽर्को हे ममाली हे रम्बो हे मदंष्ट्रकः ॥ ४ ॥

स्व राट्प्रभा अ जोनन्तो व रेण्यो म तिमान्गुणी ।

ती र्थकीर्तिर् व रकरः क्र त्वीशो हा पितासुरः ॥५॥

कृ पाकरो धू म्रकेतुस् तुं दिलो दे ववल्लभः ।

त पस्वीशस् ता पहरो डा किनी वा रितोऽभयः ॥६॥

वि श्वप्रियो य क्षवन्द्यो य ष्टान य विवर्धनः ।

ना नारूपो धी रआद्यो धी मतां धी रकःसुधीः ॥७॥

य मीश्वरो म हाहस्ती म हात्मा म हउत्तमः ।

क र्ताऽकर्ता हि तकरो हि तज्ञो हि तशासनः ॥८॥

स्तो तास्तव्यस् तन् त्रमूलस् तन् त्रज्ञस् तन् त्रविग्रहः ।

त्र यीवेद्यो नो दनाज्ञो नो दना नो दितद्विजः ॥९॥

मि त्राभोम द् नस्मेरो दं तीम रु दुपासितः ।
दं डोप्रम त्तः शास्तार्यस् ती र्थमि द्रः स्तुतोपहा ॥१॥
स त्यसंधः प्र काशात्मा प्र सन्नः प्र णतार्तिहा ।
मं त्रविद्या चो दितात्मा चो दना चो दिताखिलः ॥
त्र यीधर्मो द शातीतो द क्षोऽभे द उमासुतः ।
कं नःसदे यात् प्रणुतोऽ यात् सपा यात् सदा भयात् ॥

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवासुदेवानन्दसरस्वती-
विरचितं मन्त्रगर्भगणपतिस्तोत्रं संपूर्णम् ॥

## ॥ अथ मन्त्रगर्भं सरस्वतीस्तोत्रम् ॥



वाग्वादिनी पापहरासि मे द चोद्यादिकं मद्धर दिव्यमूर्ते ।
सुशर्मदे वन्द्यपदेस्तुवि त्ता दयाचते होमयिपूर्णकीर्ते ॥१॥
देव्यैनमः कालजितेस्तुमा त्रे यिसर्वभा अस्यखिलार्थदात्वम् ।
वासोऽत्रते नःस्थितयेशिवा या श्रीशस्यपू र्णस्यकलासिसात्वम्॥२॥
नंदप्रदे सत्यसुतेऽभवा य सूक्ष्मांधियं सम्प्रति मे विधेहि ।
दयस्वसा रस्वजलाधिसे वि नृलोकपे रम्मयि संनिधेहि॥३॥
सत्यंसर स्वत्यरिमोक्षस ब्र तारिण्यसि स्वस्यजनस्य भर्म ।
रम्यंहिते तीरमिदंशिवा हे नांगीकरो तीह पतेत्स मोहे ॥४॥

स्वभूतदे वाधिहरेस्मिवा अ चेता अपि प्रज्ञ उपासनात्ते ।
तीव्रव्रतैर् जेतुमशक्यमे व तनूनिश्चलं चेत इदं कृतं ते ॥५॥
विचित्रवाग् भिर्ङ्गुरूनसा धू तीर्थाश्रयां तत्त्वत एव गातुम् ।
रजस्तनु र्वाक्षमतेध्यती ता सुकीर्तिरा यच्छतु मे धियं सा ६
चित्राङ्गिवा जिन्यघनाशिनी य मसौ सुमूर् तिस्तव चांमर्याह ।
तमोषहं नीरमिदं यदा धी तीतिघ्नमे केपिनते त्यजन्ति॥७॥
सद्योगिभा वप्रतिमं सुधा म नांदीमुखं तुष्टिदमेव नाम ।
मंत्रोव्रतं तीर्थमितोऽधिकं हि यन्मे मतं नास्त्यत एव पाहि ॥
त्रयीतपो यज्ञमुखानितां तं ज्ञंपातिना धिप्र इमेऽज्ञमार्ये ।
कस्त्वल्पसं ज्ञंहिदयेतयो नो दयार्हे आर् योज्झित ईशवर्ये॥९॥
समस्तदे वर्षिनुतेप्रसी द धेह्यस्यके विश्वगते करं ते ।
रक्षस्त्वसु छुत्युदिते प्रम त्तः सत्यंनवि श्वांतर एव मत्तः॥१०
स्वज्ञं हिमां धिक्कृतमत्रवि प्र रत्नैर्वरं विप्रतरं विधेहि ।
तीक्ष्णद्युतेर् याधिरुगिष्टवा चो ऽस्वस्थायमे रात्विति ते रिरीहि ॥
स्तोतुं न चै वप्रभुरम्मि वे द तीर्थाधिपे जन्महरे प्रसीद ।
त्रपैवयत् सुष्टुतयेस्त्यपा यात् साजाड्यहा तिप्रियदा विपद्भ्यः ॥

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवासुदेवानन्दसरस्वतीकृत-

मन्त्रगर्भसरस्वतीस्तोत्रं संपूर्णम् ॥

உ

சிவமயம்

# பகவான்

# தத்தாத்ரேய சரித்திரம்*

யாதொரு வஸ்து உள்ளதால் ஸர்வப் பிரபஞ்சங்களும் ஸத்தா மாத்திரமாய் விளங்குகின்றனவோ, எவரிடத்தில் ஸர்வப் பிரபஞ்சங்களும் உற்பத்தி ஸ்திதி லயத்தை அடைகின்றனவோ, எதை ஸ்தோத்ரம் செய்யமுடியாமல் வேதாகமங்கள் மௌனத்தை அடைகின்றனவோ, எதையடையயாகாதி ஸ்ரௌத கர்மங்களையும் விரதங்களையும் அநுஷ்டிக்கிறார்களோ, அப்பேர்ப்பட்ட விமல போதகன ஸச்சிதானந்த வஸ்துவை வணங்குவாம்.

நாம் விடுதலை பெறவேண்டிப் பாடுபடுகிறோமல்லவா? அவ்விடுதலை பாஹ்யமென்றும், ஆந்தரமென்றும் இருவகைத்து; பாஹ்யவிடுதலை மாதுரு பூமியாகியதைக் குறித்தது; ஆந்தரவிடுதலை பிதுருபூமியாகிய கைவல்லிய மோக்ஷ ஸ்வராஜ்ய ஸாம்ராஜ்யத்தைக் குறித்தது. இந்தப் பிதுரு பூமியாகிய ஸ்வராஜ்யத்தைக் குறித்து நமது ஹிந்துமதக் கொள்கைகளையும், அதனை அடையும் மார்க்கங்களையும், அதையடைந்துள்ளோருடைய சரித்திரங்களையும் சுருங்கச் சொல்லுவாம்.

கிறிஸ்துவர்களுக்குப் பைபிளும், மகம்மதியர்களுக்குக் கொரானும் எப்படி ஈஶ்வரவாக்காக விளங்குகின்றனவோ,

---

* இது ஸ்ரீமத் துரியானந்த ஸ்வாமிகளால் அருளிச் செய்யப்பட்ட உபந்யாஸம்.

அப்படியே ஹிந்துக்களாகிய நமக்கு வேதமானது ஸாக்ஷாத் பரமேஶ்வரனது திருவாக்காகவும், அபௌருஷேயமாகவும் விளங்குகிறது. இந்த வேதமே ஹிந்துமதக் கொள்கையாகிய சட்டமாகும். இச்சட்டப்படி மோக்ஷ ஸ்வராஜ்யமடைவதற்கு ஞானமென்பது முக்கியமான ஸாதகமாகும். மோக்ஷத்திற்கு ஞானமென்பது ஸாக்ஷாத் ஸாதனமும், கர்மம், பக்தி, யோகம் என்பவை பரம்பரா ஸாதனமுமாகும். முடிவில் மூன்றும் சேர்ந்து ஞானமூலம் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைக் கொடுக்குமென்பது வேதாகம இதிகாச புராணங்களின் துணிபு.

இந்த ஞானத்தை அடையவேண்டியதே மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருடைய கடமையுமாகும். மேலான பரீக்ஷைகள் தேறி உத்தியோகம் செய்கிறதற்குக் கிரமப்படி பாலசிக்ஷை முதல் படிக்கவேண்டியது அவசியம். அப்படியே ஞானமடைய வேதோசிதமான கர்மங்களைச் செய்து ஈஶ்வரார்ப்பணம் பண்ணினால், அதனினின்றும் பக்தியுண்டாகும். பக்திவழியாக, சித்த ஐகாக்கிரியமான யோகமுண்டாகி அதனினின்றும் உபசாந்தம், விடுதலை, ஸ்வராஜ்யம் என்று சொல்லாநின்ற ஞானமுண்டாகும். லௌகிகக்கல்வி கற்க எப்படி உபாத்தியாயர் அவசியமோ, அப்படியே இந்த வித்தையைப் படிப்பதற்கும் குரு வேண்டும். அவரிடத்திலும் அவர் வாக்கியங்களிடத்திலும் மாறாத நம்பிக்கை வேண்டியது அவசியம்.

இந்த வித்தையைக் கற்பிக்கும் உபாத்தியாயர் யாரெனில் சாக்ஷாத் ஈஶ்வராவதாரமாகிய பிரம்மா, விஷ்ணு, வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாசர், சுகர், கௌடபாதர், கோவிந்தபகவத்பாதர், சங்கரர், ராமானுஜர், மத்வாசாரியர், அப்பர், சுந்த

ரர், சம்பந்தர், மாணிக்கவாசகர், ஆழ்வாராதிகள் முதலியவர்களே. இவர்கள் பிறருக்கு உபதேசிக்கிறபடி தாங்களும் நடத்திக் காட்டக் கூடியவர்கள். இவர்கள் உதவியாலேயே கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்கிற வகுப்புக்களில் வாசித்து அந்தப்படி அநுபவமாகிற பரீக்ஷையில் தேறினால் ஸ்வராஜ்யமானது கிடைக்கும். இவர்களுடைய உருவங்களைத் தெய்வமாகப் பூஜிக்கின்றார்கள். அதற்கு இவர்கள் சொல்லியிருக்கிற வார்த்தைகளும், நடத்தைகளுமே காரணமாகும். இவர்களிற் சிலர் கர்மம் என்ற வகுப்புக்கும், சிலர் பக்தி வகுப்புக்கும், சிலர் யோக வகுப்புக்கும், சிலர் ஞான வகுப்புக்கும், சிலர் இவை நான்கிலும் தேறித் தாம் அநுபவித்த சுகத்திற்கும் உபாத்தியாயர் ஆவார்கள். அப்படிப்பட்ட சுகாநுபவமுடையவர்களுள் ஒருவரும், உத்தமோத்தமரும், பரமபாகவத பக்த சிரோமணியும், ஸ்ரீபகவான் வாசுதேவருடைய சரிதையைத் திருவாய் மலர்ந்தருளியவரும் ஆன சுகப்பிரம்மத்தினது வாக்காகிய ஸ்ரீமத் பாகவதத்தில் 11-ஆவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்ட ஸ்ரீதத்தாத்ரேயாவதூத மூர்த்திகளது சரித்திரமூலம் நாம் ஸ்வராஜ்ய மார்க்கத்தை அறியலாம்.

மஹாஞானியும் ஸப்த ரிஷிகளுள் ஒருவருமான அத்திரி மஹரிஷியானவர் அனஸூயை என்பவளோடு இல்லற ஞானியாய்ப் பிரம்மானந்தத்தை அனுபவித்துக் கொண்டு இல்லறம் நடாத்தி வரும் நாளில் அனஸூயை (அஸூயையில்லாதவள்) என்பவள் தன் பதிவ்ரதா தர்மம் தவறாமல் பர்த்தாவுக்குச் சிசுரூஷைசெய்துகொண்டு, பிரம்மா, விஷ்ணு, ருத்திராகிய திரிமூர்த்திகளுக்கு ஒப்பாகிய புத்திரர்கள் தனக்கு ஜனிக்கவேண்டுமென்ற ஆர்வத்தோடு மானஸிக

மான தவத்தை அநேக காலம் செய்தாள். ஞான மென்ற புத்திரனைக் குறித்து அத்திரி (திருபுடியற்ற பரப்பிரம்மம் என்று பொருள்) ரிஷி தபோநிஷ்டராயிருந்தார். இவ்விரு வரது மனோபீஷ்டங்களும் பூர்த்தியாவதற்கான காலம் நெருங்கியது.

நம் ராஜ்யத்தில் ராஜவிரோதிகளைக் கண்டுபிடிப்ப தற்காக ரஹஸ்யப் போலீஸாரை நியமனம் செய்திருப்பது போல், பகவானுடைய அந்தர்முக ஸ்வராஜ்யத்திற்கு விரோதிகளான அரிஷட்வர்க்க அகங்காராதி சத்துருக்களை ரஹஸ்யமாய்க் கண்டுபிடித்துச் சிக்ஷிப்பதற்காகப் பகவான் அவ்விடத்திலும் ரஹஸ்யப் போலீஸார் ஸ்தானத்தில் அநேகம் தேவர்களை தேவரஹஸ்யப் போலீஸார்களாக நிய மித்துள்ளார். அவர்களுக்கெல்லாம் முதன்மையானவர் நாரதராவர். இவர் தேவரிஷியாவர். எங்கே அஹங்காரம் அதிகமாகிறதோ அவ்விடம் நாரதரை உடனே பார்க்கலாம்.

இப்படிப்பட்ட ஸர்வபூதஹிதோத்தமரான நாரதர் ஒருகால் இரும்பினால் செய்த கடலையை எடுத்துக் கொண்டு ஸரஸ்வதியிடம் போய்த் தனக்கு அதை வறுத்துக் கொடுக் கும்படி கேட்டார். அதற்குஅவள், "என்ன நாரதரே! இரும் புக்கடலையை எப்படி வறுக்கமுடியும்" என்று அலக்ஷியஞ் செய்ய, வைகுண்டத்தில் லக்ஷ்மியிடத்திலும், கைலாசத்தில் பார்வதி தேவியிடத்திலும் கொண்டுபோனார். அவர்களும் நாரதரைப் பரிஹாஸம்செய்யவே, "பூலோகத்தில் பதிவ்ரதை யாகிய அனஸூயை என்பவள் இருக்கிறாள். அவளிடம் கொடுத்தால் இந்த இரும்புக் கடலையை வறுத்துக் கொடுப் பாள் பாருங்கள்!" என்று கூறி அனஸூயையிடம் வந்து தமக்கு யாத்திராகாலத்திற்கு அனுகூலமாயிருக்கும்படி

இரும்புக்கடலையை வறுத்துக்கொடுக்கும்படி அவர்கேட்டார். அவ்வம்மணியும், பக்தி விநயத்துடன் அவருக்கு அர்க்கிய பாத்திய ஆசமனாதிகள் கொடுத்துத் தனது ஆஸ்ரமத்தில் சற்றுநேரம் இளைப்பாறச் சொல்லிப் பாகசாலையிலுள்ள அடுப்பில் இரும்புக் கடலையைப்போட்டுத் தன் பர்த்தாவைத் தியானித்து அவரது பாததீர்த்தத்தைப் புரோக்ஷித்து வறுத்தமாத்திரத்தில் இரும்புக்கடலை நன்றாகப் பொரிந்தது.

பிறகு நாரதரானவர், அதிக வாசனையோடு பொரித்த அக்கடலையைத் தின்றுகொண்டே ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி என்பவர்களிடம் சென்று, அவர்களுக்கும் அதைக் கொடுத்து விட்டு, அனஸூயையின் பாதிவ்ருத்திய மஹிமையை ஸ்தோத்திரஞ் செய்தார். மனத்தில் அவள் கோரிக்கையை நிறைவேற்றத் தீர்மானஞ்செய்து, "நீங்கள் மூவரும் உங்கள் பர்த்தாக்களிடம் ஸரியானபடி சிசுருஷை செய்தால் இது முடியாதா!" என்று அவர்களுக்கு உத்வேகத்தைமூட்டி, "உங்கள் பர்த்தாக்களை அனஸூயையின் பதிவ்ரதாதர்மத்தைப் பரிசோதிக்கும்படிப் பிரார்த்தியுங்கள்" என்று கேட்டுக்கொண்டார்.

அதைக்கேட்ட ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதியாகிய மூவரும், பிரம்மா, விஷ்ணு, பரமேஸ்வரராகிய மூவரையும், பூலோகஞ்சென்று அத்திரிரிஷிபத்னியாகிய அனஸூயையின் பதிவ்ரதாதர்மத்தைச் சோதிக்க நிர்வாண பிக்ஷையிடுமாறு கேட்கும்படி பிரார்த்தித்தார்கள். இதைச் செவியுற்ற மும்மூர்த்திகளும், நாரதரது செயலையும் அத்திரி அனஸூயைகளின் தவத்தையும் ஞானதிருஷ்டியினாலே தெரிந்து அருள் புரியத் திருவுளங்கொண்டு, அவ்வாறே சம்மதித்தனர். பிறகு அனஸூயையிடம் மூவரும் மூன்று அதிதியான ஸன்யாஸி

வேஷத்தோடு சென்று தங்களுக்கு நிர்வாண பிக்ஷை கொடுக்குமாறு யாசித்தனர். அவளும் அதற்குச் சம்மதித்தாள்; ஆனாலும், அதிதிகளுக்கு நாஸ்தியென்று சொல்லாமலும், பதிவ்ருதாதர்மம் கெடாமலும் இருக்க வழிதோன்றாமல் எல்லாவற்றிற்கும் பர்த்தாவின் பாதந்தான் கதியென்று கணவர் பாததீர்த்தத்தை மூவர்மேலும் ப்ரோக்ஷித்தாள். அப்பொழுது அத்தீர்த்த மகிமையினால் எல்லாரும் ஆச்சர்யமடையும்படி மும்மூர்த்திகளும் மூன்று சிசுக்களாக ஆனார்கள். அனஸூயை, தனது ஸ்தன்யத்தில் அமிருதம் பெருகியதைக் கண்டு அவர்களைத் தம்முடைய குழந்தைகளாகப் பாவித்து நிர்வாணமாக ஸ்தன்யபானம் செய்வித்துத் தொட்டிலில் விளாவிட்டு, ஸ்நானத்திற்குச் சென்றிருந்த தன் கணவர் வரவை அதிக ஆவலோடு எதிர்பார்த்திருந்தனள்.

அத்திரி ரிஷி வந்தவுடன் அனஸூயை நடந்த விசேஷங்களை விண்ணப்பித்து, மூன்று குழந்தைகளையும் அவர் பாதத்தில் வைத்து வணங்கினாள். அந்த ரிஷி நடந்த விஷயங்களையெல்லாம் ஞானதிருஷ்டியினால் உணர்ந்து அந்த மூன்று குழந்தைகளையும் வாரியணைக்க, மூன்று குழந்தைகளும் ஒன்றாகி இரண்டு பாதமும் ஒருடலும் ஆறு கைகளும் மூன்று சிரங்களும் உடையதாய் மந்தகாசத்தோடு விளங்கியது. அத்திரி ரிஷியானவர், மும்மூர்த்திகளே தங்களுக்குள்ள மனோரதங்களைப் பூர்த்திசெய்யத் திருவுளங்கொண்டு குழந்தைகளாக விஜயஞ் செய்திருப்பதைத் தெரிவித்து ஆசீர்வாதஞ் செய்தார். குழந்தை வளர்ந்து வந்தது.

நாரதரானவர் அத்திரி ரிஷிக்கும் அனஸூயைக்கும் அஷ்ட லக்ஷ்மிகளையும் அநுக்கிரகம் செய்யக் கருதினார்; பிரம்மலோகம், வைகுண்டம், கைலாசஞ் சென்று ஸரஸ்

வதி, லக்ஷ்மி, பார்வதி யென்பவர்களிடம் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்னும் மூவரும் அத்திரி யாஶ்ரமம் சென்றதும், நிர்வாண பிக்ஷை கேட்டதும், அனஸூயையின் பாதிவ்ருத்தியத்தால் குழந்தைகளாக வளருவதும் தெரிவித்து, "நீங்கள் மூவரும் அத்திரியிடம் போய்ப் பர்த்துரு பிக்ஷை கேட்டாலொழிய உங்கள் பர்த்தாக்கள் உங்கள் லோகம் வருவதரிது" என்று தெரிவித்தார். உடனே மூவரும் ஸாதாரண ஸ்திரீ உருக்கொண்டு அத்திரியிடம் பதி பிக்ஷை கேட்க, அத்திரி மஹரிஷி, "இவர்கள் ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி" என்று அனஸூயைக்குத் தெரிவித்து அவர்களுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து, "தங்கள் திருவிளையாடல்களுக்குக் கைம்மாறு செய்யத்தக்கது ஒன்றுமில்லை; ஆயினும் எங்களது மனோபீஷ்டம் பூர்த்தியாகுமாறு அனுக்ரஹஞ்செய்யவேணும்" என்று பிரார்த்தித்தனர். குழந்தை அச்சொரூபமேயிருக்க மும்மூர்த்திகளும் தம் நிஜ ஸ்வரூபத்தோடு காட்சி தந்து, அத்திரியை நோக்கி, "உனது மனோபீஷ்டப்ரகாரம் இச் சிசு ஞானவானுகவும் அனஸூயை இஷ்டப்படி எங்கள் மூவருக்கும் சமமானவனுகவும் இருப்பான்" என்று அருளி, தத்தாத்ரேயரென்ற நாமகரணமும் செய்து மறைந்தருளினர்.

அதுமுதல் அக்குழந்தை தத்தாத்ரேயர் என்ற நாமம் பெற்று வளர்ந்து மும்மூர்த்திகளுடைய கலைகளையுடையவரானதாலும், அயோனிஜரானதாலும், மஹாஞானியானதாலும், ஸர்வதேவதைகளாலும் ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்டவராய் ஸன்யாஸத்தில் உத்தமோத்தமமாகிய அவதூதாஶ்ரமத்தோடு, ஸர்வம் பிரம்மமயமென்கிற ஞான திருஷ்டியோடு லோகோபகாரமாய் யாத்திரை செய்து வருவாராயினர். அப்

போது ஒரு சமயம் யதுமஹாராஜனென்பவன் அவரைத் தரி சித்து, "என்ன காரணங்களால் ஸதாசந்துஷ்டி யடையலாம்" என்று கேட்க, "நான் இருபத்துநான்குகுருமார்களை யடைந் தேன். ஆதலால் பிரம்மானந்த சுகத்தை அநுபவிக்கிறேன்" என்று தமது ஆத்மாநுபவத்தை அருளிச்செய்தார்.

ஸ்ரீ தத்தாத்ரேயர் சுப்பிரமணியருக்குத் திடஞானம் உண்டாகும்பொருட்டு அவதூத கீதையை உபதேசம் செய் தார். அது பல அருமையான அனுபவ உண்மைகளேயும் வேதாந்தக் கருத்துக்களேயும் உடைய சிறந்த சாஸ்திர மாகும். சிரஞ்சீவியாக ஹிமாலய பர்வதத்தில் தத்தாத்ரேய குஹையில் இன்றும் வசித்து வருவதாகப் புராணதிகளால் தெரியவருகிறது.

---

உ

வேத நூற்சிரத் தேயொளிர் நன்மணி
விரும்பு வாரித யம்மெனு மந்நவ
நீத் சோர னிரம்பு கருணையான்
நீண்ம லேகுடை யாக வெடுத்தவன்
கீதை யாமுப தேசமப் பார்த்தற்குக்
கிளத்தி ஞானத் தனிப்பொரு ளீந்தவன்
பாத தாமரை யெம்மல வாஸனைப்
பங்க மாரு மனத்தடம் பூக்குமே.

# ஸ்ரீ பகவத்கீதா ஸாரம்*

## ஸநாதன மதம்

அகண்ட பரிபூர்ண ஸச்சிதானந்த ஸ்வரூபியான ஈச்வரனால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவாத்மாக்கள், மாயை நீங்கப் பெற்று மோக்ஷமடைய ஸாதனமாக உள்ளது மதம் எனப் படும். உலகத்தில் தற்போது பல மதங்கள் இருப்பதை நாம் காண்கிறோம். ஆனால் அவ்வெல்லா மதங்களுக்கும் முன்பு தோன்றினதாய், எல்லா மததர்மங்களையும் ஸாமான்யதர்மங்களாகத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு, பல விசேஷ தர்மங்களையும் போதிப்பதாய், ஈச்வரனாலேயே நிறுவப்பட்டதாய் உள்ளது நம் ஸநாதன மதமேயாம். இதற்கு வைதிக மத மென்றும் பெயருண்டு. ஸநாதனமாகிய—பழைமையாகிய—ஈச்வரனால் உண்டாக்கப் பட்டதால் ஸநாதனமதம் என்றும், அந்த ஈச்வரனது கட்டளை வாக்யமாகிய வேதத்தைத் தழுவியிருப்பதால் வைதிக மதமென்றும் பெயர் பெற்ற இது, வேதம், வேதாங்கங்கள், ஸ்மிருதி, இதிகாஸ புராணாதிகளால் செவ்வையாகச் சீர்படுத்தப்பட்டு விளங்குகின்றது.

## வேத முதலிய சாஸ்திரங்கள்

இப்படிப்பட்ட ஸநாதன மதத்தைப் பின்பற்றியிருப்பவர்களுக்குத் தாங்கள் செய்யும் கர்மாக்களில் யாதே

* ஸ்ரீமத் துரியானந்த ஸ்வாமிகள் செய்தருளிய உபந்யாஸம்.

னும் ஸந்தேகம் தோன்றினால், அவைகளை நீக்கிக் கொள்ளப் பல ஸாதனங்கள் சாஸ்திரங்களில் குறிப்பிடப் பட்டிருக் கின்றன.

கிருதயுகத்தில் ஜனங்கள், இயற்கையில் ஞானிகளா யிருந்தமையால் சின்முத்திரையினால் மௌனமாகவே தெரி வித்த ஞானத்தை உணர்ந்தனர். வெளிப்படையாகப் போதிக்கவேண்டிய அவசியம் இல்லாமலிருந்தது. திரேதா யுகத்தில் ஞானம் வரவரக் குறைய ஆரம்பித்ததால், திரி மூர்த்திகளின் சின்னமாய்த் தத்தாத்ரேய பகவான் தோன்றி, சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்யலானார்.

துவாபாரயுகத்தில் ஜனங்களுக்கு ச்ரத்தை குறைந் தது; பல சங்கைகள் ஏற்பட்டு விட்டன. அதனால் புராணம் முதலிய புனிதநூல்கள் இயற்றப்பட வேண்டியதாயிற்று. வேதங்களும் வகுக்கப்பட்டு, ஒரு வேதத்தையோ, ஒரு சாகையையோ சாங்கோபாங்கமாகக் கற்றுணர்ந்து அத னிற்கண்ட நெறியில் ஒழுகக்கூடிய எளிய வழிகளும் காட் டப்பட்டன. இவற்றையெல்லாம் ஸ்ரீ வேதவியாஸர் செய் தருளினார்.

இக் கலியுகத்திலோ, ஜனங்களுக்குள் ஒருவருக்கொரு வர் பொறாமை, குருபக்தியின்மை, சச்சரவு ஆகியவை மலிந்து விட்டன. ஆகவே, ஸ்ரீ சங்கரர் முதலிய பல ஆசார்யர்கள் தோன்றி, பற்பல துறைகளில் முயன்று தம்மை அடைந்த சிஷ்யர்களின் தாரதம் அறிந்து, தேற்றிச் சந்தேக நிவிர்த்தி செய்யவேண்டியதாயிற்று; சுருதி ஸ்மிருதிகளுக்கு விசேஷ மான விரிவுரைகளும் இயற்றவேண்டி நேரிட்டது.

இவ்வாறு நான்கு யுகங்களிலும் ஜீவாத்மாக்கள் நற்கதி யைப் பெற்று உய்யும்பொருட்டுப் போதித்த விஷயமாகிய

ஞானம் ஒன்றுகவே யிருந்தாலும் உபதேச முறைகளில் அதிக பேதம் ஏற்பட்டது.

## ஸம்ஸ்கிருதத்தின் சிறப்பு

இத்தகைய ஸநாதன மத போதங்களாகிய சாஸ்திரங்கள் முழுவதும் தேவபாஷையாகிய ஸம்ஸ்கிருதத்திலேயே இயற்றப்பட்டுள்ளன. சாஸ்திரக் கருத்துக்களை உள்ளபடி அறிந்து அனுஸரிக்கவேண்டுமானுல் ஸம்ஸ்கிருதத்தில் நல்ல ஞானம் வேண்டியது அவசியம். மற்றெந்தப் பாஷைக்கும் இல்லாத ஒரு தனிப்பெருமை இதற்கு உண்டு. நாம் எடுத்துக் கொண்ட விஷயமான கீதாஸாரத்தைப்பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள ஸாதகமாயிருக்குமாதலால், இந்த ஸம்ஸ்கிருதபாஷையின் போக்கைப் பற்றிச் சில விஷயங்கள் கூறுவோம்.

பாஷைகளுக்குப் பொதுவாக, அக்ஷரம், சப்தம், அர்த்தம் என்ற மூன்று லக்ஷணங்கள் உண்டு. ஸம்ஸ்கிருத பாஷையில் எந்தச் சொல்லை எடுத்தாலும் அக்ஷரம், சப்தம், அர்த்தமாகிய மூன்றும் ஒற்றுமைப்பட்டு இருப்பதைக் காணலாம்; மற்றப்பாஷைகளில் அவ்வாறு இரா. ஸம்ஸ்கிருதத்தில் ஒரு சொல்லை எடுத்தால், அதன் தாதுவிலிருந்தே பொருள் தெரிந்துவிடும். தமிழில் அக்ஷரமும் சப்தமும் ஒத்திருக்கும்; தாதுவிலிருந்து அர்த்தம் வராது. ஆங்கில பாஷையில் அக்ஷரமும் சப்தமுமே ஒத்துவராமல் இருப்பதுண்டு.

உதாரணமாக, 'பிறப்பு' என்ற தமிழ்ச்சொல்லில் அக்ஷரமும் சப்தமும் இருக்கின்றனவே தவிர 'உலகில் தோன்றல்' என்ற கருத்து வராது. ஒரு வஸ்துவுக்கு ஏதோ ஒரு பெயர் வைத்து வழங்க வேண்டுமென்று, மரம், செடி என்று கூறி

அவைகளை இயற்சொற்களாக வழங்குகிறோம். ஆங்கிலத்தில் 'U' என்ற ஒரெழுத்தே 'உ, அ, யு' என்ற பல சப்தங்களைக் குறிக்கும்; சில சொற்களில் உச்சரிக்கப் படாமலே விடப் பட்ட பல அக்ஷரங்களும் இருக்கும். (உ - ம். Know.)

ஸம்ஸ்கிருத பாஷையில், 'பிறப்பு' என்பதைக் குறிக்கும் 'ஜன்மம்', 'உற்பத்தி', 'ஸ்ருஷ்டி' என்ற சொற்களை ஆராய்வோம்: 'ஜன்மம்' என்ற சொல்லின் தாதுவிலிருந்து, 'பின்னுலிருந்து முன் வந்து தோன்றுதல்' என்ற பொருள் தெரியவரும். 'கீழேயிருந்து மேல் வந்து தோன்றுதல்' என்ற பொருளை 'உற்பத்தி' என்ற வார்த்தையின் தாது தெரிவிக்கும். 'உள்ளே மறைந்து இருந்தது வெளியில் வந்து தோன்றுதல்' என்ற அர்த்தம் 'ஸ்ருஷ்டி' என்ற சொல்லின் தாதுவினுல் உணரக்கூடும். இவ்வாறு வடமொழியில் ஒவ்வொரு சொல்லும் தன்னுற் குறிக்கப்படும் ஒவ்வொரு பொருளின் குணம் முதலிய லக்ஷணங்களையும் அறிவிக்கவல்லது. சாஸ்திரங்களின் அந்தரங்கமான கருத்துக்களைத் தெரிந்து கொள்வதற்கு அவற்றிலுள்ள சொற்களின் தாதுக்கள் காட்டும் பொருளை அறிவது மிகவும் உபகாரமாயிருக்கும்.

## சில பெயர்களின் அர்த்தம்

கீழே, பாரதத்தில் வழங்கப்படும் சில பெயர்களின் அர்த்த லக்ஷணங்களைப்பார்ப்போம்; இவற்றுல் பல தத்துவங்கள் விளங்கும்; கீதையின் கூடார்த்தத்தை அறிவதற்கு இப்பதங்கள் எவ்வளவு உதவியாக இருக்கின்றன என்பதும் தெயவரும்.

1. **திருதராஷ்டிரன்:**—ஆசை யென்னும் பற்றையே காடுபவன்.

'நான்' என்னும் அகங்காரம், 'எனது' என்னும் மமகாரம், பொறுமை, லோபகுணம் இத்தனையும் சேர்ந்தால் ஒரு மனிதன் நிச்சயமாகக் குருடனே யாகிறான். ஆசையால் லோபித்தனத்தை அடைந்தவன் கஷ்டங்களை அநுபவிப்பான். அவன் அக்கஷ்டத்திலிருந்து எப்படி மீளலாமென்று விசாரணை செய்யவேண்டிவரும். பகவத்கீதையின் ஆரம்பத்திலேயே, காமாதிகளால் கட்டுப்பட்டவன் விசாரணை செய்வதற்கு ஓர் அறிகுறியாக இத்திருதராஷ்டிரனது வார்த்தை உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

2. ஸஞ்சயன்:—ராகத்வேஷாதிகளை நன்றாக ஜயித்தவன்.

இவன் ஸநகாதி முனிவர்களைப்போன்ற மாசற்ற மனமுடையவன். திருதராஷ்டிரன் இவனைப்போர்முனையில் நடக்கும் விஷயங்களைப்பற்றிச் சொல்லும்படி வேண்டுகிறான். அரண்மனையில் திருதராஷ்டிரன் பக்கத்தில் இருந்துகொண்டே குருக்ஷேத்திரத்தில் நடப்பவைகளை யெல்லாம் கண்டும் கேட்டும் உணரவல்லவனாகையால் இவனைத் திருதராஷ்டிரன் கேட்கிறான். இவனும் உள்ளவற்றை உள்ளபடி தெரிவித்தான்.

3. மதுரா:—(தயிரில் வியாபித்திருக்கும் வெண்ணெயைக் கடைந்தெடுக்கும் கருவியைப்போல) ஸர்வவியாபியான கிருஷ்ண பரமாத்மாவைத் தன்மூலமாக வெளிப்படுத்தும் நகரமாம்.

4. வஸுதேவர்:—'தனித்த சிறிய உருவத்தில் புதைந்துள்ள தேவன்' என்பது பொருள்.

5. தேவகி:—சுருக்கமான ரூபமடைந்த தெய்வீக சக்தி.

ஆகவே குறுகிய வடிவத்திற் புதைந்த (வஸு) தேவனுக்கும், சுருக்கமான உருவமடைந்த (தேவகி) தெய்வீக சக்திக்கும் பிறந்தார் முழுத் தெய்வத்தன்மையுடைய கிருஷ்ண பரமாத்மாவென்பது இப்பெயர்களின் அமைதியினாலேயே போதரும்.

6. கம்ஸன்:—ஆனந்தத்தைச் சிதைப்பவன். (கம்-ஆனந்தம். ஸ: - ஸ்யதி - கொல்லுதல்). ஆனந்தத்தைக் கொல்லக் கூடியது அஹங்காரமேயாம். இவ்வஹங்காரமே மமதையாகவும் வளரும். இந்த அஹங்காரம் உள்ளவரையில் தனித்திருக்கும் ஜீவாத்மா, அஃது அழிந்தவுடன் பரமாத்மாவோடு ஒன்றாகிவிடும். இப்படிப்பட்ட அஹங்காரமும், பகவானும் சேர்ந்திரார். ஸ்ரீ கிருஷ்ணபகவான் பிறந்ததும் கம்ஸன் என்ற அகங்காரம் அவரைப் பார்க்கவில்லை. பகவானின் மாயையைத்தான் பெண் சிசுவாகப் பார்க்கிறான். மாயையை அகங்காரம் கொல்லமுடியாது; அதனால்தான் அச்சிசுவைக் கம்ஸனால் கொல்ல முடியவில்லை. அம்மாயையும் அவனை ஏளனம் செய்துவிட்டுப் போய்விடுகிறாள்.

7. கோகுலம், நந்தன்:—நந்தன் என்பதனால் குறிக்கப்படுவது ஆனந்தம். கோ - இந்திரியங்கள்; குலம் - கூட்டம்.

குழந்தையாக வந்த பகவானும் ஆனந்தத்துடன் இந்திரிய உணர்ச்சிபெற்று வளர்வதைக் குறிக்கிறது.

8. பிருந்தாவனம்:—வளர்ச்சி செய்வதான ஒரு கருவி; விஷய வளர்ச்சி பூர்ணமாகக்கூடிய இடம்.

9. கம்ஸ வதம்:—கம்ஸனை முதன் முதலில் பார்த்த போதே பகவான் துவம்ஸம் செய்கிறார். அதாவது பகவான் அகங்காரத்தை அழிக்கிறார். பிறகு சாந்தீபனி முனிவரிடம் சென்று குருகுலவாசம் செய்கிறார். எதற்காக?

மானிட ஜன்மம் எடுத்ததால் பகவானும் மனிதர் தம் வழியைப் பின்பற்றிச் செல்வதற்காக அந்தத் தர்மத்தை நடத்திக் காட்டுகிறார்.

10. துவாரகாபுரி:—தேகம்; நவத்வாரங்களையுடைய நம் சரீரமே துவாரகையாம். இந்திரியங்களை அடக்கியும் அகங்காரத்தைக் கொன்றும் வெற்றியுடன் விளங்கும் ஆத்மா இந்தத் தேகத்திலே அரசு வீற்றிருப்பதைக் காட்டப் பகவானும் துவாரகையில் அரசாட்சி செய்கிறார். முடிவில் ப்ரபாஸா க்ஷேத்திரத்தில் தமது தேகத்தை விட்டு ஜகந்நாதம் செல்கிறார்.

11. ப்ரபாஸா:—உயர்ந்த தேஜோமயம். சிறந்த ஞானமடைந்தவருடைய முடிவே அந்தத் தேஜோமயமாம். அப்படிப்பட்ட ஞானநிலையில் உடலை விட்டால்தான் மறுபிறப்பற்றுப் பகவத் ஸ்வரூபமடைந்து ஜகந்நாதன் ஆகக்கூடும். ஆகவே கண்டிதவடிவான மானிட உருக்கொண்டு வந்த பகவான், மானிடர் கைக்கொள்ள வேண்டிய தருமங்களையெல்லாம் தாமே நடத்திக் காட்டினமை விளங்கும்.

## கண்ணபிரான் லீலைகளின் கூடார்த்தம்

**நவநீதசோரர்:** நவநீதமென்றது வெண்ணெய். தயிரிலிருந்து அன்று எடுத்ததும் உருகும் இயல்பையுடையதுமாகிய அது சித்தமாகும். அதனைத் திருடின கண்ணபிரான் உருகுகின்ற சித்தத்தைக் கைக் கொண்டாரென்பதைப் புலப்படுத்தினார்; "என் உள்ளங்கவர் கள்வன்" என்று ஈஸ்வரனைத் திருஞான ஸம்பந்தமூர்த்தி நாயனார் குறிப்பிடுகிறார். அதே கருத்துத்தான் ஸ்ரீ கிருஷ்ணருடைய நவநீதசோர லீலையின் உட்பொருளாக அமைந்திருக்கின்றது.



நவநீத கிருஷ்ணன்

Courtesy: T. V. Chetty & Sons, Tirupati.

வேறொரு வகையாகவும் இதைக் கூறலாம்: புது வஸ்துவை அபகரித்தவரென்று பொருள் கொள்ளலாம்.

சேதனமான சுத்த ஸச்சிதானந்த வஸ்துவைச் சுற்றி மறைத்து மங்கச் செய்யும் ராகத்வேஷாதி விஷய அகங்கார பாபங்களை உண்டாக்கும் அஞ்ஞானத்தைப் புதுவஸ்து என்பர். அப் புதுவஸ்துவை அபகரித்து, பழையதும் மாசற்றதுமாகிய ஸச்சிதானந்த ஆத்மாவை அடையும்படியான ஞானத்தைத் தருவதால், பகவான் நவநீத சோரரே.

பகவான் மண்ணைத் தின்றார் என்பர். ஸம்ஸ்கிருதத்தில் மண், 'ம்ருத்' எனப்படும். பகவானுக்கு, 'ம்ருத்பக்ஷக:' என்றொரு பெருமுண்டு. 'ம்ருத்' என்றால் சாவடையக் கூடிய வஸ்து என்று பொருள். எனவே 'ம்ருத் பக்ஷக:' என்றால், நிலையுள்ளதான ஆத்மாவைத் தவிர, மரிக்கக்கூடிய அசேதனமான அஞ்ஞான வஸ்துவை யெல்லாம் பக்ஷிப்பவர் என்றாகிறது.

கோபிகைகள் நீராடும்போது, குளக்கரையில் வைத்த வஸ்திரங்களை அபகரித்தார் கண்ணபிரான். (ஜலம்-பிறந்து அழியக் கூடிய பொருள்; அதாவது சாசுவதமற்ற இச்சை. கோபி-இந்திரியங்களின் மூலம் சுகத்திற்போக ஸுகத்தில் ஈடுபட்டவர். வஸ்திரம் - வஸ்துக்களை மூடும் பொருள்.) எனவே கர்மேந்திரியங்களால் ஏற்படும் இச்சையால் அற்ப சுகத்தில் ஈடுபட்டவரை மூடிக்கொண்டிருக்கும் அஞ்ஞானத்தைப் போக்கடித்துத் தெய்வத்தன்மையை அளித்தார் கண்ணபிரான் என்பது தெளிவாகிறது.

கணக்கற்ற கோபிமார்களிடையே, ஒவ்வொரு கோபியுடனும் தனித்தனி ஒவ்வோர் உருவத்துடன் விளையாடுகிறார்

கிருஷ்ணபரமாத்மா. அப்போது ஒவ்வொரு கோபியும், தனக்குத்தான் கிருஷ்ணர் உவந்தவர் என்று அகங்கரிக்கிறாள். உடனே கிருஷ்ணரை யாரும் காணமுடியாமல் வருந்தித் தவிக்கின்றனர். பின்பு யாவரும் ஒன்றுகூடிக் கண்ணபிரானைத் துதித்து வந்திக்கின்றனர். உடனே பகவான் அவர்கள் முன்னால் தோன்றுகிறார். ஆகவே மமதையும் அகங்காரமும் உண்டானால் பகவானுக்கும் நமக்கும் இடையீடு வெகு தூரமாகிவிடும். அவை ஒழிந்தால், மனம் வாக்குக் காயங்களால் பகவானை ஆஶ்ரயிக்க இயலும்; அப்போது அவர் வந்து அருள் புரிவார்; இவை இவ் வரலாற்றால் விளங்குகின்றனவன்றோ? இவ்வாறு எல்லா வடசொற்களும் அவை குறிக்கும் நிகழ்ச்சிகள் யாவும் சிறந்த கருத்துக்களை உடையனவாயிருப்பதைக் காணலாம்.

## பகவத்கீதை யென்னும் பெயர்ப்பொருள்

ஐந்தாவது வேதமென்று சிறப்பிக்கப் பட்டுள்ள மஹாபாரதத்தில், பீஷ்மபர்வத்தின் தொடக்கத்தில் பிரகாசிக்கும் ஒரு ஜீவரத்னமாகும் பகவத்கீதை.

'பகம்' என்ற சொல் ஞானம், ஐஶ்வர்யம், திரு, வீர்யம், வைராக்யம், புகழ் என்ற இவ்வாறினையும் குறிக்கும். இவற்றை யுடையவன் பகவான். ஆனந்தம் நிறைந்த உள்ளத்திலிருந்து எழுவதே கீதமாம். ஆனந்தஸ்வரூபியான அப் பகவானால் கூறப்பட்டதால் இதற்குப் பகவத்கீதை யென்ற பெயர் வந்தது. சாதாரண கீதங்களே ஒருவனுக்கு மனோவியாகுலத்தைப் போக்கி ஆனந்த மூட்டவல்லன. அப்படியிருக்கப் பகவானால் அருளப்பட்ட இக் கீதமானது இறுதியற்ற ஆனந்தத்தை யளித்துப் பரமசுகத்தைத் தரத் தடையேது?

## கீதாம்ருதம்

பகவத்கீதையானது உபநிஷத்துக்களின் ஸாரமாயுள்ளது. உபநிஷத்துக்களை யெல்லாம் பசுவாகவும், ஸ்ரீ கிருஷ்ணனைப் பால்கறப்போனாகவும், அர்ஜுனனைக் கன்றாகவும், இந்தக் கீதையைச் சகலபுத்திமான்களும் பருகிப் பேரின்பம் அடையத்தக்க பாலமிர்தமாகவும் கூறப்பட்டிருக்கிறது. முதலில் பால் சுரப்பதற்கு உபயோகப்படும் கன்றானது பாலைத் தானும் உட்கொண்டு பிறரையும் உட்கொள்ளும்படிச் செய்வதுபோல அந்த அளவுக்கே அர்ஜுனன் இந்தக் கீதையில் சம்பந்தப்படுத்தப்பட்டிருக்கிறான்.

தேவர்கள் கண்ணால் பார்த்ததாகச் சொல்லப்படும் தேவாமிர்தமும், இக்கீதையாகிய ஞானமிர்தத்துக்குச் சமானமாக முடியாது. ஏனெனில் தேவனாகிய ஒருவன், தன் புண்யமெல்லாம் க்ஷீணமடைந்தபின் நரனாக ஜனிக்க வேண்டியவன்தான். ஆகவே அவன் தேவாமிர்தத்தைக் கண்ணால் கண்டதால் பெரும் பயனொன்றையும் அடைந்துவிடவில்லை. ஆனால் இந்த ஞானமிர்தத்தைப் பருகினவனோ, மறுபிறப்பற்ற நிரதிசயானந்த முக்திநிலையை அடைகிறான்.

(1) சாசுவதமாயும் ஸத்தியமாயுமுள்ள வஸ்துவான ஸத்து, (2) பேரறிவுத்தன்மையான சித்து, (3) பரிபூரணானந்தம், (4) பந்தங்களினின்றும் நீங்கிய நிலையான ஸ்வதந்திரம், (5) அதிகாரத்வம் அல்லது ஈஸ்வரத்வம் (எல்லாவற்றையும் ஆளும் தன்மை) ஆகிய இந்தப் பஞ்ச இச்சைப் பொருள்களைப் பெற ஸாதனமாயுள்ளது இக்கீதையேயாம்.

நரர்களாகிய நாமெல்லாரும் நாராயணர் ஆகவேண்டும். எப்படி நாராயணர் ஆவது? யாரைக் கேட்டால் வழி

தெரியும்? அந்த நாராயணரையே கேட்டால்தான் தெரியும். அந்நாராயணரே இந்தக் கீதாரூபமாக, அந்த வழியைக் கூறியிருக்கிறார்.

## கீதை யென்னும் ஔஷதசாலை

இந்த லோகத்தில் சரீர சம்பந்தமான ஸாதாரண வியாதிகளை நிவர்த்திக்கப் பல வைத்தியர்களுண்டு. ஆனால் ஜனன மரணரூபமான கோர வியாதிக்குச் சிகித்சை செய்யக்கூடியவரைக் காண்பதரிது. அநாதிகாலம் தொட்டு ஜீவர்கள் இக் கொடியவியாதியால் பீடிக்கப்பட்டிருப்பது பிரசித்தம். இதைச் சொஸ்தப்படுத்த ஸாமான்ய மானிடரால் இயலாது. இதனை அறிந்தே பகவான் கருணையால் பரத கண்டத்தில் யது வம்சத்தில் வசுதேவருக்கும் தேவகிக்கும் புத்ரராக, சகல ஜீவர்களையும் ஸம்ஸார ஸாகரத்தினின்று கரையேற்றி நிரதிசயானந்தத்தை அடையும்படி செய்ய, ஸ்ரீகிருஷ்ணரென்னும் பெயருடன் அவதரித்தார். அவ்வாறு அவதரித்தவர், வேதமாகிய அரண்யத்திலிருந்து மஹாவாக்ய மென்கிற ஒரு மூலிகையைத் தேடிக் கண்டுபிடித்து, அதைச் சாறுபிழிந்து அகண்டாகாரவிருத்தி என்னும் ஒரு ரஸாயனத்தை மேற்சொன்ன ஜனனமரண ரூபமான கோரவியாதிக்கு ஔஷதமாகச் செய்தார். இவ்வாறு அப்பகவான் ஏற்படுத்தின ஔஷதசாலையே இக்கீதையாம்.

வியாதியால் துக்கமடைந்த ஒருவன் ஔஷதசாலையை நாடிச் செல்வது ஸகஜம். அங்கே சிகித்சை பெற்றபின் சுகமடைந்து திரும்புவதும் நிச்சயம்.

இந்தக்கீதையின் முதல் அத்யாயத்திலிருந்தே மானிடர்களது நிலைமை எப்படிப்பட்டது என்பது தெரியவரும். இம் முதல் அத்தியாயத்தின் பேர் "அர்ஜுன விஷாதயோகம்"

என்பது. அர்ஜுனன் சகல மானிடர்களின் பிரதிநிதியாக நிற்கிறான். விஷாதம் என்றால் துக்கம். அதாவது ஜீவர்கள் துக்கத்தையே அடைந்திருப்பதும், (அர்ஜுனன் பகவானை அடைந்தது போல) யாவரும் பகவானை ஆஸ்ரயித்துத் துக்க நிவர்த்தியடைய வேண்டும் என்பதும் தெளிவாகின்றன.

நோயுற்றவன் வைத்யனிடம் பூர்ணநம்பிக்கை வைத்து அவன் தரும் ஔஷதத்தை உட்கொண்டால்தான் ரோக நிவர்த்தியும் சுகப்ராப்தியும் உண்டாகும்; மேலும் தனக்குள்ள ரோகத்தை அநுபவஸித்தமாக வைத்யரிடம் கூறி விடவேண்டும். இவ்வாறே அர்ஜுனன் பகவானிடம் தன் துக்கத்தையெல்லாம் வெளிப்படுத்தினன். அவர் கருணையோடு தந்த அகண்டாகார விருத்தியென்னும் மருந்தை நம்பிக்கையோடு உட்கொண்டான்; அதனால் சுகமடைந்தான். அதேபோல எல்லா ஜீவகோடிகளும் இந்தக் கீதா ரஹஸ்யத்தை மனத்தில் உட்கொண்டு அதன் வழியே நடந்தால், இகபர ஸுகங்களை எளிதில் அடையலாம்; முக்திபெறலாம்.

எந்த வியாதிக்கும், அதன் மூலகாரணத்தை அறிந்து அடியோடு நாசமுறும்படி சிகித்ஸை செய்தால்தான், அவ்வியாதி நிச்சயமாய் அகலும். ஸம்ஸாரமென்கிற கோர வியாதிக்கு மூலகாரணம் சோகமும் மோஹமுந்தான். ஒரு வஸ்துவினிடத்தில் அதிக அபிமானம் வைத்து, அந்த வஸ்து தன்னை விட்டுப் பிரியும்போது வரும் துக்கமே சோகமாம். இந்தச் சோகம் மேலிடவே, தான் செய்யத்தக்கது இது, தகாதது இது என்ற பகுத்தறிவு இழந்து மனம் போனபடி செய்யப் புகுவதே மோஹமாம்.

இத்தகைய நிலை, யுத்தகாலத்தில்தான் அர்ஜுனனுக்கு ஏற்பட்டது. இவனுக்குப் பீஷ்மாதிகளிடம் அபிமானம்

மிகுதியாக இருந்ததால், 'யுத்தத்தில் அவர்களைக் கொல்ல மாட்டேன், அவர்களது வியோகத்தைப் பொறுக்கமாட்டேன்' என்று துக்கப்பட்டான். இதுதான் சோகம். இதனால் அர்ஜுனன் தனக்குள்ள விவேகமிழந்து, தான் அரசனாக இருந்தும், 'பிச்சை எடுத்து உண்டு, ஸந்யாஸியாகிறேன்' என்றான்; யுத்தம் செய்தலாகிய தன் ஸ்வதர்மத்தை, க்ஷத்ரிய தர்மத்தை, விட்டுப் பிராம்மண தர்மத்தை அநுஸரிக்க யத்தனிக்கிறான். இதுதான் மோஹம். இவைகளை ஒழிக்கவே பகவான் தத்வோபதேசம் செய்தார்.

## மஹா ஸ்மிருதி

இந்தக் கீதையை மஹா ஸ்மிருதி என்று யாவரும் கூறுவர். ஸ்மிருதிகள் எப்போதும் ஸ்வயமாகப் பிரமாணமாகா; "சுருதேரி வார்த்தம் ஸ்மிருதிரன்வ கச்சது" என்ற வசனப்படி, மூலசுருதியைச் சார்ந்தே பிரமாணமாகும். ஆகையால், எந்த மூலசுருதியிலிருந்து இந்த ஸ்மிருதி வந்தது என விசாரிக்கவேண்டும். விபூதி அத்யாயத்தில் பகவான் 'வேதாநாம் ஸாமவேதோஸ்மி' என்று கூறியிருப்பதால் ஸாமவேதத்திலுள்ளதும் தத்வஉபதேச வாக்யமுமான 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தின் அர்த்தந்தான் இந்த பகவத்கீதை என்று நிச்சயமாகிறது. இந்த வாக்யந்தான் இந்த ஸ்மிருதிக்கு மூல சுருதி. இந்த வாக்யத்தில், தத், த்வம், அஸி என்ற மூன்று பதங்கள் அடங்கியிருக்கின்றன.

## அசுத்த ஜீவனும் சுத்த ஜீவனும்

இவற்றுள், த்வம் பதத்தின் அர்த்தம் ஜீவன். அந்த ஜீவன் அசுத்த ஜீவன் என்றும் சுத்த ஜீவன் என்றும் இரு வகைப்படுவான். ஜாக்ரத் ஸ்வப்நங்களில் ஜீவன் கர்த்தா

போக்தாவாய் இருந்து ஸுகதுக்க பலங்களை மாறி மாறி அநுபவிப்பதால் அசுத்த ஜீவனாகிறான். ஸுஷுப்தியில் ஜீவன் அகர்த்தா, அபோக்தாவாய், ஸுக துக்கானுபவமும், பாஹ்ய ப்ரதீதியும் கொஞ்சங்கூட இல்லாமல் மூலப்ரகிருதியில் லயத்தை அடைந்து பிரம்மானந்தத்தை அநுபவிப்பதால் சுத்த ஜீவனாகிறான். இவனைத்தான் வேதாந்திகள் கூடஸ்தன் என்று சொல்கிறார்கள். இவனுக்குத்தான் தத்வமஸி வாக்யம் ப்ரம்மத்தின் அபேதத்தைப் போதிக்கிறது. அசுத்த ஜீவனை த்வம்பத * வாச்யார்த்தமாகவும், சுத்த ஜீவனை த்வம் பத லக்ஷ்யார்த்தமாகவும் சொல்லலாம். அசுத்த ஜீவனுக்குப் பிரம்மத்தின் அபேதத்தால் மோக்ஷம் ஏற்பட்டு ஐக்யப்ராப்தி உண்டாகாது. அசுத்த ஜீவனைச் சுத்தனாக்கிக்கொள்ளவேண்டும். சுத்த ஜீவனுக்குத்தான் மோக்ஷப்ராப்தியுண்டு. கர்ம யோகத்தினாலும் ஸந்யாஸத்தினாலும் அசுத்த ஜீவனைச் சுத்த ஜீவனாக்கலாம்.

* வாச்யார்த்தம், லக்ஷ்யார்த்தம்:—எந்தச் சப்தத்துக்கு எந்த அர்த்தத்தைச் சொல்லச் சக்தியோ அந்த அர்த்தம் வாச்யார்த்தம். எந்த சப்தத்துக்கு எந்த அர்த்தத்தில் தாத்பர்யமோ அந்த அர்த்தம் லக்ஷ்யார்த்தம். உதாரணம்:—"புடலங்காய் போகிறது" என்றால், புடலங்காய் என்ற சப்தத்திற்குப் புடலஞ்செடியிலிருந்துண்டான காய் என்ற அர்த்தத்தை மட்டும் தரச் சக்தியிருப்பதால் இது வாச்யார்த்தம். இவ்விடத்தில் புடலங்காய் ஜடமானதால் 'போகிறது' என்ற வினைக்குப் பொருந்தாது. ஆகையால் புடலங்காய் கொண்டுபோகிற மனிதன் என்ற தாத்பர்யம் தருகிறது. எனவே இதன் லக்ஷ்யார்த்தம் புடலங்காய் கொண்டுபோகிறவன் என்பதாம். எல்லா சப்தங்களுக்கும் இந்த இரண்டு அர்த்தங்களும் இருந்தாலும், வாச்யார்த்தம் எங்கே பொருந்தவில்லையோ அங்கேதான் லக்ஷ்யார்த்தத்தைக் கைக்கொள்ளலாம்.

கர்மயோகமென்பது தன் வர்ணாஶ்ரமத்துக்குரிய ஸ்வ தர்மங்களை நிஷ்காம்யமாய் அநுஷ்டிப்பது. ஸந்யாஸ மென்பது ஈஷணாத்ரயத்தையும் தியாகம் செய்வது. அசுத்த ஜீவன், ஸ்திரீ முதலான விஷயங்களில் வைராக்ய முள்ளவனானால் ஸந்யாஸத்தால் தன்னைச் சுத்தனாக்கிக்கொண்டு கூடஸ்தனாக லாம். வைராக்யமில்லாதவனானால், கர்மானுஷ்டானத்தினால் தன்னைச் சுத்தப்படுத்திக்கொண்டு கூடஸ்தனாகவேண்டும்.

## அவித்யை

ஜீவன் உண்மையில் அஸம்ஸாரியாக இருந்தும் மனத்தின் சேர்க்கையால் அசுத்தனாகி ஸம்ஸாரிபோலாய்விட்டான். அந்தஃகரணத்தோடு சேராத பக்ஷத்தில் ஜீவன் எப்போதும் சுத்தன்தான். ஆனதால் மனத்தை எப்படியாவது நாசம் செய்ய முயற்சிக்கவேண்டும். அது மிகவும் சஞ்சல முள்ளதாகையால் நிக்ரஹம் செய்வது மிகவும் கடினந்தான். இதோடுகூட அவித்யையும் த்வம்பதத்தில் அடங்கியிருக்கிறது. உண்மையில் ஜீவன் பிரம்மமாக இருந்தும், அந்த அறிவில்லாமல் செயது, பிரம்மஸ்வபாவத்துக்கு விபரீதஸ்வபாவத்துடன் கூடினவன்போலத் தோற்றுவிக்கிற இருள்மயமான ஒரு சக்தி விசேஷமே அவித்யை எனப்படும். இதை ஜீவனுடைய உபாதியாகக் கூறுவதுண்டு. அவித்யை ஜீவனுக்குத் தன் நிஜஸ்வரூபம் தெரியாதபடி மறைத்துவிடுகிறது. மாயா உபாதிகனான ஈஶ்வரனை, அவ்வுபாதி அவ்வாறு மறைப்பதில்லை. அவித்யையால் கட்டப்பட்ட ஜீவனைப் பத்தன் என்று கூறுவார்கள். முக்தர்களுக்குத்தான் ஜீவனுடைய நிஜஸ்வரூபம் தெரியும். அந்த ஜீவனுக்கு, 'நீ ப்ரம்மந்தான்' என்று முக்தர்கள் உபதேசிக்கிறார்கள். அவித்யைதான் அந்தஃகரணத்துக்

குக் காரணம். அவித்யையை ஜயித்தால் மனத்தையும் ஜயிக்கலாம்.

## தத்பதத்தின் அர்த்தம்

தத்பதத்தின் அர்த்தம் மாயாசம்பந்தமான சைதன்யமும், மாயாதீதமான சைதன்யமும் ஆகும். மாயாசம்பந்தமான சைதன்யத்தைப் பிரபஞ்சத்திற்கு மூலகாரணமான ஈச்வரன் என்று சொல்லுவார்கள். மாயாதீதமான சைதன்யம் பிரம்மமாகும். பிரபஞ்சமும் அதற்குக் காரணமான ஈச்வரனும் எதனிடத்திற் கற்பிதமோ அதுதான் பிரம்மம். தத்பத வாச்யார்த்தம் ஈச்வரன்; லக்ஷ்யார்த்தம் பிரம்மம்.

## பக்தி

ஒரு மனிதன் தன் ஸம்ஸாரத்தோடு தனித்திருக்கும் சமயத்தில் எப்படி அவளைக் கண்டு பேசுவது உசிதமாகாதோ அப்படியே மோக்ஷ இச்சையுள்ள முமுக்ஷுவானவன் மாயா சம்பந்தப்பட்டிருக்கிறபிரம்மத்தைப்பார்ப்பதால் பிரயோசனமில்லை. மாயாதீதமாகப்பண்ணி,சுத்தப்பிரம்மத்தை ஸாக்ஷாத்கரிக்கவேண்டும். அசுத்தப் பிரம்மமான ஈச்வரனைப் பார்த்து, 'நீ என் விஷயத்தில் மாயையை விலக்கிச் சுத்தப்பிரம்மமாக வேண்டும்' என்று பக்திபண்ணவேண்டும். அந்தப் பக்தியும் ஸாதன பக்தி, ஸாத்திய பக்தி என்று இருவகைப்படும். விக்கிரஹாதிகளில், பாஹ்ய பூஜை செய்வது ஸாதன பக்தி; மனத்தால் செய்யும் தியானம் ஸாத்யபக்தி. அவிவேகிக்கு ஸாதனபக்தியும், விவேகிக்கு ஸாத்யபக்தியும் ஏற்பட்டிருக்கின்றன. உண்மையில் அத்விதீயமான பிரம்மத்தில் பிரபஞ்சமாகிய துவிதீய வஸ்துவை உண்டுபண்ணி, பிரம்மத்தை ஸத்விதீயம்போல் பண்ணுகிறபடியால் அதையும் முமுக்ஷுக்

கள் அவசியம் நிவர்த்தி செய்யவேண்டும். மாயை ஈஶ்வர உபாதியாகையால் ஈஶ்வரதத்வத்தோடு சேர்ந்து தத்பதத்தில் அடங்கியிருக்கிறது. பிரபஞ்சத்தை வெறுத்தவனுக்கு பிரம்மம் பிரகாசிக்கும். ஆகையால் பிரபஞ்சத்தில் வைராக்யம் வருவதற்காகப் பிரபஞ்சத்தைப்பற்றி விசாரணைசெய்து பிரபஞ்சம் பொய் என்று நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறது.

## ஜீவப்பிரம்ம ஸம்பந்தம்

த்வம்பதார்த்தமான ஜீவனுக்கும், தத்பதார்த்தமான பிரம்மத்திற்கும் என்னவிதமான ஸம்பந்தம் உள்ளது என்பது 'அஸி' என்ற பதார்த்தத்தால் கூறப்படுகிறது. வஸ்துக்களுக்குள்ள ஸம்பந்தம் ஆறுவகையாகக் கூறப்படும். அவை:—(1) தாதாத்மிய ஸம்பந்தம், (2) அபேத ஸம்பந்தம், (3) ஐக்கிய ஸம்பந்தம், (4) ப்ரகிருதி விகிருதிபாவ ஸம்பந்தம், (5) கார்ய காரண ஸம்பந்தம், (6) அம்சஅம்சிபாவ ஸம்பந்தம் என்பன.

ஸாளக்கிராமம் உண்மையில் விஷ்ணுவாகாவிட்டாலும், விஷ்ணுவாகவே பாவிக்கப்பட்டுப் பூஜிக்கப்படுவதால், அவற்றுக்குள்ள சம்பந்தம் தாதாத்மிய சம்பந்தம் எனப்படும். கடம், திரவ்யம் இவ்விரண்டிற்கும் உள்ளது அபேத ஸம்பந்தம். ஒன்றான வஸ்து, புருஷ தோஷத்தால் தோற்றத்தில் இரண்டு போலப் பிரகாசிக்கிற இடத்தில் அவ்விரண்டுக்கும் உள்ள ஸம்பந்தம் ஐக்கிய ஸம்பந்தமாம். ஒருதீபம், நேத்திர தோஷமுள்ளவனுக்கு இரண்டுபோலத் தோற்றினாலும், மற்றவர்களுக்கு ஒன்றாகவே யிருக்கும். அப்படி இரண்டாகத் தோற்றும் தீபங்களுக்குள்ள ஸம்பந்தந்தான் ஐக்கிய ஸம்பந்தமாம். மண், கடம் என்ற இரண்டுக்கும் உள்ளது ப்ரகிருதி

விகிருதி பாவஸம்பந்தம் குயவனுக்கும் கடத்திற்கும் உள்ளது கார்ய காரண ஸம்பந்தமாம். பெரு நெருப்புக்கும் அதனிடத்துண்டான சிறு பொறிக்குமுள்ள ஸம்பந்தம் அம்ச அம்சி பாவ ஸம்புந்தமாம்.

இத்தகைய ஸம்பந்தங்களில், சாஸ்திரப்படி, த்வம் பதலக்ஷ்யார்த்தமான கூடஸ்தனுக்கும், தத்பதலக்ஷ்யார்த்தமான பிரம்மத்துக்கும் ஐக்ய ஸம்பந்தந்தான் ஏற்படுகிறது. எப்படியெனில், தத், த்வம் என்ற இரு பதங்களும் ஸமானாதிகரண்யமாக, அதாவது ஒரே வேற்றுமையாக, உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. எந்த இடத்தில் இரண்டு பதங்கள் ஒரே வேற்றுமையில் சொல்லப்பட் டிருக்கின்றனவோ, அங்கே பதமிரண்டானாலும் அர்த்தம்* ஒன்றுதான் என்பது சாஸ்திரக் கொள்கை. ஆகவே தத், த்வம் பதங்களின் வேற்றுமை ஒன்றாக இருப்பதால் இரண்டுபதங்களாக இருந்தாலும், அவற்றின் அர்த்தம் ஒன்றேதான். அவை இரண்டுக்கும் உள்ள ஸம்பந்தம் ஐக்கிய ஸம்பந்தமேதான்.

## தத்வமஸியின் விரிவே கீதை

இவ்வாறு கூறப்பட்ட தத்வமஸி மஹாவாக்யத்திலுள்ள மூன்று பதங்களுக்கும் ஒவ்வொன்றுக்கு ஆறு ஆறு அத்யாயமாகப் பதினெட்டு அத்யாயங்கள் இந்தப் பகவத் கீதையில் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள், முதல் ஷட்கத்தில் த்வம்பதார்த்தமான அவித்யை, அந்தஃகரணம், கர்ம யோகம், ஸந்யாஸம், ஜீவன், கூடஸ்தன் முதலான ஆறு தத்வங்களும் முறையாகக் கூறப்படுகின்றன. மத்யஷட்கத்தில் தத்பதார்த்தமாகிய மாயை, பிரபஞ்சம், ஸாதனபக்தி, ஸாத்ய

பக்தி, ஈஶ்வரன், பிரம்மம் ஆகிய ஆறு தத்வங்கள் கிரமமாகச் சொல்லப்பட்டன. அந்தியஷட்கத்தில் அவஸிபதார்த்தமான ப்ரகிருதி விகிருதிபாவ ஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்தம், கார்யகாரணபாவ ஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்தம், அம்சாம்சிபாவ ஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்தம், தாதாத்மிய ஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்த யுக்தி, அபேதஸம்பந்த பூர்வபக்ஷஸித்தாந்தயுக்தி இவ்வைந்தும் கூறி முடிவில் அவஸிபதத்தில் அடங்கிய ஆறுவதான ஐக்கிய ஸம்பந்தம் என்ற பரமஸித்தாந்த ஸமர்த்தனம் முதலான ஸம்பந்தங்கள் கிரமமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

## கீதையின் தாத்பர்யம்

இவைகளால், அக் கீதாசாஸ்திரத்தில் ஜீவப்பிரம்ம ஐக்ய ஞானந்தான் மோக்ஷஸாதனமென்று தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஞானத்தில்தான் கீதைக்குப் பர்யவஸானம். கீதைக்குக் கர்மாவில்தான் பர்யவஸானமென்று சிலர் கூறுவர்; அதுவும் ஸரியே. ஞானத்தில் கீதைக்கு மஹாதாத்பர்யமும், கர்மாவில் அவாந்தர தாத்பர்யமும் உண்டென்பதில் விரோதமில்லை. கீதையின் உபஸம்ஹாரஶ்லோகத்தில், "கேவலம் ஜீவப்ரம்ம ஐக்ய ஞானம் போதாது; அந்த ஞானம் ஸந்யாஸ ஸஹிதமாக இருக்க வேண்டும். நீ க்ஷத்ரியனாகையால் உனக்கு ஸர்வகர்ம பரித்யாகபூர்வமான முக்ய ஸந்யாஸத்தில் அதிகாரமில்லை. கௌணஸந்யாஸத்தில்தான் அதிகாரமுண்டு. அவனவன் ஸ்வதர்மத்தை ஈஶ்வரார்ப்பண புத்தியோடு செய்து, நான் செய்கிறேன் என்ற அபிமானத்தையும் விட்டுவிடுவதே கௌண ஸந்யாஸம். க்ஷத்ரியனுக்கு யுத்தம் ஸ்வதர்மம். ஸ்வதர்மத்தை

அநுஷ்டிக்கும் பாக்யம் தானுகவே ஸித்தித்திருப்பதால், பரதர்மமான பிக்ஷை எடுத்துண்பதற்கும், முக்கிய ஸந்யாஸத்திற்கும் போகவேண்டியதில்லை; கொஞ்ச காலம் கௌண ஸந்யாஸத்தை அநுஷ்டித்தால், முக்யஸந்யாஸத்துக்கு அதிகாரம் தானே வரும்'' என்னும் கருத்துப்பட பகவான் உபதேசித்திருப்பதைப் பார்க்கலாம். இவ்வாறு கீதா சாஸ்திரத்திற்கு ஞானத்தில் ஜீவப்ரம்ம ஐக்ய பரமதாத்பர்யத்தை ஒப்புக்கொண்டாலும், அவாந்தரதாத்பர்யத்தையும் ஒப்புக்கொள்வது ஸந்தர்ப்ப விரோதமில்லாமையும் தெளிவாகிறது இவ்விதம் பரம கருணாமூர்த்தியான பகவான் ஜீவகாருண்யமிகுதியால் யாவரும் ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டி முக்தியடையும் பொருட்டு, அர்ஜுனனை முன்னிட்டுக்கொண்டு தத்வமஸி என்ற மஹா வாக்யார்த்த ரூபமான இக் கீதாசாஸ்திரத்தை உபதேசித்தருளியிருக்கிறார்.

ஓம் தத் ஸத்

"देहबुद्ध्यास्मि दासोऽहं. जीवबुद्ध्या त्वदंशकः ।
आत्मबुद्ध्या त्वमेवाऽहम् इति मे निश्चिता मतिः ॥"

"नास्त्यन्तो नादिमध्ये न हि करचरणं नामरूपे न च स्तः
नो देहो नैव पुण्यं वृजिनमपि तथा यस्य सर्वात्मकस्य ।
नैवं स्वीयः परो वा न भवति विकृतिर्नास्ति पुंस्त्वादिभेदः
सत्यं तत्स्वप्रकाशं परममनुदिनं ब्रह्म पूर्णं स्मराम ॥"

## श्रीतोटकाचार्यकृतजगद्गुर्वष्टकम्

---

विदिताखिलशास्त्रसुधाजलधे महितोपनिषत्कथितार्थनिधे ।
हृदये कलये विमलं चरणं भव शङ्करदेशिक मे शरणम् ॥

करुणावरुणालय पालय मां भवसागरदुःखविदूनहृदम् ।
रचयाखिलदर्शनतत्त्वविदं भव शङ्करदेशिक मे शरणम् ॥

भवता जनता सुहिता भविता निजबोधविचारणचारुमते ।
कलयेश्वरजीवविवेकविदं भव शङ्करदेशिक मे शरणम् ॥

भव एव भवानिति मे नितरां समजायत चेतसि कौतुकिता ।
मम वारय मोहमहाजलधिं भव शङ्करदेशिक मे शरणम् ॥

सुकृतेऽधिकृते बहुधा भवतो भविता समदर्शनलालसता ।
अतिदीनमिमं परिपालय मां भव शङ्करदेशिक मे शरणम् ॥

जगतीमवितुं कलिताकृतयो विचरन्ति महामहसश्छलतः ।
अहिमांशुरिवात्र विभासि गुरो भव शङ्करदेशिक मे शरणम् ॥

गुरुपुङ्गव पुङ्गवकेतन ते समतामयतां न हि कोऽपि सुधीः ।
शरणागतवत्सल तत्त्वनिधे भव शङ्करदेशिक मे शरणम् ॥

विदिता न मया विशदैककला न च किञ्चन काञ्चनमस्ति गुरो ।
द्रुतमेव विधेहि कृपां सहजां भव शङ्करदेशिक मे शरणम् ॥

# அருள் வேட்டல்

ஜஜ்ஜோதி இயற்றியது

தானன தந்தன தானன தந்தன
தானன தந்தன—தனதான.

மாயையில் நொந்தவர் ஞானசு கம்பெறு
வாழ்வரு ளிங்கித உபதேசா
மாதவ மென்பது வேயுரு வொன்றின
வாறுய ரந்தண எமையாளுந்
தூயவ நஞ்சிவ னுருட னென்றிய
சோகமி லந்தவ குகைவாழ்வே
சோர்வுறு மன்பர்கள் ஆதர முந்துறு
சோபன சுந்தர அனசூயை
சேயென வந்தப ராபர னின்றருள்
தேவகு லந்திகழ் கரவே செய்
தேவ விளங்கவ தூத துரந்தர
தேசவி ருங்கன தவராயா
ஏயவி ரண்டில தாகிய இன்படி
யேமு மடைந்திடு நெறிகூறும்
ஈச சுயம்பிர காசநி னஞ்சர
ணேதொழு தொன்றினம் அருள்வாயே.

உ

# சரணப் பத்து

ஜகஜ்ஜோதி இயற்றியது

1. பரமான் மநிலைப் படுநல் வழியைத், தரமா ருயிர்[illegible]ர் தருமை
வரமீ யுமருள் வரதா ருசயம், பிரகா சகுருப் பெரியாய் சரண

2. கருளா கியமா யையினிற் கவல்வார், மருளா யதுமாற் றியஞா
குருநா தகுகா லயவா சசயம், பிரகா சதவப் பெரியாய் சரண

3. சுரபா தியருக் துதையா தசுகங், தருமா வுபதே சசுபோ தகு
நிருபா திகஞா னவிலா ஸசயம், பிரகா சவருட் பெரியாய்

4. அரைசே ருடைநீங் கவனு தநிலைக், கரைசே மலவா தனைநீக்
பிரகா சதவப் பிரகா சசயம், பிரகா சகுணப் பெரியாய் சரணம்

5. பரசார் வழுளார் பவநீங் கிடவே, உரைசார் தருதத் துகிரிக் கு
தரைசார்ந் திடுவார் தவமா யசயம், பிரகா சகுலப் பெரியாய்

6. பரமா வதிதே பகையா வதிதென், நரமா கமனத் துறநீ
திரஞா னதிகம் பாதே வசயம், பிரகா சவடற் பெரியாய் ச

7. சிரமார் சடையுந் திருவாய் நகையும், உரமா ரருள்சே ருருவாம்
வரமா மவனு தமுமே வுசயம், பிரகா சவிறற் பெரியாய் சரண

8. நரரா கியுழல் பவர்கன் மையுறச், சுரலோ கர்தினந் தொழுதே
வருவாய் கருணை முதவா ரிசயம், பிரகா சமதிப் பெரியாய் சரண

9. இரவேயெனினும் பகலேயெனினும், ஒருவாமலொளிர்ந் துயிரா
பருகா வருள்சோ திபரந் தசயம், பிரகா சதிறற் பெரியோய் ச

10. பரனே சரணம் பகவா சரணம், அரனே சரணம் அவனு தநு
தரனே சரணந் தவரா சசயம், பிரகா சமுனிப் பெரியாய் சரண